# பதிப்புரை

**பா**மினிப் பாவை...

பிரபல எழுத்தாளர் கௌசிகன் (வாண்டு மாமா) அவர்களின் சிறப்பான சரித்திர நவீனம்...

படிக்க ஆரம்பித்தது முதல் முடிக்கும் வரை கதை மாந்தர்கள், வாசகர்களை கட்டி வைத்திருப்பார்கள். அவ்வளவு விறுவிறுப்பாகச் செல்லும்.

படியுங்கள், அனைவருக்கும் இந்நூலை வாங்கிப் பரிசளியுங்கள்.

நூல் ஆசிரியருக்கு நெஞ்சம் நிறைந்த நன்றி மலர்கள்.

**- பதிப்பகத்தார்**





# பாமினிப் பாவை

## 1

## வேல் பாய்ந்தது

**ப**ரந்த நீல நெடுங்கடல்.

கண்ணாடிப் பாளமாகக் கடல் நீர் தகதகத்துக் கொண்டிருந்தது. குலுக்கி மினுக்கி நடைபோடும் சிங்காரியைப் போல அது மெல்ல ஆடி அசைந்து கொண்டிருந்தது. நடுக் கடல் ஆனதால் ஆரவாரமான அலைகள் இல்லை. அந்த அமைதியான சூழலும் ஆட்டமும், வயிறு புடைக்க இரை தின்று விட்டு ஓரிடத்தில் படுத்து நிதானமாக அசை போடும் கம்பீரமானதொரு காளையை நினைவுபடுத்தின. உண்மைதான். அந்தக் கடலும் இப்போது அசை போட்டுக் கொண்டுதான் இருந்தது. இப்போதென்ன, எத்தனையோ காலமாக இப்படித்தான். அது உட்கொண்டிருக்கும் ஆகாரம் ஜீரணமாவதற்கு இன்னும் கல்பகோடி காலம் இப்படியே அசை போட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

இதன் கரைகளில் எத்தனை சாம்ராஜ்யங்கள் உருவாகி உன்னத நிலையிலிருந்து அழிந்திருக்கின்றன! எத்தனை எத்தனை நாகரிகங்களைக் கண்டிருக்கிறது இந்தக் கடல்! தன் பரந்த மார்பகத்திலே கட்டு மரங்கட்டி விளையாட ஆரம்பித்த மனிதக் குழந்தைகள் இன்று விதம் விதமான மரக்கலங்களை மிதக்க விட்டு வாணிபம் செய்யக் கிளம்பியிருக்கும் வளர்ச்சி வரை பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்கிறதே

இந்தக் கடல். தன்னைக் கண்டு குதூகலித்து நீராட ஓடிவரும் எத்தனை எத்தனையோ கன்னியரையும் காளையரையும் கைநீட்டி வரவேற்று மகிழ்ச்சியூட்டி இருக்கிறதே இந்தக் கடல்!

மகிழ்ச்சி மட்டுமா?

கோபம் கொண்ட குமுறிக் கொந்தளிக்கும் கதையும்தான் நமக்குத் தெரியுமே. எதையும் சகித்துக் கொண்டு பொறுமையோடிருக்கக் கடல் என்ன பூமியா? பொங்குமாங்கடல் கொண்ட நகரங்களையும் நாகரிகங்களையும் பற்றித் தான் கதை கதையாகக் கேட்டிருக்கிறோம். அலைகள் சிரித்துக் கொழித்து விளையாடிய போது ஒய்யாரமாக நடை போட்டு மிதந்த மரக்கலன்கள், அதே கடல் சீறிச் சினந்த போது சின்னாபின்னமாகி அதன் அடி வயிற்றிலே அடைக்கலம் புகுந்த கோரத்தையும்தான் கண்டிருக்கிறோம்.

இப்போது ஏதுமறியாத சாதுவைப் போல மயங்கிக் கிடக்கும் இந்தக் கடலின் இதயத்தினுள்ளே அடங்கிக் கிடக்கும் மர்மங்கள் எத்தனையோ! அதோ மிதந்து வருகிறதே, அதுவும்கூட இந்தக் கடல் ஜீரணித்து விட்ட மர்மங்களில் ஒன்றாக இருக்க வேண்டும்.

கடல் சிரிக்கிறது, சிலிர்த்துக் கொண்டு.

அந்த மிதப்பும் நம்மை நோக்கி வருகிறது. நன்றாகப் பார்ப்போம்.

ஏதோ ஒரு கட்டு மரத்தைப் போலல்லவா இருக்கிறது? இல்லை. கட்டுமரம்கூட இல்லை. உடைந்த பெரிய கப்பலின் ஒரு பகுதி. அதிலே ஒரு மனிதன் உட்கார்ந்திருக்கிறான். அவனுக்கு இருபத்தைந்து வயதிருக்கலாம். கம்பீரமான தோற்றம். கட்டமைந்த உடல். ஆனால் இப்போது துவண்டு கிடந்தது. விசாலமான நெற்றி. நீண்ட கண்கள் இப்போது ஒளி இழந்து மூடி இருந்தாலும் அந்த அழகான கண்களின் பார்வை பகைவர்களைப் பணிய வைக்கும் கம்பீரத்தையும் நன் மனத்தவர்களின் தோழமையை ஏற்படுத்திக் கொள்ளும் இனிமையையும் ஒருங்கே பெற்றிருந்தவை. எடுப்பான மூக்கு. அரும்பு மீசையும் தாடியும் அந்த முகத்தை மேலும் அழகாக்கியிருத்திருக்க வேண்டும். ஆனால் இப்போதோ கடல் நீரும் உப்பங் காற்றும் அவற்றின் அழகைக் குலைத்து அலை திரி திரியாகச் சுருண்டு கிடந்தன.

தாறுமாறாக உடைந்திருந்த அந்த மரக்கலத்தின் ஒரு பகுதியில் ஓர் இரும்பு வளையம் அறையப்பட்டிருந்தது. அத்துடன் இணைக்கப்பட்ட ஓர் இரும்புச் சங்கிலி அந்த வாலிபனின் இடையிலே ஒட்டியாணமாக இறுக்கிக் கொண்டிருந்த இருப்புப் பட்டையுடன் பிணைக்கப்பட்டிருந்தது.

அவன் ஒரு கைதி. வினோதமான கைதி!

அந்தக் கட்டுமர மிதப்பின் நடு மையத்திலே ஓர் ஈட்டியைப் பாய்ச்சிச் செங்குத்தாக நிறுத்தியிருந்தது. தொய்ந்த துவண்டு கிடந்த வாலிபன் அந்த ஈட்டியின் மீது சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தான். அவன் இடப்பக்கத்திலே மாலுமிகள் பயன்படுத்தும் ஒரு பீப்பாய் இருந்தது. அதன் மீது தன் ஒரு கையைத் தூக்கிப் போட்டபடி அமர்ந்திருந்தான் அவன். வலப் பக்கத்திலே அதே போன்ற மற்றொரு பீப்பாய். இவற்றின் இடையிலே ஒரு காலை நீட்டி மற்றொரு காலைச் சற்றே குத்திட்டவாறு உட்கார்ந்திருந்த அவன் தலை ஒருபுறமாகச் சரிந்து கிடந்தது. அவனது அகன்ற மார்பகம் இலேசாக உயர்ந்து தாழ்வது அவன் உயிரோடுதான் இருக்கிறான் என்பதை உறுதியாக்கிக் கொண்டிருந்தது.

உடைகள் கிழிந்து நாசமாகி நலங்கெட்டிருந்தாலும், அவன் துருக்கி நேசத்துப் போர் வீரன் என்பதை அவை நிதரிசனமாக்கிக் கொண்டிருந்தன. அவனை இந்த நிலையில் இப்படி இந்தக் கட்டுமரத்தில் கட்டிப் போட்டு மிதக்க விடுமுன் அவன் விரோதிகள் ஒரு பீப்பாயில் குடி நீரையும், மற்றொரு பீப்பாயில் உணவுக்கு ஒருசில ரொட்டிகளையும் வைத்திருக்க வேண்டும். ஆனால் இப்போது அவை இருந்த அடையாளம்கூட அதில் காணோம். அந்த மிதப்பின் மீது கடல் நீர் பாய்ந்து வழிந்து கொண்டிருந்ததால் ஒரு துளி இடம்கூடக் காய்ந்திருக்க வில்லை. சங்குப் பூச்சிகளும், கிளிஞ்சலைப் போன்ற சிறுசிறு கடல் வாழ் ஜந்துக்களும் அந்தக் கட்டுமானத்தின் இடையிலெல்லாம் குடியேறிக் கூடமைத்துக் கொண்டிருந்தன. உடலில் தெம்பு உள்ள எவனும் உணர்ச்சிகள் தன் வசத்தில் உள்ள எவனும் அப்படி அந்த ஈரத்தில் உட்கார்ந்திருக்க மாட்டான். இவன் இந்த மிதப்பில் இப்படி எத்தனை நாட்களாக மிதந்து கொண்டிருக்கிறானோ தெரியவில்லை. ஒட்டிய வயிறும் உணர்வுகள் செத்து விட்ட மயங்கிய நிலையும் அவன் சாப்பிட்டுப் பல நாட்களாகி இருக்க வேண்டும் என்பதைத் தெரிவித்தன.

ஈட்டியின் கூரான முனையைக் கட்டு மரத்தில் பாய்ச்சி நிறுத்தியிருந்தார்களே, அதன் உச்சியிலே விசித்திரமான காட்சி ஒன்று தென்பட்டது. மரக்கலத்தின் கொடியைப் போல அதில் ஒரு துணி அசைந்தாடிப் பறந்து கொண்டிருந்தது. வெறுந் துணியா அது? இல்லை, ஒரு வீரனின் மேலங்கிதான் அது. ரத்தக் கறை படிந்த அதில் சிலுவைக் குறிவேறு இடப்பட்டிருந்தது.

இந்த வீரன் யார்? ஈட்டியிலே கட்டப்பட்டுள்ள ரத்தம் படிந்த சிலுவைக் குறி பதித்த அங்கியின் மர்மம் என்ன? சங்கிலி கொண்டு பிணைத்துத் தன்னந்தனியே ஒரு கட்டுமரத்தில் கடலில் மிதக்க விடும்படி இந்த வாலிபன் என்ன குற்றம் செய்திருப்பான்?

இவை யொன்றுக்கும் விடை பகராமலே 'ஓ'வென்று ஓலமிட்டது கடற்காற்று.

அந்த விசித்திரப் பிரயாணி இருந்த மிதப்பு நிலைகொள் ளாமல் ஆடியது. நினைவிழந்து கிடந்த வாலிபன் மெல்லத் தலை நிமிர்ந்தான். மூடிக் கிடந்த அவன் கண்கள் இலேசாகத் திறந்தன. சுற்றுமுற்றும் பார்த்தவன் அலுப்புடன் மறுபடியும் கண்களை மூடிக் கொண்டு அதே கிறக்க நிலையில் ஆழ்ந்தான். ஏதாவது கரை தட்டுப்படுகிறதா என்று பார்த்தானோ என்னவோ? மாறுதலில்லாத கருநீலக் கடலின் சூழலைக் கண்டதும் பார்த்துப் பார்த்து வெறுப்பேற்பட்டுப் போன கண்களை மூடிக் கொண்டு விட்டான்.

மானிட ஜாதியின் நல் வாழ்வுக்காகத் தன்னையே சிலுவையில் அர்ப்பணித்துக் கொண்ட புண்ணிய புருஷர் பிறந்து வாழ்ந்த புனிதமான இடங்கள் பிற்காலத்தில் முகமதியர்களின் ஆதிக்கத்துக்குட்பட்டன. மக்கள் குலத்தின் சகோதரத்துவத்தைப் போதித்த நபிகள் நாயகத்தின் கோட்பாடுகள் அவ்விடங்களில் பரவின. விந்தையிலும் விந்தையாக, அன்பு மதத்தை அளித்த கிறிஸ்து பெருமானின் சீடர்களும், சமுதாய சகோதரத்துவத்தைப் பறையறைந்த நபிகளின் சீடர்களும் ஒருவரோடு ஒருவர் மோதிக் கொண்டு அந்தப் பிராந்தியங்களை இரத்தக் களறியாக்கினர். கிறிஸ்து சமயத்தினர் சுலபமாக அந்தப் பிரதேசங்களுக்குச் சென்று திரும்ப முடியாமல் இருந்தது. துருக்கியர்களின் வசப்பட்டுள்ள ஜெரூஸலத்தை விடுவித்துக் கொடுக்கும்படி போப்பாண்டவர் ஐரோப்பியர்களைக் கேட்டுக் கொண்டார். அவர்களும் ஜெரூஸலத்தைத் துருக்கியர்களின்

பிடியிலிருந்து விடுவிக்கக் கூட்டணி வகுத்துப் பல முறை போரிட்டார்கள். புனிதமானதொரு காரியத்துக்காகப் போரிட்டதால், இவை சிலுவைப் போர்கள் என்று அழைக்கப்பட்டன. இப்போரில் ஈடுபட்டவர்களைக் 'க்ரூஸேடர்ஸ்' என்று அழைக்கலாயிற்று மேற்கத்திய உலகம். பல தடவைகள் பெரு முயற்சி செய்தும் ஆங்காங்கே ஒரு சில வெற்றிகள் கிடைத்தனவென்றாலும் துருக்கியர்களின் ஆதிக்கத்திலிருந்து ஜெரூஸலத்தைப் பூரணமாக விடுவிக்க முடியவில்லை.

துருக்கியர்களின் சாம்ராஜ்யமோ நாளுக்கு நாள் வலுவடைந்து பெருகலாயிற்று. மத்திய தரைக்கடல் பிரதேசம் முழுவதும் அவர்களது ஆளுகைக்குட்பட்டிருந்தது. வலுவுள்ள கடற்படை வேறு அவர்களுக்கு இருந்தது. பேரரசன் சுலைமானின் காலத்தில் அந்தக் கடற்படையை எந்த ஐரோப்பிய வல்லரசாலும் வெல்ல முடியவில்லை. கடல் வாணிபம் அந்தக் காலத்தில் முகமதியர்களின் கையில்தான் இருந்தது. தரை மார்க்கமாகக் கீழை நாடுகளுக்குச் செல்ல முகமதியர்களின் கையில்தான் இருந்தது. தரை மார்க்கமாகக் கீழை நாடுகளுக்குச் செல்ல முகமதியர்களின் ஆதிக்கத்தில் உள்ள நாடுகளின் வழியாகத் தான் செல்ல வேண்டும். இந்த நிலையில்தான் புதிய கடல் மார்க்கங்களைக் காண்பதில் ஸ்பெயினும் போர்த்துக்கலும் போட்டி போட்டுக் கொண்டு முயன்று ஓரளவு வெற்றியும் பெற்றிருந்தன. ஆனாலும் மத்தியதரைக் கடலில் தனியாட்சி நடத்தி வந்த துருக்கியக் கடற்படைகளுக்கும் ஐரோப்பிய அரசுகளின் கப்பல்களுக்கும் அடிக்கடி மோதல் ஏற்பட்டுக் கொண்டுதான் இருந்தது.

கடலும் வானமும் அமைதியாக இருந்தன. இரண்டு துருக்கியக் கப்பல்கள் ஸ்பெயின் தேசத்தை யொட்டிய அட்லாண்டிக் பெருங்கடலில் கம்பீரமாக மிதந்து கொண்டிருந்தன.

வசதியான காற்று பாய்மரப் படுதாக்களை உப்ப வைத்திருந்தது. வண்ண வண்ண உடையணிந்த துருக்கிய வீரர்கள் கப்பலின் மேல்தளத்தில் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார்கள். பளபளக்கும் தங்கள் கத்திகளைத் தீட்டிப் பதம் பார்த்துக் கொண்டிருந்தனர் பலர். வேறு சிலர் பாய்மரக் கயிறுகளை ஒழுங்குபடுத்துவதில் முனைந்திருந்தார்கள். மற்றும் சிலர் பீரங்கிகளைத் துடைப்பதில் பெருமை கொண்டிருந்தார்கள். ஒரு சிலர் ஆடிப் பாடி அத்தனை பேர்களையும் உற்சாகத்தி லாழ்த்திக் கொண்டிருந்தார்கள்.

அந்த இரண்டு கலங்களில் ஒன்று பெரியது அதுவே தலைமைக் கப்பல். அதன் முகப்புப் பக்கத்தின் உயர்ந்த பகுதியில் பாய்மரக் கயிறுகளைப் பற்றிக் கொண்டு ஒரு கம்பீரமான இளைஞன், தனது வீரர்களின் கோலாகலத்தைப் பார்த்தும் பாராதவனாக நின்று கொண்டிருந்தான். அந்த இரண்டு கப்பல்களையும் நடத்திச் செல்லும் தலைவன் அவன் என்பதை அவனது உடையும் தோற்றமுமே கூறின. எல்லையற்ற கடலின் எல்லையைத் தனது பார்வையாலேயே அளந்து விடுபவனைப் போல நீர்ப் பரப்பையே பார்த்துக் கொண்டு நின்று கொண்டிருந்தான் அவன். கப்பலிலிருந்த வீரர்கள் பல்வேறு காரியங்களில் ஈடுபட்டிருந்தாலும் அவர்களது கவனம் அந்தக் கம்பீரமான வாலிபனிடமும் லயித்திருந்தன.

திடீரென்று அந்த இளைஞன் திரும்பினான். அருகில் அவன் ஆணைக்காகக் காத்திருந்த ஒரு வீரனின் கையில் இருந்த தொலை நோக்கிக் கருவியை வாங்கி அதை இழுத்து நீட்டி உன்னிப்பாக எதையோ பார்த்தான். அவனது அந்தச் சலனம் தளத்திலிருந்த வீரர்களிடையே சட்டென்று அமைதியை ஏற்படுத்தியது. அத்தனை பேரும் அடுத்து அவனிடமிருந்து பிறக்கும் உத்தரவை எதிர்பார்த்து மௌனமாகக் காத்திருந்தனர்.

காண்பதற்கு வசதியாக இழுத்து நீட்டக்கூடிய அந்தத் தொலைநோக்கிக் கருவியை அமுக்கிச் சுருக்கியபடியே தன் வீரர்களின் பக்கம் திரும்பிய அந்த வாலிபனின் முகத்தில் மகிழ்ச்சி குடிகொண்டிருந்தது.

"விரோதிக் கப்பல்கள் மூன்று வருகின்றன. தாக்குதலுக்குத் தயாராகிக் கொள்ளுங்கள்" என்று கட்டளை பிறப்பித்தான். அதைக் கேட்ட வீரர்கள் உற்சாக ஆதரவாரமிட்டார்கள். அடுத்த கப்பலுக்கும் இச்செய்தி அறிவிக்கப்பட்டது.

இரு கப்பல்களிலும் நிலவிய சூழ்நிலை மாறியது. பரபரப்புடன் இயங்கிய வீரர்கள் இங்குமங்கும் ஓடியவண்ணம் இருந்தார்கள். தூங்கிக் கொண்டிருந்த ஒருரு கொடிய மிருகம் கண் விழித்ததைப் போலக் கப்பலின் இருபுறமும் சடசடவென்று பல கதவுகள் திறந்து கொண்டன. உள் பக்கமாகத் தள்ளி வைக்கப் பட்டிருந்த பீரங்கிகள் தமது வாய்களை அந்தத் திறந்த கதவுகளின் வழியாக நீட்டிக் கொண்டு முன்னே நகர்ந்து வந்தன. பீரங்கிகளில் கொட்டிக் கெட்டிக்கப் பீப்பாய்

பீப்பாயாக வெடி மருந்துகள் மேல்தளத்துக்குக் கொண்டு வரப்பட்டன சுருட்டி வைக்கப் பட்டிருந்த சில பாய்மரத் துணிகள் அவிழ்த்து விடப்பட்டிருந்த படுதாக்களையும் இழுத்து இறுக்கினார்கள். இதனால் மந்தகதியில் போய்க் கொண்டிருந்த கப்பல், நீரைக் கிழித்துக் கொண்டு பாய்ந்தபடி வேகமாக முன்னேறியது. மின்னும் வாளுடன் கப்பலின் முகப்பில் நின்று கொண்டிருந்த அந்த இளைஞனிட மிருந்து எந்த நிமிடத்தில் என்ன உத்தரவு வருமோ என்று ஆவலுடன் காத்திருந்தார்கள் வீரர்கள்.

இதே சமயத்தில் இந்தக் கப்பல்களை நோக்கி மூன்று கப்பல்கள் வந்து கொண்டிருந்தன. அவை மூன்றுமே பல பாய்மரங்களைக் கொண்ட பெரிய கப்பல்கள். அவற்றின் பாய்மரங்களில் பெரிய நிலுவை குறி போடப்பட்டிருந்தாலும் அவை ஸ்பெயின் தேசத்துக் கப்பல்கள் என்பதை அதன் கட்டுமானத்திலிருந்து புரிந்து கொண்டான் அந்த வாலிபன். அந்தக் கடலில் முகமதியர்களுக்கு அடுத்தபடியாக ஆதிக்கம் செலுத்துபவர்கள் அவர்கள்தானே?

அந்தக் கப்பல்களில் உள்ளவர்களும் இவர்களைப் பார்த்திருக்க வேண்டும். அவர்கள் கப்பலிலிருந்து 'க்குகும்'... க்குகும்' என்று பீரங்கிகள் முழங்கின. 'எங்களுக்குப் பணிந்து விடுங்கள்' என்று எச்சரிக்கை விடுக்க வானத்தை நோக்கிச் சுடப்படும் பீரங்கிகளின் முழக்கம்தான் அது. துணிச்சலுக்குப் பெயர் பெற்ற துருக்கியர்கள் எங்காவது பணிந்து போவார்களா? தவிரவும் அந்தத் துருக்கிய வாலிபனின் தலைமையில் இதுவரை அவர்கள் தோல்வியே கண்டறியாதவர்கள். ஸ்பெயின் நாட்டுக் கப்பல்கள் கக்கிய பீரங்கி ஒலிக்கு இவர்களிடமிருந்து எவ்விதப் பதிலுமில்லை. ஒரு குறிப்பிட்ட இடைவெளிக்காகக் காத்திருந்த வனைப் போல அந்தத் துருக்கியத் தலைவனின் கைவாள் தலைக்கு மேலே உயர்ந்தது. அதைக் கண்ட வீரர்களின் உடலில் துடிப்பு மிகுந்தது.

"பீரங்கிகள் முழங்கட்டும்" என்று தனது வாளைச் சுழற்றி உத்தரவு கொடுத்தான் கப்பல் தலைவன். ஒன்று, இரண்டு, மூன்று என்று வரிசையாகப் பீரங்கிகள் நெருப்பை வாரிக் கொட்டின. அதே சமயம் ஸ்பெயின் தேசத்துக் கப்பல்களிலிருந்தும் ஏராளமான பீரங்கிகள் குண்டுகளைப் பொழிந்தன. இப்போது இரண்டு கப்பல்களும் மிக மிக அருகே வந்துவிட்டன. இரும்புக் கொக்கிகள் இணைத்த கயிறுகளைச் சுழற்றி எதிரிக் கப்பலை நோக்கி வீசினார்கள் துருக்கிய மாலுமிகள்.

அந்தக் கொக்கிகள் பகைக் கப்பலின் பாய் மரத்திலும் வேறு பல இடங்களிம் உறுதியாகப் பற்றிக் கொண்டன. அப்படிப் பாலம் அமைத்த அந்தக் கயிறுகளைப் பிடித்துக் கொண்டு ஊசலாடியபடியே எதிரிகளின் கப்பலுக்குள் போய்க் குதித்தார்கள் துருக்கிய மாலுமிகள். வாளோடு வாள் மோதிற்று. வீரர்களின் ஆவேசமான கூச்சல் ஆரவாரமாக எழுந்தது. அந்தத் துருக்கிய இளைஞர் திரும்பிய பக்கமெல்லாம் பகைவர்கள் ஒன்று படுகாயமடைந் தார்கள் அல்லது பயந்து போய் ஓடினார்கள்.

ஆனால் வெற்றி...?

துருக்கிக் கப்பல் தலைவன் எதிர்பார்த்தபடி அது அவனுக்குக் கிடைக்கவில்லை. விரோதிகளின் கப்பல்களில் ஒன்றுதான் இவர்களின் அருகே வந்திருந்தது. மற்ற இரண்டும் தொலைவில் நின்றபடி இவர்கள் மீது குண்டுகளைப் பொழிந்து கொண்டிருந்தன. அவற்றின் பீரங்கித் தாக்குதலுக்கு இலக்காகி ஒரு துருக்கியக் கப்பலின் பாய்மரங்கள் முறிந்து, தளம் பிளந்து முழுகும் தறுவாயிலிருந்தது. மற்றொரு பிரதானக் கப்பலின் மீது ஸ்பானியக் கப்பல் இசைகேடாக மோதிய வேகத்தில் அதன் ஒரு நீண்ட மரம் இதன் உடலைத் துளைத்துக் கொண்டு போய் விட்டது. அதிலிருந்து கப்பலை விடுவிப்பதென்பது இனி முடியாத காரியம்.

தங்கள் இரு கப்பல்களுக்கும் நேர்ந்த இத்தகைய எதிர்பாராத அபாயத்தை உணர்ந்த அந்த வாலிபனின் இரத்தம் கொதித்தது. எட்ட நின்றபடி எதிரிகள் தொடர்ந்து பீரங்கிப் பிரயோகம் செய்வது வேறு அவன் சினத்தை வளர்த்தது. தோல்வி நிச்சயம் என்று அறிந்த பிறகு - தன் இரண்டு கப்பல்களுக்குப் பிரதியாக அவர்களின் ஒரு கப்பலையாவது அழித்தே தீருவது என்ற ஆவேசத்துடன் செயல்படலானான்: தன் கப்பலில் உள்ள பீரங்கிகளைத் திருப்பினான். அருகே நெருங்கி நின்று போரிட்டுக் கொண்டிருக்கும் கப்பலின் பிரதான கொடிமரத்தை நோக்கிக் குறி வைத்தான். அடுத்த விநாடி அந்த நடுமரம் பயங்கரமான ஓசையோடு சாய்ந்தது - துருக்கிக் கப்பலின் மீதே அழிவுதான். ஆனால் அதற்காக அவர்களை விட்டு விடுவதா? மறுபடியும் பீரங்கிகள் நெருப்பைக் கக்கிய போது ஸ்பானியக் கப்பலின் தளம் தூளாகி வானத்திலே பறந்தது. அதே சமயம் பகைவனின் பீரங்கிக் குண்டொன்று துருக்கிக் கப்பலின் மருந்துக் கிடங்கில் விழவே பயங்கரமான இடி முழக்கத்துடன்

மரக்கலமே வெடித்துச் சிதறியபோது அந்த இளைஞனும் அத்துடன் கடலில் தூக்கி எறியப்பட்டான்.

எங்கும் புகை, நெருப்பு, மரண ஓலம்தான். கடற்போர் முடிந்து விட்டது. இரண்டு துருக்கியக் கப்பல்களும் மூழ்கி விட்டன. ஸ்பானியக் கப்பலில் ஒன்று இனிப் பிரயாணத்துக்கு லாயக்கற்ற வகையில் நாசமடைந்து மெள்ள மெள்ள மூழ்கிக் கொண்டிருந்தது. தூரத்திலிருந்த அவர்களின் மற்ற இரண்டு கப்பல்களும் இப்போது அதன் அருகே வந்திருந்தன. உயிருக்கு மன்றாடியபடி நீரில் தத்தளித்துக் கொண்டிருந்த வீரர்களிடம் கயிறுகளை வீசி அவர்களைக் கப்பலில் ஏற்ற உதவிக் கொண்டிருந்தார்கள். மேலே வந்த ஒரு சில துருக்கிய வீரர்கள் கைதானார்கள்.

சில மணி நேரங்களுக்கு முன்பு அமைதியும் அழகும் குடிகொண்டிருந்த அந்த இடம் இப்போது கோரமாகக் காட்சியளித்தது. கடல் நீரில் கப்பல்களின் உடைந்த பகுதிகளும் வீரர்களின் உடல்களும் உடைமைகளும் தாறுமாறாக மிதந்து கொண்டிருந்தன. ஆங்காங்கே எரிந்தபடி மிதந்து கொண்டிருந்தன மரக்கலங்களின் சில பகுதிகள். கடல் நீரிலெல்லாம் கரியும் சாம்பலுமதான்.

ஸ்பானியர்கள் தங்களுக்குக் கிடைத்த வெற்றிப் பெரு மிதத்திலே திளைத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களே கூட எதிர்பார்க்காத வெற்றிதான் அது. துருக்கியக் கப்பலை, அதுவும் இரண்டு கப்பல்களை, இத்தனை இலகுவாக மூழ்கடிப்போம் என்று அவர்கள் கனவு கூடக் கண்டிருக்க மாட்டார்கள். போராட்டம் உக்கிரமாக இருக்கும், அதன் விளைவும் வேறு விதமாக இருக்கலாம் என்றே எதிர்பார்த்தவர்களுக்கு வெற்றி கிட்டியதில் பெரு மகிழ்ச்சிதான்.

கப்பலின் தலைவர்கள் தொலைநோக்கி மூலம், கைதியாக விரும்பாத துருக்கிய வீரர்கள் கடலில் நீந்தியபடியே தத்தளிப் பதைக் கண்டு ரசித்துக் கொண்டிருந்தனர்.

அப்போது ஓர் அதிசயம் நிகழ்ந்தது. ஸ்பானியக் கப்பலில் உள்ள அத்தனை பேரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அது நடந்தது.

நீரில் மிதந்து கொண்டிருந்த ஓர் உருவம் தலை நிமிர்ந்தது. அதன் அருகே மிதந்து கொண்டிருந்தது ஓர் ஈட்டி. சற்று நேரத்துக்கு முன்பு வரை யாரோ ஒரு வீரனுடைய உடைமையாக இருந்த அதைக்

கைப்பற்றிய அந்த உருவம் நீரில் தன்னால் எத்தனை உயரத்துக்கு எவ்வ முடியுமோ அத்தனை உயரத்துக்கு - இடுப்பு வரை மேலே எழும்பி அந்த ஈட்டியை ஸ்பானியக் கப்பல் தலைவனின் மார்புக்கு நேரே குறி பார்த்து வீசியது. அடுத்த விநாடி அந்த ஈட்டி, ஸ்பானியக் கப்பல் தலைவர்களில் ஒருவனுடைய, இதயத்தைத் துளைத்துக் கொண்டு வெளி வந்தது.

கால் தரையிலே ஊன்ற முடியாத நிலையில் நீரிலே மிதந்தபடியே ஒருவன் ஈட்டியை அத்தனை லாகவமாகக் குறி பார்த்து வேகமாக வீசுவதென்றால் அவனது திறமைக்கு ஈடு இணையே இருக்க முடியாது என்று அந்தச் சாகஸச் செயலைப் பார்த்த பகைவர்களே பாராட்டினார்கள். அந்தச் செயலுக்கு உரியவனைச் சிறிது நேரத்தில் கைதியாக்கி, மிகுந்த பிரயாசை யின் பேரில் கப்பலின் மேல் தளத்துக்குக் கொண்டு வந்தார்கள். அந்த ஒருவனை ஐந்து வீரர்கள் சமாளிக்க வேண்டியிருந்தது.

அவன் - அந்த வீரன் வேறு யாருமல்ல. துருக்கியக் கப்பலின் தலைவனாக இருந்த வீர இளைஞன்தான். கட்டுக் கடங்காமல் திமிறிக் கொண்டிருந்த அவனது உடலின் தசை நார்கள் முறுக்கேறி வெறி கொண்டிருந்தன.

“நீ யார், உன் பெயர் என்ன?” என்று கேட்டார் ஸ்பானியக் கப்பலின் அதிகாரி.

“உங்கள் கைதியாகி விட்டபின் நான் யாராக இருந்தால் என்ன? என் பெயர் எதுவானால்தான் என்ன?” என்றான் அந்த இளைஞன். அமுக்கிப் பிடித்திருந்தும் அவனது பரந்த மார்பு கடல் அலையாக விம்மித் தணிந்து கொண்டிருந்தது.

“ஒரு வேளை அவர் புகழ்பெற்ற சுலைமானாக இருப்பார்!” என்றான் ஓர் அதிகாரி ஏளனமாக.

தன் மதிப்புக்குரிய மன்னரின் பெயரைக் கேலியான முறையில் குறிப்பிடுவதைத் தாங்காத அந்த வீர இளைஞன் உடனே, “எங்கள் சக்கரவர்த்தி சுலைமான் இப்படி உங்களிடம் அகப்பட்டிருக்க மாட்டார். அவராக இருந்திருந்தால் உங்கள் நாட்டுக் கப்பல்கள் அத்தனையும் இந்நேரம் ஆழ்கடலின் அடியில் போயிருக்கும். தோல்வியே கண்டறியாத சுலைமானின் வீரர்களுள் நான் மிக மிகச் சாதாரணமானவன். என் பெயர் பூசப்கான்” என்றான். கைதியாகி

விட்டோமே என்ற அவமானத்தினால் அவன் உடல் குன்றிப் போயிருந்தாலும் அவன் உடல் குன்றிப் போயிருந்தாலும் யஜமான விசுவாசத்தில் குரல் மட்டும் உக்கிரமாக இருந்தது.

அவனது வேல் வீச்சுக்குத் தங்களில் ஒருவனைப் பலி கொடுத்திருந்தும்கூட யூசப்கானின் தைரியத்தையும் வீரத்தையும் மனத்துக்குள் பாராட்டினார்கள் பகைவர்கள். ஆனால் அதற்காக அவர்கள் அவனுக்குச் சுதந்திரத்தை வழங்கிவிட வில்லை. உயிருக்கு உயிர் என்று உடனே பழி வாங்கவும் விரும்பவில்லை. ஒரு வேளை யூசப்கான் கடற் கொள்ளைக்காரனாக இருந் திருந்தால் அப்படிச் செய்திருக்கலாம்.

யூசப்கானின் வீரத் திருமுகத்தையும் இளமை கொழிக்கும் உடலையும் கண்ட ஸ்பானியக் கடற்படைத் தலைவனின் உள்ளத்தில் ஒரு குரூரமான எண்ணம் தோன்றியது. அவனையே சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு கடலில் மிதந்து கொண்டிருந்த உடைந்த கப்பலின் ஒரு பகுதியைத் தமது வீரர்களுக்குச் சுட்டிக்காட்டி ஏதோ உத்தரவிட்டான்.

சிறிது நேரத்தில் எல்லாம் தயாராகிவிட்டதாக ஒரு வீரன் வந்து அவனிடம் கூறியபோது அவன் கடகடவென்று விகாரமாகச் சிரிக்கலானான். சிரித்துக் கொண்டே, சைகை செய்ய, வீரர்கள் யூசப்கானைப் பலவந்தமாக இழுத்துக் கொண்டு போய் அந்த மிதப்பில் கிடத்தி அதில் பிணைத்துள்ள சங்கிலியோடு இணைக்கப்பட்ட இரும்புப் பட்டத்தை அவன் இடையில் மாட்டி இறுக்கினார்கள். எந்த ஈட்டியை வீசி எல்லோரது வியப்புக்கும் ஆளானானோ அந்த ஈட்டியை அந்த மிதப்பின் நடுவில் பாய்ச்சி நிறுத்திக் கொடிக் கம்பமாக்கினார்கள். ஒரு பீப்பாய் குடி நீரையும் ஒரு பீப்பாய் ரொட்டியையும் உருட்டிக் கொண்டு வந்து அவன் அருகில் கிடத்தினார்கள்.

இன்னும் அந்த அதிகாரி விகாரமாகச் சிரித்துக் கொண்டிருந்தான். கண்களில் ஜலம் தளும்ப, சிரிக்க முடியாமல் அவன் சிரித்த ஒலி இப்போது 'கெக்கெக்கெ' என்று கேவலாக மாறிக் கொண்டிருந்தது.

"மாட்சிமை பொருந்திய மாவீரன் யூசப்கான் அவர்களு டைய கப்பலுக்குக் கொடி கட்டுங்களப்பா" என்றான் அதிகாரி. வேல்

துளைத்த வீரனின் ரத்தம் படிந்த மேலங்கியை ஈட்டியின் உச்சியில் கட்டினார்கள்.

அதில் பதித்திருந்த சிலுவைக் குறி அந்த ரோஷமிக்க முகமதிய இளைஞனின் தன்மானத்துக்கு மேலும் ரு தண்டனை யாக இருக்கட்டுமென ஸ்பானியக் கப்பல் தலைவன் எண்ணிக் கொக்கரித்தான்.

“வெயில்... மழை... பனி... புயல்... ஹ... ஹா... ஹா...! பீப்பாய் களில் உள்ள தண்ணீரும் உணவும் குறையக் குறைய... ஹ... ஹ... ஹா...!” முடிக்காமல் முடிவில்லாமல் சிரித்துக் கொண்டிருந்தான் அவன். அவன் முடிக்காமல் விட்ட அந்தப் பயங்கர நிலையை எண்ணிப் பார்த்தபடியே இறுகிப் போன உள்ளத்துடன் யூசப்கான் உட்கார்ந்திருந்த கட்டு மரம் ஆடி அசைந்தபடி கடலில் மிதக்கலாயிற்று.

## 2

# கனவுகள் ஆயிரம்

**வ**லிமை மிக்க இரண்டு கப்பல்களை நடத்திச் சென்ற வாலிபன் யூசப்கான் இப்போது தன்னந் தனியே சிதைந்த கட்டுமரத்தில் சிதைந்த உள்ளத்தவனாகக் கடலில் மிதந்து கொண்டிருந்தான் - வினோதமான சூழ்நிலையில். புயற்காற்றையும் பொங்கி எழும் பயங்கரமான அலைகளையும் எதிர்த்துப் பெரிய மரக்கலத்தையே நடத்திச் செல்லும் ஆற்றல் படைத்த தன்னை இந்த மிதப்பு தன் இச்சைப்படி இழுத்துச் செல்வதை எண்ணிய போது அவனிடமிருந்து விரக்தி நிறைந்த சிரிப்புத்தான் வெடித்தது. தன்னைப் பிணைத்துள்ள அந்த இரும்புச் சங்கிலியிலிருந்து விடுதலை பெறுவது அவனுக்கொன்றும் பெரிய காரியமல்ல ஆனால் அதிலிருந்து விடுவித்துக் கொண்ட பின் அவன் போவது எங்கே?

ஆறு மாதங்களுக்கு முன்பு எத்தனையோ ஆசைக் கனவுகளோடு கிளம்பியவன்தான் அவன். கடலிலே மகத்தான சாகசங்கள் புரிந்து மன்னர் சுலைமானின் அன்புக்கும் ஆதரவுக்கும்

பாத்திரமாகி, துருக்கி மக்களின் மதிப்புக்குகந்த பிரஜையாக மகிமையோடு வாழ வேண்டும் என்றெல்லாம் திட்டமிட்டிருந்தவனுக்கு விதி எத்தகைய முடிவை ஏற்படுத்திக் கொடுத்து விட்டது? இரண்டு கப்பல்களை இழந்து விட்டுத் தோல்வியின் சுமையால் தொங்கிய தலையுடன் தாய் நாட்டுக்குத் திரும்புவதை அவனால் எண்ணிப் பார்க்கவும் முடியவில்லை. அந்தச் சிதைந்த கட்டுமரத்தில் அவனைச் செயலற்றவனாக்கி உட்கார்த்தி வைத்திருந்ததற்கு அவனது அந்தத் தாபமும்கூட ஒரு காரணம்தான்.

பகலில் தகிக்கும் வெய்யிலின் உக்கிரம் தாங்க முடியாது. மிதப்பில் படுத்தபடி கடல் நீரைக் கைகளால் அள்ளி முகத்திலும் மார்பிலும் உடலிலும் ஊற்றிக் கொள்ளுவான். இரவிலோ சகித்த முடியாத குளிர். காலூன்றி நிற்கும் இடமெல்லாமோ கடல் நீரின் கசிவு. நடுக்கும் குளிரிலே ஓய்ந்த உடலை எப்படி எங்கே முடக்கிக் கொள்ளுவது? - ஜீவாதாரமான அந்த இரண்டு பீப்பாய்களையும் அருகருகே இழுத்துப் போட்டு அவற்றின் மீது ஏதோ ஒரு விதமாகச் சுருண்டபடி இருள் விலகாதா, கதகதப்பான சூரிய ஒளியைக் காண மாட்டோமா என்று காத்துக் கிடப்பான். பொழுது புலர்ந்து வெயில் வளர்ந்தாலோ வேறு விதமான அவஸ்தை. இதே நிலை இன்னும் எத்தனை நாளைக்கோ? உடலில் உயிரும் உணர்வுகளும் உள்ளவரை இது நீடிக்கு மானால்...? அது போகட்டும். இந்த உடலில் உயிரும் உணர்வு களும் இன்னும் எவ்வளவு காலம்தான் நீடிக்கும்...?

கண்ணுக்கெட்டிய தூரம் வரை பரந்து கிடந்த கரு நீலக் கடலை நிராசையோடு பார்த்தபடி உட்கார்ந்திருந்தான் யூசப்கான். என்றாவது ஒரு நாள் தன் மிதப்பு ஏதாவது ஒரு நிலப் பகுதியில் போய் ஒதுங்கும். நமக்கும் விடிவு காலம் ஏற்படும் என்ற நம்பிக்கை இன்னமும் அவன் உள்ளத்தின் ஓரத்தில் மினுக்கிட்டுக் கொண்டுதான் இருந்தது. அந்த நாள் வரை எப்படியும் வாழ்ந்தாக வேண்டும் என்ற உயிர் ஆசையால் உணவு உட்கொள்ளுவதைக் கட்டுப்படுத்திக் கொண்டான். தாங்க முடியாத பசி குடலைச் சுருட்டிப் பிடிக்கும் வேளையில் மட்டுமே ஒரு துண்டு ரொட்டியை எடுத்துச் சுவைப்பான். அதேபோல் நெஞ்சும் வாயும் உலர்ந்து, உதடுகள் காய்ந்து நீருக்காகத் தவிக்கும் போது மட்டுமே அந்தச் சுத்த நீரை ஒரு மடக்கு எடுத்துக் குடிப்பான். உணவும் நீரும் இல்லாமல் பரிதாபமாக அந்த நடுக் கடலில் உயிரிழப்பதை அவன் விரும்பவில்லை. ‘வாழ்ந்தே தீருவேன்’ என்ற

வைராக்கியம் அவன் உடலில் உயிரை மட்டும் தான் வைத்திருந்தது. அவயவங்களை அசைக்கவும் முடியாததொரு ஓய்ந்த நிலை அவனை ஆட்கொள்ளலாயிற்று. உள்ளத்திலே உணர்வுகள் ஓடினாலும் அவற்றைச் செயலாக்க உடலிலே தெம்பில்லை. மயங்கி நினைவிழந்தான்.

**ப**சேலென்ற புல்வெளியின் நடுவே ஒரு பூஞ்சோலை. அதிலே ஓர் அழகான மண்டபம். அதன் தூண்களிலே வண்ண வண்ண மலர்க் கொடிகள் பின்னிப் பிணைந்திருக்கின்றன. மண்டபத்தைச் சுற்றிலும் நீரூற்றுக்கள். அவற்றிலிருந்து பொங்கும் தண்ணென்ற நீர் மண்டபத்தின் மேலாக எழும்பிப் பூப்பூவாக அதன் மீது சொரிந்த வண்ணம் இருக்கிறது. மண்டபத்திலே ஓர் ஊஞ்சல். அதிலே உயர்ந்த வேலைப்பாடமைந்த திண்டுகள்... அவற்றில் சொகுசாகச் சாய்ந்தபடி உட்கார்ந்திருக்கிறான் யூசப்கான். அவன் தோற்றம்தான் எத்தனை அழகாக, கம்பீரமாக இருக்கிறது! அவன் அணிந்துள்ள உடைகளின் அழகோ கண்களைப் பறிக்கும் வண்ணம் மின்னுகின்றன.

அவன் முன்னே ஒரு பெரிய தட்டில் தளதளவென்று அன்று பறித்த பழ வகைகள் குவித்து வைக்கப்பட்டுள்ளன. அந்த ஊஞ்சலின் அருகே அழகே அவதாரமான ஒரு கட்டழகி ஒய்யாரமாக நின்றபடி தங்கக் கோப்பையில் மதுவை நிறைத்து அவன் முன் நீட்டுகிறாள். அதை வாங்கிக் கொள்ளாமல் அவன் அவள் மதிவதனத்தைத் தாவிப் பிடிக்கப் போகிறான். சலங்கை ஒலிச் சிரிப்பை உதிர்த்த அந்த முத்துப் பல் மோகினியாள் தன் கருந்திராட்சை விழிகளை ஒயிலாகச் சுழற்றியபடி ஒதுங்கிக் கொண்டு விடுகிறாள். இதனால் யூசப்கான் நிலை தடுமாறிப் பழத் தட்டில் கையூன்றத் திராட்சைக் குலைகள் நசுங்கி அதன் பழச் சாறு அவன் முகத்தில் தெறிக்கிறது. ஒதுங்கிய சிங்காரி ஓடி வந்து யூசப்கானைத் தாவிப் பிடித்துக் கொள்ளுகிறாள்.

யூசப்கான் கண் திறந்த போது தன்னை இரண்டு மென் கரங்கள் தாங்கிப் பிடித்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாக இரண்டு முரட்டுக் கரங்களின் பிடிப்பில் தான் இருப்பதை உணர்ந்தான். திராட்சைப் பழச் சாற்றுக்குப் பதில் அவன் முகத்தில் யாரோ தண்ணீரை அடித்துக் கொண்டிருந்தார்கள். அந்த இனிய கனவிலிருந்து விடுபட விரும்பாதவனைப் போல அவன் குருட்டுத்தனமாகத் தலையை ஆட்டிக் கொண்டிருந்தான். முரட்டுக் காங்களின் குலுக்கலில் அந்தச்

சுகானுபவம் கழன்று விழவே மெள்ளக் கண் விழித்துப் பார்த்தான் யூசப். அந்தச் சூழல் அவன் விழிகளை விசாலமாக்கியது.

இப்போது அவன் அந்த மோசமான கட்டுமானத்தில் மிதந்து கொண்டிருக்கவில்லை. ஒரு பெரிய கப்பலின் மேல் தளத்தில் இருந்தான். அவனைச் சுற்றி இப்போது வெறும் தனிமையும் தண்ணீரும் மட்டும் இல்லை. மனிதர்கள் சூழ்ந்து நின்று கொண்டிருந்தார்கள். நினைவிழந்து மயங்கிக் கிடந்த யூசப்கானுக்கு முதலில் தன்னைச் சுற்றி எல்லாம் மற்றொரு கனவு போலத் தோன்றின. மெல்ல மெல்லக் கனவுப் படலங்கள் கரைந்து நனவுகளாயின. தன்னைச் சுற்றி இருப்பவர்கள் கனவுலகத்தவர் களல்லர் நினைவுலகத்து மனிதர்கள்தாம் என்பதைப் புரிந்து கொண்டான். அவர்களுடைய பேச்சைக் கவனித்ததிலிருந்து, அவர்கள் இந்த நில உலகத்துப் போர்ச்சுகலைச் சேர்ந்த வியாபாரிகள் என்பதையும் புரிந்து கொண்டான். அந்தப் போர்ச்சுகீசியர்கள் பாரதம் என்ற தொன்மையும் அற்புதங்களும் வாய்ந்த நாட்டை நோக்கிச் செல்கிறார்கள் எனத் தெரிந்து கொண்டான். அந்தக் கப்பலில் தான் இடம் பெற்றதெப்படி என்பதையும் மெல்ல மெல்ல அறிந்து கொண்டான். இந்தியா செல்லும் மார்க்கத்தில் தன்னை அந்தப் போர்ச்சுகீசிய வியாபாரக் கப்பல் கண்டு மீட்டுக் கொண்டு வந்திருக்கிறது என்று அறிந்து கொள்ள அவனுக்கு வெகுநேரமாக வில்லை.

அவன் உடையையும் ஈட்டியில் கட்டியிருந்த சிலுவைக் குறிப்பிட்ட துணியையும் பார்த்ததுமே அவனை ஒரு மாதிரியாக எடை போட்டு விட்டனர் போர்ச்சுகீசியர். கடலில் பிரயாணம் செய்வோர் அநுசரிக்க வேண்டிய கடமைப்படி அவனைக் காப்பாற்றினார்களே தவிர அவனிடம் அவர்களுக்குக் கருணை பிறக்கவில்லை. கடல் கொள்ளைக்காரர்களான மூர் என்ற இனத்தைச் சேர்ந்தவன் அவன் என்ற முடிவுக்கு வந்ததே அதற்குக் காரணம். இதையெல்லாம் யூசப்கான் யூகத்தால் அறிந்தான்.

யூசப்கானின் பசியையும் களைப்பையும் போக்கியதும் அவனைப் பற்றிய விவரங்களை விசாரித்தறிந்தார்கள். ஆனால் அது விசேஷமான மாறுதல் எதையும் அவர்களிடம் உண்டாக்கி விடவில்லை. துருக்கியும் அவர்களுடைய பொது எதிரிதானே? ஆகவே யூசப்கானைத் தங்கள் கைதியாகவே பாவிக்கத் தொடங்கினார்கள்.

கட்டுமரத்திலிருந்து கப்பலுக்கு வந்திருந்தான் யூசப்கான். பசிக்கு உணவும் படுக்கப் பாதுகாப்பான இடமும் கிடைத்தது என்னவோ உண்மைதான். ஆனால் தன்மானம் பறிபோய் விட்டது. போர்ச்சுகீசியர் யூசப்கானை மிகக் கேவலமாக நடத்தினர்.

கொலை கொள்ளை போன்ற பயங்கரமான குற்றம் செய்து தண்டனை பெற்ற கைதிகளை அந்தக் காலத்தில் அந்நிய நாடுகளுக்குச் செல்லும் கப்பலில் அழைத்து வருவதுண்டு. கப்பல் தளத்தைக் கழுவுதல், மூட்டை தூக்குதல் போன்ற மட்டமான காரியங்களுக்கே இக்கைதிகளைப் பயன்படுத்துவார்கள். கொள்ளைக்காரர்களால் கப்பல் தாக்கப்படும் போது இக்கைதிகள் போர் வீரர்களாக மாற்றப்படுவதுண்டு. இத்தகைய கைதிகளைக் கப்பலின் அடித் தளத்திலுள்ள ஓர் இருண்ட மோசமான பகுதியில் அடைத்து வைத்திருப்பார்கள். அவர்களோடு யூசப்கானையும் கொண்டு போய்த் தள்ளினார்கள். அந்தக் கைதிகள்கூட அவன் துருக்கியன் என்ற காரணத்துக்காக அவனுடன் சகஜமாகப் பழகவில்லை. ஆனால் யூசப்கான் எதையும் பொருட்படுத்தாமல் ஒரு மூளையில் போய் முடங்கிக் கொண்டான்.

நாட்கள் நகர்ந்தன. துன்பங்கள் தொடர்ந்தன எனினும், அந்தக் கப்பல் இந்தியாவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என்ற ஒன்றிலேயே அந்தத் துன்ப வாழ்விலும் யூசப்கானின் உள்ளம் உவகை கொண்டது. இந்தியாவைப் பற்றி அவன் எத்தனையோ அதிசயமான செய்திகளைக் கேள்விப்பட்டிருக் கிறான். செல்வம் கொழிக்கும் தேசம் என்று அதை அவன் நாட்டினர் வருணித்திருக்கிறார்கள். துருக்கியிலிருந்து சென்ற பல வீரர்கள் இந்திய மாமன்னர்களிடம் மகிமையோடு. வாழுவதைப் பற்றியும் அவன் நன்கு அறிந்தவன்தான்.

இந்திய நாட்டைக் காணப் போகிறோம் என்ற நினைப்பே அவனுக்குப் புதிய உற்சாகத்தையும் தெம்பையும் கொடுத்தது. தன் கனவுகளைப் பாழாக்கித் தன்னை இந்த அடிமை நிலைக்கு ஆளாக்கியதற்காக விதியையும் ஆண்டவனையும் முன்பு நொந்து கொண்டிருந்தவன் அதற்காக இப்போது ஆண்டவனிடம் மன்னிப்புக் கோரலானான். நாகரிகத்தில் மேம்பட்ட அதிசய நாடான இந்தியாவுக்குத் தன்னைக் கூட்டி வருவதற்கே ஆண்டவன் இத்தனையும் திட்டமிட்டு நடத்தி இருப்பதாக நம்பலானான் யூசப்கான்.

போர்ச்சுகீசியரின் உதாசீனங்களையும் கொடுமைகளையும்கூட இப்போது பொறுமையோடு சகித்துக் கொண்டான். கப்பல் இந்தியாவில் நங்கூரம் பாய்ச்சியதும் எப்படியாவது இந்தப் போர்ச்சுகீசிய அரக்கர்களிடமிருந்து தப்பிச் சென்று விடவேண்டும் என்றும் உறுதி செய்து கொண்டான் அவன்.

அந்த நாளும் வந்தது!

போர்ச்சுகீசியக் கப்பல் இந்திய நாட்டின் மேற்குக் கரைத் துறைமுகமான கோவாவில் நங்கூரம் பாய்ச்சி நின்றது. மறு நாளே அங்கிருந்து கிளம்பப் போவதால் யாரும் கப்பலிலிருந்து கரைக்குச் செல்லக் கூடாதென்று உத்தரவு பிறப்பித்து விட்டான் கப்பல் தலைவன். ஆகவே யூசப்கான் கப்பலிருந்தபடியே செல்வம் கொழிக்கும் இந்திய நாட்டின் துறைமுகத்தைப் பார்த்தான். பல கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நின்றிருந்தன. போர்ச்சுகீசியரின் செல்வாக்கு மிகுந்திருந்தது அந்தத் துறைமுகத்தில். கரையில் குதிரைகள் பெரும் அளவில் நிறுத்தப்பட்டிருந்தன. அத்தனையும் யூசப்கானுக்குப் பழக்கமான குதிரைகள். அதாவது அவனது அண்டை நாடுகளான பாரசீகம், அரேபியா ஆகிய நாடுகளி லிருந்து கொண்டு வரப்பட்ட உயர்ந்த ஜாதிக் குதிரைகள்.

"இத்தனை குதிரைகளையும் இங்கு யாருக்காக இறக்குமதி செய்கிறார்கள்?" என்று கேட்டான் யூசப்கான்.

"இங்கிருந்து நூறு கல் தொலைவில் பிஸ்நாகா என்ற பலம் பொருந்திய ஒரு ஹிந்து ராஜ்யம் இருக்கிறது. அதன் படை களுக்குத்தான் இந்தக் குதிரைகள் எல்லாம் போகின்றன" என்றான் ஒரு போர்ச்சுகீசிய மாலுமி.

அவன் 'பிஸ்நாகா' என்று குறிப்பிட்டது விஜயநகர சாம்ராஜ்யத்தைத்தான். அந்தத் துறைமுகத்தில் வந்திறங்கிய குதிரைகள் அத்தனையையும் விஜய நகர மன்னரே வாங்கிக் கொள்ளுவதாகவும் அவன் குறிப்பிட்டான். அவரிடம் உள்ள குதிரைப் படையின் அளவை அவன் விவரித்த போது யூசப்கான் வியப்பினால் விம்மிதமடைந்து போனான்.

'பிஸ் நாகா' என்ற அந்தப் புகழ்பெற்ற ராஜ்யத்தைக் காணும் வாய்ப்புத் தனக்குக் கிடைக்குமானால் என்ற கற்பனையில் மூழ்கியபடி கப்பலின் அடித்தளத்தில் யூசப்கான் கண் மூடிக் கனவு கண்டு

கொண்டிருக்கும் போதே நங்கூரத்தை உயர்த்தினார்கள். கப்பல் நகரத் தொடங்கியது. போர்ச்சுகீசியர்களிடமிருந்து தப்பிக்கும் எண்ணம் பலிக்கவில்லை.

அடுத்து கப்பல் நங்கூரமிட்டது கேரளக் கடற்கரையின் துறைமுகத்தில்தான். சரக்குகளைச் சேகரித்துக் கொள்ளக் கப்பல் அங்கு நிரந்தரமாகச் சில நாட்கள் தங்கும் என்றும் அறிவிக்கப்பட்டது. கைதிகள் யாரையும் தன்னிச்சைப்படி விட்டு விடவில்லை போர்ச்சுகீசியர். ஏனெனில், அவர்களின் உழைப்பும் உதவியும் அவர்களுக்கு அவசியமாக இருந்தன. ஆகவே பலத்த காவலுடனேயே கைதிகளைக் கரைக்கு அழைத்துப் போய் வேலை வாங்கினார்கள்

யூசப்கான் இந்திய மண்ணில் இறங்கினான். திரும்பிய பக்கமெல்லாம் பசுமை கொழிக்கும் வயல்களைக் கண்டு வியந்தான். தென்னை மரச் சோலைகளின் அழகைக் கண்டு ஆனந்தம் கொண்டான். கருப்பு நிறத்தவர்களானாலும் உள்ளத்தில் வெண்மை கொண்ட இந்திய மக்கள் சுறுசுறுப்பாகத் தொழி புரிவதைக் கண்டு மகிழ்ந்து போனான். ஆனால் அவனை ஓரிடத்திலும் நிற்க விடாமல் போர்ச்சுகீசியப் பிசாசுகள் சாட்டை கொண்டு அடித்து விரட்டி வேலை வாங்கிக் கொண்டிருந்தன.

போர்ச்சுகீசியரின் வருகைக்கு முன்பே இந்தியக் கடல்களில் வாணிபம் நடத்தியவர்கள் முகமதியர்கள். போர்ச்சுகீசியரின் வரவினால் அவர்களுடைய வியாபாரம் பாதிக்கப்பட்டது. ஆகவே பரஸ்பரம் அவர்களிடையே விரோத மனப்பான்மை ஏற்பட்டது. கள்ளிக் கோட்டை மன்னர் ஜாமரினின் அன்புக்குப் பாத்திரமாகி யிருந்தார்கள், நேச பாவங்கொண்ட முகமதியர். அகம்பாவமும் அரக்க மனமும் கொண்ட புதிய வியாபாரிகளான போர்ச்சுகீசியரைப் பொது மக்கள் வெறுத்தனர். ஆனால் சக்தி வாய்ந்த அவர்களுடைய பீரங்கிகளின் முன்னால் எந்த எதிர்ப்பும் எடுபடவில்லை. போர்ச்சுகீசியரின் கை ஓங்கலாயிற்று. அவர்களிடம் ஏற்பட்டிருந்த பயத்தின் காரணமாகவே மக்கள் அவர்களுக்குத் தேவையான பண்டங்களை வியாபாரம் செய்யக் கொண்டு வந்து கொடுத்தார்கள். முகமதியர்களிடமோ நேசபாவத்துடன் பழகி வியாபாரம் செய்தார்கள். இந்த நிலை இந்திய வியாபாரிகளைப் போர்ச்சுகீசியர் சந்தேகக் கண் கொண்டு பார்க்கச் செய்தது.

கள்ளிக் கோட்டைத் துறைமுகத்துக்குப் போர்ச்சுகீசியக் கப்பல் வந்து சில நாட்களாகி விட்டன. ஒரு நாள் கப்பலின் அருகே நாட்டுப் படகுகளில் கேரள மீனவர் சிலர் மீன் பிடித்துக் கொண்டிருந்தனர். இந்தியர்களை நம்பாமல் அவர்கள் நல்லெண் ணத்தில் சந்தேகமும் அச்சமும் கொண்டிருந்த போர்ச்சுகீசியர் கப்பலில் இருந்தவாறே அவர்கள் அங்கு மீன் பிடிக்கக் கூடாது என்றும் உடனே போய்விட வேண்டம் என்றும் எச்சரித்தனர்.

"எங்கள் கடலில் நாங்கள் மீன் பிடிக்கக் கூடாது என்று சொல்ல நீங்கள் யார்?" என்று கேட்டார்கள் அந்த அப்பாவி மீனவர்கள்.

"கடலில் ஆட்சி செலுத்தும் அதிகாரம் பெற்றவர்கள் நாங்கள். உடனே போய் விடுங்கள்" என்று ஆணவத்துடன் துப்பாக்கியை நீட்டினார்கள் போர்ச்சுகீசியர்.

தம் சொந்த நாட்டில் வியாபாரம் செய்ய வந்து புகுந்து கொண்டிருக்கும் அந்நியன் தங்கள் மீது செலுத்தும் அதிகாரத்தைக் கண்டு ஆத்திரம் கொண்டாலும் அதை அடக்கிக் கொண்ட ஏலேலோப் பாட்டுப் பாடியபடி, வேண்டுமென்றே வலையை இன்னும் பரவலாக வீசினார்கள் அந்த வலைஞர்கள். தங்களை அவமதித்து ஏளனம் செய்வதாகப் புரிந்து கொண்ட போர்ச்சுகீசியரின் துப்பாக்கிகள் அனலைக் கக்கின. இரண்டு இந்திய நிரபராதிகள் ரத்தம் கடல் நீரைச் சிவப்பாக்கியது.

இவ்வளவையும் கப்பலின் மேல் தளத்தில் ஏதோ வேலையில் ஈடுபட்டபடியே கவனித்துக் கொண்டிருந்த யூசப்கானின் உள்ளம் கொதித்தது. அநியாயத்தைக் கண்டு ஆத்திரம் அடைந்த அவன் ஒரு போர்ச்சுகீசிய வெறியர் மீது பாய்ந்து அவன் துப்பாக்கியைப் பறித்துக் கடலில் வீசினான். அடுத்த விநாடியே யூசப்கானை நாலைந்து போர்ச்சுகீசிய வெறியர்களை வளைத்துக் கொண்டார்கள். கைதி ஒழுங்கீனமாக நடந்து கொண்ட குற்றத்துக்காக இருபது கசையடிகளும் இரண்டு நாள் பட்டினியும் தண்டனை விதிக்கப்பட்டது. வெற்றுடம்பு ரத்த விளாறாகியபின் கப்பலின் இருட்டறையில் கொண்டு போய்த் தள்ளினர்கள் யூசப்கானை.

இது நடந்து ஒரு வாரம் ஆயிற்று. கப்பலில் ஏற்றுவதற்காக ஏலம், மிளகு, கிராம்பு முதலிய பொருள்கள் படகுகளில் வந்து கொண்டிருந்தன. ஓர் இந்திய வியாபாரியின் இரண்டு படகுகளிலிருந்து

மிளகு மூட்டைகளை யூசப்கான் கப்பலில் ஏற்றுக் கொண்டிருந்தான். மூட்டைகளை யெல்லாம் ஏற்றியானதும் அந்த வியாபாரி கொண்டு வந்த பொருளுக்கு உரிய தொகையைக் கணக்குப் பார்த்துக் கொடுக்கும் போது ஏதோ சச்சரவு மூண்டது. நூறு மூட்டைகள்தான் என்றான் அதிகாரி. வியாபாரியோ தான் நூற்றைம்பது மூட்டைகள் மிளகைக் கொண்டு வந்ததாகக் கூறி அதற்குச் சாட்சியாக அவற்றைக் கப்பலில் கொண்டு போய் அடுக்கிய யூசப்கானைக் கூப்பிட்டுக் கேட்டும்படி சொன்னார்.

சாட்சிகள் எதையும் விசாரிக்க அதிகாரி விரும்பவில்லை. அவனுக்குத் தெரியாதா, உண்மை? ஆனால் வியாபாரி பிடிவாதமாகக் கூச்சலிடவே வேறு வழியின்றி வெறுப்புடன் யூசப்கானை அழைத்து வரும்படி உத்தரவு பிறப்பித்தான். யூசப் தங்களுக்குச் சாதகமாகவே சொல்லுவான் என்று அந்தப் பேராசைக்காரப் போர்ச்சுகீசியன் எதிர்பார்த்தது ஏமாற்றமாக முடிந்தது. நூற்றைம்பது மூட்டைகளையே படகிலிருந்து கப்பலில் கொண்டு போய் ஏற்றியதாக யூசப்கான் கூறவே அவமானமடைந்த அதிகாரி பேசாமல் வியாபாரிக்குரிய தொகையைக் கொடுத்து அனுப்பும்படியாயிற்று.

ஆரம்ப முதலே யூசப்கானிடம் வெறுப்பும் சந்தேகமும் கொண்டிருந்த போர்ச்சுகீசியருக்கு இது ஒரு நல்ல வாய்ப்பாகப் பயன்பட்டது. அவனைப் பலவந்தமாகப் பிடித்து, குறிப்பிட்டதோர் இடத்தில் நிறுத்தப்பட்டுள்ள இரண்டு கம்பங்களுக்கு அருகே இழுத்துக் கொண்டு போனார்கள். குற்றவாளிகளைக் குரூரமான முறையில் சித்திரவதை செய்வதற்காகவே கப்பலில் ஏற்படுத்தப்பட்டிருந்த கம்பங்கள் அவை. ஒன்றுக்கொன்று மூன்றடி இடைவெளியில் இரண்டு கம்பங்கள் நடப்பட்டிருக்கும். குற்றவாளியின் ஒரு கையையும் ஒரு காலையும் ஒரு கம்பத்துடனும் மற்றொரு கையையும் ஒரு காலையும் வேறொரு கம்பத்துடனும் சேர்த்துக் கட்டி விடுவார்கள். மானத்தை மறைக்க இடையில் ஒரு சிறு துணிதான் இருக்கும். மற்றபடி வெற்றுடம்பு. இப்படிக் கம்பங்களுக்கு நடுவே அந்தரத்தில் அநாதரவாக நிற்கும் கைதியைத் துடிக்கத் துடிக்க சவுக்கால் அடிப்பார்கள். கைதி உணர்விழந்து போனால் அவன் மீது கடல் நீரை வாரிக் கொட்டி விழிக்கச் செய்து தெம்புக்குக் கொஞ்சம் உணவையும் வாயில் திணித்து மறுபடியும் கசையடியைத் தொடருவார்கள். இரவு பகல் எந்நேரமும் அவன் அதே நிலையில்தான் இருக்க வேண்டும். ரத்த விளாறாகக்

கிடக்கும் உடல் வெயிலில் காய்ந்து வறவறவென்று இழுக்கும். கைதி அவஸ்தையுடன் அலறுவான். அதைக் கண்டு அவர்கள் நகைப்பார்கள். சாகும் வரை அவனை அந்தக் கம்பத்திலிருந்து அவிழ்க்க மாட்டார்கள்.

யூசப்கானைப் போர்ச்சுகீசியர் அந்தக் கம்பத்தில் கொண்டு போய்க் கட்டினார்கள். உண்மையை உள்ளபடி சொன்னதற்குத் தண்டனை! ஆனால் அவர்களோ தாங்கள் அவனுக்கு அளிக்கப் போகும் தண்டனைக்கு வேறு விதமான காரணங்களைக் கற்பித்தார்கள்.

யூசப்கான் கரையில் உள்ள முகமதியர்களுடன் கலந்து பேசிச் சதியில் ஈடுபட்டானாம். கப்பல் அதிகாரியைத் தாக்கித் தப்பிச் செல்ல முயற்சியும் செய்தானாம்!

யூசப்கான் தன் இனத்தைச் சேர்ந்த முகமதிய வியாபாரி களை இந்தியக் கடற்கரையில் கண்டதும் மகிழ்ச்சியடைந்தான். இந்திய நாட்டைப் பற்றி அறிந்து கொள்ளும் அவாலில் அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தது உண்மை. முகமதியர்களை முதல் எதிரியாகக் கருதும் போர்ச்சுகீசியர்களின் பார்வையில் இது பயங்கரமாகக் பட்டதில் வியப்பில்லை. இந்தத் தண்டனை அவனிடம் கொண்ட வெறுப்பில் விளைந்த முடிவே தவிர இதற்குக் காரணங்கள் எதுவும் தேவையே யில்லையே!

சதையைப் பிய்த்துக் கொண்டு விழும் சவுக்கடிகளை, அதீதமான சகிப்புத் தன்மையுடன் பொறுத்துக் கொண்டிருந்தான் யூசப்கான். ஒரு முனகல்கூட அவன் வாயிலிருந்து வெளிப்பட வில்லை. இந்த நெஞ்சுறுதி அந்த நெஞ்சற்றவர்களின் கோபத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்தது. யூசப்கானின் தலை நினைவிழந்து. தொங்கலிட்ட போது ஒரு வாளி உப்பு நீரை எடுத்து, ரத்தம் ஒழுகும் அவன் உடல் மீது ஊற்றினார்கள். அப்போதும் கூட அந்த உடலில் சிறிய அசைவும் ஏற்படவில்லை.

**நி**லவு பால்போலக் காய்ந்து பாரதத்தின் மண்ணை யெல்லாம் பாலாக்கிக் கொண்டிருந்தது. அந்த அழகை ரசிக்கக் கூடிய யூசப்கான் கப்பலின் மேல் தளத்தில் தன்னுணர்வு இன்றித் துவண்டு கிடந்தான் கொலைக் கம்பங்களினிடையே.

அதிகாலை வேளையின் ஆனந்தமான கடற் காற்றில் போர்ச்சுகீசியக் கப்பல்களின் நங்கூரம் தூக்கப்பட்டது. பாய் மரங்களை

அவிழ்த்துப் பறக்க விட்டார்கள். காற்றை நிரப்பிக் கொண்ட படுதாக்கள் உப்பிப் பருத்தன. அந்தக் கப்பல்கள் இந்தியக் கடலை விட்டுத் தங்களது தாய்நாட்டை நோக்கிக் கிளம்பி விட்டன.

யூசப்கானுக்கு இன்னும் நினைவு திரும்பவில்லை. இந்தியாவை அடைந்ததும் எப்படியாவது தப்பிச் சென்றுவிட வேண்டுமென அவன் கண்ட கனவுகள், வெறும் கனவாகவே மங்கிவிட வேண்டியதுதானா?

## 3

# சாம்ராஜ்யம் பிறந்தது

**தா**ங்க முடியாத துக்கத்தில் - குமைந்து கொண்டிருந்தாள் துங்கபத்திரை. பாறைகளில் குதித்துக் கும்மாளியிட்டுச் சுழித்தோடும் பத்திரையாக இல்லை அவள். சலசலத்து ஓடும் அவள் போக்கில் இப்போது ஆனந்த சங்கீதம் ஒலிக்கவில்லை. தனிமையிலே 'ஹோ' என்று சோக ஒலியெழுப்பிப் பாய்ந்தோடிக் கொண்டிருந்தாள் அந்த நதிக்கன்னி. அது மகனை இழந்ததொரு தாயின் ஓலமாக ஒலிமாறிக் கேட்டது.

கலங்கிய கண்களோடு கூடிய மற்றொரு பெண் எதிர்ப் பட்டாள். துக்கப்பட்டவர்களுக்குப் பிறரைக் கண்டால் அது பீறிட்டுக் கொண்டு கிளம்புமே! எதிர்ப்பட்டவளோ பத்திரையின் மூத்த சகோதரி கிருஷ்ணை. கேட்கவா வேண்டும்? தேம்பித் தேம்பி அழும் தங்கையைத் தாங்கி அணைத்துக் கொண்டு தேற்ற வகையறியாது தவித்தாள் சகோதரி கிருஷ்ணை.

"பத்ரா, விவேகியான நீயே இப்படி மனத்தைத் தளர விடலாமா கண்ணே?" என்றாளே ஒழிய அவள் குரலும்தான் கரகரத்தது.

"காடு மண்டிக் கவனிப்பாரற்றுக் கிடந்த என் சூழலை உருவாக்கி என்னைச் சுற்றி ஊரும் பேரும் உண்டாக்கினார்கள். அணிமணிகளைக் கொண்டு அழகுபடுத்துவது போல என் அணைப்பிலே உலகம் போற்றும் ஒப்பற்றதொரு நகரத்தை உருவாக்கி வைத்தார்கள் அந்த சாம்ராஜ்யாதிபதியின் சந்ததியிலே வந்த

தலைமகன் இன்று அங்கே மகனை இழந்த வேதனையிலே மனம் நொந்து கிடக்கிறான். பெற்றவளுக்குப் பெருமை தேடித் தரும் பெரு மகன் அங்கே பொருமிக் கொண்டிருக்க நான் இங்கே வேறு எப்படியடி இருக்க முடியும்?'' என்று கதறினாள் விஜயநகரின் காவல் நாயகியான துங்கபத்திரை.

"உண்மை. நதியின் கரைகளில் நகரங்கள் தோன்றுவது இயற்கைதான். ஆனால் நகரங்களெல்லாம் விஜயநகரமாகி விட முடியுமா என்ன? இந்து தர்மத்தைக் காப்பதற்கென்றே உன் மக்களால் உண்டாக்கப்பட்ட நகரமல்லவா இது? உன்னைப் போன்ற பாக்கியசாலிகள் வேறு யார் இருக்க முடியும்?''

"அப்படித்தானம்மா நானும் இறுமாந்திருந்தேன். ஆனால் கொஞ்ச காலமாக ஏனோ என்னுள் இனந்தெரியாத பீதியொன்று வளர்ந்து குடைந்து கொண்டிருக்கிறது. அதற்கு ஏற்றாற் போலச் சில காரியங்களும் நடைபெறுகின்றன. அது எதில் போய் முடியுமோ என்று கவலையாக இருக்கிறது.'' கண் கலங்கினாள் துங்கபத்திரை.

அவள் மனக் கண்ணிலே, விண்ணகத்து வேந்தரெல்லாம் வியக்கும் நிலைக்கு விஜய நகரத்தை உயர்த்திய மாமன்னர் கிருஷ்ண தேவராயரின் கம்பீரமான உருவம் தோன்றியயது. அந்தச் செல்வனின் காலத்திலே சீரும் சிறப்புமாக வாழ்ந்த தன் நெஞ்சம் கர்வத்தினால் விம்மிதம் அடைந்திருந்ததை எண்ணிப் பார்த்தாள். பகைவர்களுக்குக் காலனாகவும் கலைகளுக்குக் காவலனாகவும் வாழ்ந்தவர் ராயர். ஆனால் அந்த மாவீரனின் கடைசிக் காலத்திலேயே கூட.... பத்திரையின் உடல் நடுங்கிற்று.

கிருஷ்ணையும் துங்கபத்திரையும் உரையாடிக் கொண்டிருக்கும் போதே குதிரை வீரர்கள் பலர் கரைக்கு வந்து ஆற்றைக் கடக்க முற்பட்டார்கள்.

அவர்கள் யார்? வியஜநகரத்து வீரர்களா? அல்லவே அல்ல. அவர்களின் சின்னங்களிலிருந்து பீஜப்பூர். சுல்தானான அலி அதில்ஷாவின் அந்தரங்கப் படை வீரர்கள் அவர்கள் என்று ஊகிக்க முடிகிறது. கம்பீரமான தங்களின் அராபியக் குதிரைகளை அழகாக அலங்கரித்திருந்தார்கள். மினுமினு வென்ற அவற்றின் உடலை வழவழப்பான பட்டுக்களும் பட்டு நூல்களும் குஞ்சங்களும் அழகுபடுத்திக் கொண்டிருந்தன. குதிரைகளுக்கே இத்தனை

அலங்காரங்கள் என்பதிலிருந்தும் அவர்களின் தோற்றத்திலிருந்தும் எல்லாரும் உயர் பதவிகளில் உள்ளவர்கள் என்று ஊகிக்கலாம்.

"பகைவர்களான இவர்கள் இங்கு எதற்காக வந்திருக் கிறார்கள்?" என்று வார்த்தையால் கேட்காமல் பார்வையால் வினவிய தன் சகோதரியைப் பார்த்து அலைகளைப் புரள விட்டுச் சிரித்தாள் துங்கபத்திரை. அதில் வேதனைதான் கலந்திருந்தது.

"விஜயநகர சாம்ராஜ்யத்தின் முடிசூடா மன்னராக இருந்து ஆட்சி செலுத்தி வரும் அரவீடு ராமராயரின் அருமை மகன் இறந்த செய்தி கேட்டுத் துக்கம் விசாரிக்க நேரிலேயே வந்திருக்கிறான் பீஜப்பூர் சுல்தான் அலி அதில்ஷா! விந்தையாக இருக்கிறதல்லவா?" என்று கேட்டாள் துங்கபத்திரை.

"பகையரசனும் நட்பை நாடி வருவதென்றால் அது உன் மகனின் திறமையைத் தான் காட்டுகிறது. பாமினி சுல்தான்கள் ஐவருமே நாளைக்கு அரவீட்டு ராமராயரின் தயவைத் தேடி ஓடி வந்தாலும் வருவார்கள். அப்படி அவர்களை ஆட்டி வைக்கும் ஆற்றல் அவரிடம் இருக்கிறது. அதை எண்ணிப் பெருமைப்பட வல்லவா வேண்டும்?" என்றாள் கிருஷ்ணா. தங்கையின் பாக்கியத்திலே பொறாமைகூட அவள் பேச்சில் தலைநீட்டியது.

"என் மக்களால் எனக்குப் பெருமை தான் சகோதரி. ஆனால் அந்த ஆற்றலின் பின்னால் அபாயமும் உள்ளதே. அதை நினைக்கும் போதுதான் பயமாக இருக்கிறது..." நீண்டதொரு பெருமூச்சுக்குப் பின் தொடர்ந்தாள் துங்கபத்திரை. "எனக்கு நேரமாகிறது. ஏனோ என் மனத்தில் அமைதி போய்விட்டது. அளவுக்கு மீறிய செல்வாக்கும் வசதியும் வாழ்வும் வந்தாலே இந்த அவஸ்தைதான் போல் இருக்கிறது. அரண்மனைக்குப் போகிறேன். இன்னும் என்ன அதிசயங்களை யெல்லாம் காணப் போகிறேனோ?" உடலைச் சிலிர்த்துக் கொண்டாள் துங்கபத்திரை.

"நீ கொடுத்து வைத்தவள். அரண்மனைக்குள்ளே அந்தப்புரம், உத்தியான வனம். ஏன், அரசரின் அந்தரங்கக் கூடங்கள் வரையும் நீ போகலாம். அங்கேயுள்ள அழகிகளைக் கண்டு மகிழலாம். செய்குன்றங்களிலும் நீரூற்றுக்களிலும் உன்னைக் கொண்டு போய் அப்படி நிரப்பி இருக்கிறார்கள். உலகிலே வேறு எந்த நதிக்கு இத்தனை சலுகையும் பெருமையும் கிடைத்திருக் கின்றன சொல் பார்க்கலாம்?" என்றாள் கிருஷ்ணை

ஆனால் அவளுக்குப் பதில் சொல்லிக் கொண்டு நிற்கவில்லை பத்திரை. தன் பாக்கியத்தைக் கண்டு சகோதரியின் உள்ளத்திலே பொறாமைப் பாசி படருவதை உணர்ந்து பக்குவமாக நகர்ந்து கொண்டாள்.

பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திலே பாரதத்தின் தென் பகுதியில் நான்கு வல்லரசுகள் சிறப்புற்றிருந்தன. தபதி-கோதாவரி நதிகளுக்கிடையிலுள்ள நிலப்பகுதியை யாதவர்கள் ஆண்டு வந்தார்கள். இவர்களின் தலைநகர் தேவகிரி. கிழக்கே கோதாவரிக்கும் கிருஷ்ணா நதிக்கும் இடைப்பட்ட மாநிலத்தை ஆண்டவர்கள் காகதீய வம்சத்தினர்கள். இவக்ளின் தலைநகர் வாரங்கல். துங்கபத்திரையையும் காவிரியையும் எல்லையாகக் கொண்ட பெரும் நிலப்பரப்பை ஹொய்சலர் ஆண்டு வந்தார்கள். மூன்று நூற்றாண்டுகளாக வலிமை பெற்றிருந்த சோழப் பேரரசை விழுங்கியவர்கள் இந்த ஹொய்சலர்கள். இவர்களின் தலைநகரம் துவாரசமுத்திரம். நான்காவது பேரரசு தெற்கே மதுரையைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்த பாண்டியர்களுடையது. சோழர்களின் புகழ்மங்கி இருந்த காலம் அது.

இந்த நான்கு பேரரசுகளும் செல்வப் பெருக்கிலே திளைத்தன. இந்த நாலு பேரரசர்களின் நல்லாட்சியிலே நாடு நாகரிகத்திலே மேம்பட்டிருந்தது. பொன்னும் வெள்ளியும் நவரத்தினங்களும் மலிந்திருந்தன. இந்த நான்கு பேரரசர்களும் சைவ, வைணவ, ஜைன, பௌத்த சமயங்களை ஆதரித்து அவற்றின் கோயில்களுக்கு மானியங்களை வாரி வழங்கி மகிழ்ந்திருந்தனர். கோயில்களின் கூரைகளைத் தங்கத்தால் மூடினார்கள். கோயில் தூண்களைத் தங்கள், வெள்ளி, தாமிரம் போன்ற உலோகங்களால் அலங்கரித்திருந்தார்கள். அரண்மனைப் பண்டாரங்களோ பணத்தில் நிரம்பி வழிந்தன.

அந்நியர்களின் படையெடுப்பைப் பற்றிய கவலையின்றிக் கலைகளை வளர்த்துக் கொண்டிருந்த காவலர்களின் இந்த அமைதியான ஆனந்த வாழ்வுக்கு முடிவு காலம் ஏற்பட்டது. செல்வம் கொழிக்கும் தென்னகத்துக் கோயில்களின் சிறப்பையும், அவற்றில் பொன்னும் பொருளும் அணி மணிகளும் குவிந்து கிடப்பதையும் பற்றிக் கேள்விப்பட்டான். டெல்லியில் ஆட்சி செலுத்தி வந்த முஸ்லிம் பேரரசன் அலாவுதீன். பொன் வேட்டையாடிப் பொருள் சேர்ப்பதில் புகழ் பெற்றவனான அவன் விந்திய மலையைத் தாண்டித் தென்னகத்தின் மீது படையெடுத்தான். தேவகிரி அரசனை அடி பணிய

வைத்து அவனிடமிருந்து விலை மதிப்பற்ற நகைகளையும் பொற் குவியல்களையும் கொள்ளையிட்டு அள்ளிக் கொண்டு ஆரவாரத்துடன் டெல்லிக்குத் திரும்பினான்.

இந்த வெற்றி அவன் பேராசையை வளர்த்தது. ருசி கண்ட பூனையல்லவா? மிகப் பெரும் படையுடன் மாலிக்கபூர் என்பவனைத் தென்னாட்டுக்குச் சென்று கொள்ளையடித்து வருமாறு அனுப்பினான். தென்னகத்தின் போதாத காலம் என்றுதான் கூறவேண்டும். எந்தத் தென்னக மன்னராலும் அந்த முஸ்லிம் கொள்ளைக்காரனைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. மதுரைவரை முகமதியர்களின் ஆட்சிக்குட் பட்டது. நாட்டில் அமைதி குலைந்தது. முஸ்லிம்கள் இந்துக்களைச் சொல்ல முடியாத கொடுமைகளுக்கு உள்ளாக்கினார்கள். கணக்கற்ற கோயில்கள் கொள்ளையடித்து இடித்துத் தள்ளப்பட்டன. அவர்கள் இந்துக்கள் என்ற ஒரே காரணத்துக்காக ஆயிரக்கணக்கான மக்கள் கொல்லப்பட்டனர்.

பண்டிகைகளும் விழாக்களும் நிறுத்தப்பட்டன. இந்துக்களை விலங்குகளைப் போல வேட்டையாடினார்கள் முகமதியர்கள். மதுரையை ஆண்ட கியாசுதீன் என்ற கிராதகன் தினந்தோறும் குற்றமற்ற இந்துக்கள் படுகொலை செய்யப் படுவதைக் கண்டு களிப்பதையே தனது கடமையாகக் கொண்டிருந்தான். அனலிடைப் புழுவெனத் துடித்தார்கள் இந்துக்கள். தங்கள் உயிர்களையும் உடைமைகளையும் காக்கத் தக்க வலிமை மிக்கதொரு தலைவன் தோன்ற மாட்டானா என்று தவம் கிடக்கலானார்கள். அவர்களின் தவம் பழுத்துப் பலிக்க வேண்டிய காலமும் நெருங்கிக் கொண்டிருந்தது.

ஹொய்சல மன்னர்களிடம் புகழ்பெற்ற படைத் தலைவனாக விளங்கினான் சங்கமன் என்பவன். இவனுக்குப் பஞ்சபாண்டவர் களைப் போல ஐந்து புயீதரர்கள் பிறந்தார்கள்.

ஹரிஹரன், கம்பணன், புக்கன், மாரப்பன், முத்தப்பன் என்பது இவர்கள் பெயர். இவர்களுள் ஹரிஹரரும் புக்கரும் காகதீய அரசனான பிரதாப ருத்ரனிடம் அரச பண்டார அதிகாரிகளாக இருந்தனர். காகதீய அரசு மாலிக்கபூரின் படையெடுப்பினால் வீழ்ச்சியடையவே இவ்விருவரும் துங்கபத்திரையாற்றங்கரையில் உள்ள காம்பிலி மன்னனிடம் சென்று மண உறவு ஏற்படுத்திக் கொண்டு வாழ்ந்து வரலானார்கள்.

அல்லாவுதீனுக்குப் பின் கியாஸுதீன் துக்ளக் டில்லி அரசேறினான். தென்னகத்தில் துக்ளக்கின் பிரதிநிதியாக இருந்த இவனுடைய அத்தை மகனான பஹாவுதீன் புரட்சிக் கொடி தூக்கினான். பஹாவுதீனை அடக்கத் துக்ளக் தென்னகத்துக்கு வந்தான். பஹாவுதீன் பயந்தோடிக் காம்பிலி மன்னனிடம் சரணடைந்தான். துக்ளக்கா விடுவான்! முடிவு? பஹாவுதீனும் காம்பிலி மன்னரும் களத்தில் மாண்டனர். காம்பிலி மன்னரிடம் சேவை செய்து வந்த ஹரிஹரரும் புக்கரும் சிறைப்பட்டனர்.

சிறைப்பட்ட அரச குடும்பத்தினர் டெல்லிக்கு அனுப்பப் பட்ட போது அங்கு இந்துக் கைதிகள் முஸ்லிம் மதத்தைத் தழுவும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். ஹரிஹரரும் புக்கரும் முஸல்மான் களாயினர். இவர்களால் ஒரு மாபெரும் இந்து சாம்ராஜ்யத்தை உருவாக்க விதி திட்டமிட்டிருந்ததால் மதம் மாற வற்புறுத்தப்பட்ட போது மனமுடைந்து தற்கொலை செய்து கொள்ளும் முடிவை அவர்களிடம் அது உருவாக்கவில்லை. உடலால் உருமாறினாலும் உள்ளத்தால் மாறுபடாத இந்துக் களாகவே திகழ்ந்தார்கள் அவ்விருவரும். இன்று கட்டுண்டோம்; பொறுத்திருப்போம் என்று காலத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தனர்.

அந்தக் காலமும் வந்தது.

இஸ்லாத்தைத் தழுவிய இந்துக்களிடம் துக்ளக் பெருமதிப்பு வைக்கலானான். ஹரிஹரரும் புக்கரும் துக்ளக்கின் அன்புக்குப் பாத்திரமாயினர். சக்கரவர்த்தி அசோகனுக்குப் பிறகு அகண்ட இந்தியாவைத் தன் ஆட்சியின் கீழ் கொண்டு வந்த அடுத்த மன்னன் துக்ளக்தான். ஆனால் பரந்த பாரதத்தை நிர்வகிக்கத் துக்ளக்கினால் முடியவில்லை அன்பினால் ஆட்சி புரிந்த அசோகனால் அது சாத்திய மாயிற்று. அதிகாரத்தினால் அடக்கியாள முயன்ற துக்ளக்கினாலோ அது இயலாமற் போயிற்று. அவரால் ஆங்காங்கு நியமிக்கப்பட்ட மாகாணத் தலைவர்கள் கலகம் விளைத்துத் தாங்களே தலைவர்களாக விரும்பினர். மதம் மாறிய இந்துக்களிடம் மன்னர் காட்டிய அன்பும் அவர்களுக்கு அளித்த சலுகைகளும் பரம்பரை முஸ்லிம் பிரபுக்கள், படைத் தலைவர்களிடையே மனக் கசப்பை வளர்த்தன.

ஹொய்சலர்களின் வழி வந்த மூன்றாம் வல்லாள மன்னன் துக்ளக்கின் இந்தப் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு,

தென்னகத்தில் இழந்த தன் ஆதிக்கத்தை நிலைநாட்டப் புரட்சிக் கொடி தூக்கினான். அவனை அடக்கி ஒடுக்கத் தன் அன்புக்குப் பாத்திரர்களான மதம் மாறிய ஹரிஹரரையும் புக்கரையும் ஒரு பெரும்படையுடன் அனுப்பி வைத்தான் துக்ளக். இந்துக் கைதிகளாக வடநாடு சென்ற சகோதரர் சுதந்திரம் பெற்ற முஸ்லிம் பிரபுக்களாகத் தென்னகம் திரும்பினர். வல்லாளன் விரட்டப் பட்டான். காம்பிலி உள்ளிட்ட கர்நாடகத்துக்கு இவர்களையே பிரதிநிதிகளாக்கினான் துக்ளக். தாங்கள் எதிர்பார்த்திருந்த தருணம் வந்து விட்டது என்பதை உணர்ந்தார்கள் சகோதரர்.

அத்துவைத மத ஸ்தாபகரான ஆதிசங்கரர் நிறுவிய மடங்களுள் கர்நாடகத்தில உள்ள சிருங்ககிரி மடம் பிரசித்தம். கல்வி கேள்விகளில் சிறந்த வேத விற்பன்னர்களாகவும், தவசீலர் களாகவும் விளங்கிய துறவிகளே இம்மடத்தின் தலைவர்களாகி மக்களின் நல் வாழ்வுக்கு வழிவகுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். துங்கபத்திரை, கோதாவரி, கிருஷ்ணா ஆகிய ஆறுகளின் அருகில் வாழ்ந்த சாம்ராஜ்யாதிபதிகள் இந்த மடத்துக்கு மரியாதை செலுத்தி வழிபட்டு வந்தார்கள்.

சளுக்கியர், ஹொய்சலர், யாதவர் ஆகியவர்களின் ஆதரவுடன் வளர்ந்து வந்த இந்த மடத்தின் இருபத்து இரண்டாவது குருவாக ஒரு மகான் பட்டத்துக்கு வந்தார். அவரது பெயர் வித்யாரண்யர். வேதங்களில் பெரும் புலமையும், தூர்க்கவாதங்களில் வல்லமையும் பெற்றிருந்த இவர் கம்பீரமான தோற்றமுடையவர். பிற மதத்தின் ஊடுருவல் வலுத்து விட்ட அன்றையச் சூழ்நிலையில் தாம் தனிமையாக இருந்து யோகம் பயின்றால் மட்டும் போதாது; அரசியலிலும் அக்கறை காட்ட வேண்டும் என்று எண்ணினார். அவர் காலத்தில் விந்திய மலைக்குத் தெற்கே முகமதியப் படையெடுப்பால் ஏற்பட்டிருந்த அரசியல் குழப்பங்களால் இந்து மதத்துக்கு சூழ்ந்திருந்த பேராபத்து ஆத்ம ஞானி ஒருவர் அரசியல் ஞானியாகவும் செயலாற்றும் தேவையை ஏற்படுத்தி இருந்தது. இறைப்பற்றுடன் சமய உணர்ச்சி குன்றாத மனோ திடத்தையும் மக்களுக்குப் போதிக்கும் அவசியம் ஏற்பட்டது இவரை அரசியல் முனிவர் என்றே அக்காலத்தவர் வர்ணித்தார்கள்.

தேச பக்தியால் கனன்று கொண்டிருந்த நெஞ்சுடன் ஹரிஹரரும் புக்கரும் இந்த முனிவரிடம் வந்தார்கள். தோற்றத்தால் முஸ்லிமாக

இருக்கும் தங்கள் கதையை அந்தப் பெரியவரிடம் கூறினார்கள் முகமதியர்களின் கொடுமையிலிருந்து இந்துக்களையும் இந்து தர்மத்தையும் பாதுகாக்கத் தவிக்கும் தங்களுக்கு உதவி புரிய வேண்டும் என்றும் அவரிடம் கேட்டுக் கொண்டார்கள் இதே எண்ணத்துடன் ஆனால் அதைச் செயல்படுத்தத் தக்க பாத்திரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த வித்யாரண்யர் மகிழ்ச்சியுடன் அவர்களுக்கு உதவ மனம் கொண்டார்.

இதிகாச புருடனான வானர மாவீரன் வாலி வாழ்ந்த பம்பாசரஸ் என்ற இடத்துக்கு வந்தார் வித்யாரண்யர். துங்கபத்திரையின் தென் கரையில் உள்ள இந்தப் புண்ணிய பூமியையே புதிய பாரத சாம்ராஜ்யத்துக்கு ஏற்ற ராஜதானியாக்கக் கருதினார் முனிவர். நல்ல நாளில் தலைநகர அமைப்புத் திட்டம் வகுக்கப்பட்டது. ஹரிஹரரும் புக்கரும் வித்யாரண்யரால் முறைப்படி ஹிந்துக்களாக மதம் மாற்றப்பட்டு நவ பாரதப் பேரரசின் நிர்மாணத்தில் ஊக்கப்பட்டார்கள். இந்த நல்ல காரியத்துக்குத் துங்கபத்திரையும் தனது காணிக்கையைச் செலுத்தினாள். தனது இதயமான மலைக் குகையொன்றில் மறைத்து வைக்கப்பட்டிருந்த பெம் புதையலை அவர்களுக்குக் காட்டிக் கொடுத்தாள். அந்தப் பெருஞ் செல்வத்தின் உதவி கொண்டு புதிய நகரின் அமைப்பு வேலை வேகமாக வளரலாயிற்று. வித்யாரண்யர் வழிகாட்டியவாறு அமைக்கப்பட்ட அந்தப் புதிய நகரத்துக்குச் சங்கமன் மக்கள் வித்தியாநகரம் என்றே பெயரிட்டனர். நாளடையில் அதுவே விஜயநகரமாயிற்று.

வெற்றிநகரம் தோன்றிய அதே சமயத்தில் அதன் வீழ்ச்சிக்கும் விதி வேறொரிடத்தில் அஸ்திவாரமிட்டது. இஸ்லாமிய எதிர்ப்புப் பேரரசாக விளங்கப் போகும் விஜய நகரத்துக்குப் பிறந்த தின விழாக் கொண்டாடிய அடுத்த ஆண்டிலே அதற்கு வடதிசையில் ஒரு முஸ்லிம் பேரரசும் எழுந்து.

தேவகிரி மாகாண ஆட்சியாளர் துக்ளக்கின் பிடியிலிருந்து விடுபட்டு இந்தப் பேரரசை நிறுவினார்கள். ஹஸன்கங்கு என்ற சபர்கான் தன்னையே தென் மாகாண அரசனாக்கிக் கொண்டு ஆரம்பித்த அந்த ராஜ்யமே பாமினிப் பேரரசாக வளர்ந்தது

விஜயநகரப் பேரரசு ஒரு முனிவரின் பெயரில் எழுந்தது எனில், விந்தையிலும் விந்தையாப் பாமினி ராஜ்யமும் ஓர் அந்தணரின்

பெயராலேயே எழுந்தது. ஆதியில் தங்களுக்கு உதவி புரிந்த ஒரு பிராமணரின் ('பாமன்' என்று முஸ்லிம்கள் பிராமணரைக் குறிப்பிடுவர்) நினைவாக இந்த சாம்ராஜ்ய ஸ்தாபகர்கள் பேரரசுக்கு 'பாமினி' என்றே பெயரிட்டார்கள். வடமொழியில் பாமினி என்றால் பொலிவு பெற்றுச் சீரும் சிறப்புமாகத் திகழ்ந்தது.

பாமினி அரசின் பயங்கரமான தாக்குதல்களையும் படுகொலைகளையும் சமாளித்தபடியே தன்னையும் வளர்த்துக் கொண்டது விஜயநகரம். தன் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் பல்லாயிரக்கணக்கான இந்துக்களின் ரத்தத்தைச் சிந்த வேண்டியிருந்தது. எத்தனை போர்கள், எத்தனை பூசல்கள், எத்தனை படையெடுப்புக்கள்? வெற்றியும் தோல்வியும் மாறி மாறி விளையாடின. பாமினி ராஜ்யத்தின் படையெடுப்புக்கு ஈடு கொடுத்தபடியே விஜயநகரம் தன்னைப் பெருக்கிக் கொண்டது.

விஜயநகரின் முதல் பரம்பரையான சங்கமன் மரபு முடிவடைந்து இரண்டாம் பரம்பரையினரான சாளுவ மரபின் ஆட்சி ஆரம்பமானபோது பாமினி ராஜ்யத்தில் பிளவு உண்டாகி அது ஐந்து தனியரசுகளாகச் சிதறலாயிற்று. ஆனாலும் இந்த ஐந்தில் பீஜப்பூர், அகமது நகர், கோல்கொண்டா ஆகிய மூன்றும் வல்லரசுகளாகவே விளங்கிய வம்புகள் செய்து வந்தன. கிருஷ்ண தேவராயரின் ஆட்சியிலேதான் பாமினி சுல்தான்களின் நச்சுப் பல் பிடுங்கப்பட்டு பெட்டிப் பாம்பாக அடங்கிக் கிடந்தனர். விஜயநகரப் பேரரசின் பொற்காலம் என்றே இதைக் கூறவேண்டும்.

சகோதரி கிருஷ்ணையின் வார்த்தைகளை அசைபோட்டபடியே அரண்மனைக்குள்ளே செல்லும் நீரூற்றினுள் புகுந்தாள் துங்கபத்திரை. 'இன்றைக்கு இத்தனை சலுகையும், பெருமையும், செல்வாக்கும் எனக்கு இருக்கிறது என்று பொறாமைப் படுகிறாளே அதற்கு நான் எத்தனை தியாகங்களைப் புரிய வேண்டியிருந்தது. என் குழந்தைகளில் எத்தனை பேரைப் பலியிட்டிருக்கிறேன் என்பதையெல்லாம் அவள் எண்ணிப் பார்க்கவில்லையே' என்று நினைத்தபோது பட்டுப்போன துன்பங்கள் அவள் மனத் திரையில் பசுமையாகக் காட்சியளிக்கலாயின. அந்த நினைவுகளில் லயித்தபடியே தன்னைச் சுற்றி எழுந்து நிற்கும் தன் பாக்கியங்களான மாடமாளிகைகளையும் கூட கோபுரங்களையும் கல்லிலே வடித்தெடுத்துக் கலைக் கோயில்களாகத் திகழும் ஆண்டவனின் உறைவிடங்களான

ஆலயங்களையும், வெற்றி நகரத்தின் விசாலமான வீதிகளிலே குவிந்து கிடக்கும் தன்னிகரற்ற இந்தியப் பொருள்களை வாரிக் கொண்டு போவதற்காகக் காத்திருக்கும் அயல்பாட்டு வணிகப் பெருமக்களையும் கண்டபோது அவன் உள்ளம் பூரித்தது. உடலில் புல்லரிப்பு உண்டாயிற்று. கண்களில் நீர் திரையிட்டது. அதை அடுத்து நீண்டதொரு பெருமூச்சும் தொடர்ந்தது. அருமையும் பெருமையுமாக வளர்த்த மகன் ஆனந்த வாழ்க்கை நடத்துவதைக் கண்ட தாய் எப்படி, தன் கண்மணி இதேபோல் ஆயிரம் காலம் வாழ வேண்டுமென்று வாழ்த்திக் கண்கலங்குவாளோ அந்த நிலையில்தான் இருந்தாள் துங்கபத்திரை.

அதே சமயம் வேங்கட விலாச மண்டபத்திலே ராமராயரின் தம்பி திருமலையின் குரல் வெடித்தது. எட்டிப் பார்த்த பத்திரை பதறிப் போனாள். அங்கே அவள் கண்ட காட்சி?

ராமராயரின் தம்பிகளான திருமலையும் வேங்கடாத்திரியும் மட்டுமே அந்த ஆலோசனை மண்டபத்தில் இருந்தார்கள். திருமலை எரிமலையாகக் காணப்பட்டான். வேங்கடாத்திரியோ வழக்கமான ஆழத்துடன் அமைதியாக இருந்தான். அவ்விரு வரையும் சேர்த்துப் பார்த்த துங்கபத்திரை எதையோ நினைத்துக் கொண்டு துணுக்குற்றாள்.

"நான் கேள்விப்படுவது உண்மைதானா வேங்கடாத்திரி? நம் அண்ணா பீஜப்பூர் சுல்தான் அலி அதில்ஷாவைத் தம் மகனாகவே வரித்துக் கொண்டாராமே?" அவன் உள்ளத்தில் கொப்பளித்துக் கொண்டிருக்கும் கோபம் அந்த வார்த்தைகளின் அழுத்தத்தில் வெளிப்பட்டன.

"ஆமாம். உன் மைத்துனியும் கூடத்தான் அலி அதில்ஷாவை 'அப்பா மகனே' என்று அன்பொழுகக் கூப்பிட்டு... ம்... ஆலிங்கனம் செய்துகொள்ளாத குறைதான் போயேன்" என்றான் வேங்கடாத்திரி எங்கோ பார்த்துக் கொண்டு. அண்ணாவின் அனல் தெறிக்கும் விழிகளைப் பார்க்க மனமில்லையோ அல்லது பயமோ தெரியவில்லை.

"பரம வைரியான ஒருவனை, அதுவும் ஒரு முகமதியனைத் தன் மகனாக்கிக் கொள்ளுவதற்கு இந்த விஜயநகரத்துச் சொத்தென்ன அப்படி வாரிசில்லாமலா போய்விட்டது? அண்ணாவின் துணிச்சல் வரவர அளவுக்கு மீறிப் போய்க் கொண்டிருக்கிறது."

“அண்ணாவை நீங்கள் கேட்டீர்களானால் அத்தனையும் அரசியல் சூழ்ச்சிகள் என்பார்” என்ற வேங்கடாத்திரி எழுந்து உலாவியபடியே “ஒருவேளை அது உண்மையாகவும் இருக்கலாம்” என்றான்.

“சூழ்ச்சி... சூழ்ச்சி! இவையெல்லாம் சாம்ராஜ்யத்தை வீழ்ச்சியின் வாசலிலே கொண்டு போய்த் தள்ளத்தான் போகின்றன” என்று பற்களைக் கடித்து வலக்கையை முஷ்டியாக்கி இடக் கரத்திலே குத்தியபடி கூண்டுப் புலியென உலாவினான் திருமலை. அவனது உள்ளங் கையைப் போலவே உள்ளத்திலும் ரத்தம் குபு குபு வென்று பாயலாயிற்று.

## 4

# சதியாலோசனையா?

திருமலையின் உள்ளம் எரிமலையாகக் கனன்று கொண்டிருந்தது. வேங்கட விலாச மண்டபத்திலே மனம் புழுங்கியபடி உறுமும் புலியென உலாவிக் கொண்டிருந்த விஜயநகர சாம்ராஜ்யத்தின் மதியமைச்சனான அவன் சட்டென்று நின்றான். தலையைத் தாழ்த்தியபடி வாலைச் சுழற்றிக் கொண்டு, பாய்ந்து வரும் ஒரு காளையின் வெண்கல உருவம் அந்த மண்டபத்தில் அழகுக்காக வைக்கப்பட்டிருந்தது. அதன் கூரான கொம்புகளுக்கிடையே தனது இடக் கரத்தின் உள்ளங்கையை ஊன்றியபடி வலக்கரத்தின் கட்டை விரலை இடைக் கச்சையில் செருகிக் கொண்டு நின்ற திருமலை அந்த வெறி கொண்ட காளையை எதிர்க்கும் மற்றொரு காளை போலக் காட்சியளித்தான். கடைந்தெடுத்த வெண்கலச் சிலையென உருண்டு திரண்ட கட்டமைந்த உடல். வேலும், வாளும் பாய்ந்ததனால் ஏற்பட்ட விழுப் புண்கள் அந்த மேனிக்கு இன்னும் அழகூட்டிக் கொண்டிருந்தன. முறுக்கிவிட்ட மீசை, அனலைக் கக்கிக் கொண்டிருக்கும் அகன்ற விழிகளைப் போலவே அந்த அகன்ற மார்பில் புரளும் ஒற்றை வடமான ரத்னஹாரம் ரத்த ஒளியைச் சிந்திக் கொண்டிருந்தது. ஆஜானுபாகுவான அவனால் அந்த மண்டபத்துக்கே ஒரு தனிக் கம்பீரம் ஏற்பட்டிருந்தது

"இப்படியே போய்க் கொண்டிருந்தால் இன்னும் கொஞ்ச நாட்களில் விஜயநகரம் பாமினியின் ஒரு பகுதியாகி விட வேண்டியதுதான்!" மீசை துடிக்கப் பேசினான் திருமலை

அமைச்சனான அண்ணாவின் கோபத்தினால் பாதிக்கப் படாத வேங்கடாத்திரி, ஆடும் பாவைச் சிலையொன்றின் அழகிலே ஈடுபட்டவனாக அதைப் பார்த்தபடியே, "அதுகூடச் சிரமமான காரியம் அண்ணா! கால தாமதத்தோடு கலகங்களுக்கும் ஈடுகொடுத்தாக வேண்டும். அதைவிடச் சுலபமாக விஜய நகரத்திலேயே பாமினியை உருவாக்கிக் கொண்டிருக்கிறார் பெத்தண்ணா" என்றான் வேங்கடாத்திரி. விஜயநகர சாம்ராஜ் யத்தின் பிரதம சேனாபதி, கடலனைய படைகளின் காவலன் அவன். ஒரு கலா ரசிகன்; அழகைக் கண்டால் அவன் பித்தனாகி விடுவான்.

அரவீட்டுச் சோதரர்களில் கடைக் குட்டியான அந்தக் கலாரசிகன் இப்போது அந்த ஆடலழகியைச் சுற்றிச் சுற்றி வந்து, வெறியூட்டும் அழகை அவள் அங்கங்களில் எப்படியெல்லாம் சிற்பி தேக்கி வைத்திருக்கிறான் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தான்.

"வேங்கடா! என்ன சொல்லுகிறாய் நீ?" என்று இடி முழக்கம் செய்த திருமலை அந்தச் சிலைக்கும் அவனுக்குமிடையே பாய்ந்து வந்து நின்று கொண்டான். அழகை ரசிக்கும் தன் தம்பியின் இந்த அசட்டுத்தனத்தைக் கண்டு ஆத்திரமாக வந்தது அவனுக்கு.

வேங்கடாத்திரி அந்த மூவரிலே நல்ல அழகன்; இளைஞன். உருவத்திலே திருமலையை விடச் சற்றுச் சிறியவனாகக் காணப்பட்டாலும் தளபதிக்கேற்ற மிடுக்கும் கம்பீரமும் அதில் கலந்து நின்றன. கையில் வாளேந்திப் போர்க்களத்திலே புகும்போது ருத்திரமூர்த்தியாகி விடும் வேங்கடாத்திரி மற்றச் சமயங்களில் பழகுபவரின் உள்ளங்களைக் கவருவதில் அந்தக் கார்முகில் வண்ணனான கண்ணனுக்கு நிகரானவன்.

சிங்காரிச் சிலைக்கு முன்னே சிலிர்த்து நிற்கும் சிறுத்தை என வந்து நின்ற தன் அண்ணனை நிமிர்ந்து பார்த்த வேங்கடாத்திரி "என்ன அண்ணா! உங்களுக்குப் புரியாதபடி நான் எதையும் மூடிமறைத்துப் பேசவில்லையே. இப்போது நம் சாம்ராஜ்யத்துச் சேனையில் எத்தனை முகமதிய வீரர்கள் இருக்கிறார்கள் என்று தெரியுமா உங்களுக்கு?" என்று கேட்டான்.

“அதைச் சொல்லுகிறாயா?” என்று எதையோ புதிதாக எதிர்பார்த்த திருமலை ஏமாற்றத்துடன் நகரலானான். “அதற்கு நம் அண்ணா ராமராயரைக் குறை கூறிப் பயனில்லை. நமது மூதாதையரான இரண்டாம் தேவராயர் காலத்திலேயே இந்தக் கலப்படம் ஆரம்பமாகி விட்டதே. அது இப்போது அதிகமாகி இருக்கலாம், அவ்வளவுதான்” தம்பியை ஆழங்காண முற்பட்டான் திருமலை.

அண்ணனின் அந்தரங்கத்தைப் புரிந்து கொண்டவனாகப் பேசினான் வேங்கடாத்திரி. “ஆசைக்காகவும் அழகுக்காகவும் புலிக்குட்டியை வளர்க்கக் கொண்டு வருகிறான் ஒருவன். ஆனால் அது காலமெல்லாம் குதித்து விளையாடும் குட்டியாகவே இருக்க வேண்டும் என்று கனவு காணுபவனைப் போல் இருக்கிறது உங்கள் பேச்சு. வளர்த்தவனின் உதிரத்தையே ருசி பார்க்கும் பாயும் புலியாக வளர்ந்து விடாதா அந்தக் குட்டி? தேவராயர் விதைத்த விஷ வித்து இன்று விருட்சமாகித் தழைத்து விட்டதண்ணா, தழைத்து விட்டது! ஆலங்கன்றை ஒரு கையால் அசைத்துப் பிடுங்கி விடலாம். ஆனால் விழுது விட்டு வளர்ந்து விட்ட ஆலமரத்தையோ? அன்று தர்மத்தைக் காப்பதற்காகத் தோன்றிய சாம்ராஜ்யத்தின் நிழலிலே இன்று அதர்மங்கள் செழிக்க ஆரம்பித்து விட்டன.”

அமைதியாக ஓடும் ஆறு, வெள்ளத்தால் வீங்கியதும் எப்படிப் பயங்கரமாகத் தோற்றமளிக்குமோ அப்படி மாறினான் வேங்கடாத்திரி. உணர்ச்சி வசப்படும் போதும், வி=யங்களைக் காரண காரியங்களோடு விளக்கும் போதும் அவனது தோற்றத்தில் உள்ள அந்த ஆழ்ந்த அமைதி மறைந்து போகும்.

“அன்று தேவராயர் இந்தியப் படையில் முகமதியர்களைச் சேர்த்தது எதற்காக? அந்த அந்நியர்களின் இந்திய வீரர்களை ஒவ்வொரு போரிலும் வெற்றி கொண்டார்களே அதன் ரகசியத்தை அறியவும், அந்தப் போர்க் கலையை நம் வீரர்களும் தெரிந்து கொள்ளட்டும் என்றும்தான் அந்த ஏற்பாட்டைச் செய்தார். ஆனால் இன்றைக்கோ கோல் கொண்டாவிலே குழப்பமா? பீஜப்பூரிலே பூசலா? அகமது நகரிலே அரசுரிமைப் போரா? இங்கெல்லாம் துரோகிகள் என்று குற்றம் சாட்டப்பட்டு நாட்டை விட்டுத் துரத்தப்படும் தளபதிகளுக்கும் அவர்களைச் சார்ந்த முகமதிய வீரர்களுக்கும் அடைக்கலம் கொடுப்பது விஜயநகரம். அந்நாட்டுத்

துரோகிகள் இந்நாட்டிலே விசுவாசிகளாக வரவேற்கப் படுகிறார்கள். இங்கு சுகவாசிகளாக வாழும் அவர்களுக்குப் பட்டங்கள், பதவிகள், ஜாகிர்கள், படைத் தலைமை - இப்படிப் பலப் பல...!"

தம்பியைப் பேச விட்டுக் கேட்டுக் கொண்டிருந்த அமைச்சன் திருமலையைச் சிந்திக்க வைத்து விட்டான் வேங்கடாத்திரி.

"விஜயநகரத்திலேயே பாமினியை உருவாக்கி வருகிறார் பெத்தண்ணா' என்று கூறியதன் காரணம் இப்போது புரிகிறதா? வேத விற்பன்னரான வித்யாரண்யர் உருவாக்கிய விஜய நகரத்திலே துருக்கிவாடா என்ற ஒரு பகுதியை முகமதியர்களுக் காகவே ஒதுக்கி விட்டிருக்கும் நம் இனத்தவரின் பரந்த மனப்பான்மையைப் பற்றி அந்நிய நாட்டார் பாராட்டிச் செல்லலாம் அண்ணா. ஆனால் விருபாட்சர் கோயிலிலும் விட்டலநாதர் ஆலயத்திலும் சாயங்கால பூஜையின் கண்டாமணி ஒலியை அழுத்திக் கொண்டு துருக்கி வாடாவில் உள்ள மசூதியின் உப்பரிகையிலிருந்து தொழுகைக்கு அழைக்கும் பக்கிரியின் குரலும் கலந்து வருகிறதே. அதைக் கேட்டு எத்தனை இந்துக்களின் ரத்தம் கொதிக்கிறது, தெரியுமா?"

தம்பியின் ஆவேசமான பேச்சைக் கேட்டு மனத்துக்குள் ஆனந்தப்பட்டுக் கொண்டான் திருமலை. தன் எண்ணம் கைகூடும் என்ற நம்பிக்கை பிறந்தது. ஆனால் அவசரப்பட வில்லை. அமைதியாகவே அமர்ந்திருந்தான். தம்பியோ நிறுத்தவில்லை. தொடர்ந்தான்.

"இது மட்டுமா? எந்த நாட்டிலே பசுவைத் தெய்வமாகப் போற்றி வழிபடுகிறாமோ அங்கு அதிகாலை வேளையில் கோயில்களில் கோபூஜை நடந்து கொண்டிருக்கும் போது அதே நாட்டின் மற்றொரு பகுதியில் துருக்கிவாடாவில் - பசு மாட்டைக் கொன்று பங்கு போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கொடிய செயலுக்கும் நம் அரசாங்கமே அனுமதி அளித்திருக்கிறதே, அண்ணா! அதைச் சொல்லுங்கள்!"

வெள்ளம் வடிந்த நதியைப் போலப் பழைய அமைதியுடன் பேசலானான் வேங்கடாத்திரி: "இப்படி நாம் வேதனைப்படுவதற்கு ஆயிரம் விஷயங்கள் இருக்க அலி ஆதில்ஷாவைப் பெத்தண்ணா அன்பு மகனாக அரவணைத்துக் கொண்டு விட்டார் என்பதற்காக ஆத்திரப்பட்டீர்களே. அப்படிப் பார்க்கப் போனால் நமது மூதாதையர்களில் ஒருவரான முதலாவது தேவராயர் பாமினி

சுல்தானுக்குப் பணிந்து போனதோடல்லாமல் தமது அருமை மகளை அவனுக்குப் பரிசம் போட்டுப் பாணிக்கிரகணமும் செய்து கொடுத்ததை மறந்திருக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். அந்தச் செயலுக்கொன்றும் இது குறைந்து போய் விடவில்லை ன்பது என் அபிப்பிராயம்.' மீசையைச் சுருட்டி விட்டபடியே குறும்பாகச் சிரித்தான் வேங்கடாத்திரி.

அதில் ஷாவிற்கு அண்ணா அளித்த கௌரவத்தினால் கொந்தளித்த உள்ளத்தவனாக வந்த திருமலை - ஏதேதோ பேசித் தன் திட்டத்துக்குச் சாதகமாகத் தம்பியைத் திருப்ப வேண்டும் என்ற ஆவலுடன் ஆலோசனை மண்டபத்துக்கு வேங்கடாத் திரியை வரவழைத்த திருமலை - தான் பேசாமல் தம்பியின் பேச்சைக் கேட்டபடி உட்கார்ந்திருந்தான். பனி மலை வெடித்துச் சிதறிய போது எரிமலை அடங்கி விட்டது. அடங்கிய திருமலை அமைதியாகச் சொன்னான்.

"வேங்கடாத்திரி! நம் அண்ணாவின் மீது நீ இத்தகைய குற்றச்சாட்டுக்களைச் சுமத்துவதை நான் ஏற்க முடியாது... இன்றைக்கு நீயும் நானும்..."

"குற்றச் சாட்டுக்களா? கொடுமை! கொடுமை!' அண்ணாவைப் பேச விடாமல் குறுக்கிட்டான் வேங்கடாத்திரி. "நாட்டின் இன்றைய நிலையை விளக்கினேனே தவிர இதற்கெல்லாம் அண்ணாவைக் குற்றவாளியாக்குவது என் நோக்கமல்ல." திருமலைக் குழப்லானான் தளபதி.

"இன்றைகது அரவீட்டாரின் ஆதிக்கத்தில் சாம்ராஜ்யம் இருக்கிறதென்றால் அதற்கு நம் அண்ணாவின் அரசியல் சாகஸங்கள்தான் காரணம் என்பதை நாம் மறந்து..."

"மறக்கவும் இல்லை; மறுக்கவும் இல்லை... ஆனால்..."

"நமது படைகளிலே ராமராயரிடம் விசுவாசமுள்ள முகமதியர்கள் பெருமளவில் இருப்பதனால்தான் இன்று விஜய நகரத்துப் பாளையக்காரர்களும் பெருங்குடி மக்களும் அண்ணாவின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்ட பேசாமல் இருக்கிறார்கள். நீயும் நானும் இன்றைக்குச் சாம்ராஜ்யத்தில் உன்னத நிலையில் உட்கார்ந்திருக்கிறோம் என்றால்..."

"அண்ணா!" அமைதியாகக் கூப்பிட்டான் வேங்கடாத்திரி. "என் பேச்சை நீங்கள் தவறாகப் புரிந்து கொண்ட விட்டீர்கள்... அண்ணாவின் செய்கையால் ஆத்திரமடைந்தவர் நீங்கள். ஆனால் அதற்கு விளக்கம் தந்து பேசியவனோ நான். ஒரு பக்கத்தை விளக்கிய எனக்கு அதன் மறுபக்கத்தின் நிலையும் தெரியும் அண்ணா! அச்சுதராயர் காலத்திலிருந்து சதாசிவ ராயர் காலம் வரை பட்டத்துக்குரியவரைப் பொம்மையாக்கி விட்டுப் பதவியைக் கைப்பற்றி ஆட்சி செலுத்தும் நம் அண்ணாவின் சாமர்த்தியத்தை அரசியல் அறிவு படைத்த அத்தனை பேரும் பாராட்டத்தான் செய்வார்கள். பாமினி சுல்தான்களில் யாரும் பலம் பெற்று விடக் கூடாது என்பதில் அக்கறை காட்டி அவர்களின் உள்நாட்டுப் பூசல்களில் புகுந்து, அவர்களுக்கு உதவுவது போல உதவி ஆனால் அதே சமயத்தில் தம் பலத்தையும் மதிப்பையும் பெருக்கிக் கொண்டு வருகிறார் நம் அண்ணா. இன்றைக்கு உங்களை ஆத்திரப்படும்படி செய்த ஆதில்ஷாவின் விஷயமும் இப்படிப்பட்ட காரியங்களில் ஒன்றாகத்தான் இருக்கும்."

அண்ணா ராமராயரின் செய்கையில் அதீதமானது ஏதுமில்லை என்னுமளவுக்கு இப்போது வேங்கடாத்திரியின் விளக்கம் விரியலாயிற்று. என்றைக்குமே அவனைத் திருமலையால் புரிந்து கொள்ள முடிந்ததில்லை. இன்றைக்கும் அதே நிலையில்தான் குழம்பலானான். அண்ணா ராமராயரின் செய்கைகளை வேங்கடாத்திரி கண்டிக்கிறானா ஆதரிக்கிறானா என்றே புலப்படவில்லை. 'நம் உணர்ச்சிகளை இவனிடம் ஏன் காட்டிக் கொண்டோம்' என்று நினைக்குமளவுக்குத் திருமலையைத் திகைக்க வைத்து விட்டான் வேங்கடாத்திரி.

"வேங்கடா! அந்நியர்களின் விஷயத்தில் அண்ணா கையாளும் தந்திரங்களை அரசியலோடு நிறுத்திக் கொள்ளுவார் என்று நினைத்திருந்தேன். ஆனால் அது இப்படி அந்தப்புரம் வரை வந்து ஆதில்ஷாவைச் சுவீகாரப் பிள்ளையாகக் கொள்ளும் வரை போனது தான்..." தான் கூறும் காரணம் வேங்கடாத்தியின் விளக்கத்துக்குப் பிறகு பலவீனப்பட்டுப் போனதை அவன் நெஞ்சம் உணராமல் இல்லை.

வேங்கடாத்திரி பொருள் பொதிந்த புன்முறுவலோடு கூறினான். "அரசியலே அந்தப்புரத்திலிருந்து தானே ஆரம்பமாகிறது? அல்லது இப்படியும் கூடக் கூறலாம் - அந்தப்புரத்துக் காகத்தானே அரசியலே

உருவாக்கப் பட்டுள்ளது? அப்படி இருக்க நீங்கள் அவ்விரண்டையும் பிரித்துப் பேசுவது தான் எனக்குப் புரியவில்லை..."

"நான் சொல்ல வந்த விஷயமே வேறு. ஆதில்ஷாவை அடக்க நிஜாம்ஷாவையும் குதப் ஷாவையும் தூண்டி விடலாம். நிஜாம் ஷாவைப் பயமுறுத்த குதப்ஷாவுடனும் ஆதில்ஷாவுடனும் குலாவட்டும். பரீத்ஷாவையும் இமத்ஷாவையும் பக்கபலமாகக் கொண்டு குதப்ஷாவைக் கோல் கொண்டாவை விட்டே விரட்டத் திட்டம் வகுக்கட்டும். ஆனால் அவர்களையே நம்மில் ஒருவராக்கிக் கொள்ளுவதை அரசியல் தந்திரம் என்று கூறி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ள வேண்டாம் என்றுதான் கூறுகிறேன்.'

"அரசியல் நீதி நீங்கள் கூறும் கட்டுப்பாட்டுக்குள் இயங்குவதில்லை. உங்கள் வாதம் எனக்குப் பழைய சம்பவ மொன்றை நினைவுபடுத்துகிறது. அண்ணாவுக்கும் அதற்குள் மறந்திருக்காது என்று நினைக்கிறேன். நீங்களும் நானும் புரட்சிக் கொடி உயர்த்தி அதோனிக் கோட்டையைக் கைப்பற்றி ஆர்ப்பாட்டம் செய்தோமே அண்ணாவுக்கு எதிராக; அதன் முடிவு என்னவாயிற்று? கோல்கொண்டா இப்ரஹிம் குதப்ஷாவின் உதவி கொண்டு அண்ணா நம்மைச் செயலற்றவர்களாக்கி விடவில்லையா? குனிந்த தலையோடு குன்றிப் போய்க் கைதிகளாக நின்ற நம்மைப் பெருந்தன்மையோடு அண்ணா மன்னித்தாலும் அவர் உள்ளத்திலும் சரி, நம் உள்ளங்களிலும் சரி, அது மறையாத வடுவாகி நின்று விட வில்லையா?"

"தம்பி...!" என்று வேங்கட விலாசமே வெல வெலத்துப் போகக் கத்தினான் திருமலை. அவன் கண்களில் ரத்த தெறித்தது. மண்டபத்துக்கு வரும் போது எப்படிக் குமுறும் கோலத்தோடு வந்தானோ அதே நிலைக்குத் திரும்பியது அவன் தோற்றம்.

"எதை நான் ஒரு கெட்ட கனவாக எண்ணி மறந்து விட வேண்டும் என்று நினைக்கிறேனோ அதையே என்னைச் செயலற்றவனாகச் செய்ய ஓர் ஆயுதமாகப் பயன்படுத்துவது உன் வழக்கமாகி விட்டது. அந்தக் கசப்பான நிகழ்ச்சியின் காரண காரியங்களில் என்னோடு உனக்கும் பங்குண்டு என்பதை மறந்து விடுகிறாய். சாம்ராஜ்யத்தின் தளபதி என்ற முறையில் அண்ணாவின் செயல் பற்றிய உன் அபிப்பிராயத்தை அறிய விரும்பினேனே தவிர

தம்பி என்ற உறவு முறையில் உன்னோடு சேர்ந்து சதித்திட்டம் வகுக்க வரவில்லை" என்று கூறி வெளியேறினான் திருமலை.

ஆடும் பாவைச் சிலையை அணைத்தபடி. திருமலை போவதைப் பார்த்துக் கொண்டிருந்த வேங்கடாத்திரியின் முகத்திலே ஏளனப் புன்னகை இழையோடியது. உள்ளத்திலோ, 'அண்ணா! ஒரு தடவை அவமானப்பட்டது போதாதா? ஆட்சியைக் கைப்பற்ற வேண்டும் என்ற ஆசை இன்னும் உங்கள் மனத்தை விட்டுப் போக வில்லையே. அலி ஆதில்ஷாவைப் பெத்தண்ணா மகனாக வரித்துக் கொண்டதைச் சாக்காகக் கொண்டு கலகம் விளைத்து மக்களின் ஆதரவைப் பெறமுடியுமா என்று கலந்தாலோசிக்கவே என்னை வரவழைத்தீர்கள் என்பதை நான் அறிவேன். நாட்டின் நிலை எப்படி இருந்தாலும் அண்ணா ராமராயரை அசைக்க முடியாதண்ணா. அசைக்க முடியாது! ஒரு தடவை உங்கள் போதனையில் புத்தி இழந்து புரட்சி செய்து பட்ட அனுபவம் போதாதா? சாம்ராஜ்யமே எதிர்த்து நின்றாலும் பெத்தண்ணாவுக்குப் பக்க பலமாகவே நிற்பான் இந்த வேங்கடாத்திரி. ஆனால் அண்ணா ராமராயர் என் செயல்களைச் சந்தேகக் கண் கொண்டு பார்க்காதிருக்க வேண்டும்...' என்று பலவாறாகச் சிந்தனை செய்தபடியே தன் அரண்மனையை நோக்கி நடக்கலானான் வேங்கடாத்திரி.

விஜயநகர சாம்ராஜ்யத்தின் முடிசூடா மன்னராக விளங்குபவர் அரவீட்டு மரபில் உதித்த ஆற்றல் மிகுந்த ஈடு இணையற்ற வீரர் ராமராயர். அரவீட்டு புக்கர் என்பவரின் பேரனும் ரங்கராயரின் மகனுமான இவருடைய தம்பிகள்தான் திறமை மிக்க திருமலையும், வெல்ல முடியாத வேங்கடாத்திரியும். இத்தகைய தம்பிகளைப் படைத்த ராமராயர் எந்தப் படையெடுப்பிலும் தோல்வி கண்டறியாதவர். தம் வாழ்நாளில் மூன்று மன்னர்களின் ஆட்சியைக் கண்டவர். கடைசி இரண்டு பேர் பெயரளவுக்குத்தான் மன்னர்களாக இருந்தார்களே தவிர நாட்டின் அதிகாரம் முழுவதும் மகா மண்டலேசுவரரான ராமராயரிடமே இருந்தன.

இளமையில் ராமராயர் போர்க் கலையில் ஆற்றலும் அரசியலில் அனுபவமும் பெறக் கோல்கொண்டா சுல்தான் குலி குதப் உல்முல்க்கின் படையில் பணியாற்றப் புகுந்து தமது வீர வாழ்வைத் தொடங்கினார். ஆனால் அவமானப்படுத்தும் சுல்தானிடம் தன்மானத்தை இழக்க விரும்பாமல் கோல்கொண் டாவிலிருந்து

வெளியேறி விஜயநகரத்துக்கு வீரத் திருமகனாக அவர் வந்து சேர்ந்த போது இரு கைநீட்டி வரவேற்றுப் படைத் தலைமையும் அளித்தார் மஹாராயரான கிருஷ்ணதேவர். தனது திறமையையும், வீரத்தையும் காட்டப் பல சந்தர்ப்பங்கள் கிடைத்தன ராமராயருக்கு.

கிருஷ்ண தேவராயரின் படைகள் சென்ற பக்கமெல்லாம் வெற்றி வாகை சூடிவந்தன. விஜயநகரத்தின் மகத்தான பொற்காலத்தை உருவாக்கியவர் கிருஷ்ண தேவராயர் என்றால் அவருக்குப் பக்கபலமாகப் பல போர்களில் பங்கு கொண்டவர் ராமராயர். அரவீட்டு ஆண் மகனின் வீரத்தை வியந்து பாராட்டிய கிருஷ்ண தேவராயர் தமது செல்வ மகள் திருமலாம்பாளையே அவருக்குத் திருமணம் செய்து கொடுத்துக் கௌரவித்தார். விஜயநகரத்து அரச குடும்பத்தினருக்கு 'அலியா' (மருகர்)வானார் ராமராயர்.

அரசியல் தீர்க்கதரிசனம் பெற்ற ராமராயர், வருங்காலத்தைப் பற்றி வளமான எண்ணங்களை வளர்த்துக் கொண்டிருந்த அரவீட்டு முதல்வர், தம் உடன் பிறந்தவர்களின் வாழ்வே தம் உயர்வு என்பதை உணர்ந்து தம் தம்பிகளான திருமலை, வேங்கடாத்திரி இருவரையுமே உன்னத நிலைக்குக் கொண்டு வந்தார். ராயரின் படையணியில் பொறுப்புள்ள புள்ளிகளாகத் திகழ்ந்தார்கள் அவ்விருவரும். அண்ணா ராமராயரைப் போலவே தம்பி திருமலையும் கிருஷ்ண தேவராயரின் அன்புக்குப் பாத்திரனாகி அவரது இரண்டாவது மகள் வெங்கலாம்பாளை மணந்து ராயரின் மாப்பிள்ளையானான்.

இப்படி அந்தப்புரத்து ஆதரவும் அனுதாபமும் அரவீட்டுச் சோதரர்களுக்கு இருந்தும்கூட கிருஷ்ண தேவராயர் தமக்குப் பின் தமது தம்பி அச்சுதராயரையே அரியணைக்குச் சிபாரிசு செய்து விட்டுப் போனார். ராமராயரின் வீரத்தை அறியாதவரா மகாராயர் இல்லை. அப்படியானால்? கிருஷ்ணதேவராயர் தம் சாம்ராஜ்யத்தின் வாழ்வும் பலமும் அரசவைப் பெருங்குடி மக்கள், பாளையக்காரர்கள் ஆகியோரின் ஒத்துழைப்பில்தான் இருக்கிறது என்பதை உணர்ந்தவர். அவர்களது விருப்பத்துக்கு மாறாக எதையும் செய்ய விரும்பாதவர். ஆகவே ராமராயர் தமது மருமகராக இருந்தும் அவர் துளுவ மரபைச் சேர்ந்தவரல்ல என்ற ஒரே காணத்துக்காக அவரைத் தமது அவைப் பெருமக்கள் ஆதரிக்க மாட்டார்கள் என்று அறிந்தே அச்சுதராயருக்கு அரியணையை அளித்தார்.

பின்னால் அச்சுதராயரைச் சிறையிலிட்டு ஆட்சிப் பொறுப்பை ராமராயர் கைப்பற்றினாலும்கூட அரியணையிலே உட்கார முடியவில்லை. மகராயர், மாமன்னர் என்ற பட்டங் களையும் அவரால் பெற முடியவில்லை. ராணிகளும் அரச குடும்பத்துப் பெண்களும் தங்கள் மருமகர் மன்னராவதை விரும்பினாலும்கூடப் பெருங்குடி மக்களின் பலத்த எதிர்ப் பிருந்தது. மகா மண்டலேசுவரராக இருந்தாலும் மகத்தான காரியங்களைச் சாதிக்க முடியும் என்று நிரூபித்து மன்னரை விடச் செல்வாக்கும் பலமும் பொருந்தியவராக வாழ்ந்து வந்தார், அரவீட்டு முதல்வர். எத்தனை பூசல்கள், சதிகள், சண்டைகள், சூழ்ச்சிகள்? எல்லாவற்றுக்கும் ஈடுகொடுத்தார் ராமராயர். அச்சுதராயருக்குப் பிறகு கிருஷ்ணதேவராயரின் மற்றொரு சகோதரரான ரங்கராயரின் மகன் சதாசிவ ராயரைப் பொம்மை அரசனாக்கி விட்டுப் பொறுப்பை விட்டுக் கொடுக்காமல் புகழுடன் வாழ்ந்து வரலானார் ராமராயர். அந்தப்புரத்திலே ஆடலையும் பாடலையும் ரசித்துக் கொண்டிருந்தான் அரசன். ஆட்சியையும் அரசியல் சூட்சியையும் அதிகார போதையையும் ரசித்துக் கொண்டிருந்தார் அலியா ராமராயர்.

கிருஷ்ண தேவராயர், அச்சுதராயர், இப்போது சதாசிவராயர் ஆகிய மூன்று மன்னர்களின் ஆட்சியைக் கண்ட அரவீட்டு முதல்வர் அறுபது வயதைத் தாண்டி விட்டாலும், இருபது வயது இளைஞரின் மிடுக்கோடு சாம்ராஜ்யத்தை நிர்வகித்து வந்தார்.

கட்டுக் குலையாத உடல், கம்பீரமான தோற்றம், முதுமையின் முத்திரைகள் பதியாத முகம், முறுக்கி விட்ட மீசை, விரோதியும் வியந்து பாராட்டும் வீரம் செறிந்த நடை, பரந்த மனப்பான்மை கொண்ட மகாமண்டலேசுவரரின் விரித்த மார்பகத்தி லேயுள்ள விழுப் புண்களை மறைத்தபடி பொன்னாபரணங்கள் புரண்டு கொண்டிருக்கும். இது தான் ராமராயர்.

பொன்னிழைகளால் ஓரங்களில் பூவேலை செய்யப்பட்ட தூய வெண் பட்டாடையைத் துவளத் துவளக் கச்சமாக அணிந்திருந்த ராமராயர், தோளிலிருந்து துவளும் பட்டுப் பீதாம்பரம் பின்புறம் புரள, முன்புறம் அதை இடக்கரத்தில் ஒயிலாகத் தாங்கியபடி அந்தப்புரத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தார். காலில் அணிந்திருந்த பாதரட்சை ராயரின் நடைவேகத்துக்கு ஏற்பப் 'பராக், பராக்' என்று கட்டியம் கூறுவது போல ஒலி எழுப்பிக் கொண்டிருந்தது.

விருபாட்சர் ஆலயத்திலிருந்து திரும்பிவர், அந்தரங்க அறையிலே காத்திருந்த பாளையக்காரர்களைச் சந்தித்து அவர்களுடன் உரையாடியபின் தம் இள மனைவி சத்திய பாமாவின் இருப்பிடத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார். ராயரின் வருகையைத் தெரிவிக்கப் பணிப் பெண்கள் விரைந்தார்கள்.

இன்முகத்தோடு எதிர்கொண்டழைத்த இளமனைவியின் இடையைச் சுற்றி அணைத்தபடி இருக்கையில் அமர்ந்தார் ராமராயர். இந்த வேளையில் வந்தால் தன் கணவர் அங்குதான் உணவருந்துவார் என்று தெரியும் தேவிக்கு. ஆகவே விழியால் மொழி பேசி விருந்துக்கு ஏற்பாடு செய்தாள்.

ராமராயர் தம் தோள் மீது துவண்டு சரியும் பட்டுப் பீதாம்பரத்தை அகற்றிய போது அந்த அகன்ற மார்பிலே அப்பிக் கிடந்த விருபாட்சர் ஆலயத்து ஆண்டவனின் சந்தனம் கமகமத்தது. அதன் இனிய மணத்திலே இறங்கி நிற்கும் தன் இள மனைவியைப் பார்த்து, "என்ன சத்தியபாமா, நான் இன்றைக்கு இங்கே வருவேன் என்று உனக்குத் தெரியுமா, என்ன? அலங்காரமெல்லாம் பலமாக இருக்கிறதே!" என்றார் அவளைத் தம் மார்பிலே சாய்த்துக் கொண்டே.

"தினமும்தான் உங்களை எதிர்பார்த்து இம்மாதிரி அலங்காரங்களைச் செய்து கொள்கிறேன். ஆனால் ஏதோ ஒரு நாளைக்குத்தான் உங்கள் கவனம் இந்தப் பக்கம் திரும்புகிறது" என்று குற்றம் சாட்டினாள் மஞ்சத்தில் சாய்ந்திருந்தவரின் மார்பிலே சாய்ந்தபடி துவளும் கொடியாக விருந்த சத்தியபாமா.

ஆழங் காண முடியாத தம் அகன்ற மார்பிலே தெரியும் மனைவியின் கருங் குழலை ஒரு கரத்தால் நீவியபடியே மறு கரத்தால் பக்கத்தில் உள்ள பழத் தட்டிலிருந்து திராட்சைக் குலையை எடுத்துச் சுவைத்துக் கொண்டே "உன்னைப் போல் ஒன்பது போர்கள் என் வரவுக்காக ஏங்கிக் கொண்டிருந்தாலும் ராஜ்ய லட்சுமியின் ஆலிங்கனம்தான் எனக்குச் சுகமாக இருக்கிறது. என்ன செய்யலாம், சொல்..." என்றார் ராமராயர் குறும்பாக.

நிமிர்ந்து உட்கார்ந்தாள் கோதை.

ராஜ்யலக்ஷ்மி தன் கணவனை எப்படி அலைக்கழிக்கிறாள் என்பதை எண்ணிப் பார்த்தாள். வேறு எவரும் பேசத் துணியாத விஷயத்தை இளைய மனைவி என்ற ஒரே உரிமையில் தைரியத்துடன் பேசலானாள்.

"அது சரி, ஆதில்ஷாவிடம் தாங்கள் காட்டிய அன்பு பற்றியே அரண்மனை யெங்கும் பேச்சாக இருக்கிறதே..."

"அரண்மனையில் மட்டும்தானா? நாடு நகரம் வீடு வாசல் எங்குமே என்னைப் பற்றி, என் செயலைப் பற்றி விபரீத வியாக்கியானங்கள் நடந்து கொண்டுதான் இருக்கும். என்னைப் புரிந்து கொள்ளாதவர்கள் பொங்கிக் கொண்டிருப்பார்கள். என்னைப் புரிந்து கொண்டிருக்க வேண்டிய என் தம்பிகளே இன்று வேங்கட விலாச மண்டபத்திலே சந்தித்து விவாதித்தார் களாம். கேள்விப்பட்டேன்..." என்ற ராயரின் முகத்திலே சிந்தனைக் கீற்றுக்கள் ஓட ஆரம்பித்தன.

இதற்குள் பணிப் பெண்கள் தங்க வட்டிலிலே பொற் கிண்ணங்களைப் பரப்பி, புத்துருக்கு நெய்யிலே தயாரித்த உணவு வகைகளை அதில் கொண்டு வந்து பரிமாறினார்கள். முக்கனியும் சர்க்கரையும் தேனும் கொண்டு வந்தார்கள். கற்கண்டும் மிளகு மிட்டுக் காய்ச்சிய பாலைக் கையில் ஏந்தி நின்றாள் மற்றொருத்தி. ராயர் உணவைச் சுவைக்கலானார். அவர் சிந்தனையோ அரசியலைச் சுவைத்துக் கொண்டிருந்தது.

"இத்தனை பெரிய எதிர்ப்புக்களுக்கு மிடையே இப்படிப் பட்ட காரியங்களை ஏன் செய்கிறீர்கள்?" ராஜ்ய லக்ஷ்மியிட மிருந்து அவரை எப்படியேனும் விடுவித்துத் தன்னிடம் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தில் இப்படிக் கேட்டு வைத்தாள் சத்தியபாமா.

கடகட வென்று சிரித்தார் ராயர். "எதிர்ப்புக்கள் இருக்க வேண்டும் தேவி. அப்போதுதான் அதைச் சமாளித்து ஏற்றம் பெறும் வாய்ப்பு இருக்கும். பாமினி சுல்தான்கள் ஐவரையும் ஒன்று சேரவிடாமல் ஆனால் அவர்கள் விஜயநகரத்திடம் அச்சங்கொண்டு அதன் நட்பை நாடி வரும்படி செய்ய வேண்டும். அதற்காகத்தான் இப்படி ஏதேதோ செய்து வருகிறேன்" ஆகாரத்தை முடித்துக் கொண்டு எழுந்திருந்தார் ராயர்.

தாம்பூலத்தைத் தயார் செய்து கொண்டிருந்த சத்திய பாமா, "உங்கள் திட்டங்களை மீறி அவர்கள் ஒன்று சேர்ந்து விட்டாலோ?" என்று கேட்டாள்.

"ஒன்று சேரக் கூடாது, சேரவும் விட மாட்டேன். இதில்தான் ராமராயரின் லட்சியமே இருக்கிறது" என்றவரிடமிருந்து ஒரு நீண்ட பெருமூச்செழுந்தது. மனைவி மடித்துக் கொடுத்த மணம் கமழும்

தாம்பூலத்தைச் சுவைத்தபடி உட்கார்ந்திருந்த ராயரின் பார்வை தூண்டா விளக்குகளின் அசையாமல் எரியும் சுடர்களில் பதிந்திருந்தது.

"இந்த முஸ்லிம் என்ற வேறுபாடகற்றி ஒரு புதிய தென்னகத் தேசியத்தை உருவாக்கப் பாடுபடுகிறேன். என் இந்த லட்சியக் கனவு ஈடேறுமானால் இணையற்ற புகழுக்கும் பெருமைக்கும் உரியவனாவேன். இல்லாவிடில்... அழிவு... மகத்தான அழிவு... உலகம் என்றுமே கண்டும் கேட்டுமிராத பயங்கரமான அழிவுதான். அதையும்கூட என்னால் கற்பனை செய்து பார்க்க முடிகிறது" என்ற போது அந்தக் கூடத்திலுள்ள விளக்குகளின் சுடர்களும் நடுங்குவது போல அசைந்தன. கலவரத்துடன் கணவனின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த சத்தியபாமாவின் கண்களும் கலங்கின.

சட்டென்று திரும்பிய ராமராயர் தம் தேவியின் களையிழந்த முகத்தைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தார். "பயந்து விட்டாயா கண்ணே? விஷப் பரீட்சைதான். ஆனால் அதை வெற்றியாக்கிக் கொள்ளும் ஆற்றல் உன் கணவனுக்கு உண்டு. கவலைப்படாதே" என்று கூறி அவள் கண்ணீரைத் துடைத்தார்.

அப்போத காரிகை ஒருத்தி சிரம் தாழ்த்தி வாய் புதைந்து வந்து வணங்கி நின்றாள். என்ன என்று கேட்காமல் கேட்டு ஏறுபோல எழுந்து நின்றார் ராயர்.

"தங்கள் அந்தரங்க அறையிலே முக்கியமான செய்தியைத் தாங்கிக் காத்திருக்கிறார் தங்கள் இளவல் தளபதிராயர் அவர்கள்" என்றாள் அவள் நிமிராத தலையுடன். புருவங்களைச் சுருக்கி ஒரு விநாடி ஏதோ யோசனையில் ஆழ்ந்தவர் மறு விநாடி பட்டுப் பீதாம்பரம் தரையில் புரளத் தம் அந்தரங்க அறையை நோக்கி நடந்தார். உள்ளே நுழைந்த அவர் வேகம் எதையோ கண்டதும் தடைப்பட்டது. அறையின் நடுவே அழகே உருவான ஒரு பெண் ஜ்வலிக்கும் கண்களுடன் நிறுத்தப்பட்டிருந்தாள். ஆம், அவளாக அங்கு வந்து நிற்கவில்லை. இரண்டு காவல் கன்னிகளுக்கிடையே கட்டுண்ட நிலையில் அவளைக் கண்ணுற்ற ராயரின் கண்கள் வியப்பினால் விரிந்தன. ராயரைக் கண்ட அந்தப் பாவையே சீறும் பாம்பெனச் சினந்தவள் தன் செயலற்ற நிலையில் அதைப் பெருமூச்சாக்கி உடலைச் சிலிர்த்துக் கொண்டாள்.

# 5

# கூண்டுக் கிளி

கட்டுண்டு நின்றாள் அந்தக் காரிகை. அவள் முகத்தில் பீதியில்லை. பார்வையில் பயமில்லை. பலத்த போராட்டத்துக்குப் பிறகே அவள் கட்டுண்டிருக்கிறாள் என்பதை அவள் நின்ற கோலம் நிதரிசனமாக்கிக் கொண்டிருந்தது. கலைந்த கேசம், கசங்கிய ஆடை, சந்தன மேனியில் குங்குமத்தைத் தெளித்தது போல் ஆங்காங்கே உடல் கன்றிச் சிவந்திருந்தது. சீறிச் சினந்து நின்றாள் சிங்காரி.

அந்தக் கட்டான உடலிலே அவளைப் போலவே இளமை கட்டுக் கடங்காமல் திமிறிக் கொண்டிருந்தது. அருவருப்பும் அலட்சியமும் அவள் ார்வை;ல கலவையிட்டிருந்தன. துடிப்புடன் நின்றுகொண்டிருந்த அவள் ஒரு துருக்கியப் பெண். இருபது வயதே நிரம்பிய அவளது மேனி எழிலை அவள் அணிந்திருந்த இறுக்கமான உடை எடுப்பாகக் காட்டிக் கொண்டிருந்தது. தலைக்கு மேலாக வந்து முகத்தை மறைத்திருக்க வேண்டிய சல்லாத் துணியோ தோளிலே சரிந்த கிடந்தது. அந்நிய ஆடவரின் முன்னே நாணிக் கவிழ்ந்திருக்க வேண்டிய தலை, நடுக்கமின்றி நிமிர்ந்திருப்பதிலிருந்து நிலைமை கட்டு மீறிப்போய் விட்டதென்பதை உணர்ந்து கொண்டார் ராயர்.

அந்தரங்க ஆலோசனைக் கூடத்தினுள் அடியெடுத்து வைத்த ராமராயர் சுற்றுமுற்றும் பார்த்தார். கைதியாக நின்றிருந்த காரிகையைத் தவிரக் கூடத்தின் ஒரு பக்கத்தில் வேங்கடாத் திரியும் நின்று கொண்டிருந்தான். இடையிலுள்ள உடைவாளிலே ஒரு கையூன்றி நின்ற அவன், அண்ணாவைக் கண்டதும் உடலைச் சற்றே வளைத்துச் சிரம் தாழ்த்தி வணங்கி வரவேற்றான் - மிடுக்காக!

பகைவரைத் தம் பார்வையாலேயே கலங்க வைக்கும் ராம ராயரையே அந்தப் பாவை தன் பார்வையால் திகைக்க வைத்தாள். அவளது பேசும் விழிகளை, இல்லை, அனல் வீசும் விழிகளைக் கண்ட ராயர் தாம் பேசாமல் தளபதியை நோக்கினார்.

மகாமண்டலேசுவரரின் குறிப்பறிந்த வேங்கடாத்திரி முன்னால் வந்து, நிலைமையை விளக்கினான். "இன்று மாலை தங்களிடம்

விடைபெற்றுக் கொண்டு கிளம்பிய விருந்தாளி அலி ஆதில்ஷாவின் பரிவாரங்களோடு நம் அந்தப்புரத்திலிருந்து இவள் பதுங்கிப் பதுங்கித் தப்பிச் சென்றிருக்கிறாள். விஷயமறிந்த நம் வேவுகாரர்கள் இவளை வளைத்துப் பிடித்துக் கொண்டு வந்துவிட்டார்கள்."

"இது ஆதில்ஷாவுக்குத் தெரியுமோ?" என்று கேட்டார் ராமராயர்.

"அவ்வளவுக்கு நம் காவல் படைவீரர்கள் அரசியல் பண்பறியாதவர்களா என்ன? இவள் தப்பி ஆதில்ஷாவின் பரிவாரங்களோடு சென்றதோ, இவளைத் திரும்பவும் இங்கே கொண்டு வந்தோ எதுவுமே தெரியாது ஆதில்ஷாவுக்கு" என்றான் வேங்கடாத்திரி.

"பெண்ணே, யார் நீ...?" என்று திரும்பினார் ராயர்.

கோபத்தில் குமுறிய சுந்தரியின் சுந்தரக் குரலும் கோபத்தில் குமுறியபடி வெளியாயிற்று: "உங்கள் கைதி! மறுபடியும் கைதியாகவே இங்கே வாழவேண்டிய துர்ப்பாக்கியத்தை அடைந்தவள்" என்றாள் அவள் எங்கோ பார்த்துக் கொண்டு.

பேசியவள் பெண் - அதுவும் பருவப் பெண். வேற்று நாட்டினள் என்ற காரணமோ என்னவோ; கோபத்தினால் சிவந்திருக்க வேண்டிய ராயரின் முகத்தில் இளஞ்சிரிப்பு மலர்ந்தது. "என் கேள்விக்கு உன் விளக்கம் பொருத்தமாக இல்லையே பெண்ணே" என்றவர், "நம் அந்தப்புரத்தில் யாருடைய பணிப்பெண்ணாக இருந்தவள் இவள்?" பார்வையை அவள் மீது பதித்திருந்தாலும் கேள்வியை வேங்கடாத்திரிக்கே விடுத்தார் ராயர். தளபதி தகவல் தருமுன் அந்தக் காவல் கைதி கலகலவென்று சிரித்தாள்.

"ஹ... ஹ... ஹா! உண்மையிலேயே நீங்கள் என்னை மறந்துவிட்டீர்களா? உங்களால் மறக்க முடிந்ததா? மறந்துபோகக் கூடிய காரியத்தையா நீங்கள் செய்தீர்கள்?" வெறிச் சிரிப்பை நிறுத்தின அவள் கண்களில் புனல் பொங்கி நிரம்பியது. "ஆனால் நான் எதையும் மறந்து விடவில்லை; மறக்கவும் மாட்டேன். உங்களையும் மறக்க விடமாட்டேன்" என்று குரல் கம்மக் கூறிய அவள் அடுத்த விநாடியே கோபத்தீயில் கண்ணீர் உலரக் கம்பீரமாகக் காட்சியளித்தாள்.

எதையும் சுலபத்தில் மறக்காத குணம் படைத்த ராமராயர் அந்த மங்கை போட்ட புதிரைக் கேட்டு மயங்கித்தான் போனார்.

மகாமண்டலேசுவரரின் புருவங்கள் நெறி[illegible] வேங்கடாத்திரிக்கே வியப்பாக இருந்தது. 'உண்மையாகவே ஆயிஷாவை அண்ணா மறந்துதான் விட்டாரா?' அவனால் நம்பவே முடியவில்லை.

"காலஞ்சென்ற இப்ரஹிம் ஆதில்ஷாவின் சகோதரன் அப்துல்லாவைக் கருவியாகக் கொண்டு போர்ச்சுகீசியரின் பக்க பலத்துடன் பீஜப்பூரின் ஆட்சியைக் கைப்பற்றப் புரட்சிக்காரர்கள் புறப்பட்டபோது இப்ரஹிம் நம் உதவியை நாடி ஓடி வந்தாரே..."

"ஆ!... ஆம்! நினைவுக்கு வந்துவிட்டது" என்று வேங்கடாத்திரிக்குக் கையமர்த்தி விட்டுப் பேசலானார் ராமராயர். "பாண்டாக் கோட்டையைக் காத்து நின்ற முஸ்தபா கானின் மகளல்லவா நீ... உன் பெயர்கூட ஆயிஷாதானே?" என்றார். அவளைத் தெரிந்து கொண்ட மகிழ்ச்சியினால் மலர வேண்டிய அவரது மதிமுகம் ஏனோ மங்கியது.

"ஆம், அதே ஆயிஷாதான். நாட்டுக்காகப் போரிட்ட குற்றத்துக்காகப் படுகொலை செய்யப்பட்ட தந்தையையும் கணவனுக்காக ஆவி பிரிந்த அன்னையையும் எண்ணி எண்ணி ஏங்கியபடியே அந்நிய நாட்டின் அடிமையாக வாழும் அதே ஆயிஷாதான்." அவள் குரலில் அழுகை கலந்தது.

ஆயிஷாவின் அருகில் நின்று கொண்டிருந்த இரண்டு காவல் கன்னிகளையும் நோக்கிச் சைகை செய்தார் ராமராயர். உடனே அவள் கைக் கட்டுகள் அவிழ்க்கப்பட்டன. தோளிலே துவண்டு கிடந்த துணியை எடுத்துத் தலை மீது போர்த்துக் கொண்ட ஆயிஷாவிடம் பெண்மைக்கே உரிய நாணம் வந்து புகுந்து கொள்ளப் பொலிவோடு விளங்கினாள்.

"மன்னர் சதாசிவராயரின் அந்தப்புரத்திலே அவரது சௌகரியங்களைக் கவனித்துக் கொள்ளும் பணிப் பெண்களில் ஒருத்தியாக ஆயிஷாவை அனுப்பினோம் என்று நினைக் கிறேன்" என்று தம்பி வேங்கடாத்திரியின் பக்கம் பார்த்துக் கேட்டார் ராமராயர்.

வேங்கடாத்திரி பதில் கூற வாய் திறக்குமுன் ஆயிஷாவே பேசினாள். "மன்னரின் அந்தப்புரத்திலே ஆனந்த வாழ்க்கை வாழுவேன் என்று நினைத்தீர்களாக்கும். தங்கக் கூண்டமைத்து, வெள்ளிக் கிண்ணத்திலே, பாலும் பழமும் வைத்து வளர்த்தாலும்

தன்னிச்சையாகத் திரியும் காட்டுக் கிளிக்குக் கிடைக்கும் சந்தோஷமும் மன நிறைவும் கூண்டுக் கிளிக்குக் கிடைக்குமா?''

“பறந்து திரியும் கிளியின் ஆனந்தத்தை ரசிக்கத் தெரியாமலா அதற்குக் கூண்டமைக்கிறான் மனிதன்? இல்லை, பருந்துகளுக்கு விருந்தாகும் அபாயத்திலிருந்து அதைக் காக்கவேதான் கிளியைக் கூண்டுக்குள் வைத்துக் பாதுகாக்கிறான் மனிதன்'' என்றார் ராயர்.

ஆயிஷா சிரித்தாள். அதில் வேதனை கலந்திருந்தது. “பருந்திடம் கிளி பயப்பட வேண்டியதில்லை. பறக்கும் தன் இனமாக அதனிடமிருந்து தப்பி வாழ அதனால் முடியும். ஆனால் பூனையை வளர்ப்பவர்கள் கிளியையும் வளர்க்க ஆசைப்படக் கூடாதல்லவா?'' என்றாள் ஆரணங்கு.

ராமராயருக்கு அவள் பேச்சு எதையோ புரிய வைத்தது. ஏதுமே புரியாதது போலவும் இருந்தது. வேறு மதத்தவரான மன்னர் சதாசிவ ராயரைப் பூனைக்கு ஒப்பிடும் அந்தப் பெண்ணின் தைரியம் அவருக்குப் புதுமையாகவே இருந்தது.

இத்தனை நேரம் அவள் அங்கங்களின் அழகாராய்ச்சியில் ஈடுபட்டிருந்த வேங்கடாத்திரி, அண்ணாவையே சிந்திக்க வைக்கும்படி அவள் பேசிய போது, “ஆயிஷா! என்ன சொல்லுகிறாய் நீ?'' என்று சீறினான்.

“அடிமை, நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது, சொன்னால்தான் கேட்டு ரசிக்கக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்? மன்னர் சதாசிவ ராயர் என்னைத் தன் அருகிலேயே இருக்க வேண்டும் என்றார். முடியாது என்று சொல்லிவிட முடியுமா நான்? கூண்டுக் கிளியாயிற்றே! ‘ஆடலில் வல்லவளாமே நீ, எங்கே ஆடு பார்க்கலாம்’ என்று பணித்தார். ஆத்திரப்பட முடியுமா நான்? அடிமையாயிற்றே! ஆடினேன். உள்ளம் கொதிக்க, மேனி துடிக்க நான் ஆடினாலும் ‘ஆஹா! அபாரம், அற்புதம்’ என்று அலமந்து போய்ப் பஞ்சணையிலே மல்லாந்து கிடந்தவர்; மானே தேனே என்று பிதற்றியபடி தாவிப் பிடிக்க வந்தால் ஓடி ஒதுங்க முடியுமா? உதாசீனப்படுத்தலாமா?''

“என்ன? அப்படியா?'' என்று இடைமறித்துக் கேட்டார் ராயர்.

“பின் எப்படி இருக்குமென்று எதிர்பார்த்தீர்கள்? ஆனால் இந்தத் தடவை நான் அடிமை என்பதை மறந்து தப்பி ஓடத்தான் முற்பட்டேன்.

அதன் பலன்? இன்று நான்கு வருஷங்களுக்குப் பிறகு மறுபடியும் உங்கள் முன் இந்தக் கோலத்தில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருக் கிறேன்.''

ராமராயருக்கு ஆயிஷாவின் நிலை ஒருவாறு புரிந்தபோது அவரிடமிருந்து பெருமூச்சொன்று வெளிப்பட்டது. இருந்த போதிலும் அந்தச் சூழ்நிலையில் தமது அநுதாபம் உள்பட எந்த உணர்வையும் வெளிப்படுத்துவது ராஜ நீதியாகாது எனக் கருதினார்.

“நல்லது பெண்ணே. இன்றையிலிருந்து..'' ஒரு விநாடி யோசித்தார். தமது ஒன்பது மனைவிகளுள் யாரிடம் அவளை அனுப்பலாம் என்று சிந்தித்தாரே என்னவோ! “தேவி திருமலாம் பாளின் தோழி நீ... தோழி என்பதுகூடப் பொருத்தமில்லை. அந்த மூதாட்டி உன்னைத் தன் மகளாகவே பாவித்து அன்பு செலுத்துவார்கள். ஆகவே இனி நீ தாபமடையாதே... தப்பி ஓட வேண்டும் என்றும் நினைக்காதே. 'நாம் அடிமை' என்ற தாழ்வு மனப்பான்மையிலும் கிடந்து தவிக்காதே. போ!'' என்று கூறினார்.

பொற்சிலை அங்கிருந்து பொன்னடி பெயர்த்து நகர்ந்தது.

தளபதி வேங்கடாத்திரியிடம் ஆயிஷாவைக் குறித்து ஏதோ சில ஏற்பாடுகளைச் செய்துவிட்டு ராமராயர் வெளியேறியபோது விஜயநகரத்தை வெண்ணிலவு தனது தண்ணொளியால் குளிப்பாட்டிக் கொண்டிருந்தது.

பூனை வளரும் வீட்டிலே கிளியைக் கூண்டிலடைத்தார்கள். ஒரு நாள் பூனை தன் கரத்தைக் கூண்டினுள் நுழைத்த போது, பதறிக் கதறிய கிளி சிறகடித்துப் பறந்து சென்றது கூட்டை விட்டு வெளியே. சத்தம் கேட்டு வந்த வீட்டுக்காரரோ கிளியைப் பிடித்துக் கூண்டில் அடைத்து விட்டுப் பூனையை எடுத்து அன்போடு தடவிக் கொடுத்தபடி செல்லமாகக் கடிந்து கொண்டார். இதனால் கிளியின் பீதி குறைந்தா விடப் போகிறது? இல்லை, பூனைதான் தன் பொல்லாத்தனத்தை விட்டு விடப் போகிறதா?

வேறொருத்தியாக இருந்தாலோ அல்லது வேறொரு சமயமானாலோ ராமராயர் நடந்து கொண்டிருக்கக் கூடிய விதமே வேறாக இருந்திருக்கும். தப்பிச் சென்று தன் இனத்தவர்களோடு சேர விரும்பியவளைத் தட்டிக் கொடுத்து ஆசி வழங்கி அனுப்பி இருப்பார். அத்தகைய பரந்த மனப்பான்மை கொண்டவர்தான் ராமராயர். அல்லது

அந்தச் செயலை அரசியல் நோக்கோடு பார்த்துக் கடுமையாகத் தண்டித்திருப்பார். அவ்வளவுக்குக் கண்டிப்புக்காரர்தான் அவர். ஆனால் ஆயிஷாவின் விஷயத்தில் அண்ணா கையாண்ட முறை வேங்கடாத்திரியையே வியப்பிலாழ்த்தியிருந்தது! 'அவள்தான் எத்தனை அழகு! நினைவைச் சொக்க வைக்கும் சுந்தர வடிவம். மிடுக்கான மேனி. வெடுக்கென்ற பேச்சு. வாலிப வயதினரான மன்னர் இவளழகில் வசமிழந்து போனதில் தவறில்லைதான்' என்று தன் இதயத்தில் பதிந்து விட்ட அந்த எழிலுருவை எண்ணங்களால் வருடியபடியே நடக்கலானான் வேங்கடாத்திரி.

அங்கே, சப்ரகூட மஞ்சத்தில் சயனித்திருந்த ராமராயரும் ஆரணங்கு ஆயிஷாவின் நினைவாகவேதான் புரண்டு கொண்டிருந்தார். அந்த நினைவு இன்றையச் சந்திப்பைப் பற்றியதல்ல. முதன் முதலில் அவளைச் சந்தித்த அந்த நாளைப் பற்றியது.

அறையின் பிரகாசமான விளக்குகளை அணைத்து விட்டு, மங்கிய நிலவைப் போல ஒளி சிந்தும் ஓரிரு விளக்குகளை மட்டும் தணிந்து வைத்திருந்தார்கள். தவத்திலிருக்கும் பொற்கொடியென அவ்விளக்குகளின் சுடர் ஆடாமல் அசையாமல் ஒளிர்ந்து கொண்டிருந்தது. அறையின் மறு கோடியிலிருந்த கணப்பிலிருந்து அகில், சந்தனம் போன்றவற்றின் மணம் கமழும் மெல்லிய புகைப்படலம் எழுந்து அந்தக் கூடமெங்கும் சூழ்ந்து கொண்டிருந்தது. சயன அறைக்கு வெளியே பிரத்தியேகமாகப் பயிர் செய்யப்பட்டிருந்த, இரவிலே மலர்ந்து மணம் பரப்பும் விதம் விதமான மலர்ச் செடிகளின் சுகந்தத்தைச் சுமந்தபடி இளந் தென்றல் சாளரங்களின் இடையே வழி வகுத்துக் கொண்டிருந்தது. இத்தனை சுகத்திலும் ராயருக்குத் தூக்கம் வரவில்லை. நோயாளியைப் போலப் புரண்டு கொண்டிருந்தார். மூடிய கண்களினுள்ளும் முஸ்தபா கான் வந்த நின்றான். ரத்தம் சொட்டும் தன் தலையைத் தானே கையில் ஏந்தியபடி... பட்டுப் போனதாக எண்ணிய அந்தச் சம்பவத்தை அவள்தான் எப்படிப் பசுமையாக்கி விட்டாள்? எத்தனை துணிச்சலான, ஆனால் சாதுரியமான பேச்சு?

ஆலயத்திலே ஆண்டவனின் கருவறையிலே ஒரு கண்ணாடித் தாமரைத் தட்டிலே ஒற்றை விளக்கு நூறு பிம்பங்களைக் காட்டி நிற்குமே அது போல ராயரின் மனக் கண்ணாடியிலே பலப் பல ஆயிஷாக்கள் தோன்றி அவரைச் சூழ்ந்து நின்றார்கள். ஒருத்தி சிரித்தாள். ஒருத்தி விம்மி அழுதாள். இன்னொருத்தியோ தன் சுடர்

விழிகளால் சுட்டெரிப்பது போல உற்றுப் பார்த்து உக்கிரமாகச் சீறினாள். மற்றொருத்தி கெஞ்சினாள். பளீரென்று ஓர் ஒளி. கண்ணைக் குருடாக்கும் அந்த ஒளியின் நடுவே தழலாக ஒரு புள்ளி. வர வர அந்தப் புள்ளி சுழன்று சுழன்று பெரிதாகிறது. பன்னிரண்டு வயதும் பால் வடிவும் மதிவதன முடைய ஒரு முகம்தியப் பாலகியாகிறது அது. அவள் முகத்திலே தாங்க முடியாத சோகம் கப்பிக் கிடக்கிறது. கண்ணீர் வழியக் கதறுகிறாள் அந்தச் சின்னஞ் சிறிய பெண். 'ஹோ' என்றெழுந்ததொரு பேய்க் காற்றிலே அந்தப் பெண்ணின் ஓலம் கலந்து விடுகிறது. காதைச் செவிடாக்கும் அந்தக் காற்றின் உறுமல் வலுத்துக் கொண்டே இருக்கிறது. உறக்கமும் விழிப்புமற்ற ஒரு நிலையில் உடலை முறித்துக் கொண்டு தவித்தார் ராமராயர்.

**பீ**ஜப்பூரின் பேரரசர் இப்ரஹிம் ஆதில்ஷா இறுமாப்பும் ஆதிக்கச் செருக்கும் கொண்டலைந்த காலம் அது. தன் அண்டை நாடான ஆமது நகர் பர்ஹான் நிஜாம்ஷாவையும், கோல்கொண்டாவின் குதப்ஷா ஜம்ஷிட்டையும் மதிக்காது உதாசீனம் செய்தார் இப்ரஹிம். இதனால் ஆதில்ஷாவிடம் வெறுப்புக் கொண்ட அவர்கள் விஜயநகரப் பேரரசின் உதவியுடன் பீஜப்பூரானுக்குப் பாடம் கற்பிக்க முடிவு செய்தார்கள். மூன்று வல்லரசுகள் ஒரே சமயத்தில் தாக்குதல் நடத்திய தருணத்தில் இப்ரஹிமின் இறுமாப்பு இருந்த இடம் தெரியாமல் போயிற்று. அந்த இக்கட்டான நிலையைச் சமாளிக்க ஆற்றல் மிகுந்த தன் தளபதி ஆஸாத் கானின் உதவியை நாடினார் இப்ரஹிம். ஆஸாத்கானின் திறமையால் வல்லரசுகளின் கூட்டு முறிந்தது. அகமது நகருக்கு ஷோலாப்பூரைச் சொந்தமாக்கிச் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டது பீஜப்பூர். கோல்கொண்டாவின் மீது படையெடுத்துப் பழிதீர்த்துக் கொண்டது. உதவிக்காக வந்த விஜயநகரத்தை ஒதுங்கிக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டது. இப்படியாக நிலைமை மாறி விடவே முன்னைவிட அகம்பாவம் கொண்டார் இப்ரஹிம். எதிர்பாராது கிடைத்த வெற்றி வெறியின் போதை தலைக்கேறி மமதை கொள்ளலானார் மன்னர்.

இந்த நிலையில் இப்ரஹிமின் சகோதரன் அப்துல்லாவை அரியணையில் ஏற்ற ஒரு சூழ்ச்சி உருவாயிற்று. இதற்குச் சுல்தான் பர்ஹான் துணையாயிருந்தார். வியாபாரத்துக்காக வந்து மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் வலுப்பெற்று வந்த போர்ச்சுகீசியரும் கூட பீஜப்பூரின் உள்நாட்டு விவகாரங்களில் அக்கறை காட்டி

அப்துல்லாவை ஆதரிக்கலானார்கள். இந்தச் சதித் திட்டம் இப்ரஹிமுக்குத் தெரிந்த போது. தன் உயிருக்கு அபாயம் நேரிடும் என்று பயந்த இளவரசன் அப்துல்லா தன்னைக் காத்துக் கொள்ளக் கோவாவுக்கு ஓடிப் போர்ச்சுகீசியர்களிடம் சரணடைந்தான். அப்துல்லா வெளியேறியது சதிகாரர்களுக்குச் சௌகரியமாகப் போயிற்று. அவனையே பீஜப்பூரின் சுல்தான் என்று அறிவித்து ஆர்ப்பாட்டம் செய்யலானார்கள்.

இப்போது இப்ரஹிமின் நிலை சங்கடமாகி விட்டது. தனக்குத் தன் தம்பியாலேயே எதிர்ப்பு என்பதை அவரால் தாங்க முடியவில்லை. ஆகவே இம்முறை விஜயநகரின் உதவியை இப்ரஹிம் நாடலானார். பலமற்றவர்களுக்கு உதவித் தம் பலத்தைப் பெருக்கிக் கொள்ளுவதில் கருத்தாக இருக்கும் ராமராயர் தமது பெரும் படையுடன் பீஜப்பூர் இப்ரஹிமுக்கு உதவ முன்வந்தார். பல போர்களில் பீஜப்பூர், விஜயநகர ப்டைகளின் உதவியுடன் வெற்றிவாகை சூடியது. பதவியைக் கைப்பற்றப் புரட்சி செய்த அப்துல்லா பிடிபட்டான். புரட்சிக்கு உதவியவர்கள் ஓட்டமெடுத்தனர்.

அப்போது...

அப்துல்லாவின் ஆணைப்படி பாண்டாக் கோட்டையைக் காத்து நின்றவர்களுள் முஸ்பாகான் என்ற துருக்கிய தளபதியும் ஒருவன். அரசியல் பூசல்களிலே அவதிக்குள்ளாவோர் இந்தத் தளபதிகள்தானே? இன்று மன்னனாக இருப்பான் ஒருவன். நாளைக்கு வேறொருவன் ஆட்சியைக் கைப்பற்றி அரசனாவான். ஆனால் அவ்வப்போது ஆட்சியில் இருப்பவர்களின் ஆணைப்படி நடக்க வேண்டியது இந்தத் தளபதிகளின் கடமையாயிற்றே. அதன்படி அப்துல்லாவுக்காகப் பாண்டாக் கோட்டையைப் பாதுகாத்து நின்றான் முஸ்தபாகான். முற்றுகைக்குப் பிறகு பாண்டாக் கோட்டை விழுந்தது. இப்ரஹிமின் வீரர்கள் வெள்ளமென உள்ளே புகுந்தார்கள். வஞ்சம் தீர்த்துக் கொள்ளப் புரட்சிக்காரர்களைப் படுகொலை செய்யும்படி கட்டளையிட்டான் இப்ரஹிம். முற்றுகையிலே உதவி செய்த விஜயநகரத்து வீரர்களும் இந்தப் பாதகத்தில் பங்கு கொள்ளும்படி யாயிற்று.

அரண்மனையிலே கைதியாகி நின்ற முஸ்தபாகான், நாட்டில் இப்படிக் காரணமின்றி உயிர்க் கொலை புரிவது அநீதி என்று வாதாடினான் தான் பிழைக்க வேண்டும் என்பதற்காக அல்ல; நீதி

பிழைக்கட்டுமென்று. "நேற்று சுல்தான் இப்ரஹிமுக்காக உழைத்தேன். இன்று அப்துல்லாவின் ஆணைப்படி நடந்தேன். நாளைக்கு அதே இப்ரஹிம் இட்ட கட்டளையை நிறைவேற்று வேன். ஆட்சிக்காக அரச குமாரர்கள் அவ்வப்போது சண்டையிட்டுக் கொண்டாலும் அடிமைகளாகிய எங்களுடைய விசுவாசத்தில் என்றுமே விரிசல் காண முடியாது" என்றான் முஸ்தபாகான். அவனது வாதம் நியாயமாகவே பட்டது ராமராயருக்கு. தோல்வியை ஒப்புக் கொண்ட எதிரியைக் கண்ணியமாக நடத்த வேண்டும் என்ற கொள்கை யுடையவர் அவர். ஆனால் அவர் அவனுக்காகப் பரிந்து பேசுமுன் பட்டாக் கத்தியொன்று அவன் உயிரைப் பறித்துக் கொண்டது. போர் வெறிச் செயல்களில் இது புதுமை இல்லை என்றாலும் ராமராயரின் உள்ளம் புண்பட்டுப் போயிற்று. புலியென உறுமி அந்த இழி செயலுக்குக் காரணமான உலுத்தர் கூட்டத்தை ஓட்டினார். சுத்த வீரனொருவன் ரத்த வெள்ளத்திலே துடிப்பதைக் காணச் சகியாமல் முஸ்தபாகானின் உடலில் பாய்ந்து நின்ற வாளை உருவி அவன் ஆவி அமைதியாகப் பிரிய உதவினார்.

கணவன் கொல்லப்பட்டான் என்ற செய்தி அறிந்த முஸ்தபாகானின் பேகம் சாஹிபா இந்த வேளையில்தானா அங்கு வரவேண்டும்? குருதி வெள்ளத்திலே கணவன், கையில் கறை படிந்த கத்தியோடு அந்நியன்! அதுவும் ஒரு ஹிந்து! 'அன்பரே!' என்று அலறியபடி கணவனின், மார்பிலே போய் விழுந்து விம்மினாள் பேகம் ஸாஹியா. என்ன செய்வது, எப்படித் தேற்றுவது என்று புரியாமல் ராமராயர் தவித்துக் கொண்டிருந்த போது, கணவனின் மார்பில் முகம் புதைத்துக் கதறிக் கொண்டிருந்தவள் தலை நிமிர்ந்தாள். 'அடப் பாவி' என்ற வார்த்தைகள் அவளிடமிருந்து வெளிப்பட்டன. அடுத்த விநாடி முஸ்தபாகானின் ஜீவனற்ற சடலத்தின் மீது மற்றோர் உயிரற்ற உடல் சரிந்தது. ஜனானாவை விட்டு வெளி வராதவள் ஓடி வந்தாள் கணவனைக் காண. மறுபடியும் அவள் அங்கு திரும்பவில்லை.

அப்போதுதான் அது நிகழ்ந்தது. தந்தையும் தாயும் பிணமாகிக் கிடப்பதைக் கண்டு செய்வதறியாது நடந்து விட்ட கோரத்தின் தன்மையைச் சரியாகப் புரிந்து கொள்ளக் கூடத் தெரியாத நிலையில், உடல் நடுங்க உள்ளம் புலம்பித் துடிக்கத் தேம்பியபடி நின்று கொண்டிருந்தாள் பதினைந்தே வயதான சிறுமி ஒருத்தி. இறந்தவர்களின் செல்வ மகள் அவள் என்பதைப் புரிந்து கொள்ள

ராமராயருக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. கையில் இருந்த வாளைக் கீழே வீசினார். அந்தக் குழந்தைக்கு நேர்ந்த துர்ப்பாக்கியத்தை எண்ணிய போது கலங்காத அவர் கண்களும் கலங்கின. அந்தப் பால் வடியும் முகத்திலே பயம் மூடிக் கொண்டிருப்பதைக் கண்டு வாய் மூடி மௌனியாக அவள் கரம் பற்றி ஆதரவோடு தம் பக்கலில் அழைத்தார். வெறுப்பை உமிழ்ந்தன அந்தச் சிறுமியின் கண்கள். கையை உதறிக் கொண்டு ஓட முயன்றாள். அந்த நிலையிலும் ராமராயர் அச்சிறுமியிடம் நடந்ததை விளக்கவோ, அவளுக்கு ஆறுதல் கூறவோ இல்லை. எந்தவிதமான ஆறுதலும் அந்த இளம் உள்ளத்து வேதனையைத் தணிக்க முடியாது என்பதை அறிவார் ராமராயர். தம்மால் இதைத் தடுக்க முடியாமல் போயிற்றே என்ற தாபத்தினால் அவர் நெஞ்சம் ரணமாக வலித்தது. தம் பிடியிலிருந்து திமிறிக் கொண்டிருந்த சிறுமியை அனுதாபத்தோடு ஒரு விநாடி பார்த்தார். அந்தப் பார்வையை அவர் முகத்தில் காண விரும்பாத அவள் அடங்கிப் போனாள். அவளைத் தம் கூடாரத்துக்கு அழைத்து வந்தார்.

ராமராயரைக் கண்டு, கணவனைக் கொன்ற காதகன் என்ற நினைவோடு கண் மூடினாள் ஒருத்தி. பெற்றோரைக் கொன்ற பாவி என்ற எண்ணத்தோடு அழுதபடி அவர் கூடாரத்திலேயே அமர்ந்திந்தாள் மற்றொருத்தி. போர்க் களத்திலே கைப்பற்றிய எதையுமே தமக்கென ஒதுக்கிக் கொள்ளாத உயரிய பண்புடையவரான ராமராயர் அந்தச் சிறுமியைத் தம்முடன் விஜயநகரத்துக்கே அழைத்து வந்தார். முஸ்லிம் இனத்தவளான அப்பெண்ணை ஆதில்ஷாவின் ஆதிக்கத்திலேயே விட்டு வந்திருக்கலாம். ஆனால் அவளிடம் ஏற்பட்ட ஏதோ ஓர் இனந்தெரியாத பரிவு, அந்தக் கபடமற்ற முகத்திலே கண்ட ஏதோ ஒரு கவர்ச்சி அவளைத் தம்முடனேயே அழைத்து வரும்படி செய்து விட்டது அவரை.

அரண்மனைவாசியான ஆயிஷா அரசர் சதாசிவராயரின் அந்தப்புரத்துக்கு அனுப்பப்பட்டாள். பிறகு...?

**நி**த்திரை வசப்படாத மகாமண்டலேசுவரர் மஞ்சத்திலே புரண்டார். 'அன்று வாய்விட்டு அழக்கூடத் தெரியாத சிறுமி இன்று என் முன்னே எத்தனை அழகாக வாதாடினாள்?' என்ற தம் நினைவின் இறுக்கத்தை நெடுமூச்சாக்கித் தணித்துக் கொண்டார் ராமராயர்.

இரண்டாவது ஜாமத்தை அறிவிக்கும் நகரா ஒலி எங்கோ தொலைவில் கேட்டது.

# 6

# ஈட்டி பாய்ந்தது

துங்கபத்திரையாற்றின் வடகரையிலே வரிசையாகப் பல கூடாரங்கள் அமைக்கப் பட்டிருந்தன. அவற்றினிடையே பிரதானமாக உயர்ந்து நின்றது ஒரு கூடாரம். ஒவ்வொரு கூடாரத்தின் வாசலிலும் பெரிய இரும்புக்கொப்பரை. இரவின் தொடக்கத்தில் தீவட்டிகளாகக் கொழுந்து விடு எரிந்து கொண்டிருந்த கட்டைகள் இப்போது அதில் கங்குகளாகக் கனிந்து கொண்டிருந்தன. அந்தப் பிராந்தியம் முழுவதிலுமே வெள்ளியை உருக்கி ஓடவிட்டதுபோல வெண்ணிலவு காய்ந்து கொண் டிருந்தது. கூடாரங்களின் உள்ளேயும் வெளியேயும் போர் வீரர்களும் அதிகாரிகளும் அவரவர் தகுதிக்கேற்ப உறங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு சிலர் பொங்கிச் சொரியும் பால் நிலவைப் பாழாக்க விரும்பாமல் ஆங்காங்கே தங்கள் ஆசை நாயகிகளுடன் நதிக்கரையின் மணல் பரப்பில் மயங்கிக் கிடந்தார்கள். குதிரைகள் கட்டப்பட்டிருந்த கூடாரங்களிலிருந்து எழும் கனைப்பொலி இரவின் ஆட்சிக்குக் கட்டியங் கூறுவது போல் இருந்தது.

விஜயநகரத்து மாமன்னரிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பிய பிஜப்பூர் சுல்தான் அலி ஆதில்ஷாதான் அங்கு அப்படிப் பாடி இறங்கியிருந்தார். அவ்வினிய இரவின் இரண்டாவது ஜாமத்திலும் ஆதில்ஷாவின் கூடாரத்தினுள் பிரகாசமான விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. பேச்சுக் குரலும் கேட்டது. கூடாரமா அது? அரண்மனையே இடம் பெயர்ந்து வந்திருப்பது போல் இருந்தது. அந்தக் கூடாரத்தினுள்ளே காணப்பட்ட பகட்டும் படாடோபமும். அரண்மனையின் அத்தனை வசதிகளும் அதனுள் இருந்தன. கூடாரமாகவே தெரியாதபடி விரிப்புக்களும் வேலைப்பாடமைந்த படுதாக்களும் அதை அலங்கரித்தன. நடுவிலே உயரமாகப் பல திண்டுகள் போடப் பட்டிருந்தன. அங்கு ஆடலும் பாடலும் அமர்க்களப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கான அடையாளங்கள் காணப்பட்டன. ஆடல் மங்கையர் பலர் ஆங்காங்கே களைத்துப் போர் உறங்கிக் கொண்டிருந்தனர் வாத்தியங்களைத் தழுவியபடியும் அதன் மீதே சாய்ந்தபடியும் சில மங்கையர் மயங்கிக் கிடந்தனர். தங்கள்

வனப்பால் வெறியூட்டியது போதாதென்று, விழித்திருந்து விவகாரம் பேசும் காளையருக்குக் கிண்ணங்களிலே மதுவையும் நிரப்பி வழங்கிக் கொண்டிருந்தார்கள் சில கட்டழகிகள்.

மது - மங்கையரின் போதையிலே மயங்கித் திண்டிலே சாய்ந்து அரைக்கண் மூடிய நிலையிலிருந்தும்கூட அடிக்கொரு தடவை, ஹுக்காவைப் புகைக்க மறக்க வில்லை அலி ஆதில்ஷா. மாபெரும் இந்து சாம்ராஜ்யத்தின் மன்னராக மதிக்கப்படுபவரைத் தன் தந்தையாக்கிக் கொண்டு திரும்புகிறோம் என்ற பெருமிதத்திலே இறுமாந்திருந்த அவர் நெஞ்சிலே நஞ்சூட்டலானார்கள் ஆதில்ஷாவின் முகமதியப் பிரபுக்களில் சிலர். ஆதில்ஷாவின் அவையை அலங்கரிக்கும் அவர்களுக்கு இந்துப் பேரரசோடு இழைவது ஏனோ பிடிக்கவில்லை.

"ஆலம்பனாவைத் தன் மகனாக்கிக் கொண்ட ராமராயர், அவர் விடை பெற்றபோது வழியனுப்ப வந்தாரா பார்த்தீர்களா?" என்றார் ஒருவர் தமது சாயமேற்றிய சிவப்புத் தாடியைத் தடவிக் கொண்டே மற்றவரிடம்.

"எல்லாம் வேஷம்! அந்தக் கிழட்டுப் புலி ஆதில்ஷா அவர்களுக்கு இப்படி ஆசை காட்டி இருப்பது என்ன மோசத்துக்கோ?" என்றார் மற்றவர் மதுவைச் சுவைத்துக் கொண்டே.

"நம்மை விடப் பரந்த சாம்ராஜ்யத்தை நிர்வகிக்கும் ராயருக்கு எத்தனையோ அலுவல்கள் இருக்கலாம். வழியனுப்ப வராததை ஒரு குற்றமாகக் கருதிக் குறை கூறுவது விரும்பத்தக்கதல்ல" என்றான் சித்திஹாஸன் தனது சிங்கக் குரலில். அபிசீனியா தேசத்தைச் சேர்ந்த அந்த அஞ்சா நெஞ்சம் படைத்த வீரன். அவன்தான் பீஜப்பூரின் பிரதம சேனாபதி. ஆதில்ஷாவின் அந்தரங்கத்துக்கு உரியவனும்கூட. "சேனாபதி விஜயநகரத்தின் புகழ் பாடட்டும். ஆனால் அதற்காக நம்மைத் தாழ்வுபடுத்திப் பேச வேண்டாம்" என்றார் தாடிக்காரர். ஏதோ பெரிதாகத் தன்மானத்தைக் காப்பாற்ற வந்தவரைப் போல. சித்திஹாஸனின் செல்வாக்கிலே என்றைக்கும் ஒரு பொறாமை அவருக்கு.

சித்திஹாஸன் பதில் சொல்லுமுன் ஹுக்காவிலிருந்து புகையை உறிஞ்சி விட்டு ஆதில்ஷாவே பேசலானார். "ஒருவர் காட்டும் அன்பைப் பற்றி ஆராய்ச்சி செய்வது அழகல்ல. சந்தேகக் கண்

கொண்டு பார்ப்பவர்களுக்கு எதிலுமே ஏதாவது கோளாறு தோன்றத்தான் செய்யும்.''

''சுல்தான் அவர்களுக்குத் தெரியாததல்ல. பீஜப்பூரின் பெயரைக் கேட்டாலே விஜயநகரத்தார் பீதியடைந்திருந்த காலமும் ஒன்று உண்டு. இன்றைக்கு நாம் அவர்களின் நட்பை நாடிப் போக வேண்டியதாகி விட்டதே என்றுதான்...''

தன் செயலையே குத்திக் காட்டும் அவருடைய பேச்சைப் புரிந்து கொண்ட ஆதில்ஷா அமைதியாகவே பேசினார். ''பழம் பெருமையை நினைத்துப் பேசுவதில் என்ன பலன்? என் தந்தைக்கு விஜயநகர மன்னர் உதவியிருக்காவிடில் இன்றைக்கு நான் பீஜப்பூரின் அரியணையிலே அலங்காரமாக வீற்றிருக்க முடியுமா? அன்றைக்கு என் தந்தைக்கு உதவினார். இன்று என் தந்தையாகவே ஆகி விட்டார்'' அலி ஆதில்ஷாவின் குரல் தழுதழுத்தது.

சுல்தானின் பேச்சும் போக்கும் அவையை அலங்கரிக்கும் முஸ்லிம் பெருமக்களுக்குப் பிடிக்கவே இல்லை. ஆனால் தங்கள் வெறுப்பை எப்படிக் காட்டிக் கொள்வது? சுல்தானோ இள வயதினர். எதிலும் பிடிவாதம் பிடிப்பது அவரது குணம். ஆகவே தங்கள் மனக் கசப்பை மதத்தின் பேரிலேற்றிக் காண்பித்தார்கள்.

''இஸ்லாத்தை இழிவு படுத்துவதற்காக அந்தக் காபிரி கையாளும் தந்திரம்தான் இந்த ஒட்டாத உறவு முறைகள். ஷாயன்ஷா இதில் மயங்கி விழ வேண்டாம் என்று தான்...'' என்றான் ஒருவன்.

அவன் முடிக்காமல் விழுங்கியதும் அடுத்தவன் தொடர்ந்தான். ''நம் இனத்தவருக்குச் சலுகைகள் காட்டிச் சமமாகப் பாவிப்பதாகக் கூறுவதெல்லாம், முஸ்லிம்களாகிய நாம் இந்துவாகிய அவரை வணங்க வேண்டும் என்பதற்காகத்தான்...'' என்று விவகாரத்திலே விஷத்தைக் கலக்கலானான்.

இதைக் கேட்ட ஆதில்ஷாவும் சித்திஹாஸனும் கலகல வென்று கண்களில் நீர் கசியச் சிரிக்கலானார்கள். ''முஸ்லிம் களுக்கு ராமராயர் தம் ஆட்சியில் பட்டமும் பதவிகளும் கொடுப்பது தம்மை வணங்கச் செய்வதற்காகா என்றா வாத மிடுகிறீர்கள்? முஸ்லிம்கள் வணங்குவது ராமராயரை அல்ல என்ற ரகசியம் உங்களுக்குத் தெரியுமா?''

''அப்படியானால்...?'' என்று அதிர்ச்சியடைந்தார்கள் அந்த முஸ்லிம் பெருமக்கள்.

"ராமராயர் தர்பாரில் இருக்கும் போது தம் பக்கலில் ஒரு அபழையை வைத்துக் கொண்டிருக்கிறாரே. அதாவது தெரியுமா?"

"கேள்விப்பட்டிருக்கிறோம். தங்கள் நாட்டின் செல்வச் சிறப்பை விளம்பரப்படுத்திக் கொள்வதற்காக, கண்டவர்களுக் கெல்லாம் பரிசில்களை வாரி வழங்குவதற்கான பொற் குவியல்களைக் கொண்ட பேழையாக இருக்கலாம் அது..."

"அதுதானில்லை... அதில் உள்ள ரகசியமே வேறு" என்று தம் தளபதி சித்திஹாஸனைப் பார்த்துப் பொருள் பொதிந்த புன்னகை யொன்றை மலர விட்டார் அலி ஆதில்ஷா.

விவகாரம் பேசியவர்கள் விழித்தார்கள்.

அந்த ரகசியத்தைச் சித்திஹாஸனே அவர்களுக்கு விளங்க வைக்கட்டும் என்றுதானோ என்னவோ ஆதில்ஷா மறுபடியும் ஹூக்காவின் புகையை ரசிக்கலானார்.

மன்னரின் மனத்தைப் புரிந்து கொண்ட சித்திஹாஸன், "விஜயநகர வேந்தர் காபிரியானாலும் இஸ்லாத்தை இழிவுபடுத்த வேண்டும் என்ற இழி குணம் படைத்தவரல்லர். தமது தலைமையை ஒப்புக் கொண்டு தம்மிடம் சேவகம் செய்ய வரும் முகம்மதியர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தக் கூடாதென்பதில் அக்கறை கொண்டுள்ளவர் ராமராயர். தமக்கு வணக்கம் செலுத்த வரும் முஸல்மான்கள் ஒரு ஹிந்துவுக்குத் தலை தாழ்த்துவதா என்று முகம் சுங்கக் கூடாதென்பதற்காகவே நமது புனித வேதமான திருக் குர்ரானின் ஒரு பிரதியைத் தம் அருகில் உள்ள அந்தப் பேழையில் வைத்திருக்கிறார். நம் இனத்தவர் வணங்குவது இந்து மன்னரான ராமராயரையல்ல; நபிகள் நாயகம் நமக்களித்துச் சென்றுள்ள பொக்கிஷத்துக்குத்தான்!' என்று அதிசயப்பட்டார்கள். 'அப்படித்தான்' என்பதை ஆதில்ஷாவே அறுதியிட்டு உறுதியாக்கிய போது அவர்களுக்கு மேலே பேசுவதற்கு ஏதுமில்லாமல் போயிற்று. ஏதோ எண்ணத்துடன், ராமராயரின் செய்கையை விமர்சிக்கப் புகுந்தவர்கள் ஏமாற்றமடைந்து போனார்கள்.

இரவு வெகு நேரமாகி விட்டது என்பதைத் தனது கொட்டாவியால் நினைவு படுத்தினான் சித்திஹாஸன்.

எழுந்திருந்தார் ஆதில்ஷா. தமது ஏகாந்தமான இடத்துக்குப் போக அடியெடுத்து வைத்த போது நிலை தடுமாறினார். அது

மதுவின் மயக்கத்தினாலல்ல. ஏனென்றால் சுல்தான் அன்று அதை அதிகமாகச் சுவைக்கவில்லை. உடலின் அசதியோடு உறக்கம் வேறு அவர் கண்ணிமைகளைக் கனக்க வைத்திருந்தது. கட்டிளங் கன்னியர் இருவரின் கைத்தாங்கலில் கண்ணயரச் சென்றார் பீஜப்பூர் சுல்தான்.

ஆடிக் களைத்து ஆழ்ந்த நித்திரையிலே அலமந்து கிடந்த ஆடல் மங்கையரை ஆளுக்கொருவராக அள்ளி அணைத்தபடி வெளியேறினார்கள் - இத்தனை நேரம் ஆதில்ஷாவுடன் அமர்ந்து உரையாடிய பிரபுக்கள். இப்போது அந்தக் கூடாரத்திலே சித்திஹாஸன் மட்டுமே இருந்தான். இல்லை - இத்தனை நேரம் அவர்களின் மதுக் கோப்பைகளை நிறைக்கும் பணியைச் செய்து கொண்டிருந்த அந்தச் சுந்தரியும் கூட இருந்தாள்.

கருங் குன்றைப் போன்ற உடலும் கம்பீரமான தோற்றமும் கொண்ட பீஜப்பூரின் பிரதம சேனாபதியான சித்திஹாஸன் சிந்தனையிலே மூழ்கிக் கிடந்தான். கூடாரத்தினள் எரிந்து கொண் டிருந்த பிரகாசமான விளக்குகளையெல்லாம் அணைத்தபின் மயக்கத்தைத் தரும் மங்கலான ஒளியை மட்டும் நிறுத்தி விட்டுத் தளபதியின் அருகே உரிமையோடு வந்து ஒயிலாக அமர்ந்து கொண்டாள் அவள். நீண்டு கிடந்த அவனது இடக்கரத்து இடைவெளிக்குள்ளே புகுந்து நெளிந்தவள், தனது மென் கரத்தால் அவனது நெற்றியை இதமாக வருடலானாள். தன் பட்டு உடலில் ஸ்பரிசம் பட்டு அந்தக் கல்லுடல் கலகலத்துப் போகும் என்று எண்ணினாள். விழுது போல விரிந்து கிடந்த கரம் லலிதமாகத் தன் இடையைச் சுற்றி வளைக்கும் என்று எதிர்பார்த்தவள் ஏமாந்துதான் போனாள். அந்த மதுமதியாளின் மயக்குவிழிகளைப் பாராமலே 'இதிலே மதுவை நிரப்பு' என்று கட்டளையிடுவது போல அவனது வலக்கரத்திலிருந்த பொற் கிண்ணம் அந்தப் பெண்ணின் முகத்துக்கு முன்னே நீண்டது. பழச்சாறு நிறைந்த பாத்திரமோ அவனது வலப் பக்கத்திலேதான் இருந்தது. ஆனாலும் அந்தச் சாகஸக்காரி தன் நிலையிலிருந்து நகராமல் அவன் மார்பின் மீது தவழ்ந்தபடியே அந்தக் காடி நிறைந்த குடுவையை எட்டி எடுத்தாள். அவன் நீட்டிய கோப்பையிலே மதுவை நிறைத்தாள். இந்தச் செயலுக்காகச் சினந்து அவளை உதறவில்லை அவன். இதனால் அவனிடம் புது விதமான சலனமெதுவும் ஏற்பட்டு விடவுமில்லை.

இரவு அத்தனை நேரத்துக்கு மேலான போதும்கூட அயர்வு அவனை அழுத்தவில்லை. அவனைச் சிந்தனை அப்படி ஆட்கொண்டிருந்தது. அடுத்தடுத்து நீண்ட கோப்பைகளை நிரப்பிக் கொண்டிருந்தாள் குமரி. இடையிடையே அவளையும் ருசிக்கச் செய்தான் அவன். அமைதியான இரவின் அந்த நேரத்திலே தனிமையும், மௌனமும், மதுவின் போதையும் மெள்ள மெள்ள அவளைத் தன் நினைவிழக்கச் செய்தன. வடாரத்தில் மெல்லொளி பரப்பிக் கொண்டிருந்த ஓரிரு விளக்குகளும் கூட அயர்வின் மிகுதியால் அணைந்து விட்டன. வெளியே காய்ந்து கொண்டிருந்த நிலவின் நிழல்தான் இப்போது கூடாரத்தினுள் வெண்புகையாகப் படிந்திருந்தது. இத்தனை குடித்தும்கூட அந்த அபிசீனியன் தன் நினைவிழக்கவில்லை. அத்தகைய உருக்கு உடலையும் உரம் பெற்ற உள்ளத்தையும் கொண்டவன் அவன். தனது பரந்த மார்பிலே துவண்டு தூங்கிக் கொண்டிருக்கும் அந்தப் பணிப் பெண்ணை மெல்ல நகர்த்தித் திண்டிலே கிடத்தி விட்டுக் கூடாரத்துக்கு வெளியே வந்தான் சித்திஹாஸன்.

அயர்ந்து தூங்கும் அழகியின் சுகமான சுவாசத்தைப் போல, உறங்கும் துங்கபத்திரை சீரான மெல்லொலி எழுப்பி ஓடிக் கொண்டிருந்தது. சற்று நேரம் அதன் கரையில் நின்று அதை ரசித்தபின் தனது கூடாரத்துக்கு வந்தான் சித்தி ஹாஸன். நிலவின் ஒளி தேய்ந்து கொண்டிருந்தது. இரவு விலகும் அந்த வேளையில் அந்தப் பிராந்தியத்தையே நடுங்க வைக்கும்படி நான்கு குதிரைகள் பாய்ந்து வந்தன. குறிப்பிட்ட கூடாரத்தின் முன்னே வந்ததும் அவற்றின் லகானைப் பிடித்திழுத்தனர் குதிரைகளின் மீது வீற்றிருந்த வீரர்கள். குதிரைகள் தங்கள் குளம்புகளைப் பூமியில் பதித்து நிற்பதற்குள் அவர்கள் கீழே குதித்தார்கள். எத்தனை வேகமாக வந்திருக்கிறார்கள் என்பதைக் குதிரைகளின் மீது வழிந்து கொண்டிருந்த வியர்வை வெள்ளம் கூறாமல் கூறியது.

அசதி எனும் போர்வையினுள் கண்மூடிக் கண்ணயரப் போன சித்திஹாஸன் குதிரைகளின் குளம்பொலி கேட்டதும் அந்தப் போர்வையைக் கழற்றி எறிந்து விட்டு வெளியே வந்தான். அமைதியான இரவிலே, இனிமையான தூக்கத்தை அநுபவித்துக் கொண்டிருந்த பலரும் பரபரப்புடன் உறக்கத்தை உதவி விட்டு ஓடி வந்தார்கள்.

ஒளி படரும் வேளையாயினும் அந்தப் பிரதான கூடாரத்தினுள் காலைக் கருக்கலின் இருள் கனத்துக் கிடந்தது. பணியாளர்கள் மடமடவென்று விளக்குகளை ஏற்றிக் கூடாரத்தினுள் ஒளி உண்டாக்கினார்கள். ஆதில்ஷாவின் வரவை எதிர்பார்த்து, இரைக்கும் மூச்சையும் இழுத்துப் பிடித்துக் கொண்டு நின்றிருந்தார்கள் குதிரைகளில் வந்தவர்கள். சித்திஹாஸன் உள்ளே நழைந்த அதே வேளையில், சரியாகத் தூக்கம் கலையாத சுல்தானும் வேறுபுறமாக உள்ளே புகுந்தார்.

தம்மைக் காணக் காத்திருப்பவர்களைக் கண்டதும் ஆதில்ஷா சவுக்கடி பட்டவர் போலத் துடித்துப் போனார். "நீங்களா? இந்தக் கோலத்திலேயா?" என்ற அவரது உடல் பதறியது. கண்களில் கனல் பறந்தது.

ஆம், அவர்களேதான்! யாரை அகமது நகரின் நட்பை நாடித் தூதாக அனுப்பி இருந்தாரோ அவர்களேதான் அப்படி அலங்கோலமான நிலையிலே விரட்டப்பட்டிருந்தார்கள். கிழிந்த ஆடையும் கீழ் நோக்கிய தலையுமாக நிற்கும் தமது தூதுவர் களைக் கண்டபோது ஆதில்ஷாவின் உடல் அவமானத்தினால் குன்றியது. ஹுஸைன் நிஜாம் ஷாவின் நட்பையும் ஒற்றுமையையும் விரும்பி அலி ஆதில் ஷா அனுப்பி வைத்த அன்புக் கடிதத்தைத் திரும்பக் கொண்டு வந்திருந்த தூதுவர்கள் நடுங்கும் கரங்களுடன் அதைப் பிரித்துக் காண்பித்தனர். அகமது நகர் அவையிலே அதற்கு எளத்தனை அவமதிப்புக் கிடைத்திருக்கிறது என்பதைக் கண்டார் அலி ஆதில்ஷா அவர்கள். பீஜப்பூர் சுல்தானின் இதயத்தைக் கிழிப்பது போல அவர் எழுதியிருந்த லிகிதத்தை வாளால் குத்திக் கிழித்திருந்தார் அகம்பாவம் பிடித்த அகமதுநகர் நிஜாம்ஷா. அண்டை நாட்டுடன் சண்டையைத் தவிர்ப்பதற்காகச் சன்னதுகள் அனுப்பிச் சமாதானத்தை விரும்பிய ஆதில்ஷா தம் பொக்கிஷத்திலிருந்து விலைமதிப்பற்ற அணிமணிகளை அள்ளி ஒரு பேழையிலே அடைத்து அதை அகமதுநகர் சுல்தானுக்குத் தம் நட்பின் அடையாளமாக அனுப்பியிருந்தார். மென்மையின் தன்மை அறியாத வெறியனின் கையில் சிக்கிய பெண்ணைப் போலக் கலகலத்து நிலைகுலைந்த அந்தப் பேழை தன்னைப் பெருமையோடு அனுயீபய ஆதில்ஷாவிடம் தான்பட்ட சிறுமையைச் சொல்லி அழுவதற்காக இப்போது அவர் முன்னே வாய் பிளந்து கிடந்தது. ஒளி சிந்தி ஒய்யாரமாக விளங்கிய அணிமணிகளும் பொன்னாபரணங்களும்

இப்போது அதில் புயலிடைப்பட்ட பசுங்கொடியெனச் சின்னா பின்னமாகிக் கிடந்தன.

குரல் கம்மக் கண்ணீர் மல்கக் கூறினார்கள் தூதுவர்கள்: "தாங்கள் அனுப்பிய அன்புக் கடிதத்தை அலட்சியமாகப் பறித்துக் கத்தியால் குத்திக் கிழித்துக் கொக்கரித்தான். இப்பேழையை எட்டிக் காலால் உதைத்து எள்ளி நகையாடினான். ஏதேதோ பேசினான் அந்த ஆணவக்காரன். அந்த இழிமொழிகளை இன்னொரு தடவை உங்கள் முன் விவரிக்க எங்கள் நாக் கூசுகிறது நட்பைத் தேடி வரும் நல்லெண்ணத்துடன் தாங்கள் எங்களை அனுப்பியிருக்கிறீர்கள்; அதை நாசமாக்கிக் கொண்டு வரக்கூடாதே என்று நாங்கள் பேசாமல் வந்தோம். இல்லாவிடில்... ஆதில்ஷாவை அவமரியாதையாகப் பேசிய அகமதுநகரானின் ஆவியை எங்கள் குத்துவாள் அந்தக் கணமே குடித்திருக்கும்!" குமுறினார்கள்.

கூடாரத்தினுள் - அவையில் வந்து கூடி இருந்த யாருமே பேசவில்லை. அப்படிப் பேசா நிலைக்கு அவர்களே ஆக்கி இருந்தது தூதுவர்கள் விவரித்த செய்தி. ஆனால் அங்குள்ள ஒவ்வொரு வீரனின் ரத்தமும் 'பழிக்குப் பழி' என்றுதான் கொக்கரித்துக் கொண்டிருந்தது. ஆதில்ஷாவோ பார்வைக்கு அமைதியாகக் காணப்பட்டார். அந்த நிலையில் அவர்கள் தங்கள் ஆத்திரத்தைக் காட்டிப் படபடக்கப் பயந்தார்கள். சித்திஹாஸனோ தினவெடுத்த தன் கரங்களைக் கசக்கிக் கொண்டிருந்தான், கட்டுண்ட மதயானையைப் போல. மன்னரின் ஒரு பார்வை, ஒரு வார்த்தை போதும் அவனுக்கு, அகமது நகரை அழித்துவிட்டுத் திரும்புவதற்கு.

எதுவுமே எல்லை மீறிப் போகும்போது செயலிழந்த நிலையில் கிடந்து தவிப்பது மனித சுபாவம். ஆத்திரத்தின் எல்லை மீறிப் போன நிலையில் ஆதில்ஷா பேசாப் பதுமையாகிப் போனதில் வியப்பில்லை.

"பழைய பகைமையை மறந்து நான் அந்த அல்பனின் நட்பை நாடியது என் தவறுதான். மன்னர்கள் எதையும் மறந்துவிடக் கூடாது. மன்னர்களும் மனிதர்கள்தானே என்று அன்பை நாடினேன் பண்பில்லாதவனிடம். சரியான பாடம் கிடைத்து விட்டது..." நிதானமிழக்காமலே பேசினார் அலி ஆதில்ஷா.

"நட்புத் தூதனுப்பிய நம்மைக் கோழை என்று தப்புக் கணக்குப் போட்டு விட்டார் போலிருக்கிறது நிஜாம்ஷா அவர்கள்!" பயங்கரமாகச் சிரித்தான் சித்திஹாஸன். சிரிப்பா அது? சினத்தின் நெருப்பு.

தூங்கி எழுந்த துங்கபத்திரை இரு கரையும் முழுக ஓடும் தன் உடலைச் சிலிர்த்துக் கொண்டபோது புள்ளினங்கள் கூடுகளிலிருந்து சிறகடித்துப் பறந்தன. இனிமையான இரவின் அமைதியான உறக்கத்தை எண்ணிய அந்தச் சுகானுபவத்திலே அவள் சுந்தர வதனத்தில் முறுவல் படர்ந்தபோது கீழ் வானத்திலே தகதகத்துக் கொண்டு தலை நீட்டினான் ஆதவன். பத்திரையின் வடகரையில் இருந்த கூடாரங்கள் பெயர்க்கப்பட்டு. கிளம்புவதற்குத் தயாராக இருந்த குதிரைகளின் குளம்புகள் பூமியைக் கிளறிக் கிளம்பிய புழுதியினால் வானத்தில் செம்மை படர்ந்தது - அவமானத்தினால் சிவந்திருந்த ஆதில்ஷாவின் முகத்தைப் போல.

கவசமணிந்த இரண்டு குதிரை வீரர்கள் அகமதுநகரை நோக்கி ஆக்ரோஷத்துடன் கிளம்பினார்கள். அவர்களிடம் ஆதில்ஷாவின் முத்திரை பதித்த கடிதமொன்று இருந்தது. 'பீஜப்பூரின் உரிமையான கலியாண் ஷோலாப்பூர் ஆகிய கோட்டைகளை உடனே ஆதில்ஷாவுக்குச் சொந்தமாக்க வேண்டியது; இல்லாவிடில் அதனால் ஏற்படும் விபரீத விளைவுகளை வரவேற்கத் தயாராக இருக்க வேண்டியது' என்று எச்சரிக்கை விடுத்திருந்தார் அலி அவர்கள். கர்வங்கொண்ட ஹுஸைன் காரணமின்றிப் பீஜப்பூரின் நட்பை உதவி உதாசீனம் செய்தாலும் அதுபோலத் தாமும் நடந்துகொள்ள விரும்பவில்லை ஆதில்ஷா. ஆகவே கைமாறிப்போன கோட்டைகளைக் கைக்கொள்ள விரும்பித் தாக்கீது அனுப்பித் தாக்குதலுக்குத் தயாரானார்.

தம் பலம் அறிந்தவர் ஆதில்ஷா. அகமது நகரைத் தனித்து நின்று தாக்குவதென்பது பகற்கனவு என்பதை உணராதவரா என்ன? தன் செயலின் பின் விளைவைப் பற்றி அறிந்தே தான் அகமது நகர் இத்தகைய இழி செயலைச் செய்திருக்கிறது. அப்படி யிருக்கத் தம் பலத்தை மட்டும் நம்பித் தாக்குதல் நடத்தித் தோல்வியைச் சூடிக் கொள்ள விரும்பவில்லை பீஜப்பூர்.

முதல் நாள் மாலை விடைபெற்று வந்தவரிடமே மறுநாள் காலை உதவி கேட்டுப் போய் நின்றான் சித்திஹாஸன். 'தங்கள் மகனுக்கு நேர்ந்துள்ள அவமானத்தைத் துடைப்பது தந்தையாகிய தங்கள் கடமை' என்று அலி ஆதில்ஷாவின் 'தந்தை'யான ராமராயரிடம் நிலைமையை விளக்கினான். உறவுமுறையைக் கூறாவிட்டாலும்கூட வலிய வந்து உதவக் கூடியவர்தான் ராமராயர்.

இப்போது இணக்கம் தெரிவிக்கக் கேட்கவா வேண்டும்? தாமே தமது பெரும் படையுடன் அகமது நகரின் ஆணவத்தை அடக்க வருவதாக ஒப்புக் கொண்டார்.

அகமதுநகரை அடைந்த அந்த இரு வீரர்களும் தங்கள் குதிரைகளிலிருந்த கீழே இறங்கவே இல்லை. வெறி கொண்ட அக்குதிரைகளை அப்படியே நேரே அகமது நகரின் அரண்மனையை நோக்கி விரட்டினார்கள். இடி முழக்கம் போலத் தாவி வரும் குதிரைகளைத் தடுத்து நிறுத்த முயன்ற காவல் வீரர்களைத் தம் வாள் வீச்சால் ஒதுங்கி ஓடும்படி செய்தவர்கள் அரசவையில் போய்த்தான் அவற்றை அடக்கி நிறுத்தினார்கள். ஹுசைன் நிஜாம்ஷா தம் அரசாங்க அதிகாரிகள் சூழ அமர்ந்திருந்தார். திடீரென்று புகுந்த அவ்விரு குதிரை வீரர்களும் அங்கும் கூடக் கீழிறங்கவில்லை. நுரைதள்ளி நிற்கும் குதிரைகளை இழுத்துப் பிடித்த போது அந்த மிருகங்கள் நிலை கொள்ளத் தங்கள் பின்னங்கால்களை ஊன்றி முன்னங்கால்களைத் தூக்கி உடலை உயர்த்திக் கனைத்துக் கலகலத்போது அவற்றின் மேலிருந்த வீரர்கள் தங்கள் கையிலிருந்த ஈட்டிகளை உயர்த்தினார்கள். அந்த ஒரு கணம் நிஜாம்ஷா பிரமித்தே போனார். இத்தனை கட்டுக் காவல்களையும் மீறி உள்ளே புகுந்து தம் மீது வேல் பாய்ச்சிக் கொள்ள வந்திருக்கும் வீரர்கள் பீஜப்பூர்க்காரர்கள் என்பதை அவர் அறிந்து கொள்ளுவதற்குள் அவ்விரு வீரர்களின் ஈட்டிகளும் விர்ரென்று பாய்ந்த வந்து சுல்தானின் முன்னே தரையில் பாய்ந்தன. அந்த இரண்டு ஈட்டிகளில் ஒன்றில் ஆதில்ஷாவின் எச்சரிக்கை கடிதம் கட்டப்பட்டிருந்தது. நட்புக் கடிதத்தை வாங்கிக் கிழித்து நக்கல் செய்த நிஜாம் ஷாவை மதித்துக் கடிதத்தை அவர் கையில் கொடுக்க விரும்பவில்லை வீரர்கள். பதில் பெறவும் அங்கு காத்திருக்கவில்லை. அவையினரின் திகைப்பு நீங்குவதற்குள் அவ்விரு சூரர்களும் தங்கள் குதிரையைத் திருப்பிக் கொண்டு உள்ளே புகுந்த அதே வேகத்தில் வெளியேறினார்கள் - சூறாவளியைப் போல!

இத்தனையும் விளக்குவதற்குத்தான் நேரமாயிற்றே தவிர நடந்ததோ சில விநாடிகளில். அதிர்ச்சி நீங்கிய அகமதுநகர் வீரர்கள் ‘பிடி பிடி’ என்று பரபரத்தார்கள். வேறு பல குதிரைகள் அவர்களைத் தொடர்ந்தன. ஆனால் வில்லிலிருந்து கிளம்பிய அம்புகளைப் போல அவ்விரு வீரர்களும் வாளைச் சுழற்றியபடி வழி உண்டாக்கிக் கொண்டு வெளியேறிப் பறந்து விட்டார்கள்.

தரையிலே பாய்ந்து நின்ற ஈட்டிகள் தம் நெஞ்சிலே பாய்ந்ததைப் போன்ற உணர்விலே செயலிழந்து போய் உட்கார்ந்திருந்தார் ஹுசைன் நிஜாம்ஷா. மின்னலைப் போலத் தோன்றி மறைந்த அந்த வீரர்களின் சாகஸம் அவரை வியப்பில் ஆழ்த்தியிருந்தது. அதற்குள் ஈட்டி தாங்கி நின்ற ஆதில்ஷாவின் அறிவிப்பை அவிழ்த்துக் கொண்டு வந்து நிஜாம் ஷாவின் முன்னே நீட்டினான் ஒரு வீரன். அதைக் கையில் வாங்கிக் கொண்ட ஹுசைனின் கவனம் அதில் லயிக்கவேயில்லை. அவருக்குத் தெரியாத புதிய விஷயமெதுவும் அதில் எழுதியிருக்கப் போவதில்லையே! குத்திட்டு நின்ற இரு ஈட்டிகளும் வகுத்துக் கொடுத்த இடைவெளியிலே லயித்திருந்த அவரது பார்வையில், தூரத்தில் தம்மை நோக்கி வரும் ஓர் உருவம் கலப்பதை உணர்ந்தார். அவரது கண்கள் பிரகாசமடைந்தன.

## 7

# பணிந்துவிட்ட பகையரசன்

**வெ**ற்றி வாகை சூடிய படைகள் மகிழ்ச்சி வெள்ளத்திலே மிதந்து கொண்டிருந்தன. பட்டபாட்டுக்குப் பலன் கிடைத்த ஆனந்தத்திலே ஆடலும் பாடலும் அந்தப் படையணியிலே திமிலோகப்பட்டுக் கொண்டிருந்தன. படுகாயமுற்றுப் படுத்த படுக்கையாகக் கிடந்த போர் வீரன்கூட நிமிர்ந்து உட்கார்ந்து நிம்மதிப் பெருமூச்சுடன் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தான். இப்போரில் காலிழந்த வீரன் தங்கள் படை கண்ட வெற்றிக்குப் பின் தனக்கேற்பட்ட ஊனத்தைக் கூடப் பெரிதாக மதிக்கவில்லை. கையிழந்த வீரனோ இனி கட்டாரி பிடித்துக் களத்திலே சாகஸங்கள் புரிய முடியாதே என்று வருந்தினாலும் அன்றையக் கோலாகலத்திலே தனக்குற்ற குறையை மறந்து விட்டான்.

பகைவர்களைப் புறங் கொண்ட படைகள் வெள்ளமெனப் பரந்து கிடந்தன அந்தப் பகுதியிலே. வரிசை வரிசையான கூடாரங்களும், பலதிறப்பட்ட போர் வீரர்களும், எண்ணி மாளாத குதிரைகளும்,

யானைகளும் கோவேறு கழுதைகளுமாகப் புதிதாக நிர்மாணிக்கப் பட்டதொரு நகரம் போலவே காட்சியளித்தது அந்தப் பிரதேசம். படை வீரர்களின் தேவைகளை அறிந்து அதற்கேற்ற பல பொருள்களைக் கொண்ட அங்காடியும் இந்தப் படையணிகளி னிடையிடையே காட்சியளித்தன.

அகம்பாவத்தினால் அழிவைத் தேடிக் கொண்ட அரசன் தன் தோல்வியை ஒப்புக் கொண்டு, முற்றுகையிலே முறியடிக் கப்பட்டு வீழ்ந்த கோட்டையை வெற்றிகொண்ட மன்னரின் காணிக்கை யாக்குவதன் அடையாளமாக, அக்கோட்டை வாயிலின் சாவிகளைக் கொண்டு வந்த அவரது காலடியிலே சமர்ப்பித்து விட்டு அவரது நட்பை விரும்பிப் பெறும் அடையாளமாக அவரிடமிருந்து தாம்பூலம் பெற்றுச் செல்வதற்காக வரவிருந்தான். அப்படி வரப்போகும் அரசனை வரவேற்பதற்கான ஏற்பாடுகளில் படையணியின் ஒரு பகுதி ஈடுபட்டிருந்தது. தோல்வியிலே துவண்ட உள்ளத்தவனாக வரும் சுல்தானை, உரிய மரியாதைகளுடன் வரவேற்க வேண்டும் என்று திட்டமிட்டிருந்தார் வெற்றி கண்டவர்.

இந்தப் போருக்குக் காரணமான, பணிந்து விட்ட பகையரசனை வரவேற்பதற்கென்றே பாசறையின் நடுவிலே பாங்கானதொரு மேடை அமைத்திருந்தார்கள். மண்டபத்தைப் போல கால்கள் அமைத்துக் கூடாரத்தைப் போலத் திரைச் சீலைகளை விரித்து அலங்கரித்திருந்த அந்தப் பெரிய விதானத்தினுள்ளே வீரர்களும் விருந்தாளிகளுமாக ஓராயிரம் போர்கள் தங்கலாம். அத்தனை விஸ்தாரமான அமைப்பு அது. அதன் நடுவே பிரதானமான தோர் இடத்திலேதான் கோட்டையைக் காணிக்கையாகக் கொடுக்கும் அந்த நிகழ்ச்சி நடக்கவிருந்தது. கூடாரத்துக்கு வெளியே பணிய வரும் அரசனுக்கு வழியெல்லாம் வரிசையாக அணிவகுத்து நின்று, பராக் கொடுக்க வேண்டுமென்பதும் ஏற்பாடு.

இத்தனை ஆரவாரங்களுக்கும் காரணமான வெற்றி பெற்றவர் யார்? தோல்வியுற்றவர் யார்?

தமது தூதுவர்களை உதாசீனப்படுத்தி ஓட்டிய அகமதுநகர் சுல்தானைப் பழிவாங்க வேண்டும் என்று படையெடுத்தார் பீஜப்பூர் சுல்தான் அலி ஆதில்ஷா. ஒரு காலத்தில் தங்கள் உடைமையாக இருந்த கலியாண், ஷோலாப்பூர் ஆகிய கோட்டைகளை அகமது நகரிடமிருந்து திரும்பக் கேட்டுச் சண்டையைத் தொடங்கினார் அவர்.

அகமதுநகர் அத்தனை சுலபத்தில் தான் அனுபவித்து வரும் பகுதிகளைக் கொடுத்து விட்டுப் பணிந்துவிடுமா? 'மாபெரும் ஹிந்து சாம்ராஜ்யமான விஜயநகரின் அன்பையும் நட்பையும் பெற்றுவிட்டார் ஆதில்ஷா; மகனுக்கு நேர்ந்த அவமானத்தைத் துடைக்கத் தமது படைகளுடன் உதவிக்கு வருகிறார் சாகஸக்காரர் ராமராயர்' என்ற விஷயங்களை யெல்லாம் தமது ஒற்றர்கள் மூலம் அறிந்தும் கூட அகமதுநகர் நிஜாம் அசைந்து கொடுக்கவில்லை. தம்முடைய அண்டை நாட்டுடன் பலப் பரீட்சை செய்து பார்த்து விடவே விரும்பினார் அவர்.

விஜயநகரம், பீஜப்பூர், அகமதுநகர், கோல்கொண்டா ஆகிய நான்கு ராஜ்யங்களும் ஒன்றை யொன்று தாக்காமல் நட்போடு இருக்க வேண்டு மென்றும், அத்துமீறித் தாக்குதல் நடக்குமானால் ஒன்றுக்கொன்று உதவி செய்ய வேண்டுமென்றும் ஒரு சமயம் ராமராயர் பாமினி சுல்தான்களோடு கூட்டு நேசப் பொறுப்பு ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தார். அதன்படி அகமதுநகரின் மீது தாக்குதல் நடத்த இப்போது கோல்கொண்ட ஒத்துழைக்க வேண்டுமென்று தாக்கீது அனுப்பினார் ராமராயர். கோல்கொண்டாவின் சுல்தானான இப்ரஹிம் குதப்ஷாவுக்கு பீஜப்பூருடன் சேர்ந்து கொண்டு அகமதுநகரைத் தாக்குவதில் விருப்பமே இல்லை. இருந்தாலும் ராமராயர் கூட்டு நேசப் பொறுப்பு ஒப்பந்தத்தைச் சுட்டிக்காட்டி வற்புறுத்தவே அரை மனத்தோடு தாக்குதலில் கலந்து கொண்டார்.

குதப்ஷாவின் இந்த மனப் போக்குக்குக் காரணங்களில் லாமலில்லை. விஜயநகரப் பேரரசின் பிரதிநிதியாகிய சர்வ வல்லமை வாய்ந்த ராமராயரின் நட்பும், அன்பும் ஆதரவும் தனக்கே உரியதென்ற எண்ணத்தில் இருந்தவர் இப்ரஹிம். கோல்கொண்டாவின் அரசியல் வாழ்விலே ராமராயரின் ஆதிநாளைய வாழ்க்கை பிணைக்கப்பட்டிருந்ததோடு, தன் அண்ணா ஜம்ஷிட்டின் ஆட்சியிலே தான் உயிருக்குப் பயந்து நாட்டை விட்டு ஓடிவந்த சமயம் ராமராயர் விஜயநகரத்திலே தனக்கு அடைக்கலம் அளித்து ஆதரவு தந்ததையும் மறந்துவிடவில்லை. ராமராயரின் அன்பை அலி ஆதில்ஷா பறித்துக் கொண்டதாக அவரிடம் ஒரு பொறாமையே ஏற்பட்டிருந்தது குதப்ஷாவுக்கு. ராமராயர் ஆதில்ஷாவைத் தம் அன்பு மகனாக வரித்துக் கொண்ட பிறகு ராமராயரிடம் எதையும் விரும்பிப் பெறும் உரிமை தனக்கே உரியது என்று தான் தப்புக் கணக்குப் போட்டு

விட்டதாக ஓர் எண்ணம் தோன்றியது இப்ரஹிமுக்கு. இதை வளர்ப்பதே போல் முற்றுகையின்போது நடந்த சில நிகழ்ச்சிகளும் இருந்தன. பிளவுபட்ட மனப்பான்மை கொண்ட குதப்ஷா எதையும் பிரித்துக் காணலானார். ராமராயரின் ஒவ்வொரு செய்கைக்கும் ஏதோ காரணமிருப்பதாகக் கற்பனை செய்யலாயிற்று அவரது உள்ளம். மாற்றாந் தாயின் அன்பிலே மாசு காணும் குழந்தையின் மன நிலையிலே குழம்பினார் குதப்ஷா. ஆகவே அகமதுநகர் முற்றுகையிலே அவரால் முழு மனத்தோடு ஈடுபட முடியவில்லை. பீஜப்பூர் சுல்தானுடன் விஜயநகரத்து ராயர் அளவளாவும் போதெல்லாம் ஆத்திரம் கொண்டார் கோல்கொண் டாவின் குதப்ஷா. அகமதுநகரை அடக்கி ஒடுக்குவதற்குத் தன்னை அவர்கள் கருவியாகப் பயன்படுத்துகிறார்கள் என்ற எண்ணம் வளர்ந்து விட்ட பிறகு முற்றுகை சம்பந்தமாக ராமராயரோ ஆதில்ஷாவோ எது கூறினாலும் தமக்கு அவர்கள் கட்டளை இடுவதாக எண்ணிக் குமையலானார்.

இவ்வளவுக்கும் மேலாக, அகமதுநகர் நிஜாம்ஷாவின் அருமை மகள் கோல்கொண்டா சுல்தானின் உள்ளத்திலே இடம் பெற்றிருந்தாள். தனது வருங்கால மாமனாரைப் பகைத்துக் கொள்ள எந்த மாப்பிள்ளைக்குத்தான் மனம் வரும்? ஆகவே தான் களம் புகுந்தும் ஒப்பந்தப்படி ஒத்துழைக்கவில்லை. அதுமட்டுமல்ல. அகமது நகர்ப் படைத் தலைவர்களுக்கு உளவுகள் கூறி உதவலானார் குதப்ஷா. இதனால் முற்றுகை நீடிக்கலாயிற்று. கூட்டணிப் படைகளின் முன்னால் தோற்றோட வேண்டியவர்கள் கோட்டையைக் கட்டிக் காத்து நின்றார்கள். எத்தனையோ போர்களை நடத்திய ராமராயருக்கு இது வியப்பை அளித்தது.

வெற்றி அல்லது வீரமரணம் என்ற வீம்புடன் போராடும்போது உதவிக்கு வந்த ஒருவர் ஒதுங்கி நிற்பதென்றால் அது போரிடும் வீரர்களுக்கு வெறுப்பாகத்தானே இருக்கும்? தன் படைகளைப் போராட்டத்தில் ஈடுபடுத்தாது ஏதேதோ சாக்குப் போக்குகளைக் கூறிக்கொண்டிருந்தார் குதப்ஷா. அவரது இந்த விபரீதப் போக்குக்கான காரணம் கேட்டுக் கண்டிப்பான தாக்கீது அனுப்பினார் ராமராயர்.

ஆனால் அதற்கு மறுநாள் காலை...?

பாசறையிலே ராயரும் பீஜப்பூர் சுல்தானும் வீற்றிருக்கும் போது சீற்றமுடன் புகுந்தான் சித்திஹாஸன். "எதிர்பார்த்தது நடந்து விட்டது.

இப்ரஹிம் குதப்ஷா தன் துரோகச் செயலைக் காட்டிவிட்டான்" என்று படபடத்தான்.

"அகமதுநகருடன் சேர்ந்துவிட்டானோ?" என்று கேட்டார் ஆதில்ஷா.

"அதைத்தான் இங்கிருந்தபடியே செய்து கொண்டிருந் தானே? கோட்டையை நாம் முற்றுகையிட்டுக் கொண்டிருக்கும் போது உள்ளிருப்போருக்குத் தன் படை வீரர்களைக் கொண்டு உணவுப் பொருள்களை அனுப்பினான். உளவுகளையும் உடனுக்குடன் சொல்லிக் கொடுத்து வந்தான்."

"இப்போது ஒரேயடியாகத் தன் படைகளைக் கிளப்பிக் கொண்டு இரவோடிரவாகத் தன் ஊருக்கே போய்ச் சேர்ந்து விட்டான்- துரோகி!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தான் வேங்கடாத்திரி- விஜயநகரப் படைகளின் சேனாபதி.

ஆதில்ஷாவும் ராமராயரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். கோல்கொண்டா சுல்தானின் செயல் அவர்களைத் திகைக்க வைத்திருந்தது என்பதை அவர்களின் பார்வையே சொல்லிற்று. தளபதிகளோ குதப்ஷாவின் செயலினால் கொதிப்படைந்திருந்தார்கள்.

"மாரிக்காலம் வந்து விட்டது. முற்றுகையை விட்டு விடுவதே சிறந்தது என்று இவன் அடிக்கடி என்னிடம் கூறி வந்ததன் ரகசியம் இப்போதுதான் புரிகிறது" என்றான் வேங்கடாத்திரி.

"நான் ஆரம்பத்திலிருந்தே எச்சரித்துக் கொண்டுதானிருந் தேன்; இப்ரஹிம் சந்தர்ப்பவாதி; காட்டிக் கொடுத்துநம் கழுத்தை அறுக்கும் கயவன் அவன் என்று." ஆத்திரப்பட்டான் ஆதில்ஷாவின் சேனாபதி சித்திஹாஸன்.

அனுபவத் தழும்பேறிய ராமராயர் சிந்தனையிலாழ்ந் திருந்தார். குதப்ஷா முற்றுகையைக் கைவிட்டுச் சென்றதற்காகக் கவலைப்படவில்லை அவர். இந்த நன்றிகெட்ட செயலுக்காக அவனை எப்படித் தண்டிக்கலாம் என்பதைப் பற்றியே எண்ணமிட்டுக் கொண்டிருந்தவர், "கோல்கொண்டாவின் படைபலத்தை நம்பியா நாம் முற்றுகையைக் கைக் கொண்டோம்? இல்லையே. அகமதுநகரைப் பணியவைப்பதில் முழு மூச்சுடன் முனைவோம். நாணயமில்லாத

கோல்கொண்டாவை நசுக்குவது நமக்கொரு பெரிய காரியமல்ல. அதைப் பிறகு கவனிப்போம். இப்போது முற்றுகைப் பகுதியில் நிலைமை எப்படி இருக்கிறது?" என்று கேட்டார் வேங்கடாத்திரியை நோக்கி.

"கலியாண் கோட்டையைப் போபால்ராவின் பொறுப்பில் விட்டு விட்டு ஹுசைன் நிஜாம்ஷா தலைநகரைக் காப்பதற்காக உள்நாட்டுக்கு ஓடியிருக்கிறார்" என்றான் வேங்கடாத்திரி.

உடனே ராமராயர் முற்றுகையை வெற்றியாக்கும் வழி வகைகளை வகுக்கலானார். தமது நம்பிக்கைக்குகந்த படைத் தலைவரான இம்மடி சதாசிவ நாயக்கரிடம் கலியாண் கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்றும் பொறுப்பை ஒப்படைத்தார். வேங்கடாத்திரியையும், சித்திஹாஸனையும் அகமது நகரின் ல்லைக்ள் புகுந்து தாக்கும்படி பணித்தார். விஜயநகரப் பெரும் படையுடன் சதாசிவ நாயக்கர் கலியாணை நோக்கிக் கிளம்பினார். ஆதில்ஷா படைகளின் ஒரு பகுதியும் உடன் சென்றது. வேங்கடாத்திரி, சித்திஹாஸன் இவர்களுடன் சென்ற விஜயநகரின் படை வெள்ளமும் பீஜப்பூரின் பெரும் படையும் அகமதுநகருக்குள் புகுந்து அழிக்கத் தொடங்கின. வேங்கடாத்திரி வாளாகவும் சித்திஹாஸன் நெருப்பாகவும் மாறி விரோதியின் நாட்டை நாசமாக்கினார்கள். கோதாவரி நதியைக் கடந்து தௌலதாபாத் வரை சென்று வெற்றிக் கொடி நாட்டினார்கள். தங்கள் உயிரையும் உடைமைகளையும் காத்துக் கொள்ள அகமது நகரை விட்டு மக்கள் ஓடி ஒளியலானார்கள். இதுவரை சண்டும் கேட்டுமிராத வகையில் நிஜாம்ஷாவின் ராஜ்யத்தை நாசமாக்கிக் கொண்டிருந்தனர் வேங்கடாத்திரியும் சித்திஹாஸனும். இவர்களின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த முயன்ற எதிர்ப்புக்களெல்லாம் தவிடுபொடி யாயின.

அங்கே கலியாண் கோட்டையை இம்மடி சதாசிவ நாயக்கரிடம் ஒப்படைத்து விட்டுச் சரணாகதி அடைந்து விட்டான் போபால் ராவ். அவரும் தமது படைகளுடன் அகமது நகருக்குள் புகுந்துவிட்டார் என்ற செய்தி கேட்ட ஹுசைன் நிஜாம்ஷா நம்பிக்கை இழந்து போனார். நாட்டு மக்களின் ஓலம் வேறு அவர் உள்ளத்தை உடைத்தருந்தது. பசுமை கொழித்த நாட்டிலே வறுமை தலைவிரித்தாடலாயிற்று. செழுமை நிறைந்த அழகான பிரதேசங்கள் போர்த் தழும்பேறி விகாரமாகக் காட்சியளித்தன. படுதோல்வியுற்று

வேதனையடைந்த ஹுசைன் நிஜாம் ஷா வெள்ளைக் கொடி தூக்கினார். சமாதானத்தை விரும்பும் செய்தி கேட்ட ராமராயர் அகமதுநகர் சுல்தானுக்குச் சில நிபந்தனைகளை விதித்தார். கலியாண் கோட்டையைப் பீஜப்பூர் அலி ஆதில்ஷாவுக்கு உரிமையாக்க வேண்டியது. இதற்காக அகமதுநகர் நிஜாம்ஷாவே ராமராயரின் கூடாரத்துக்கு நேரில் வந்து கோட்டையின் சாவிகளை ஒப்புவிப்பதோடு நட்பின் அடையாளமாக ராயரிடமிருந்து தாம்பூலமும் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதோ அந்த நிபந்தனைகள்.

நாட்டைக் கொள்ளையிட்டுச் சூறையாடும் பகைவர்களின் கொடுமையிலிருந்து மக்களைக் காக்க எவ்வித நிபந்தனைக்கும் கட்டுப்பட்டாக வேண்டிய நிர்ப்பந்த நிலையில் இருந்தார் நிஜாம்ஷா. ராமராயரின் விருப்பப்படியே நடப்பதாகவும் நாட்டைப் பாழ்படுத்தும் வேங்கடாத்திரியையும் சித்திஹாஸனையும் திரும்ப அழைத்துக் கொள்ளும்படியும் தூது அனுப்பினார். சுல்தானின் விருப்பப்படியே அவ்விருவரையும் தம் படைகளுடன் திரும்பி வரும்படி கட்டளையிட்டார் ராமராயர்.

அகம்பாவம் கொண்டலைந்த அகமதுநகர் ஹுசைன் நிஜாம்ஷா அவமானமடைந்து சமாதானத்தை நாடி வரும் காட்சியைக் காண வீரர்கள் கூட்டம் வழியெங்கும் சாரி சாரியாகக் குவிந்திருந்தது. இந்தக் கூட்டத்திலிருந்து ஒதுங்கி நின்ற அந்த ஒற்றைக் கூடாரத்திலே ராமராயரும் அலி ஆதில்ஷாவும் கம்பீரமாக வீற்றிருந்தார்கள். அவர்களைச் சூழ்ந்து வெற்றி தேடித் தந்த வீரர் திலகங்களும், படைத் தலைவர்களும் பகட்டான ஆடை யணிந்து தத்தம் மன்னர்களுக்குப் பெருமை தரும் வகையில் இரு மருங்கிலும் அமர்ந்திருந்தார்கள். போரிலே சாகஸங்கள் புரிந்து புகழ் பெற்ற தம் வீரர்களுக்குப் பரிசில்களும் பட்டங்களும் வழங்கிக் கௌரவித்தனர் ராமராயரும் ஆதில்ஷாவும். இத்தனையும் ஆன பிறகு யாருக்காக இந்த ஏற்பாடுகளையெல்லாம் செய்து கொண்டு உட்கார்ந்திருந்தார்களோ அவரை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

தோல்வியின் அவமானத்தோடு, தன்னை நேரில் வந்து பேட்டி கண்டு செல்லும்படி தாக்கீது அனுப்பயிதைத் சிறுமையாக எண்ணிக் குமைந்துபோன அகமதுநகர் நிஜாம்ஷா ராயரைப் பேட்டி காணத் தமது பரிவாரங்களுடன் முதல் நாளே வந்து விட்டார். ராயரின்

படையணிகளுக்குச் சற்றுத் தொலைவில் பாடி இறங்கியிருந்த அவர் ராமராயரிடம் தாங்கமுடியாத கோபம் கொண்டிருந்தார். ஆனால் செயலிழந்த அவரது கோபத்துக்குப் பலன் ஏது?

விழாக் கோலம் பூண்ட அகமது நகர் வீதிகளிலே வெற்றி வீரராகப் பவனி வர வேண்டியவர் தம்மை வெற்றி கொண்ட விரோதிகளின் நடுவே, ஏளனச் சிரிப்புடன் அவர்கள் வரவேற்று வழி வகுத்துக் கொடுக்கத் தோல்வியை ஒப்புக் கொண்டு தாம்பூலம் பெறப் போகிறார்! முன்னும் பின்னும் வேலேந்திய வீரர்கள் குதிரைகளில் கம்பீரமாகச் செல்ல இடையிலே தமது அந்தஸ்துக்கு ஏற்பப் பரவாரங்கள் புடைழ்ந்து பவனிவரக் கூடாரத்தை நெருங்கிக் கொண்டிருந்தார் நிஜாம்ஷா. ஆனால் அதில் ஒரு கவர்ச்சி இல்லை. ஒருவர் முகத்திலாவது உற்சாகமிருந்தாலல்லவா? இவர்களின் வரவை வேடிக்கை பார்த்து நின்ற வீரர்களோ கிசுகிசுத்தார்கள். கேலியாக நகைத்தார்கள். நிஜாம்ஷா கம்பீரமான தோற்றம் உடையவர்தான். அவர் ஏறி வந்ததோ அசுவ லக்ஷணங்கள் அனைத்தும் கொண்ட அராபியக் குதிரைதான். ஆனால் அதன் ஒய்யார நடையிலே வழக்கமான துடிப்பில்லை. தன் மீது அமர்ந்திருப்பவரின் உள்ளத்தை அறிந்ததே போல வேண்டாத காரியத்துக்குச் செல்லும் வேதனையோடு அடி எடுத்து வைத்தது.

நிஜாம்ஷாவைக் கண்டதும் வெற்றி கொண்ட செருக்குடன் வீற்றிருக்கவில்லை ராமராயர். எதிர்கொண்டழைக்கத் தாம் உட்கார்ந்திருந்த இருக்கையிலிருந்து எழுந்து வந்தார். விரோதி தோல்வியுற்றாலும் ஒரு மன்னனுக்குள்ள தகுதியோடு அவனை வரவேற்கவே விரும்பினார் ராமராயர். ஹுசைன் நிஜாம்ஷாவின் கரங்கள் இரண்டையும் தாமே வலியப் பற்றி எடுத்துக் கொண்டார். வரவேற்க வருபவரின் விரிந்த கரங்களை விருந்தாளி தாவிப் பிடித்துத் தம் நட்பின் இறுக்கத்தை வெளிப்படுத்துவதுதான் வழக்கம். ஆனால் இங்கோ விருந்தாளி வேண்டா வெறுப்புடன் வந்திருந்தார். அவரது நீளாத கரங்களைத் தானாக எடுத்துக் கொண்ட ராமராயர், விருந்தாளியின் குல வழக்கப்படி அவ்விரு கரங்களையும் தமது நட்பின் அடையாளமாக முத்தமிட்டார்.

சீண்டி விடப்பட்ட பாம்பெனச் சீறினார் ஹுசைன் நிஜாம்ஷா. சவுக்கடி பட்டவரைப் போல உடலைச் சிலிர்த்துக் கொண்டார். தீண்டத் தகாத எதையோ தீண்டி விட்டவரைப் போல அருவருப்பாக முகத்தை

வைத்துக் கொண்டு அருகிலிருந்த தம் அதிகாரி ஒருவரைப் பார்த்து, "கையைக் கழுவுவதற்குத் தண்ணீரும் ஒரு பாத்திரமும் கொண்டு வாருங்கள்" என்றார் அகம்பாவத்துடன்.

விஜயநகரத்து வீரர் வரிசையிலே, 'ஆஹா!' என்ற ஆத்திரக் குமுறலோடு, உறையிலிருந்து வாள்கள் உருவப்பட்டன. அண்ணாவுக்கு நேர்ந்து விட்ட அவமானத்தைக் கண்ட வேங்கடாத்திரி, வெறி கொண்ட வேங்கையெனத் துள்ளி எழுந்தான். ஓங்கிய அவன் கையிலே வெற்றி வாள் மின்னியது. ஆனால்...

ரத்தமாகச் சிவந்து விட்ட முகத்தோடு சிலையாகி நின்ற ராமராயர், தம் இமையாத விழிகளால் ஹுசைன் நிஜாம்ஷாவையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தவர், பழி தீர்க்கப் பாய்ந்து வரும் வேங்கடாத்திரியைத் தமது இரும்புக் கரத்தால் - அவனைப் பாராமலே, ஒரு வார்த்தையும் பேசாமலே தடுத்து நிறுத்தினார்.

ஆதில்ஷாவும் அவரது ஆட்களும்கூட நிஜாம்ஷாவின் இந்த மரியாதைக் குறைவான செய்கையினால் திகைத்துத் திக்பிரமையடைந்து விட்டார்கள். பகைவனும் மதித்துப் போற்றும் பெருந் தன்மையும் பராக்கிரமமும் கொண்ட ராமராயரை நிஜாம்ஷா இப்படி அவமதித்து விட்டாரே, அதன் விளைவு எப்படியோ, என்ன நேரிடுமோ என்று அங்கு கூடி இருந்தோர் விக்கித்துப் போய் உட்கார்ந்திருந்தார்கள். ராயரிடம் காணப்பட்ட அமைதி எல்லோருக்குமே அச்சத்தை அளித்தது.

குமுறி வந்த தம் கோபத்தை, அவமானத்தினால் முறுக்கேறிப் புடைத்து நின்ற நரம்புகளை, கொதிக்கும் ரத்த ஓட்டத்தை, பாடம் புகட்டத் துடிக்கும் தம் கரங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு நின்றார் ராமராயர். இத்தனை உணர்வுகளையும் விழுங்கியதன் விளைவாக அவரது கண்கள் மட்டுமே தணலாகச் சிவந்து ஜ்வலித்துக் கொண்டிருந்தன.

அவமானப்படுத்த எண்ணிய நிஜாம்ஷா அவமானப்பட்டுப் போனார். ராமராயரின் இந்த அமைதியும் நிதானமும் அவரைத் திகைக்க வைத்து விட்டன. இதற்குள் பாத்திரமும் தண்ணீரும் கொண்டு வரப்பட்டன. கறைபட்டுப் போனதாக எண்ணிய தன் கைகளை அதில் கழுவிக் கொண்டான் நிஜாம்ஷா. அப்போது அவர் உள்ளத்தின் நடுக்கம் கைகளில் தெரிந்தது. அசட்டுத்தனமான காரியத்தைச் செய்து

விட்டோமோ என்ற நினைப்பிலே குறைப்பட்டுக் கொண்டது குற்றமுள்ள நெஞ்சு.

இத்தனை நேரம் அங்கு நிலவிய அமைதியை அதிர வைத்துக் கொண்டு எழுந்தது ராமராயரின் குரல். "ஹுஸைன் நிஜாம்ஷா! உங்களை என் விருந்தாளியாகவே எதிர்பார்த்தேன். அந்த எண்ணத்துடனேயே வரவேற்கவும் வந்தேன். இந்த நிலையில் - இதற்குப் பிறகும்கூட - அந்த என் எண்ணத்தை மாற்றிக் கொள்ள விரும்பவில்லை. மாற்றிக் கொண்டால்...?"

ஒரு விநாடி மௌனமானார் ராமராயர். அது ஒரு யுகமாக இருந்தது அங்கிருந்தவர்களுக்கு. "... என் விரோதியாகிவிடும் உங்களை உயிரோடு அனுப்ப மாட்டார்கள் இங்கிருப்பவர்கள். ஆகவே என் விருந்தாளியாகவே இருங்கிருந்து வெளியேறி விடுங்கள்" என்று சொல்லித் தம் இருக்கையில் வந்து அமர்ந்து கொண்டவர் தண்ணீர் கொண்டு வரச் செய்து தம் கைகளையும் உதடுகளையும் கழுவிச் சுத்தப்படுத்திக் கொண்டார்.

ராமராயரின் அந்தப் பெருந்தன்மையின் முன்னால் தலை நிமிர்ந்து நிற்க முடியாமல் குன்றிப் போனார் நிஜாம் ஷா. கலியாண் கோட்டையின் சாவிகளை ஒப்பந்தப்படி மௌனமாக ராயரின் முன்னே நீட்டினார். ராயர், ஆதில்ஷாவின் பக்கம் திரும்பி அதை வாங்கிக் கொள்ளும்படி சைகை செய்தார். ஆதில்ஷாவோ தான் எழுந்து போய் அதை வாங்கிக் கொள்ளும் தகுதி நிஜாம்ஷாவுக்கு இல்லை என்று கருதினாற் போலத் தம் மெய்காப்பாளனைப் போய் வாங்கி வரும்படி உத்தரவிட்டார். சாவிகளை அவன் கையிலிருந்து பறித்துக் கொண்டு ஆதில்ஷாவின் பாதங்களில் வைத்தான் காப்பாளன்.

குற்றவாளியாக நிற்கும் தன்னைக் குத்தி எடுக்கும் ஆயிரமாயிரம் விழி அம்புகளிடமிருந்து விடுபடத் துடித்து, வேகமாக அவ்விடத்தை விட்டு வெளியேறினார் நிஜாம்ஷா. தன் மீது தாவி ஏறிய தலைவனின் தவிப்பை அறிந்து தானோ என்னவோ மந்தகதியில் வந்த குதிரை இப்போது வாயு வேகத்தில் பறந்தது.

**மி**ன்னல், கொடியாகப் படர்ந்து பரவியது. கனத்துக் கிடந்த வானத்திலே கருத்த மேகங்கள் கன வேகமாக ஓடிக் கொண்டிருந்தன. காற்று 'ஓ' என்று ஓலமிட்டு உறுமியது பயங்கரமாக. பகற் பொழுதை மாற்றும் பயங்கரமானதோர் இருள் பரவி வந்தது. ம்லைகளைப் புரட்டி

மோத விடுவது போன்ற ஒலி, எங்கோ தொலைவில் தொடங்கி வர வர அருகே வந்து அதிர்ந்தது.

இடி, மின்னல், புயல்...!

கடல் நீரின் கொந்தளிப்பு இந்த ஒலிகளுக்கேற்ப உயர்ந்தும் தாழ்ந்தும் நடன மாடலாயிற்று. உருண்டு புரண்டு சுருண்டெழுந்த பேரலைகள் ஒன்றோடொன்று மோதிக் கொண்டு கரு நீலப் பரப்பிலே கண்ணாடி நீர் முத்துக்களை வாரி இறைத்தன. கடலுக்கும் காற்றுக்கும் கடுமையான போராட்டம். கடல் நீரைப் பளார் பளார் என்று அறைந்து ஆரவாரமிட்டது காற்று. அடிபட்ட கடல் தன் அலைக் கரங்களால் காற்றை எட்டிப் பிடிக்க எகிறிக் குதித்து ஏமாற்றமடைந்த ஆத்திரத்திலே, புலம்பிக் கொண்டிருந்தது.

குமுறும் கடலின் உடலிலே குதிபோட்டுக் கொண்டிருந்தது ஒரு கப்பல். எந்த நிமிஷத்தில் என்ன நேருமோ என்ற திகில் குடிகொண்டிருந்தது அதில் இருந்தவர்களின் உள்ளத்திலே. காற்றிடம் காட்ட முடியாத தங்கள் கைவரிசையை அலைகள் அந்தக் கப்பலிடம் காண்பிக்கலாயின. தன் விரோதியின் விளையாட்டுப் பொருளான அந்தக் கப்பலைக் காற்றும் தன் களமாக்கிக் கொண்டது. கடலுக்கும் காற்றுக்குமிடைப்பட்ட அந்தக் கப்பலோ படாத பாடுபட்டது.

புயல், மின்னல்- அவற்றின் முடிவாகப் பேய் மழை கொட்டலாயிற்று. கப்பலிலிருந்தவர்கள் தவித்தார்கள். இங்குமங்கும் ஓடினார்கள். எப்படியாவது புயலிலிருந்து அந்தக் கலத்தைக் காப்பாற்ற வேண்டும் என்பதில் அதில் இருந்த அத்தனை பேரின் கவனமும் கவலையாகப் பரிணமித்திருந்தது - ஒரே ஒருவனைத் தவிர! அந்த ஒருவன், மரணக் கம்பங்களுக்கிடையே கட்டுண்டு கிடந்த யூசப்கான்தான். மழை நீரைக் காற்று வாரி அவன் மீது கொட்டிய போது நினைவிழந்து மயங்கிக் கிடந்தவனின் உடலிலே ஒரு தெம்பு பிறந்தது. உடல் ரணத்திலே உப்பு நீரைக் கொட்டிய போது கூட உடலை அசைக்காத யூசப்கான் இயற்கையன்னையின் அமிருத தாரையான மழை நீர் பட்டதும் உடலைச் சிலிர்த்துக் கொண்டான். தலை நிமிர்ந்து வாய் திறந்து மழைத் திவலைகளை ஏந்திக் குடித்துக் காய்ந்த நெஞ்சை ஈரமாக்கிக் கொண்டான். மழை வலுக்க வலுக்க அவன் உடலிலே தெம்பு பிறக்கலாயிற்று. புயலிடைப்பட்ட கப்பலின் ஆட்டத்தையும், போர்ச்சுகீசியர்களின் தவிப்பையும் கண்ட யூசப்கான்

கடகட வென்று வாய் விட்டுச் சிரிக்கலானான். அந்தச் சிரிப்பு அதீதமாக. அந்தக் கடல் ஓலத்தையும். புயலின் சீற்றத்தையும் மீறி 'ஹோ' என்று நானாதிக்குகளிலும் பரவியது.

## 8

## காவலனாய் மாறிய கைதி!

**யூ**சப்கான் சிரித்துக் கொண்டேயிருந்தான். செத்திருக்க வேண்டியவன் சிரிப்பதைக் கண்டு திகைத்தார்கள் போர்ச்சுகீசியர். அவன் சிரிப்பு அவர்களைச் சிந்திக்க வைத்தது. இவ்வளவு சித்திரவதைகளையும் தாங்கிக் கொண்டு ஒருவன் பிழைத்திருப்பதோடு எதையும் பொருட்படுத்தாது சிரிப்பதென்றால், அவன் மனிதன்தானா, அல்லது...?

பேரலை யொன்று பொங்கிக் குமுறியபோது கப்பல் பேயாட்டம் போட்டது. மின்னலொன்று வெள்ளியாக உருகி ஓடிற்று. அதன் வெளிச்சத்திலே யூசப்கானின் உருவம் பயங்கரமாகத் தோற்றமளித்தது. ஆனால் அவனைப் பார்த்துக் கொண்டு சிந்தனையில் ஈடுபடப் புயல் போர்ச்சுகீசியர்களுக்கு இடங்கொடுக்கவில்லை. கப்பலில் இங்குமங்குமாக அவர்களை ஓட வைத்துக் கொண்டிருந்தது. ஓடி ஓடி அவர்கள் ஓய்ந்து போனார்கள்.

காற்று களைப்படைந்த போது, அலைகளுக்கு அயர்வு மிகுந்த போது புயல் ஓய்ந்தது. கடல் அமைதியடைந்தது. மேகத்தின் கருமை கலைந்தது. களங்கமற்ற வானத்திலே நிலவு தலை நீட்டிப் பார்த்தது. திரைச் சீலையிலே எழுதிய சித்திரத்தைப் போல இப்போது கப்பல் ஆடாமல் அசையாமல் மிதந்து கொண்டிருந்தது. புயலைப் போலவே புயலுக்குப் பின் தோன்றிய அந்த அமைதியும் அச்சமூட்டுவதாக இருந்தது. புயலிலே அல்லலுற்ற மாலுமிகள் அங்கங்கே மயங்கிக் கிடந்தார்கள். கப்பல் தலைவன் தன் அறையிலிருந்தபடி அமைதியுற்ற கடல் வெளியைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பார்வையில் கைகளையும் காலையும் பரத்தியபடி மரணக் கம்பத்தில் கட்டுண்டு நிலவில் குளித்துக் கொண்டிருக்கும் யூசப்கான் சிக்கினான்

அவனையே பார்த்துக் கொண்டிருந்தவனுக்கு என்ன தோன்றியதோ? இத்தனை புயலிலும் மலையிலும்கூட அதே நிலையில்" அவனை விட்டு வைத்திருந்ததற்காக அவனிடம் பரிதாபம் கொண்டானோ என்னவோ! யூசப்கானை அந்தர நிலையிலிருந்து அவிழ்த்துக் கப்பல் தளத்திலே கிடத்தி, அவனது ஒரு காலை மட்டும் அந்தக் கம்பங்களில் ஒன்றோடு சங்கிலியால் பிணைக்கும்படி உத்தரவிட்டதோடு உணவளிக்கும்படியும் கூறினான்.

சவுக்கடியிலிருந்து விடுதலை கிடைத்தது யூசப்கானுக்கு. கம்பத்திலே சாய்ந்தபடி கால் நீட்டி உட்கார்ந்திருந்தான். கட்டுண்ட நிலையில் கசையடியையும் பொருட்படுத்தாதவனுக்குக் கட்டவிழ்த்து விட்ட போது உடலெல்லாம் ரணமாக வலிக்கலாயிற்று. துடைக்கப்பட்ட கண்ணாடியிலே துல்லியமாகத் தெரியும் பிம்பத்தைப் போல, புயலால் புதுப்பிக்கப்பட்ட ஆகாயத்திலே பவனி வந்து கொண்டிருந்தது நிலவு. அந்த அமைதியான இரவில் கப்பலே உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது, யூசப்கானைத் தவிர. உணர்விழந்து பல நாட்கள் உறங்கிக் கிடந்தவன் இப்போதுதானே விழித்துக் கொண்டிருக்கிறேன்! இனி இப்போதைக்கு அவனுக்கு உறக்கமேது?

கப்பலைத் திசை பார்த்துச் செலுத்தும் சுக்கானைப் பிடித்தபடி தூங்கி வழியும் அந்த ஒற்றை மாலுமியையும் உறக்கம் தெளிந்து உட்கார்ந்துள்ள யூசப்கானையும் தவிரக் கப்பலில் அத்தனை பேரையும் அசதியும் உறக்கமும் ஆட்கொண்டிருந்தன. நிலவு தேய்ந்து மறைந்த நீல வானத்திலே வைரங்களை வாரி இறைத்திருந்தாள் இயற்கையன்னை. கண் சிமிட்டிக் கதை பேசும் நட்சத்திரங்களைப் பார்த்தபடியே தன்னைப் பற்றிய சிந்தனையிலே லயித்துக் கிடந்தான் யூசப்கான். கைதியாகியுள்ள தான் இனி உணர்ச்சிவசப்படக் கூடாது என்று உறுதி செய்து கொண்டான். பலம் பொருந்திய போர்ச்சுகீசியர்களிடம் தனி மனிதான தான் நயந்து நல்லதனமாக நடந்து கொள்ளுவதே புத்திசாலித்தனம் என்பதையும் புரிந்து கொண்டான். கப்பல் வாழ்க்கை ஏனோ அவனுக்குக் கைத்துப் போய் விட்டது. தாய்நாடான துருக்கியிலே அவன் வாள் வீச்சிலும் குதிரைப் போரிலுமே வல்லவனாக விளங்கியவன். கடற் போரிலும் கப்பலோட்டுவதிலும்கூடச் சூரனாக வேண்டும் என்ற ஆசையிலே மன்னர் சுலைமானிடம் விரும்பிக் கேட்டுப் பெற்றான் இரண்டு போர்க் கலங்களின் தலைமையை. இப்படி அந்தப் புதிய துறையிலே

புகுந்தவனுக்கு முதல் அநுபவமே கசப்பானதாக முடிந்த போது அதில் அவனுக்கு வெறுப்பேற் படுவது இயற்கை தானே? ‘கடலுக்கும் நமக்கும் ஆகி வரவில்லை. ஆகவே எப்படியும் இங்கிருந்து தப்பிச் சென்று...’

ஆம்! தப்பிச் சென்றேயாக வேண்டும் என்ற தவிப்பு அவன் உள்ளத்திலே உறுதிப்பட்டு அதுவே தாபமாகிப் பூதாகாரமாக வளரலாயிற்று. வாழ வேண்டும் - அதுவும் புகழோடு வாழ வேண்டும் என்ற உயிர் ஆசையின் துடிப்புக்குத் தூபமிடுவது போல் இருந்தது அந்தத் தவிப்பு. இந்த விடுதலை வேட்கை அவனை இமையோடு இமை சேர விடாமல் அந்த இரவெல்லாம் இதே நினைவாக ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்தது.

இரவுக் கன்னி இருள் ஆடையைக் களைந்து பனிநீராடிக் கொண்டிருந்தாள். அப்போது பகல் மொட்டு விடும் வேளை. காலைக் கருக்கலில் கதிரவனின் ரஸவாதம் அவள் பொன்னுடலில் ஒளி பேதம் உண்டாக்கிக் கொண்டிருந்தது. இந்தப் போதிலே யூசப்கானின் காந்தக் கண்களுக்கு அந்தக் காட்சி தப்பவில்லை. உண்மைதானா? கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு பார்த்தான். அவன் கண்கள் பொய் சொல்லவில்லை. இரண்டு கப்பல்கள் - இரண்டும் கொள்ளைக் கப்பல்கள். அக் கப்பல்களின் முகப்பு, அமைப்பு, கட்டுமானம் ஆகியவற்றிலிருந்து அவை அரபிக் கடலிலே தனியாட்சி செலுத்தி வரும் ‘மூர்’ என்ற கடற்கொள்ளைக்காரர்களின் கலங்கள் என்பதைப் புரிந்து கொண்டான் யூசப்கான். மேலும் கப்பல்களை உற்றுப் பார்த்து உறுதி செய்து கொண்டதும், அவனால் அமைதியாக இருக்க முடியவில்லை. போர்ச்சுகீசியர்கள் அவனைக் கொடுமைப் படுத்தியது உண்மைதான். ஆனால் அதற்காகக் கொள்ளைக் காரர்களிடம் கப்பலைக் காட்டிக் கொடுப்பதை வீரனான அவன் மனம் விரும்பவில்லை. போர்ச்சுகீசியர்களின் கப்பலோ பெரியது. தன் அடிவயிற்றிலே ஏலம், மிளகு, கிராம்பு என்று இப்படி இன்னும் எத்தனையோ விலையுயர்ந்த பொருள்களை நிரப்பிக் கொண்டு மிதந்தது அந்தக் கப்பல். அவைகளில் ஒரு பகுதியை யூசப்கானே தன் உடல் வியர்வையை வடித்து அதில் ஏற்றியிருந்தான். இவைகளை யெல்லாம் கொள்ளையர்கள் சூறையாடிப் போகும்படி விட மனமில்லை அவனுக்கு.

உரக்கச் சத்தமிட்டுக் கப்பல் தலைவனுக்கு எச்சரிக்க லாமென்றாலோ அந்த அமைதியான அதிகாலை வேளையில் அவன் குரலே கொள்ளைக்காரர்களைக் கூவி அழைப்பது போலாகி விபரீதத்தின் தன்மையை அதிகமாக்கி விடுமோ என்று பயந்தான். ஆகவே தன் காலைப் பிணைத்துள்ள சங்கிலியைக் குலுக்கியும், அதைக் கப்பல் தளத்தில் மோதிச் சத்தம் உண்டாக்கியும் ஆர்ப்பாட்டம் செய்யலானான் யூசப்கான். துப்பாக்கியை அணைத்தபடி தன்னைற மந்த உறக்கத்திலிருந்த காவல் வீரன் யூசப் கான் எழுப்பிய சத்தத்திலே கண் விழித்து, ஆத்திரத்துடன் துப்பாக்கிச் சனியனால் அவனைத் தாக்கப் போனான். தாக்க வரும் அதை ஒரு கையால் தடுத்துக் கொண்டே மறுகையால் தான் கண்ட காட்சியை அவனுக்கும் காட்டினான் யூசப்கான் மௌனமாக. தலையை இரண்டு முறை குலுக்கி விட்டு இமைகளை இடுக்கிக் கொண்டு பார்த்த காவல் வீரன் தலைதெறிக்கத் தலைவனின் அறையை நோக்கி ஓடினான். அடுத்த சில விநாடிகளிலே கப்பலிலே கலகலப்புப் பெருகிறது. கதிரவன் கருநீல வானத்துக்குச் செவ்வண்ணத்தைக் குழைத்துப் பூசும் வேளையிலே போர்ச்சுகீசியக் கப்பல் போருக்குத் தயாராகி விட்டது. அதன் தலைவன் யூசப்கானைப் பார்த்த பார்வையிலே நன்றி கலந்திருந்தது. 'நல்ல சந்தர்ப்பம், இந்த நல்லெண்ணத்தைப் பயன்படுத்திக் கொள். நழுவவிடாதே' என்று முணுமுணுத்தது யூசப்கானது உள் மனம்.

பூதக் கண்ணாடிகளை ஒன்றுக்குள் ஒன்றாகச் செருகியுள்ள தொலை நோக்கியை நீட்டி அதிலே தன் கவனத்தைப் பதித்திருந்தான் கப்பல் தலைவன். கொள்ளைக் கப்பலின் நடவடிக்கையை நன்கு அறிய அங்கும் இங்குமாக நகர்ந்தபடி அதன் உதவியால் அங்குள்ள நிலைமையை நிர்ணயிக்கும் முன் கொள்ளைக் கப்பல் பீரங்கி முழக்கம் செய்துவிட்டது. கப்பலின் மிகமிக அருகே அனல் உருண்டைகளாக வந்து விழுந்தன பீரங்கிக் குண்டுகள். அதனால் போர்ச்சுகீசியக் கப்பலே அதிர்ந்து ஆடியது. அடுத்தடுத்துப் பலகுண்டுகள் பறந்து வந்தன. போர்ச்சுகீசியக் கப்பலும் பதில் 'மரியாதை' செய்தது. ஆனால் மூர்களின் கப்பல்களோ சிறியவை. வெகு வேகமாக இக்கப்பலை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தன. கடலையே தங்கள் வீடாகவும் கொள்ளையடிப்பதையே தங்கள் வாழ்வாகவும் கொண்டுள்ள வர்கள் மூர் ஜாதியினர். கடற் போரிலே அவர்களுக்கு இணையானவர்கள் யாருமில்லை. போர்ச்சுகீசியக் கப்பலோ பெரியது. அதை இயக்குவதோ, லாகவமாகத் திருப்புவதோ கடினம். தவிர முதல் நாள் மாலை

புயலிலே சிக்கிய கப்பலை மீட்பதில் தங்கள் சக்தியையெல்லாம் இழந்திருந்தனர் போர்ச்சுகீசியர். இன்று காலை கண் விழித்ததும் போரிட வேண்டுமானால்? மனம் தளர்ந்து விடவில்லை மாலுமிகள். ஆனால் கொள்ளையரின் கூட்டமோ வெறிகொண்ட பருந்துகளைப் போலப் போர்ச்சுகீசியக் கப்பலை மொய்த்துக் கொள்ளலாயிற்று. அவர்களின் சின்னஞ் சிறிய பீரங்கிகள் விளைத்த சேதமோ மிகப் பெரியதாக, பயங்கரமானதாக இருந்தது. கொள்ளைக் கப்பல் வெடித்த பீரங்கிகளில் சில போர்ச்சுகீசியக் கப்பலுக்குள்ளேயே விழுந்து ஜ்வாலை விட்டு எரியலாயிற்று. வீரர்களில் ஒரு பகுதியினர் அதை அணைத்துத் தீ பரவாமல் தடுப்பதில் ஈடுபடலானார்கள். மூர்க்க குணம் படைத்த மூர்களின் கப்பல் மிக மிக அருகே வந்துவிட்டது. இன்னும் சிறிது நேரத்தில் அவர்கள் போர்ச்சுகீசியக் கப்பலுக்குள் தாவிக் குதித்துக் கொள்ளையிடத் தொடங்கி விடுவார்கள். பண்டங்களை ஏற்றிச் செல்லும் இக்கப்பலினால் மூர்களின் போர்க் கப்பல்களுக்கு ஈடு கொடுக்க முடியாமல் முறியடிக்கப்படும் நிலை ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

கட்டளைக்குப் பிறப்பித்துக் கொண்டிருந்த போர்ச்சுகீசியக் கப்பலின் தலைவன் 'சலாம்!' என்ற குரல் கேட்டுத் திரும்பினான். யூசப்கான் இடுப்பை வளைத்து முன்னால் குனிந்து தன் இன வழக்கப்படி வணக்கம் செலுத்தியபடி "கொள்ளையர்களை விரட்டிக் கப்பலைக் காக்கும் பொறுப்பை என்னிடம் கொடுங்கள்" என்றான். 'எங்களால் முடியாததை, தனியொருவனான நீ எப்படி முடிப்பாய்?' என்று கேட்காமல் கேட்டு ஏளனமாக நகைத்தான் தலைவன்.

தன்னை அவன் மதிக்கவில்லை என்பதைப் புரிந்து கொண்ட யூசப்கான் "தோல்வி உங்களைத் துரத்திக் கொண்டு வருகிறது. எப்படியும் அந்தப் பிடிக்குள் சிக்கப் போகும் இந்த நிலையில் என் தகுதியையோ திறமையையோ பற்றி யோசித்துக் கொண்டிருக்க வேண்டாம். சந்தர்ப்பமளித்துப் பாருங்கள். போரின் போக்கே மாறினாலும் மாறலாமல்லவா?" நம்பிக்கையோடு பேசினான் யூசப். கப்பல் தலைவன் ஒரு விநாடி அவனையே உற்றுப் பார்த்தான். துருக்கியனான அவன், முஸ்லிம் இனத்தைச் சேர்ந்த அந்தக் கொள்ளைக்காரர்களுக்கு எதிராகப் போரிடுவானா அல்லது உதவி செய்வானா என்று யோசிப்பதைப் புரிந்து கொண்ட யூசப்கான். "துரோகமிழைக்க மாட்டேன். என்னை நம்பலாம். உங்கள் விரோதி என் விரோதி" என்றான். அதற்கு மேல் தலைவன் யோசிக்கவில்லை.

யோசிக்கும்படியான சூழலா அது? படகுகளில் கொள்ளைக் கூட்டத்தினர் சாரி சாரியாகக் கப்பலை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். அவர்களின் ஆரவாரக் கூச்சலோ பீரங்கி முழக்கத்தையும் மிஞ்சியதாக இருந்தது.

யூசப்கானின் காலைப் பிணைத்துள்ள விலங்கு அகற்றப்பட்டது. தான் விடுதலை அடைந்ததைக் கொண்டாடும் விழாவாக விரோதிகளைச் சிதற அடிப்பதில் ஈடுபடலானான் யூசப். கப்பலில் இங்கும் அங்கும் எங்குமாகச் சுழன்றான் அவன். அவன் திரும்பிய பக்கமெல்லாம் பீரங்கி அனலை வாரிக் கொட்டிக் கொள்ளையர்களைக் கொன்று குவித்தது. அவர்களின் படகுகள் சின்னாபின்னமாக்கப் பட்டன. போர்ச்சுகீசியரின் பீரங்கிகளை அனாயாசமாக, அலட்சியமாகத் தன் இஷ்டத்துக்குக் கையாண்டு எதிரிகளைத் திணற அடித்தான் யூசப்கான். தங்கள் பீரங்கிகளை இத்தனை இலகுவாக இயக்கும் ஒருவனைக் கண்டு போர்ச்சுகீசியர்களே வியந்தார்கள். கைதியாக எண்ணி அலட்சியமாக நடத்திய அந்நியனின் ஆற்றலைக் கண்டு அதிசயப் பட்டார்கள். தானே அந்தக் கப்பலின் தலைவனைப் போல அத்தனை பேரையும் தன் கட்டளையால் ஆட்டி வைத்தான் அவன். நிலைமை தங்களுக்குச் சாதகமாகத் திரும்பிக் கொண்டிருப்பதைக் கண்ட போர்ச்சுகீசியத் தலைவனும் அந்தத் துருக்கியனின் போக்குப்படி இயங்குமாறு தன் போர் வீரர்களுக்குக் கட்டளை பிறப்பித்தான். கசையடிபட்டவனின் கட்டளையை நிறைவேற்றக் காத்திருந்தார்கள் கப்பலில் உள்ளோர்.

எண்ணிக்கையில் அதிகமாக இருந்தாலும் ஒழுங்கும் கட்டுப்பாடுமற்ற மூர் இனத்துக் கொள்ளைக்காரர்கள் யூசப்கானின் மின்னல் வேகத் தாக்குதல்களினால் நிலைகுலைந்து ஓட்டமெடுத்தார்கள். யூசப்கானின் பீரங்கி இலக்குக்குப் பலியாகி மூழ்கியது அவர்கள் கப்பல்களில் ஒன்று. மற்றொரு கப்பலோ கொடி மரமும் பாய் மரமும் இழந்து பரிதாபமான நிலையிலே பின்வாங்கியது. கொள்ளையரை ஓட்டி, போர்ச்சுகீசியரின் உயிர், உடைமைகளையும் கப்பலையும் காத்துக் கொடுத்த யூசப்கான் அவர்களின் உள்ளத்திலே ஒப்பற்ற வீரனாக உயர்ந்து நின்றான். முதல் நாள்வரை துரும்பாக மதிக்க அந்தத் துருக்கியனை இன்று கரும்பாக, கண்ணியம் மிகுந்தவனாகக் கருதலானார்கள். மதிப்பும் மரியாதையும் மிகுந்த பார்வைகளின் ஸ்பரிசத்தினால் பரவசமடைந்து போனான் யூசப்கான்.

கப்பல் தலைவன் ஓடிவந்து யூசப்கானின் கரங்குலுக்கித் தன் களிப்பைத் தெரிவித்துக் கொண்டதோடு அவனைத் தன் அறைக்கு அழைத்துச் சென்று தனக்கச் சமமான ஆசனத்திலே அமர்த்திக் கொண்டான். முதல் நாள் வரை ஈவிரக்கமின்றி ரத்தம் ஒழுக அடித்து ரணமாக்கியிருந்த உடலின் காயங்களுக்குச் சிகிச்சை செய்ய மருந்துடன் ஓடி வந்தார் கப்பல் வைத்தியர். தான் அருந்துவதற்காக வைத்திருந்த உயர்ந்த மதுவைக் கோப்பையிலே நிரப்பி யூசப்கானிடம் நீட்டினான் தலைவன். கைதியாக வந்து காவலனாக மாறிய அவனுக்குத் தன் நன்றியைத் தெரிவிக்கும் வகையறியாமல் அந்தக் கப்பல் தலைவன் தவிப்பதை அவனு டைய பார்வையும், செய்கைகளும் பறைசாற்றிக் கொண்டிருந்தன.

ஆத்திரத்திலே அறிவிழந்து ராமராயரை அவமானப்படுத்த வேண்டுமென்ற வேகத்திலே அசட்டுத்தனமாக நடந்து கொண்டு தானே அவமானப்பட்டுப் போன அகமது நகர் சுல்தான், தம் அரண்மனைக்குத் திரும்பவில்லை. வேதனையினால் தவிக்கும் உள்ளத்தின் தாபம் தணிய யாருடனாவது இதமாக இரண்டு வார்த்தை பேசவேண்டும் போலிருந்தது அவருக்கு. ஆகவே தம் குதிரையைக் கோல்கொண்டாவுக்குத் திருப்பினார். மும்முனைத் தாக்குதல் நடத்தி முற்றுகையிடத் திட்டமிட்டிருந்த ராமராயரோடு ஒத்துழைக்காமல் அமகதுநகருக்கு உதவிகள் செய்து ஒதுங்கிக் கொண்டவராயிற்றே கோல்கொண்டா குதப்ஷா.

கோட்டை என்ற சொல்லுக்கு இலக்கணமாக அமைந் திருந்தது கோல்கொண்டா. இயற்கையாக எழுந்து நின்றதொரு குன்றைத் தங்கள் திறமைக்குச் சான்றாகக் கோட்டை யாக்கியிருந்தார்கள். இயற்கை அழகையும் அமைப்பையும் அதன் எல்லாச் சௌகரியங்களையும் பயன்படுத்திக் கொண்டு அந்தக் குன்றிலே அரண்மனை, அந்தப்புரம் இன்னும் அரசாங்கத்துக்குத் தேவையான அத்தனை அங்கங்களையும் அமைத்திருந்தார்கள். ஐந்து மைல் சுற்றளவிலே ஒன்பது வாயில்களைக் கொண்டதோர் ஒப்பற்ற கோட்டை அது. கோட்டையின் உச்சியிலே உள்ள தர்பார் மண்டபத்திலிருந்து முப்பது மைல் சுற்றளவு வரை தம் நாட்டைக் காணும் வாய்ப்பைப் பெற்றவர் கோல்கொண்டாவின் குதப்ஷா. பாராதாரி என்ற தம் பொதுச் சபை கூடும் கூடத்திலே நிஜாம் ஷாவை எதிர்பார்த்துக் காத்திருந்தார் இப்ரஹிம். அகமது நகர் சுல்தான் அங்கு வரும் செய்தியை ஒற்றர்கள் அவருக்கு முன்னதாகவே வந்து சொல்லியிருந்தார்கள்.

பாராதாரியின் உப்பரிகையிலே நின்று பாராக் கொடுத்துக் கொண்டிருந்தவனின் பார்வையிலே, நிஜாம்ஷா தம் குதிரையை வேகமாக விரட்டிக் கொண்டு வருவது பதிந்தது. நாலா திக்குகளி லிருந்து வரும் நெடுஞ்சாலைகளைக் கண்காணிப்பதற்காகவே கோட்டையின் உயர்ந்த பகுதியான பாலா ஹிஸாரில் உள்ள பாராதாரியில் ஓர் உப்பரிகையை உருவாக்கியிருந்தார் குதப்ஷா. பகைவர்களின் வருகையை இந்தப பாராதாரியிலுள்ள மண்டபத்திலிருந்து பார்த்ததும் கரம் தட்டியோ அல்லது நகராவை அதிரச் செய்தோ ஒலி எழுப்புவான் பாராக்காரன். அந்த எச்சரிக்கை எதிரொலியாகிப் பற்பல முடுக்குகளில் மோதிப் பதறிக் கொண்டே சென்று பாலாஹிஸாரின் அடிவாரத்து நுழைவாயிலில் இருக்கும் கோட்டைக் காவலாளியை 'உஷார்'ப் படுத்தும். உடனே பாலாஹிஸாரின் கோட்டைக் கதவுகள் மூடப்படும். கோல்கொண்டாக் கோட்டையின் மற்ற வாயில்களுக்கும் எச்சரிக்கை பறக்கும். எதிரொலியின் இந்த அதிசயமான ஆற்றலை அற்புதமான முறையில் பயன்படுத்திக் கட்டி இருந்தார்கள் கோட்டையை. ஒலிகளைக் கொண்டே செய்திகளை அனுப்பும்படியான ஒருவித சங்கேத பாஷையை உருவாக்கி வைத்திருந்தார்கள். பாராதாரியிலிருந்து இவ்வித ஒலிகளை எழுப்பி வெகு விரைவில் பாலாஹிஸாரின் அடிவாரத்துக்குச் செய்தி அனுப்பிவிடலாம். அதேபோல் பாலாஹிஸாரின் அடிவாரத்திலிருந்து அனுப்பும் ஒலிகளையும் பாராதாரியின் மேன் மாடத்திலிருந்தபடி கிரஹித்துக் கொள்ளலாம்.

அகமதுநகர் நிஜாம்ஷாவை வருகையை அறிவிக்ம் சங்கேத ஒலியை எழுப்பினான் பாராதாரியின் பாராக்காரன். உடனே பாலாஹிஸாரில் அகமதுநகர்ச் சுல்தானைச் சகல மரியாதைகளுடனும் வரவேற்பதற்கான ஏற்பாடுகள் செய்யப் பட்டன. கோட்டைக் கதவுகளை அகலத் திறந்து அணிவகுத்து நின்றனர் கோல்கொண்டா வீரர்கள். கற்றவாளி மனப்பான்மை கொண்ட நிஜாம்ஷா கோபம் கொப்புளிக்கும் உள்ளத்தவராகக் குதப்ஷாவைக் காண விரைந்தார்.

மன்னர்களின் சந்திப்பின்போது நிகழும் சம்பிரதாயச் சடங்குகளுக்குப் பின் சம்பாஷணை ராமராயரின் சர்வாதிகார போக்கின் விமரிசனத்திலே சென்றது. "அந்தக் கிழட்டுப் புலிக்குச் சரியான சூடு கொடுத்தீர்கள். அவன் முகத்துக்கு நேராகவே அப்படி உதாசீனப்படுத்திய உங்களைப் பாராட்டுகிறேன்" என்றார் குதப்ஷா.

கலியாண் கோட்டையைப் பறி கொடுத்துப் பரிதாபப்பட்டு வந்திருக்கும் நிஜாம்ஷாவுக்கு ஆறுதலாக இருக்கட்டுமென்றுதான் இதை அவர் கூறினார். விஜயநகரப் படையணியின் பாசறையிலே நடந்த செய்திகள் அத்தனையையும் குதப்ஷாவின் ஒற்றர்கள் கொண்டு வந்துவிட்டார்கள்.

ஊமையடி பட்டு உள்ளூற உருகிக் கொண்டிருந்த நிஜாம்ஷாவுக்குக் குதப்ஷாவின் பாராட்டு இதமாகவே இருந்தது.

"ராமராயனை அண்டிப் பிழைக்கிறான் இந்த ஆதில்ஷா. நம் இனத்துக்கே பெருத்த அவமானம். நீங்கள் முற்றுகையின் போது ஒப்பந்தத்தை உதறிவிட்டு ஒதுங்கிக் கொண்டீர்களே, அதற்காக உங்களையும் பாராட்டுகிறேன்!" என்றார் நிஜாம்ஷா. ஏமாற்றத்தின் வசப்பட்டு ஏக்கங் கொண்ட ஒருவன் தன்னைப் போலவே இன்னும் சிலரும் ஏமாறியிருப்பதை அறியும்போது எப்படி மன நிம்மதி பெறுவானோ அந்த நிலையிலிருந்தார் நிஜாம்ஷா. தம்மைப் போலவே குதாப்ஷாவும் விஜயநகரின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொண்டதில் அவருக்குத் திருப்தி.

"தன் சாம்ராஜ்யத்தைப் பெருக்கிக் கொண்டு தான் மகிமையோடு வாழ்வதற்கு நம்மையெல்லாம் பயன்படுத்திக் கொள்ளுகிறான் அந்த ராமராயன். இதைப் புரிந்து கொள்ளாமல் நாம் அடிக்கடி அவன் உதவியை நாடுகிறோம். நம்மை ஒருவரோடு ஒருவர் மோதவிட்டுப் பிறகு நமக்குள் சமரசம் செய்து வைக்கும் சாக்காகத் தன்னை உயர்த்திக் கொள்வதற்குப் பெயர் - கூட்டு நேசப் பொறுப்பு ஒப்பந்தம். அகமது நகர் பீஜப்பூரைத் தாக்கினால், விஜயநகரம் எதற்காக வரவேண்டும்? கோல்கொண்டா எதற்காக உதவ வேண்டும்?" தம் செய்கை நியாயம் என்பதை நிலைநாட்டக் குற்றவாளியின் குதர்க்கவாதம் பேசினார் குதப்ஷா.

குட்டுப்பட்டவரான நிஜாம்ஷாவும் இப்போது தம் கட்சிக்கு ஆள் கிடைத்துவிட்டதென்ற ஆனந்தத்திலே, "அதேபோலத் தான் கல்யாண் கோட்டையைப் பீஜப்பூரிடம் நான் ஒப்படைத்து விட்டுப் போகிறேன். இதற்குக் குறுக்கே வந்து விகாரம் பேச விஜயநகர் எதற்கு? கோட்டையின் சாவிகளை ராயரிடம் கொண்டுவந்து சமர்ப்பித்துவிட்டுத் தாம்பூலம் பெற்றுக் கொண்டு போக வேண்டுமாம்: தோற்றுப் போனேன் என்பதற்காகத்தானே என்னை எப்படித் தாழ்த்தி

விட்டான் அந்த அரவீட்டு ஆணவக்காரன்?" என்று நெடுமூச்செறிந்தார்.

"இந்தத் தோல்வியை என்னால் மறக்கவே முடியாது. இப்ரஹிம்! எப்பாடுபட்டாவது இந்தக் கரையை நான் துடைத்துக் கொள்ளத் தான் போகிறேன்." நிஜாம்ஷாவின் வார்த்தைகள் உறுதியுடன் வெளிப்பட்டன.

"நம்மிடையே ஒற்றுமை இருக்குமானால் இந்த ராமராயனின் சாகஸங்களுக்குச் சவுக்கடி கொடுக்கலாம். பாமினி சுல்தான்களின் நல்வாழ்வுக்கு விஜயநகரத்தின் நட்பு அவசியம் என்ற நிலை மாறினால்தான் . நாம் மனிதர்களாக வாழ முடியும்." குதப்ஷாவிடமிருந்து கொதிப்புடன் கொப்புளித்தன வார்த்தைகள்.

"ஆனால் பாமினி சுல்தான்கள் ஒருசிலரின் வாழ்வுக்கு விஜயநகரின் உதவி இன்றியமையாததாக இருப்பதனால் நன்றிக் கடன் பட்ட அவர்கள் ராயரிடம் நயந்துதான் போக வேண்டியிருக்கிறது" என்றார் எங்கோ பார்த்துக் கொண்டு. கோல்கொண்டா சுல்தானின் கோபத்தைக் கிளறவே இதைக் கூறினார் நிஜாம்ஷா. கோல்கொண்டாவிலிருந்த உயிருக்குப் பயந்து ஓடிவந்த இப்ரஹிமுக் ஒர காலத்தில் இடமளித்து ஏற்றமான வாழ்வளித்தவர் ராமராயர். நன்றிக் கடன் பட்ட குதப்ஷா ராமராயருக்கு எதிராக, தமக்குச் சாதகமாக இணங்கிவர மாட்டாரோ என்று தான் இப்படிக் குத்திக் காட்டினார். நிஜாம்ஷாவின் பேச்சு நல்ல பலனையே அளித்தது.

"நான் ராமராயரைப் பகைத்துக் கொள்ளப் பயப்படுகிறேன் என்பதைச் சொல்லாமல் சொல்லிக் காட்டுகிறார் நிஜாம்ஷா அவர்கள். அப்படித்தானே?" குதப்ஷாவின் கண்கள் கோவைப்பழமாகச் சிவந்தன. "எனக்கு ஒருகாலத்தில் ராமராயர் ஆதரவு அளித்தது உண்மைதான். அதற்காக நான் அவருக்கு அடிமையாக இருப்பேன், இருக்க வேண்டுமென்ற நினைக்கக் கூடாது. என் தன்மானத்தைப் பாதிக்கு எந்த விஷயத்துக்கும் நான் தலைவணங்க மாட்டேன். உங்கள் அருமை மகளின் 'நிக்காஹ்', கைவிட்டுப் போன அந்தக் கல்யாண கோட்டையிலேயே நடக்கும். இது உறுதி!" என்று முழக்கினார் குதப்ஷா.

இப்படி ஓர் உறுதிமொழியைப் பெறவே அத்தனை அவசர மாக அங்கு வந்தார் அகமதுநகர் சுல்தான். கோல்கொண்டாவின்

உதவியுடன் மறுபடியும் முற்றுகையிட்டு இந்தப் போரில் இழந்த பகுதிகளை மீட்க வேண்டுமென்பதே நிஜாம்ஷாவின் நினைப்பு. அதற்கு ஆதரவு தேடவே ஓடி வந்தார் குதப்ஷா. கல்யாண் கோட்டையை மீட்டுக் கொடுத்து அங்கேயே தம் கலியாணத்தை நடத்திக் காட்டுவதாகச் சபதமிடவே பூரித்துப் போனார் ஹுஸைன் நிஜாம்ஷா. வருங்கால மாப்பிள்ளையை மார்போடணைத்துக் கொண்டு மகிழ்ச்சியைத் தெரிவித்தார். மனத்தாங்கலுடன் வந்தவருக்குக் குதப்ஷாவின் ஆதரவு மகத்தான தெம்பை அளித்தது.

பீஜப்பூரை வெற்றிகொண்டு விஜயநகரப் படைகளை விரட்டியடித்துவிட்ட நினைப்போடு விருந்தும், கேளிக்கை களுமாக அமர்க்களப்பட்டது கோல்கொண்டாக் கோட்டை. குற்றம் புரிந்துவிட்ட இரண்டு பேர்கள் ஒன்று சேரும்போது, ஒருவர் மற்றவரின் பலத்தை எண்ணித் தங்கள் மன உளைச்சலை மறந்து மகிழ்ச்சியோடிருக்க முயலுவார்கள். இந்த நிலையில்தான் அகமதுநகர் நிஜாம்ஷாவும் கோல்கொண்டா குதப்ஷாவும் இருந்தார்கள்.

## 9

# பெண் புலியும் பேடைப் புறாவும்

**வி**ஜய நகரம் விழாக்கோலம் பூண்டிருந்தது. வெற்றியோடு திரும்பிய வீரர்களை வரவேற்க வீடுகளையும் வீதிகளையும் விதம் விதமாக அலங்கரித்திருந்தார்கள் விஜயநகரத்து மக்கள். மகர தோரணங்கள் கட்டி, மங்கல வாத்தியங்களை முழக்கி, மலர்களைத் தூவி மகிழ்ச்சி பூத்த முகத்தோடு வழி நெடுக நின்று வரவேற்றார்கள். குலை தள்ளிய வாழை மரங்களையும், கொத்துக் கொத்தாகக் கமுகு, பாக்கு, ஈச்சை ஆகியவைகளையும் செவ்விளநீர்க் குலைகளையும் கொண்டு தங்கள் கலைத் திறன் துலங்க நகரின் பிரதான வாயில்களையும், வீதியின் திருப்பங்களையும் வெற்றி விழா மண்டபங்களாக்கியிருந்தார்கள். இந்த மண்டபங்களிலும், வளைவுகளிலும் மங்கல ஆரத்தி ஏந்தித் தோகை மயிலையொத்த சாயல் கொண்ட கோதையர் வாகை சூடி வரும் வீரர்களை வாழ்த்தி வரவேற்கவந்து கூடியிருந்தார்கள்.

விஜய நகரம் தன் பெயருக்கேற்ப வெற்றி நகரமாகவே விளங்கியது.

மக்கள் மகிழ்ச்சி பொங்க அளித்த வரவேற்பை ஏற்றுக் கொண்டு அரண்மனைக்கு வந்த அரவீட்டு வீரர்களான ராமராயரும் வேங்கடாத்திரியும் அந்தப்புரத்துக்குச் செல்ல வில்லை. போர்க்களத்திலிருந்து திரும்பிய அலுப்பைப் போக்கிக் கொள்ளப் பஞ்சணை மெத்தையை நாடிப் போகவில்லை. துங்கபத்திரையின் தூய நீரிலே ஸ்நானம் செய்து உடைமாற்றிக் கொண்டு விரூபாட்சரின் ஆலயத்துக்குக் கிளம்பினார்கள். விஜய நகர சாம்ராஜ்யம் விரூபாட்சரின் உடைமை. ஆண்டவனின் பிரதிநிதிகளாகவே அரசர்கள் அதை நிர்வகித்து வந்தார்கள். சாம்ராஜ்யத்தை நிறுவிய வித்யாரண்யரின் ஏற்பாடு அது. அப்படியே அதன் பின் வந்தவர்கள் தாம் ஆண்டவனின் பிரதிநிதி என்ற நினைப்பு மாறாமல் ஆண்டு வந்தார்கள். பகையரசன் மீது படையெடுத்தோ அல்லது வேறு காரணங் களுக்காகவோ நாட்டை விட்டு வெளியே சென்று திரும்பினால், மன்னர் மன்னவரான மகேசுவரனிடம் முதலில் தங்கள் வருகையைத் தெரிவித்து வணங்கி, மேற்கொண்டு சென்ற காரியத்தின் வெற்றி தோல்விகளை விளக்கி, அதற்கு ஆண்டவனின் அங்கீகாரத்தைப் பெற்றதாகப் பாவித்த பிறகே வேறு காரியங்களைக் கவனிக்கச் செல்ல வேண்டும். அந்த விதியிலிருந்து விலகாமல் அண்டையான ஆண்டவனைப் பேட்டி காணப் புறப்பட்டார் ராமராயர்.

மகா மண்டலேசுவரர் வருகை தரப்போகிறார் என்று விரூபாட்சர் ஆலயத்தில் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. ஆண்டவனுக்க விசேஷ அபிஷேக அலங்காரங்கள் செய்திருந்தார்கள். ராமராயர் வந்தார், தம் தம்பி வேங்கடாத்திரி பின் தொடர. சம்பிரதாயப்படி தாம் கொண்டு வந்திருந்த ஓலையைக் கோயில் குருக்களிடம் கொடுத்து விட்டு ஆண்டவனை வணங்கி நின்றார். விரூபாட்சருக்கு அடுத்துத் தீபாராதனை நடத்தி ஆராதித்தபின், அரசருக்கு முன்னே தூதுவன் செய்தியைப் படிப்பது போல, ஆண்வனிடத்தில் அர்ச்சகர் ராமராயர் அளித்த ஓலையைப் படித்துக் காட்டினார்.

இதன் பிறகு ஆடல் கலையில் வல்ல அழகிகள் ஆண்டவன் சந்நிதியிலே நாட்டியமாடலாயினர். கட்டமைந்த உடலமைப்புக் கொண்ட வனப்பு மிக்க சுந்தரிகள் சலங்கை கட்டிச் சதிராடியது

கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. அழகை ரசிக்கும் வேங்கடாத்திரிக்கு அரம்பையர்களை யொத்த அணங்குகளின் அழகு நடனம் விருந்தாக இருந்தது. சுந்தர புருஷனான அவன் இரட்டை வாழ்க்கை வாழ்ந்து வருபவன். போரென்று வாளெடுத்து விட்டால் சீறிப் பாயும் வேங்கையாக இருப்பான். வாளைக் கீழே வைத்ததும் அழகை ஆராதிக்கும் கலைஞனாக மாறி விடுவான். இப்படி இரு மனிதர்களின் வாழ்க்கை வாழும் வேங்கடாத்திரி இப்போது லலித கலைகளில் ஈடுபாடு கொண்ட கலைஞனாக நாட்டியத்தை ரசித்துக் கொண்டிருந்தான்.

ஆடல் மகளிர் தம் அங்கங்களின் அசைவுகளால் அற்புதமான பாவங்களைக் கொட்டிக் கொண்டிருந்தார்கள். அவர்களின் விழிகளும் விரல் நுனிகளும்கூட எத்தனையோ உணர்ச்சிகளை வெளிப்படுத்திக் கொண்டிருந்தன. நாட்டியமாடும் நங்கையர்களையே பார்த்துக் கொண்டு அவர்களின் அங்கஅசைவுகளை, நாட்டியத்தின் நெளிவு சுளிவுகளை ரசித்துக் கொண்டிருந்த வேங்கடாத்திரியின் பார்வையில், அவர்களில் பிரதானமாக விளங்கிய ஒரு பெண்ணின் உருவத்தில் திடீரென்று ஏதோ மாறுதல் தோன்றுவது போல் இருந்தது. அந்தப் பெண் பம்பரமாகச் சுழன்றாடி நின்றபோது அது அவளாக இல்லை. அப்படியானால் அங்கே நிற்பது யார்? அவளா? அதிசயமாக இருந்தது வேங்கடாத்திரிக்கு. கண்களைக் கசக்கி விட்டுக் கொண்ட பார்த்தான். ஆயிஷாவேதான்? அண்ணா ராமராயரின் முன்னால் அன்றொரு நாள் வாதாடி நின்ற அந்தச் சுந்தரி இங்கு எப்படி நடனமாட வந்தாள்? தலையைக் குலுக்கி விட்டுக் கொண்டு பார்த்தான். இல்லை. அவளில்லை. அங்கு ஆயிஷா நிற்கவில்லை. விரூபாட்சர் ஆலயத்தின் பிரதான ஆடலரசிதான் ஆடிக் கொண்டிருந்தாள் தன்னை மறந்து. ஆனால் வேங்கடாத்திரி பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவள் மறுபடியும் மெள்ள மெள்ள அழகுப் பாவை ஆயிஷாவாகி அவனைப் பார்த்து முறுவலித்தாள்.

"சே! என்ன பிரமை இது?" என்று விழிக்கோணங்கள் ஒன்று சேரும் பகுதியை விரல்களால் அழுத்திப் பிடித்துக் கொண்டு கண்களை மூடிக் கொண்டான். ஆனால் மூடிய கண்களினுள்ளும் அந்த முஸ்லிம் அழகிதான் வந்து முறுவலித்து நின்றாள்!

முட்டாக மூடி நின்ற சாம்பலை ஊதி அகற்றியதும் உள்ளே பளபளத்துக் கனிந்து நிற்கும் கங்குபோல, போர்ப் பொறுப்பு என்ற

சாம்பல் விலகிய போது, ஆயிஷா தணலாகத் தகதகத்து நின்றாள் தளபதியின் நினைவிலே. அவள் நினைவோடு ஆண்டவன் சந்நிதியில் இருக்கவோ ஆடலை ரசிக்கவோ முடியாத நிலையீயல் வேங்கடாத்திரி வெளியிலே வந்து காத்திருந்தான், அண்ணாவின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு. இப்போது அவன் எண்ணமெல்லாம் 'ஆயிஷா ஆயிஷா' என்றே எதிரொலித்துக் கொண்டிருந்தது. எத்துணை அழகி அவள்? செந்தாமரை மடல் போன்ற உடல். சிந்தையை விட்டகலாத சுந்தரமேனி. அடிபட்ட பெண் புலி தன்னை விடுவித்துக் கொள்ளப் போராடுமே அந்த நிலையில்தான் அவளை முதலில் அவன் பார்த்தான். சினம் பொங்க நின்றாளே சிங்காரி. அந்தக் கோலத்திலும் கூட அவள் அழகு குறையவில்லை. கோபத்திலும் சோபிக்கும் சொகுசான தோற்றம் கொண்ட அந்த அழகி இத்தனை வருஷங்களாக இதே விஜயநகரத்தில் அதுவும் அரண்மனைக்குள் வளர்ந்து வந்தும் தன் கண்களில் படாது தப்பியது எப்படி என்று அதிசயப்பட்டான்.

பசியால் வாடி உணவுக்கு ஏங்கிப் பல நாள் பட்டினி கிடந்த ஒருவனுக்கு முன்னால் திடீரென்று அறுசுவை உண்டிகளைக் கொண்டு வந்து குவித்தால் எப்படி அவன் மகிழ்ச்சியால் திகைத்து ஆனந்தத்தால் திக்குமுக்காடிப் போவானோ அந்த நிலையில்தான் ஆயிஷாவை ஒற்றர்கள் பிடித்து வந்து அவன் முன் நிறுத்திய போது வேங்கடாத்திரி ஆச்சரியப்பட்டுப் போனான். அழகை ரசித்து ஆனந்திக்கும் வேங்கடாத்திரிக்கு விருந்தாக நின்றாள் அந்த வனிதை. கட்டுப்பாட்டை மீறிச் சென்ற குற்றத்துக்காகக் கைதியாகி விசாரணைக்கு வந்துள்ள ஒரு பெண்ணிடம் எந்த அளவுக்குப் பேசலாமோ அவ்வளவு தான் பேசினான் வேங்கடாத்திரி. அதுவும் அண்ணாவின் முன்னிலையில் அவள் அழகில் அளவுக்கு மீறிய அக்கறை காட்டுவதும் முறையல்லவே! மறு முறை வசதியான சூழலில் எப்படியும் அவளைச் சந்திக்கலாம் என்று தன் ஆர்வத்துக்க அணை போட்டுக் கொண்டான். ஆனால் அகமது நகரின் மீது படையெடுத்துச் செல்லும் பொறுப்பு அடுத்த நாளே அவனிடம் ஒப்டைக்கப்பட்ட போது வேங்கடாத்திரி வேற மனிதனாக மாறி விட்டான். இப்போது இத்தனை நாட்கள் கழித்து மறுபடியும் அவள் நினைவு வந்த போது... அவளைக் காண வேண்டுமென்ற தாங்க முடியாததொரு தவிப்பு ஏற்பட்டது.

ஆயிஷாவின் நினைவிலே முக்குளித்துக் கொண்டிருந்த வேங்கடாத்திரியின் நேச நினைவுகளுக்கு ஆலயச் சடங்குகள்

முரணாகத் தோன்றின. விரூபாட்சர் கோயிலக்கு வெளியே வந்து விட்டான். இப்படித் தன்னைத் தாமதிக்க வைக்கும் சூழ்நிலையைத் தாங்க முடியாதவனாகத் தன் குதிரையைத் தடவிக் கொடுத்தபடி சிந்தனைப் புரவியைத் தட்டி விட்டுக் கொண்டிருந்தான். தலைவனின் ஸ்பரிசத்தினால் சந்தோஷமுற்ற குதிரை உடலைச் சிலிர்த்துக் கொண்டு அடிக்கடி கனைத்து முன்னங் கால்களால் பூமியைக் கீறித் தான் கிளம்புவதற்குத் தயார் என்பதை அறிவித்துக் கொண்டிருந்தது.

சம்பிரதாயங்களையும், ஆலயத்தின் புனிதச் சூழலையும் மறந்து போகுமளவுக்குக் காதல் வயப்பட்ட வேங்கடாத்திரி சற்றைக்கொரு தடவை அண்ணா வருகிறாரா என்று கருவறைப் பக்கம் பார்த்து கொண்டிருந்தான்.

ஆலயத்தினுள்ளே...

ஆடல் முடிந்து, ஆண்டவனுக்குத் தீபாராதனை நடந்தது. தம்பி தரிசனம் செய்கிறானா என்பதைக் காணத் திரும்பினார் ராமராயர். தளபதியைக் காணவில்லை. எங்காவது தள்ளி இருந்தபடி தரிசனத்தில் ஈடுபட்டிருப்பான் என்ற எண்ணித் தம் கவனத்தை மீண்டும் கருவறையினுள் பதித்தார். அவரது பார்வை பக்தி மேலீட்டால் பனித்தது. மகாமண்டலேசுவரருக்கு மரியாதை செலுத்த, பட்டர்கள் பரிவட்டங்களுடனும் பிரசாதத்துடனும் மகா மண்டபத்துக்கு வந்தார்கள். அப்போதும் தம் தம்பி வேங்கடாத்திரி அருகே வராதது அவருக்கு வியப்பை அளித்துப் புருவத்தை நெறிக்க வைத்தது. நிலைமையைப் புரிந்து கொண்ட மெய்க்காபாளன் வெளியே ஓடினான். அடுத்த சில வினாடிகளில் கூட்டம் விலகி வழி வகுத்துக் கொடுக்க வேங்கடாத்திரி உள்ளே புகுந்து அண்ணாவின் அருகே வந்து நின்றான். ராமராயர் அவனிடம் ஏதும் கேட்கவில்லை. ஆனால் கூடிக் குவிந்த அவரது புருவங்கள் வீசிய வினாக் கணைகளைத் தாங்க முடியாமல் தலை குனிந்தான் வேங்கடாத்திரி. தாழ்ந்த கழுத்திலே ஆண்டவனின் தண்டு மாலையை அணிவித்துத் தட்டு நிறையப் பிரசாதங் களையும் நீட்டினார் பட்டர். மாலை மரியாதைகளை ஏற்று ஆண்டவனின் ஆலயத்தை விட்டு வெளியே வந்து குதிரை மீது ஏறிய பிறகும் வாய் திறக்கவில்லை மகா மண்டலேசுவரர் ராமராயர்.

ஹம்பியிலிருந்து அரண்மனைக்குச் செல்லும் கம்பீரமான ராஜ பாட்டையிலே வய்யாளி நடை போட்டு ஒய்யாரமாக நடந்து சென்று கொண்டிருந்தன குதிரைகள். வேகமாகச் செல்ல விரும்பும் தன்

எஜமானரின் மனத்தை அறிந்துதானோ என்னவோ ராமராயரின் குதிரையை அடிக்கடி முந்திக் கொண்டு முன்னால் செல்லத் துடித்தது வேங்கடாத்திரியின் குதிரை. வேங்கடாத் திரியோ தன் விருப்பத்தை வெளிக் காட்டிக் கொள்ளாமல் தான் அண்ணாவுக்கு அடங்கி வருவதைப் போலவே தன் குதிரையை யும் இழுத்துப் பிடித்து அடக்கிப் பின்தங்கி வரலானான். இப்படி முன்னும் பின்னுமாகச் செல்லும் வழியில் வாய் திறந்தார் ராமராயர்.

. "வேங்கடா! எங்கே போயிருந்தாய்? தீபாராதனை வேளையில் உன்னை அங்கே காணவில்லையே?"

"எங்கும் போகவில்லை. ஆலயத்தின் வெளியில்தான் இருந்தேன்" என்றான் வேங்கடாத்திரி.

"வழிபாட்டுக்கு வந்த இடத்தில் கூடக் கலையாராய்ச்சியி லிறங்கி விட்டாயோ?" என்றார் தம்பியின் பக்கம் திரும்பி. வேங்கடாத்திரியின் போக்கையெல்லாம் அறிந்தவர் அவர்.

"அப்படியொன்றுமில்லை. ஏனோ இன்று என் மனம் சரி யில்லை. அலைபாயும் உள்ளத்துடன் ஆண்டவனின் சன்னதியில் இருக்க வேண்டாமென்றுதான்.." உள்ளக் கிடக்கையை ஒளிக்க முயன்றும் முடியாமல் குழறினான் வேங்கடாத்திரி.

ராமராயர் தம் தம்பியைப் பார்த்தார் மௌனமாக. அவர் உதட்டில் மலர்ந்த சிரிப்பை விடக் கண்களில் வழிந்த சிரிப்புத் தான் அதிகமாக இருந்தது. வேங்கடாத்திரியிடம் எப்போதுமே அவருக்கு ஒரு தனிப் பற்றுதல். அவன் நடத்திச் சென்ற படைகள் எதுவுமே தோல்வி கண்டதில்லை. எனவே, அவன் இல்லாமல் அவர் எந்தப் போரையும் திட்டமிட்டதில்லை. அவர் அன்புக்கு இது மட்டுமே காரணமல்ல. அரவீட்டு மரபின் கடைக்குட்டி என்பதனாலும் அவனிடம் இந்தப் பாசம் ஏற்பட்டிருந்தது. தன்னிடம் அவனுக்குப் பக்தியும் பயமும் உண்டு என்பதையும் அறிவார் ராமராயர். தம்மைப் போலவோ, தம்பி திருமலையைப் போலவோ போர்க் கலையில் மட்டும் ஈடுபாடில்லாமல் லலித கலைகளை ரசிக்கத் தெரிந்த கலைஞன் தம் தம்பி என்பதிலும் அவருக்கு ஒரு பெருமை உண்டு. ஆனால் அவன் எதிரில் அவனைப் புகழவோ பாராட்டவோ மாட்டார். மற்றவர்களிடம்தான் வேங்கடாத்திரியைப் பற்றி மிக உயர்வாகச் சொல்லுவார்.

"மனத்தை அதன் போக்குப்படி அலைய விடக்கூடாது வேங்கடா! அடக்கியாளப் பழகிக் கொள்ள வேண்டும்" என்றார் ராமராயர் தம்பியின் முகத்தைப் பாராமலே.

பின் தங்கி வந்து கொண்டிருந்த வேங்கடாத்திரிக்குத் 'திக்'கென்றது. தன் உள்ளத்தைப் புரிந்து கொண்டுதான் இதைக் கூறுகிறாரோ என்று ஒரு நிமிஷம் தவித்துப் போய் விட்டான். ஆனால் அவருக்குப் பதில் கூறவில்லை. அதன் பிறகு அவரும் பேசவில்லை.

ஆயிஷாவின் நினைவை அசை போட்டபடி அரண் மனைக்குத் திரும்பிய வேங்கடாத்திரி மனோகரமான மாலைப் பொழுதை எதிர்பார்த்துச் சற்றே களைப்பாறினான். பகல் முதிர்ந்து மாலையாக மலர்ந்தபோது உல்லாசப் பிரியனான வேங்கடாத்திரி, தேவி திருமலாம்பாளின் உத்தியானவனத்தை நோக்கிக் கிளம்பினான். அண்ணா ராமராயரின் மூத்தபத்தினி - கீர்த்தி பெற்ற கிருஷ்ண தேவராயரின் அருமை மகள் - தான் திருமலாம்பா. மன்னர் சதாசிவராயரிடம் சங்கடப்பட்டுப் போன ஆயிஷாவைத் தம் தர்மபத்தினி திருமலாம்பாளிடம் ஒப்படைத்து வரும் பொறப்பையும் ராமராயர் அவனிடம்தானே விட்டுப் போனார்! ஆகவே அவள் எப்படி இருக்கிறாள் என்று அறிந்து போகும் சாக்கை ஏற்படுத்திக் கொண்டு அவளைச் சந்திக்கக் கிளம்பினான்.

யாருடைய அந்தப்புரத்திலும் வேங்கடாத்திரிக்கு விசேஷ வரவேற்பு உண்டு. காண்பவரை வசீகரிக்கும் தோற்றமும், சிரிக்கச் சிரிக்கப் பேசும் சுபாவமும் கொண்டவன் அவன். பெண்களின் நன்மதிப்பைப் பெறும் கலையில் கைதேர்ந்தவன் வேங்கடாத்திரி. தேவி திருமலாம்பாளுக்கு அவனிடம் தனிப்பட்ட அன்பு. மைத்துனர் என்ற மரியாதையை விட அவனைத் தன் சொந்தத் தம்பி போலப் பாவித்துப் பாசம் வைத்திருந்தாள்.

வெயிலின் உக்கிரம் தணிந்து துங்கபத்திரையின் தண்ணென்ற இளங் காற்றுத் தவழ்ந்து கொண்டிருந்தது. பரந்து கிடக்கும் பசும் புல் வெளியிலே பகலெல்லாம் வயிறார மேய்ந்து விட்டு மடியில் பால் கனக்க, பசித்திருக்கும் தங்கள் மதலைகளை நினைந்தபடி மாடுகள் பட்டிக்குத் திரும்பிக் கொண்டிருக்கும் வேளையில் தேவி திருமலாம்பாளின் அந்தப்புர வாயிலில் குதிரையை விட்டுக் கீழிறங்கினான் வேங்கடாத்திரி.

தளபதியார் வருகை தரும் செய்தியைத் தேவிக்கு அறிவிக்க விரையும் காவல் பெண்ணைக் கையமர்த்தித் தடுத்தான். தான் திடீரென்று தோன்றித் தேவியைத் திகைக்க வைக்கப் போவதாகச் சொல்லி அறிவிப்போ அதனால் நிகழும் ஆர்ப்பாட்டங்களோ ஏதுமின்றி அந்தப்புரத்தினுள் நுழைந்தான். மாலை வேளையில் மங்கையர்கள் எங்கிருப்பார்கள் என்பதை அறிந்த வேங்கடாத்திரி உத்தியானவனத்தை நாடிச் சென்றான்.

விஜயநகர சாம்ராஜ்யத்திலே அந்தப்புரங்கள் அதன் அமைப்புக்கும் அழகுக்கும் வசீகரத்துக்கும் பெயர் பெற்றவை. மாநகரின் ஜீவாதாரமான துங்கபத்திரையைத் தங்கள் இஷ்டப்படி யெல்லாம் இழுத்துக் கொண்டு போய், பொழில்களாயும், பொய்கைகளாயும், ஊற்றுக்களாயும் பரிணமிக்க வைத்து அற்புதங்களைச் செய்திருந்தார்கள். ஆழங்காண முடியாமல் ஆர்ப்பரித்து ஓடும் அந்த நதியைத் தங்கள் அந்தப்புரங்களிலும் உத்தியான வனங்களிலும் சிருங்கார லீலைகள்புரியும் வசந்த மண்டபங்களைச் சுற்றிச் சலசலத்து ஓடும் வாய்க்கால்களாக்கி ஓட வைத்திருந்தார்கள். இயற்கையாக அமைந்துள்ள குன்றுகளைக் கொண்டு, தங்கள் இஷ்டப்படி யெல்லாம் வளைந்து கொடுக்கும் பத்திரையைச் செயற்கை நீர்வீழ்ச்சியாக அதிலிருந்து விழுமாறு செய்து மகிழ்ந்திருந்தார்கள். நாடிலே மண்ணைப் பொன்னாக்கித் தந்த துங்கபத்திரை அரண்மனையிலே அந்தப்புரத்து மண்ணை யெல்லாம் வண்ண மலர்களாக்கித் தந்து கொண்டிருந்தாள். இத்தகைய மலர்ச் சோலையிலே, செய்குன்றங்களிலிருந்து தாவி விழும் நீரூற்றுக்களின் அருகிலே பணிப் பெண்கள் புடை சூழ அமர்ந்திருந்தாள் தேவி திருமலாம்பாள். அந்த மூதாட்டியைக் களிப்பிக்கும் முயற்சியிலே ஈடுபட்டிருந்தார்கள் கலைகளில் தேர்ந்த கன்னியர் சிலர். உடல் அழகிலும் உருவத் தோற்றத்திலும் அத்தனை பேர்களிலிருந்தும் வேறுபட்டுத் தனித்து நின்று சோபித்தாள் ஒருத்தி. யார் நினைவாக யாரைத் தேடி ஒடி வந்திருக்கிறானோ வேங்கடாத்திரி அந்த ஒருத்தி - ஆயிஷாதான் அவள்! மற்றவர்களிடமிருந்து ஒதுங்கி உட்கார்ந்திருந்த தனாலேயே அவள் அதிக அழகுடன் விளங்கினாள். சிரிப்பும் கொண்டாட்டமுமாக இருக்க வேண்டிய அந்த இடத்திலே அவள் அடக்கமும் அமைதியுமாக அமர்ந்து 'சிதார்' வாத்தியத்தை மீட்டிக் கொண்டிருந்தாள். அத்தனை பேரும் அதில் லயித்துப்

போயிருந்தனர். வேங்கடாத்திரியே அதில் கட்டுண்டு நின்றான் சில விநாடிகள்.

தந்தி வாத்தியத்தை மீட்டிக் கொண்டிருந்த அந்தச் சுந்தரி அவர்களை எங்கோ ஒரு தனிப்பட்ட உலகத்துக்கு அழைத்துப் போய் அற்புதங்களைக் காட்டிக் கொண்டிருந்தாள். அப்போது 'படபட' வென்று கைதட்டல் கேட்டதும திடுக்கிட்டவர்கள் திரும்பினார்கள்.

"எத்தனை இனிமையான இசை? நம் வாத்தியங்களிலேயே வீணைக்குத்தான் இதயத்தைத் தொடும் அந்த இனிமையும் குளுமையும் உண்டென்று எண்ணியிருந்தேன். இன்று தான் அது தவறு என்று தெரிந்தது." பாராட்டுரைகளை வழங்கியவாறு அவர்கள் பக்கத்தில் சென்றான் வேங்கடாத்திரி.

மைத்துனனைக் கண்ட தேவி அகமும் முகமும் மலர வரவேற்றாள். "வாருங்கள் தளபதியாரே! சண்டையிலிருந்து வந்தவர் சங்கீதத்தை ரசிக்க நேரே இங்கு வந்துவிட்டாற் போலிருக்கிறது!"

"வேறு என்ன செய்வது? உங்கள் அந்தப்புரத்திலிருந்து ஒலிக்கும் இந்த அற்புதமான இசையைக் கேட்ட பிறகு வேறு எந்தக் காரியத்திலும் மனம் ஈடுபட மறுக்கிறதே!"

"பாராட்டுவது போப் பேசி என் பாங்கியை ப்படியா ஏளனப்படுத்துவது? அவளென்ன கொம்பு வாத்தியம் ஊதியா உங்களை இங்கு கூப்பிட்டாள்?" என்றாள் திருமலாம்பாள் போலிக் கோபத்துடன்.

"வேங்கடாத்திரி கடகடவென்று சிரித்து விட்டான். அவர்களின் சிரிப்பில் பங்கு கொண்டபடியே பாங்கியர் மெல்ல அங்கிருந்து நழுவலாயினர். தேவியாரும் மகா மண்டலேசுவரரின் இளவலும் பேசிக் கொண்டிருக்கும்போது தாங்கள் அங்கிருப்பது நாகரிகமில்லை என்று நகர்ந்தனர். அவர்களுடன் ஆயிஷாவும் கிளம்புவதைக் கண்ட வேங்கடாத்திரி தவித்துப் போனான். "மதனி! உங்கள் தோழியின் சங்கீதத்தை ரசிக்கலாமென்று வந்த என்னைக் கண்டதும் இப்படி எல்லோரும் ஓட்டமெடுக்கிறார்களே. நீங்களாவது சொல்லக் கூடாதா?" என்றான் பரிதாபமாக.

அவன் யாரைப் பார்க்க வந்திருக்கிறான் என்பது அரசியல் சூழலில் அமிழ்ந்து ஊறிப் போன திருமலாம்பா தேவிக்கா தெரியாது?

தம் பொறுப்பில் விட்டுச் சென்ற அடிமைப் பெண் ஆயிஷாவின் நலன் அறிந்து போகவே வந்திருக்கும் வேங்கடாத்திரியின் விருப்பப்படி அவளை இருக்கும்படி சைகை செய்து நிறுத்தினாள். சலனமற்ற முகத்துடன் இவர்களின் மீது பார்வையைப் பதிக்காமல் எங்கோ பார்த்துக் கொண்டு நின்றாள் ஆயிஷா. அவளது கரத்தில் அணைக்கப்பட்டுக் கிடந்த சிதார் வாத்தியத்தைக் கண்ட வேங்கடாத்திரி பெருமூச்சுடன், "மதனி, இம்மாதிரி வாத்தியங்களே அவற்றை வாசிப்பவர்களின் திறமையினால்தான் பெருமை பெறுகின்றன போலும். இத்தனை நாள் வரை எனக்கு இந்தச் சிதார் வாத்தியத்திடம் எவ்வித மதிப்பும் கிடையாது. ஆனால் இந்த அழகிய விரல்கள் அதை மீட்டிய போதுதான் எத்தனை இனிமையான நாதம் பிறந்தது அதிலிருந்து?" அவளையே பார்த்துக் கொண்டு பேசினான் வேங்கடாத்திரி.

மௌனப் பதுமை வாய் திறந்தது?

"மனிதர்களுக்கும் அவர்களது உணர்ச்சிகளுக்குமே மதிப்புக் கொடுக்காதவர்கள் கேவலம் வாத்தியங்களுக்கா மதிப்புக் கொடுக்கப் போகிறார்கள்?" என்றாள் ஆயிஷா.

மதி வதனத்திலிருந்து மது வழியவில்லை தான். எனினும், அவள் கோபத்துடன் பேசினாலும், அந்தக் கொவ்வைச் செவ்வாய் திறந்ததே, சூடானாலும், சுந்தரமான செம்பொறிகளைத் தெறித்ததே என்று பூரித்துப் போனான் வேங்கடாத்திரி. "மதனி, மதனி, இவ்வளவுதானா நீங்கள்? இந்தக் கோதைக்கு நம் மீதுள்ள கோபம் தணியவே இல்லையே? கல்லையும் மெழுகாக்கும் உங்கள் திறமை இவளிடம் பலனளிக்க வில்லையா?" என்ற போதும்கூட ஆயிஷாவிடம் பதித்த தன் பார்வையை அவன் எடுக்கவே இல்லை.

"போதுமே, உன் பாராட்டு! அவள் என்ன கல்லா நான் மெழுகாக்க? இந்த விஜயநகரத்தின் சிற்பச் செல்வங்களைப் பார்த்துப் பார்த்து மனிதர்களைக் கூடக் கல்லாகவே காணு மளவுக்கு உன் ரசிகத் தன்மை வளர்ந்து விட்டாற் போல் இருக்கிறது! அவள் அத்தனையும் கட்டித் தங்கமாக்கும்!" என்றாள் தேவி திருமலாம்பாள், ஆயிஷாவைத் தாயன்பு நிறைய நோக்கியபடியே.

"தப்புத்தான் மதனி. உங்கள் திறமையை நான் குறைவாகத் தான் மதிப்பிட்டு விட்டேன். மன்னித்துக் கொள்ளுங்கள். கல்லைக் கட்டித்

தங்கமாக்குபவர் நீங்கள் என்பது இப்போதுதான் எனக்குத் தெரிந்தது" என்று அபிநயித்தான் அரவீட்டு இளவல்.

"பரிகாசம் போதும்... அம்மா ஆயிஷா! வேங்கடாத்திரியிடம் 'நான ஓடி விட மாட்டேன். நீங்கள் என்னைப் பற்றி கவலை இல்லாமல் உங்கள் காரியத்தைப் பார்க்கலாம்' என்று உறுதி மொழி சொல்லி அனுப்பி விட்டு வா. இதற்காகத்தான் உன்னைக் காண வந்திருக்கிறார் தளபதி அவர்கள். நான் கோயிலுக்குப் போக வேண்டும். நேரமாகிறது. வரட்டுமா?" என்று விடைபெற்றுக் கொண்டாள் தேவி. வேங்கடாத்திரியையும் ஆயிஷாவையும் தனியே விட்டு விட்டுச் செல்வதேகூட அவளுடைய நோக்கமாக இருக்கலாமோ என்னவோ!

தேவியார் போவதையே பார்த்துக் கொண்டு சிலையாகி நிற்கும் ஆயிஷாவின் அந்த அழகை அள்ளிப் பருகியபடி நின்ற வேங்கடாத்தரி அவள் கவனத்தைத் தன் பக்கம் திருப் அவள் கையில் கவனிப்பின்றித் தொங்கும் சிதார் வாத்தியத்தின் நரம்புகளில் ஒன்றை இழுத்துச் சுண்டி ஒலி உண்டாக்கினான். சிலையின் நரம்பையும் சுண்டி விட்டாற்போல், அது உயிர் பெற்றுத் திடுக்கிட்டுத் திரும்பியது. "ஆயிஷா!" - தன் இதயத்தின் அன்பை யெல்லாம் அந்த வார்த்தைகளில் வடித்தெடுத்து அழைத்தான் வேங்கடாத்திரி. "இங்கிருந்து தப்பிச் செல்ல வேண்டும் என்ற நினைப்பு இன்னமும் இருக்கிறதா உன்னிடம்?"

ஏக்கம் இழையிட ஏந்திழையாள் சோகச் சிரிப்பொன்றை மலர விட்டாள். "நினைப்பு இருந்து விட்டால் போதுமா? நிறை வேறக் கூடிய காரியமா அது? ஏழு அரண்களைக் கொண்ட ஏற்ற மிக்க நகரத்தின் அந்தப்புரத்தில்லல்லவா அடைத்து வைத்திருக் கிறீர்கள்? அதுவும் ஆற்றல் மிக்க உங்கள் கண்காணிப்பிலிருந்து தப்பிவிட முடியுமா?"

"ஆயிஷா! நான் உன்னைக் கண்காணிக்க வரவில்லை. கண்டு களிக்கவே வந்தேன்."

"நான் என்ன காட்சிப் பொருளா? காவல் கைதிதானே களிப்பதற்கென்ன இருக்கிறது?" என்றவள் விநாடி மௌனத் துக்குப் பிறகு. "இருக்கத்தான் செய்யும். வலிமையுள்ள தொரு சாம்ராஜ்யத்தின் தளபதி, தான் சிறைப் பிடித்து வந்தவர்களைப் பார்த்துக் களிப்படையாமல் கண்கலங்கவா செய்வார்?" ஏளனம் அவள் இதழ்களை மலர வைத்தது.

"என்னை அத்தனை கல் நெஞ்சனாகவா கற்பனை செய்து விட்டாய் ஆயிஷா?" என்றான் வேங்கடாத்திரி வேதனையோடு. 'தனக்கு அநீதி இழைக்கப்பட்டு விட்டது. தன்னைக் கொடுமைப் படுத்துகிறார்கள் என்ற கொதிப் படைந்துள்ள அவள் உள்ளத்தை எப்படிக் குளிர்விப்பது என்று புரியாமல் தவித்தவன், "கைதி கைதி என்று ஏன் இப்படித் தாழ்வு மனப்பான்மையிலே கிடந்து வெறுப்பை வளர்த்துக் கொள்ளுகிறாய்? உன்னைக் கைதியாகவா இங்கு வைத்திருக்கிறார்கள்?" என்று கேட்டான்.

"உண்மைதான். என்னைக் கைதியாக வைக்க வில்லை. கைதி என்றால் கைகால்களில் விலங்கிட்டுக் காராகிருகத் திலல்லவா அடைத்திருப்பார்கள். நான் ஓர் அடிமை!"

"அப்படிப் பார்க்கப் போனால் என் அண்ணாவின் அன்புக்கு நானும்கூட அடிமைதான். உலகத்தில் ஒவ்வொரு வருமே ஏதோ ஒன்றுக்கு அடிமையாகத்தான் இருக்கிறார்கள். இருந்தேயாக வேண்டும் ஆயிஷா!"

"இருக்க வேண்டியதுதான். அன்புக்கும், அழகுக்கும், பொன்னுக்கும், பொருளுக்கும் பண்பிற்கும், பகட்டிற்கும் அடிமையாகலாம். ஆனால் அநீதிக்கு அடிமையாக முடியாதே." பழி வெறி கொண்ட பெண் புலியின் கண்களாகப் பளபளத்தன ஆயிஷாவின் அழகிய நயனங்கள்.

அண்ணாவின் முன்னிலையில் ஆக்ரோஷத்தோடு வாதாடிய அன்றைய ஆயிஷாவின் போக்கு இன்றுவரை இம்மியளவும் மாறவில்லை என்பதை அறிந்த வேங்கடாத்திரிக்கு வேதனையாகத்தான் இருந்தது. அவள் தனது நெஞ்சத்திலே வஞ்சத்தை வேதனை நீரூற்றி வளர்த்து வருகிறாள் என்றறிந்தபோது வருத்தமாகவும் இருந்தது.

"அண்ணா ராமராயரின் செய்கையில் நீ குறை காணுவதுதான் அநீதியாக இருக்கிறது, ஆயிஷா!" என்றான் வேங்கடாத்திரி அலுப்புடன். "உன் பெற்றோரின் மரணத்துக்கு என் அண்ணா எந்த விதத்திலும் பொறுப்பாளி அல்ல. நடந்ததைச் சொன்னால் நீ நம்ப மாட்டாயே என்றுதான் அவர் உன்னைத் தம் அன்பு மகளாக்கிக் கொண்டு வந்து ஆதரித்து வருகிறார். அடிமையாக எண்ணி அவர் உன்னைத் தம் தேவியாரின் அந்தப்புரத்துக்கு அனுப்பவில்லை."

அந்தி வேளையின் அமைதியே குலையும் வண்ணம் ஆயிஷா கடகடவென்று ஒரு வெறிச் சிரிப்பு சிரித்தாள். "இதையெல்லாம் நான் நம்ப வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்களா தளபதியாரே? அது இந்த ஜன்மத்தில் இல்லை. ஆதரவும் அந்தப்புர வாழ்வும் எனக்கு அளித்திருப்பது அன்பினாவல்ல. தாம் செய்த பாவத்துக்குப் பிராயச்சித்தமாகத்தான் இவற்றை யெல்லாம் எனக்கு உங்கள் அண்ணா அளிக்கிறார்" என்றாள் ஆயிஷா.

எத்தனையோ ஆசைகளோடு வந்தவன் வேங்கடாத்திரி. பாச வேகத்தில் படபடத்துப் போயிருந்தவன். அவன் ஆசைத் தீயைக்கூட அவித்து விட்டாள் ஆயிஷா. மாறாத அவள் மனப் போக்கைக் கண்டு அவன் உள்ளத்தில் வெறுப்பும் வேதனையும்தான் குமைந்தன. இத்தனை அழகிய உருவத்தின் உள்ளம் எப்படிக் கெட்டுக் கிடக்கிறது என்று அநுதாபப்பட்டான். மாறாதவளாய், மாற்ற முடியாதவளாய் நிற்கும் ஆயிஷாவின் மதிமுகத்தையே சில நிமிஷங்கள் பார்த்துக் கொண்டிருந்தவன் மௌனமாகத் திரும்பி நடக்க ஆரம்பித்தான். பத்தடிகூடப் போயிருக்க மாட்டான். விம்மல் ஒலி கேட்டு வியப்புற்றுத் திரும்பினான் வேங்கடாத்திரி. இரண்டு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு ஆயிஷாதான் குலுங்கக் குலுங்க அழுதுகொண்டிருந்தாள். அவள் கையிலிருந்த சிதார் வாத்தியம் அவள் காலடியில் புல் தரையில் கிடந்தது.

அந்தப் பேச்சை இந்த அழுகையோட ஒப்பிட்டுப் பார்த்து ஒன்றும் புரியாத நிலையில் அவள் அருகில் வந்தான் வேங்கடாத்திரி. நாணிக் கண் புதைத்து நிற்கும் நங்கையின் கரம் விலக்கி முகம் பார்க்கும் காவிய நினைவோடு, கரங்களுக்குள் முகம் புதைத்துக் கதறி அழும் காரிகையின் சிரம் வருடி அவள் மனம் குளிரச் செய்யலாமென்று வேங்கடாத்திரியின் உள்ளம் துடித்தாலும் அவளது ஆத்திரப் பேச்சையும் போக்கையும் எண்ணிய போது துணிவு ஏற்படவில்லை. ஆகவே உருண்டு கிடந்த வாத்தியத்தை எடுத்து இலேசாக அதன் தந்திகளை மீட்டியபடியே, "ஆயிஷா!" என்று அன்பொழுக அழைத்தான்.

அவளிடம் விம்மல்கள் அதிகமாயின.

"உங்கள் அன்பை என்னிடம் காட்டாதீர்கள். நான் பெண்ணே அல்ல. உங்கள் முன்னிலையிலேயே உங்கள் சகோதரரை இகழ்ந்து பேசுமளவுக்கு நான் எத்தனை கொடியவளாகி விட்டேன்."

"ஆயிஷா! நீ கொடியவளே அல்ல..."

"இல்லை. உங்கள் புகழ்ச்சிக்கு அருகதையற்றவள் நான். அலி ஆதில்ஷாவை அன்பு மகனாக ஏற்றவர் உங்கள் அண்ணா. அகமது நகர் நிஜாம்ஷாவின் அவமரியாதையை மன்னித்து மலை போல உயர்ந்தவர் உங்கள் அண்ணா. 'மிலேச்சர்கள்' என்று நீங்கள் இழிவாகக் கருதும் எங்களிடம் இத்தனை ஈடுபாடு கொண்டுள்ள ஒருவர் மீது எனக்குப் பழிவாங்கும் வெறிதான் மேலோங்கி நிற்கிறது. ஏனோ என்னால் அவரை மன்னிக்க முடியவில்லை. மன்னிக்க முடியாது. முடியவே முடியாது." சட்டென்று அவளது அழுகையும் விம்மலும் அடங்கின. பழைய வெறி அவள் கண்களில் பளபளக்கலாயிற்று.

பழிவாங்கும் வெறிக் குணம் - தன் குணத்தைப் பற்றி நினைத்து வேதனைப்படும் மனம் - இப்படியாக இருவித உணர்ச்சிகளாலும் ஆட்டி அலைக்கழிக்கப்படும் ஆயிஷாவை அமைதியோடு நோக்கினான் வேங்கடாத்திரி. வைராக்கியத்தில் இறுகிப்போன அந்த இதயத்தின் ஒரு பகுதி மெழுகாக உருகும் இயல்புடையது என்பதை அறிந்து கொண்டபோது அவளைப் புரிந்து கொள்ளவும் முடிந்தது. நாளெல்லாம் இந்த இரு மனங்களின் போராட்டத்துக்கு ஈடு கொடுக்கும் அவள் இறுதியில் பழிவாங்க வேண்டும் என்ற வெறிக் குணத்தினால் வெற்றி கொள்ளப்பட்டுச் சோபை குன்றிப் போகிறாள். அவளால் சிரிக்க முடிவதில்லை. உல்லாசமாக இருக்க அந்த எண்ணம் இடம் கொடுப்பதில்லை.

ஆயிஷாவின் இந்த நிலை கண்டு நெஞ்சம் நெகிழ்ந்த வேங்கடாத்திரி, அவள் மீது கொண்ட பாசத்தோடு பரிவும் சேரவே, "ஆயிஷா!" என்று அமைதியாக அழைத்தான். "எனக்காக இந்தச் சிதார் வாத்தியத்தைச் சற்று மீட்டுவாயா?" என்று அவளிடம் அதை நீட்டினான்.

அவனுடைய அமைதியும் பார்வையும் அவளை அடிமை கொண்டன. மந்திரத்தில் கட்டுண்டவள் போல அவனிடமிருந்து அந்த வாத்தியத்தை வாங்கி மீட்டி, அதிலிருந்து இசையை எழுப்பினாள். இல்லை, தன் இதயத்துச் சோகத்தையே பிழிந்து வடிக்கலானாள். கண்ணீரில் மிதந்த அவள் விழித் திரையிலே அவள் பெற்றோரின் உருவங்கள் வந்து விளையாடினவோ என்னவோ!

இருள் கவியும் வேளையிலே, இரவு மலரும் பூக்களின் நறுமணச் சூழலிலே, இதயத்தைத் தொடும் இசையிலே

போர்க்களத்திலிருந்து திரும்பிய தளபதியின் அயர்வு நினைவை அழுத்தவே தன்னை மறந்து மயங்கினான். இசையின் வயத்திலிருந்து மீண்டு, தன் நினைவு பெற்ற ஆயிஷா, மகிழ மரத்தில் சாய்ந்தபடி உறங்கிப் போன வேங்கடாத்திரியைப் பார்த்தாள். ஏதோ ஓர் இனம் தெரியாத பரிவு மிகுந்தது அவள் உள்ளத்தில். பெண் புலி பேடைப் புறாவாயிற்று. ஓசையின்றி ஒரு கொத்து மலர்களைப் பறித்துப் புல் தரையிலே விழுதென விழுந்து கிடந்த அவனது கரங்களின் மீது வைத்து விட்டுத் திரும்பிப் பார்த்தவாறே அந்தப்புரத்தை நோக்கி நடந்தாள்.

அன்பு செய்த அர்ச்சனைதானோ அது?

# 10

# வஞ்சம் புகுந்த நெஞ்சங்கள்

அமைதி இழந்து தவித்துக் கொண்டிருந்தார் அகமதுநகர் சுல்தான் ஹுசைன் நிஜாம்ஷா. கோல்கொண்டாவின் கூட்டுறவு கிடைத்தும் கூட ஏனோ அவர் உள்ளம் குதூகலம் கொள்ள வில்லை. கைவிட்டுப் போன கலியாண் கோட்டையை மறுபடியும் கைக் கொள்ளாதவரை அவருக்கு நிம்மதி ஏது?

தோல்வி தழும்பாக மாறவில்லை. பட்ட அவமானத்தின் ரணம் பச்சையாகவே இருந்தது. வேங்கடாத்திரியும் சித்தி ஹாஸனும் விளைவித்த அழிவுகளிலிருந்தும் அல்லல்களி லிருந்தும் மக்கள் இன்னும் நிமிரக்கூட இல்லை. அதற்குள் அடுத்த போருக்கு ஆயத்தம் செய்யலானார் அகமதுநகர் சுல்தான். கோல்கொண்டாவுக்கும் தௌலதாபாத்திற்கும் தூதுவர்கள் பறந்து கொண்டிருந்தார்கள். இரண்டு ராஜ்யங்களிலும் யுத்த முஸ்தீபுகள் மும்முரமாக நடக்கலாயின. பீஜப்பூரின் எல்லையிலே நேசப் படைகள் வந்து குவிந்தன. இப்ராஹிம் குதாப்ஷாவின் பெரும் படை அகமது நகருக்கு வந்து நிஜாமின் படைகளுடன் சேர்ந்து கொண்டது. தாக்குதலை ஆரம்பிக்கும் முன் ஒற்றர்கள் கொண்டு வரும் செய்திகளை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். நிஜாம்ஷாவின் பாசறையிலோ விருந்தும், கூத்தும்,

கேளிக்கை யுமாகத் திமிலோகப்பட்டுக் கொண்டிருந்தது. படையெடுத்துச் சென்று போரிட்டு வெற்றி காணுமுன்பே பலன் கண்டுவிட்டது போல மகிழ்ந்திருந்தார்கள் மன்னர்கள்.

ஒப்பந்தத்தை மீறி, குதப்ஷாவுடன் ஒன்று சேர்ந்து கொண்டு தம்மைத் தாக்கத் தருணம் பார்த்திருக்கும் செய்தி அறிந்த அலி ஆதில்ஷா செய்வதறியாது திகைத்தார். ஹுசைன் நிஜாம்ஷா தாம் இழந்த பகுதியை மீட்க இத்தனை சீக்கிரத்தில் வருவார் என்று எதிர்பார்க்கவில்லை. மறுபடியும் ராமராயரின் உதவியை நாடுவதைத் தவிர வேறு வழியில்லை ஆதில்ஷாவுக்கு. தற்காப்புக்கான முதல் நடவடிக்கைகளைச் செய்துவிட்டுத் தம் தளபதி சித்திஹாஸனுடன் ராமராயரைச் சந்திக்கக் கிளம்பினார்.

விஜயநகரத்திலே வீரர்களின் விளையாட்டை ரசித்துக் கொண்டிருந்தார் ராமராயர். இவ்வேளைகளில் ராயர் வீரர்களைப் பாராட்டிப் பரிசில்களை வழங்குவார். தாம் பூலம் கொடுத்துக் கௌரவிப்பார். எல்லாவற்றிற்கும் மேலாக வீர விளையாட்டுக் களிலே வெற்றி பெற்றவர்களுக்கு அழகிய பெண்களைப் பரிசாகக் கொடுத்தும் மகிழ்விப்பாரா ராயர்.

இத்தகையதொரு சந்தர்ப்பத்தில்தான் தூதுவன் ஒருவன், சமூகத்தைக் காண பீஜப்பூர் சுல்தான் வந்திருப்பதாக அறிவித்து வணங்கி நின்றான். வாள் வீச்சிலே வல்லமை காட்டி நின்ற காளை ஒருவனுக்குக் கண் வீச்சிலே வல்லவளான காரிகையின் கரம் பற்றிக் கொடுத்து விட்டு எழுந்த ராமராயரிடம் பீஜப்பூர் சுல்தானின் திடீர்வரவு எவ்வித வியப்பையும் ஏற்படுத்தவில்லை. எதிர்பார்த்திருந்ததொரு செய்தியேபோல அமைதியாக, "வந்தவர்களை வரவேற்று உபசரணைகள் செய்தாயிற்றல்லவா?" என்று கேட்டபடியே வெளியில் உள்ள தம் ரதத்தை நோக்கி நடக்கலானார் ராயர்.

வணங்கிநின்ற தூதுவன் வாயைப் புதைத்திருந்த கையை எடுக்கவில்லை. "தங்கள் இளவல் அமைச்சர் திருமலைராயர் விருந்தாளியைத் தக்கபடி வரவேற்று உபசரித்து விருந்து படைத்த பிறகுதான் என்னை இங்கு அனுப்பினார்கள். அவசர காரியமாம். ஆதில்ஷா தங்களை உடனே காண வேண்டுமென்று துடிக்கிறார்." அடர்ந்து செழித்து வளர்ந்து வளைந்து நின்ற தனது அழகான மீசையை முறுக்கி ஒதுக்கியவாறு மெல்ல நடந்து சென்று கொண்டிருந்த

ராமராயரின் பின்னால் நகர்ந்து கொண்டே இதை அறிவித்தான் அவன். அவனுக்குப் பதிலொன்றும் சொல்லாமலே தோளிலிருந்து சரிந்த துப்பட்டாவைத் தூக்கி மேலே போட்டுக் கொண்டு தமது ரதத்தில் ஏறினார் ராமராயர். சிறு அசைவையும் தாங்காத உயர்ஜாதி அசுவங்கள் இரண்டும் ரதத்தில் ராயர் ஏறியதும் உடலைச் சிலிர்த்துக்கொண்டு கிளம்பத் தயாராயின. லகானைக் கையில் எடுத்ததும் அவ்விரண்டு வெள்ளைப் புரவிகளும் வில்லிலிருந்து புறப்பட்ட கணைகளாயின.

அரண்மனையை அடுத்து நின்ற கம்பீரமான கட்டடத்தின் முன் போய் ரதம் நின்றது. விஜயநகரத்தின் செல்வச் சிறப்பையும், சிற்பச் செல்வத்தையும் அந்நிய நாட்டவர் அறிந்து கொள்ளும் வகையில் விருந்தினர்கள் தங்குவதற்காக அமைக்கப்பட்ட அழகான அரண்மனை அது. ராமராயர் உள்ளே நுழைந்தபோது ஆடல் மங்கையர் ஒதுங்கிக் கொண்டனர். ஹுக்காவை ரசித்துக் கொண்டிருந்த ஆதில்ஷா அதை அப்படியே ஒருபுறமாக வைத்து விட்டுத் தம் இருக்கையிலிருந்து எழுந்து வந்து ராமராயரின் நீட்டிய கைகளுக்குள் புகுந்து அவரை ஆரத் தழுவிக் கொண்டார்.

"கலியாண் கோட்டையைக் கைப்பற்ற மறுபடியும் படை திரட்டுகிறான் நிஜாம்ஷா. இந்தத் தடவை அவனுக்கு உதவியாக குதப்ஷாவும் கூடச் சேர்ந்து விட்டான்" என்று படபடத்தார் ஆதில்ஷா.

"இது பழைய செய்தியல்லவா? இரண்டு மாதங்களுக்கு முன்பே இதை என் வேலகாரர்கள் எனக்கு அறிவித்து விட்டார்களே!"

"அப்படியா?... தெரிந்துமா...?" என்று திகைத்தார் ஆதில்ஷா.

"இன்னும் முன்னாலேயே உங்களை இங்கு நான் எதிர்பார்த்தேன். வராமல் போகவே தனித்து நின்றே பகைவனை ஓட்ட முற்பட்டு விட்டீர்களோ என்று எண்ணியிருந்தேன்." அவர் பேச்சில் ஏளனம் கலந்திருப்பதை உணர்ந்தார் ஆதில்ஷா. 'என் உதவி இல்லாமல் உன்னால் என்ன செய்துவிட முடியும்?' என்ற இறுமாப்போ இந்தப் பேச்சின் பொருள்? சிந்தனையினால் சிறுத்துவிட்ட ஆதில்ஷாவின் முகத்திலிருந்து அவர் உள்ளத்தில் ஓடும் எண்ணங்களைத் தெரிந்து கொண்டார் மகா மண்டலேசுவரரான ராமராயர்.

“முன்பு பட்ட அடி அதற்குள்ளாகவா மறந்து விட்டது அகமதுநகரானுக்கு?” என்றார்.

“அடிபட்டவனுக்குத்தானே ஆத்திரம் அதிகமாக இருக்கும்? அவமானத்தைத் துடைத்துக் கொள்ளக் கோல்கொண் டாவின் பக்கபலத்துடன் பாய்வதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறான்” என்றார் ஆதில்ஷா தன் இயலாமையை எண்ணி வேதனைப்பட்டவாறு எங்கேயோ பார்த்துக் கொண்டு.

ராமராயர் கடகடவென்று சிரித்தார். அவரது வெண்கலக் குரலில் அந்த வீடே கலகலத்தது. வெறுப்புக் கலந்த வியப்போடு திரும்பிய ஆதில்ஷாவை அநுதாபத்தோடு பார்த்தார் ராமராயர். “என்மீது கோபம் போலிருக்கிறது. அப்படித்தானே? அகமதுநகர் படையெடுக்கும் செய்தி அறிந்தவுடனேயே நான் உதவிக்கு விரைந்து வரவில்லை என்ற தாபம் போலிருக்கிறது? உங்கள் உள்நாட்டுப் பூசல்களில் நான் தலையிடுவதை உங்கள் அவையிலேயே அநேகர் விரும்பவில்லை என்பதை அறிந்தேன்.. அதனால்தான் நான் ஆர்வம் காட்டவில்லை” என்று ராமராயர் தம் உள்ளத்தைத் திறந்து காட்டியபோது ஆதில்ஷாவின் முகம் மலர்ந்தது.

“பீஜப்பூரின் ஆதிக்கம் அவைத் தலைவர்களின் கையில் இல்லையே. ஆதில்ஷாவின் விருப்பம் மாறுபட்டிருந்தால் அல்லவா நீங்கள் வேறுபட்டுப் போவதற்கு?” என்று ஒட்டுதலோடு பேசினான் இத்தனை நேரம் மௌனமாக இருந்த தளபதி சித்திஹாஸன்.

“அது போகட்டும். கல்யாண் கோட்டை மீது பாய்வதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறேன் இப்ரஹிம் என்று கூறினீர்களே? இது எத்தனை நாளைக்கு முற்பட்ட செய்தி?”

“ஏன்...?” என்றார் ஏதும் புரியாமல் பீஜப்பூர் சுல்தான்.

“மிகப் பழைய தகவலோடு என்னைக் காண வந்திருக் கிறீர்கள். கல்யாண் கோட்டை கைமாறியாயிற்றே. அது தெரியுமா உங்களுக்கு?” என்றார் ராமராயர்.

“என்ன...?” சவுக்கடி பட்டவனைப்போலத் துள்ளினான் தளபதி.

“எப்படிக் கூறுகிறீர்கள் இதை?” என்று கேட்டார் ஆதில்ஷா. ஆச்சரியம் அவர் விழிகளை அகலமாக்கி இருந்தது. தங்கள் நாட்டில் உள்ள கோட்டையை எதிரி ஆக்கிரமித்துக் கொண்ட செய்தி தங்கக்குத்

தெரியுமுன் அண்டை நாட்டுக் காரருக்குத் தெரிந்த அதிசயத்தை அவர்களால் நம்பவே முடியவில்லை.

"எப்படிக் கூறினேன் என்றுதானே கேட்டீர்கள்? காற்றுப் புக முடியாத இடத்தில் கூட விஜயநகரத்தின் வேவுகாரர்கள் புகுந்து செய்திகளைச் சேகரித்து வந்துவிடுவார்கள்" என்றபோது ராமராயர் முகத்தில் பெருமிதம் பளபளக்கத்தான் செய்தது. "நேற்று மாலை வந்த ஓலையின்படி உங்கள் முஸ்திபுகளை முறியடித்துக் கல்யாண் கோட்டையைக் கைப்பற்றி விட்டான் ஹுசைன் நிஜாம்ஷா. இதே செய்தியைத் தாங்கிக் கொண்டு உங்கள் தூதுவனும் வந்து கொண்டிருப்பான் என்று நினைக்கிறேன்"

"ஆஹா!" என்று கர்ஜித்தான் சித்தி ஹாஸன். பொன் னாலான மதுக் கிண்ணத்தை உருத் தெரியாமல் பிண்டமாகப் பிசைந்து கொண்டிருந்தன அவன் விரல்கள். "விஜய நகரத்துக்கு நான் வரவில்லை, நீங்கள் மட்டும் போய்வாருங்கள் என்றேன். ஆதில்ஷா சம்மதிக்கவில்லை. கலியாண் கோட்டையைக் காப்பதற்கு நான் போயிருந்தால் இந்த விபரீதம் நேர்ந்திருக்காதோ என்னவோ...?" என்று குமுறினான் சித்திஹாஸன்.

"நடந்ததைப் பற்றி விமரிசனம் வேண்டாம். நடக்க வேண்டியதைக் கவனிப்போம்" என்றார் ஆதில்ஷா.

"நீங்கள் இன்று வருவதற்கு முன்பே நான் முடிவு செய்து விட்டேன். நம்பிக்கைத் துரோகம் செய்து நடுப் போரில் நம்மைக் கைவிட்டுச் சென்ற கோல்கொண்டாவுக்கு ராமராயர் யார் என்பதை உணர்த்த வேண்டும் என்று. ஆகவே எனக்காகவும் உங்களுக்காகவும் விஜயநகரத்துப் படைகள் அகமது நகரையும் கோல்கொண்டாவையும் முற்றுகையிடும். நீங்கள் நாளைக் காலையிலேயே இங்கிருந்து கிளம்பிப் போய் முன்னேறி வரும் நிஜாம்ஷாவின் படைகளைத் தடுப்பதற்கான ஏற்பாடுகளை செய்யுங்கள். தொடர்ந்து உங்கள் உதவிக்கு விஜயநகரின் பெரும்படை வந்து சேரும்" என்று ஆதில்ஷாவுக்கு உறுதியும் தைரியமும் அளித்துவிட்டுக் கிளம்பினார் ராமராயர்.

அப்போதுதான் கலியாண் கோட்டை பறிபோன செய்தியைத் தாங்கிய ஆதில்ஷாவின் தூதுவன் பரபரப்புடன் உள்ளே நுழைந்தான். அவன் கொண்டு வந்த லிகிதம் பிரிக்காமலே, படிக்காமலே

ஆதில்ஷாவின் கைகளில் கசங்கியது. "சித்திஹாஸன்! நமது வேவுப் படைகளின் திறமையின்மையை வேற்று நாட்டானின் முகத்துக்கு நேரே நாம் புரிந்து கொள்ள நேர்ந்த துர்ப்பாக்கியத்தை எண்ணி வேதனைப்படத்தான் வேண்டும்" என்றார் எல்லையற்ற மனத்தாங்கலுடன்.

"இது போன்று இன்னும் பல விஷயங்களிலும் விஜயநகரின் திறமைகளைக் கண்டு நாம் பொறாமைப்படத்தான் வேண்டி இருக்கிறது" என்றான் பீஜப்பூரின் பிரதம தளபதி.

உதவி கேட்டு ஓடி வந்த கையோடு அதிகாலையில் அகமது நகருக்குத் திரும்பியாக வேண்டிய பீஜப்பூர் சுல்தான் அலிஆதில்ஷா நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தார் அரண்மனையில். சித்திஹாஸனுக்குத் தூக்கம் வரவில்லை. எந்த இரவில்தான் அவன் தூக்கத்தின் இனிமையைப் பூரணமாக அநுபவித்திருக்கிறான்? அழகிய விஜயநகரம் நிலவைப் போர்த்திக் கொண்டு அமைதியான உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது. விடுதியிலிருந்து வெளிப்பட்ட சித்திஹாஸன் விஜயநகரின் விசாலமான வீதியிலே காலாற நடந்து கொண்டிருந்தான். தூரத்தில் எங்கோ தெருக் கூத்தில் நடிக்கும் வேஷதாரியின் வீரவாசகங்கள் காற்றில் மிதந்து வந்தன. "டேய்! நில் அப்படியே! வீரமிருக்கு மானால் எடு உன் வாளை. ஆண்மை இருக்குமானால் உரிமை யாருக்கு என்பதைப் போரிட்டு முடிவு செய்வோம்."

தெருக் கூத்துக் கதாநாயகன் நின்றானோ இல்லையோ சித்திஹாஸன் அப்படியே நின்றான். நிலவொளியிலே நிர்மானுஷ்யமாக நெடுந்தூரத்துக்கு நீண்டு கிடந்த கடை வீதியைப் பார்த்தான். பல வருஷங்களுக்கு முன்னால் அதே ராஜ வீதியில் நண் பகல் வேளையில் நடந்த சம்பவம் ஒன்று நினைவில் நெளிந்தது. யாருமற்றிருந்த அந்த வீதி நொடிப்பொழுதில் மக்கள் நடமாட்டம் மிகுந்து கலகலப்பாக மாறியது. அலங்கார ஆடையணிந்த ஆரணங்குகளும் உல்லாச புருஷர்களும் வேற்று நாட்டு வணிகர்களும் சாரி சாரியாகப் போய்க் கொண்டிருந்தனர். வீரர்களும், பிரபுக்களும், அரண்மனையிலே அந்தஸ்துப் பெற்ற அதிகாரிகளும் அவரவர் தகுதிகளுக்கேற்றபடி குதிரைகளிலும் பல்லக்குகளிலுமாக ஊர்ந்து கொண்டிருந்தனர். அப்போது...

அழகியதொரு குதிரையிலே ஆடம்பரமாகப் பவனி வந்து கொண்டிருந்தான் ஒரு சுந்தர வாலிபன். கட்டுமஸ்தான உடல்,

கம்பீரமான தோற்றம்; காளைப் பருவம். முஸ்லிம் இனத்தைச் சேர்ந்த அவன் விஜயநகரின் அண்டை நாடான கோல்கொண் டாவின் இளவரசன் இப்ரஹிம். தன் அண்ணா ஜம்ஷிட்டின் சதிக்குப் பயந்து உயிரைக் கூர்த்துக் கொள்ள ஓடி வந்திருந்தான். ஒளிய வந்தவனுக்கு உதவிகள் செய்து ஆதரித்து அந்தஸ்தும் அளித்துக் கௌரவித்திருந்தார் ராமராயர். தமது சொந்த உடைமைகளை நிர்வகிக்கும் பொறுப்பையும் இப்ரஹிமுக்கு அளித்து ஏற்றமுடன் வாழ வகை செய்திருந்தார். சொந்த நாட்டு அரசியலிலே அல்லல்பட்டவன் அந்நிய நாட்டிலே ஆனந்தமாக வாழ்ந்து வந்தான்.

குதிரையைத் தன் இச்சைப்படி செல்லவிட்டு ராஜ பாட்டையின் நாகரிகக் கோலா கலத்தைக் கவனித்தபடி மெல்லச் சென்று கொண்டிருந்த அவன் முன்னால் திடீரென்று நாலைந்து குதிரை வீரர்கள் வந்து நின்றார்கள். அவர்களில் பிரதானமாக விளங்கியவன் பருத்த உடலும் கருத்த நிறமும் காலனைப் போன்ற தோற்றமும் கொண்டவன். பெயர் ஆம்பர்கான். வாள் வலிமையையும் தோள் வலிமையையுமே வியாபாரப் பொருள்களாகக் கொண்டு பாரதத்து மன்னர்களின் அவையிலே சேர்ந்து பணி புரிய அபிசீனியாவிலிருந்து வந்த மூன்று சகோதரர்களில் இருவர் விஜயநகரத்திலும் ஒருவன் பீஜப்பூரிலும் புகுந்தார்கள். தன் சாகஸங்களால் ராமராயரின் அன்பைப் பெற்றான் ஆம்பர்கான். பீஜப்பூரின் படையிலே சேர்ந்து ஏற்றம் பெற்றான் சித்திஹாஸன்.

இப்ரஹிமின் வழி மறித்து நின்ற ஆம்பர்கானின் முகத்தை ஆத்திரம் பளபளக்க வைத்திருந்தது. "ஊரை விட்டு ஓடி வந்து ஒளிந்து வாழும் உனக்கு என் ஜாகீரிலே என்ன ஏற்றம்? உழைத்துப் பெற்ற என் உரிமையை ஓடுகாலி நீ வந்து பறித்துக் கொண்டாயே! என் வழியிலிருந்து ஒதுங்கி விடு" என்று ஆர்ப்பரித்தான் ஆம்பர்கான்.

கோல்கொண்டாவின் வருங்கால குதப்ஷா ஆத்திர மடையாமல் அமைதியாகவே பதில் கூறினான். "மனனர்கள் தங்கள் உடைமைகளை யாருக்கு வேண்டுமானாலும் உரிமையாக்குவார்கள். உன் உரிமையை நானா வேண்டிப் பெற்றேன்? ராமராயர் விரும்பிக் கொடுத்தால் நான் வேண்டாமென்று சொல்லவா? வீண் வம்புக்கு வராதே. வழி விடு" என்று தன் குதிரையை ஒதுக்கி ஓட்டலானான் இப்ரஹிம்.

ஆம்பர்கானின் ஆதிக்கத்தில் இருந்த உடைமைகளைத் தான் இளவரசன் இப்ரஹிமின் பொறுப்பிற்கு மாற்றியிருந்தார் ராமராயர்.

ஜாகீரைப் பறிகொடுத்த ஆத்திரத்தைப் பறித்துக் கொண்டவர் மீது காட்டாமல் பெற்றுக் கொண்டவன் மீது கட்டிப் பாய்ந்தான் அந்த அபிசீனிய வீரன்.

"ஏ, கோழை! ஏன் ஓடுகிறாய்? எடு உன் வாளை. வாழ்வதற்கு உரிமை யாருக்கு என்பதை முடிவு கட்டுவோம்" என்று நடு வீதியில் நின்று ஆர்ப்பரித்தான் ஆம்பர்கான்.

தன்மானத்தை இழக்க விரும்பாத இப்ரஹிம் குதிரையி லிருந்து இறங்கினான். ஆனால் அப்போதும் ஆத்திரப்பட வில்லை. அமைதியாக, ஆம்பர்களின் செயல்முறையற்றது என்பதைக் கூறித் தன் வாளுக்கு வேலை இல்லாமல் செய்யவே விரும்பினான். ஆனால் ஆத்திரத்திலே கொதிப்பேறிய அபிசீனியனோ அடாத முறையில் அத்துமீறி வார்த்தைகளைக் கொட்டவே அதற்கு மேலும் தாங்க மாட்டாத இப்ரஹிம் தன் வாளை உருவ வேண்டியதாயிற்று. நடு வீதியிலே ராயரின் ஜாகீர் யாருக்கு உரிமை என்பதைத் தீர்மானிக்க அவ்விருவரின் பட்டாக் கத்திகளும் முட்டி மோதிக் கொண்டன. உரிமையைப் பறிகொடுத்த பதற்றத்தோடு கண்மண் தெரியாமல் ஆவேசமாகத் தன் வாளைச் சுழற்றினான் ஆம்பர்கான். அவனுடைய தாக்குதல்களை அமைதியோடு லாகவமாகச் சமாளித்து அவனைக் களைப்படையச் செய்த இப்ரஹிம், இறுதியிலே தன் வாளை மின்னல் வேகத்தில் சரேலென்று அவன் இதயத்தில் பாய்ச்சி நியாயம் தன் பக்கலில் இருக்கிறது என்பதை நிலைநாட்டினான்.

தன் சகோதரனின் இதயத்திலிருந்து கொப்பளிக்கும் குருதியைக் கண்டு குமுறினான் உடன் வந்த உடன்பிறந்தான். அவனும் மற்றவர்களும் தங்கள் உடைவாளை உருவித் தனித்து நின்ற இப்ரஹிமைத் தாக்க வந்தார்கள். தற்காப்புக்காக மற்றும் இருவரை மாய்க்க வேண்டிய அவசியம் இளவரசனுக்கு ஏற்பட்டது. கறை படிந்த தன்கத்தியை உயிர் துறந்த அந்த அபிசீனியனின் உடையிலேயே துடைத்துக் கொண்டு குதிரைமீதேறித் தன் வழியே சென்றான் இப்ரஹிம்.

விஜயநகரத்து வீதியை ஆம்பர்கான் தன் ரத்தத்தினால் செம்மையாக்கிய அந்தக் காட்சி - குருதி வெள்ளத்திலே குப்புற விழுந்து துடிக்கும் தன் சகோதரன் ஆம்பர்கானின் காட்சி - நினைவில் எழுந்த போது சித்திஹாஸனின் கண்கள் கலங்கின. உடல் துடித்தது, ரத்தம் கொதித்தது. தன் சகோதரர்களைக் குரூரமாகக் கொன்ற அந்த

இளவரசன்தான் இன்று கோல் கொண்டாவின் குதப்ஷா இப்ரஹிம். அன்றைக்கே சித்திஹாஸனின் இதயம் இதற்குப் பழிக்குப் பழி வாங்குவேன் என்று சபதம் செய்திருந்தது. நியாயம் யார் பக்கம் என்பதைப் பற்றிச் சிந்திக்கச் சகோதர பாசம் இடம் தரவில்லை.

"சரியான சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. வஞ்சம் தீர்த்து என் நெஞ்சத்தைக் குளிர்விப்பேன்" என்றான் வாய் விட்டு சித்திஹாஸன். நிலவு மேகத்துக்குள் புகுந்தது. தன் சகோதரர்களின் விதியை முடித்த அந்த விசாலமான வீதியிலே அதற்கு மேலும் நடந்து செல்லப் பிடிக்காத அவன் அரண்மனைக்குத் திரும்பி நடந்தான்.

தூக்கம் பிடிக்காமல் புரண்டு கொண்டிருந்தாள் துங்கபத்திரை. 'பெற்றோர்களைக் கொன்றதற்காகப் பழி வாங்கத் துடிக்கும் ஆயிஷா, சகோதரனைக் கொன்றதற்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ளக் காத்திருக்கும் சித்திஹாஸன், அண்ணாவை அவமானப்படுத்திய அகமது நகர் சுல்தானுக்குப் பாடம் கற்பிக்கத் திட்டமிட்டுள்ள வேங்கடாத்திரி - அப்பப்பா! இவர்களின் இந்தப் பழி வாங்கும் மனப்பான்மையெல்லாம் இந்த நாட்டை எந்த நிலையில் கொண்டு போய் நிறுத்தப் போகின்றனவோ?' என்று பெருமூச்செறிந்தவாறு இமைகளை மூடினாள் அந்த நதிக் கன்னி.

## 11

# அழிவுக்கு அஸ்திவாரம்

அலி ஆதில்ஷாவுக்கு உதவுவதாக வாக்களித்து வழியனுப்பியதும் ராமராயர் படையெடுப்பிற்கான காரியங்களைத் துரிதப்படுத்துவதில் முனைந்தார். தோல்வி என்ற பேச்சுக்கே இடமில்லாத வகையில் ராமராயரின் செல்வாக்கும் படைகளும் பலம் பெற்றிருந்தன. ஆனாலும் தன்னிச்சைப்படி எதையும் செய்ய விரும்பாத அவர் அகமதுநகர், கோல்கொண்டா ஆகியவற்றின் மீது படையெடுக்க அரசவைத் தலைவர்களின் அமைதியைப் பெற விரும்பினார். சம்பிரதாயத்தைப் புறக்கணிக்க விரும்பாத செயல்தான் இது

வேங்கட விலாச மண்டபத்திலே மகா மண்டலேசுவரரு டைய அவசர அழைப்பின் பேரில் அவைத் தலைவர்களும் பெருங்குடி மக்களும் வந்து கூடி இருந்தார்கள். அமைச்சர் திருமலையும் தளபதி வேங்கடாத்திரியும் அண்ணாவின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். ஆலோசனை மண்டபத்துக்கு வந்த அரவீட்டுத் தலைவர், அகமதுநகர், கோல்கொண்டா ஆகிய நாடுகளின் மீது போர் தொடுக்க வேண்டிய காரணங்களை அரசியல் சாகஸத்துடன் அழகாக விளக்கி அவர்களின் ஒப்புதலைப் பெற்ற பின் சபை கலைந்தது. வேங்கடாத்திரி, திருமலை, ராமராயர் மூவர் மட்டுமே இப்போது அந்த வேங்கட விலாச மண்டபத்திலே வீற்றிருந்தார்கள்.

கண்டகார நாயகர்களுக்கு உரிய தாக்கீதுகள் அனுப்பப் பட்டன. யுத்தத்துக்குச் செல்லும் நால்வகைப் படைகளின் தேவை களை அறிந்து, எவ்விதக் குறையுமில்லாமல் கவனிப்பவர்கள்தான் கண்டகார நாயகர்கள். போருக்குக் கிளம்புவதற்கான நல்ல நாளைக்கு குறித்து அனுப்பும்படி சாகுனிகர்களுக்கு செய்தி அனுப்பினார்கள். இனி யார் யார் எங்கு எப்படிச் சென்று போரை நடத்த வேண்டும் என்பதை விஜய நகரத்தின் உயிர் நாடிகளாக விளங்கும் அரவீட்டுச் சோதரர் மூவரும் திட்டமிடலாயினர்.

“வேங்கடாத்திரி! நீ, ஜகதேவராவ், அயின் உல் முல்க் ஆகியவர்களுடன் கோல்கொண்டாவின் தென் பகுதியைத் தாக்கி முன்னேறு. உனக்கு உதவியாக ஆதில்ஷாவின் படைகளில் ஒரு பகுதியையும் அனுப்பி வைக்கிறேன்.”

“அப்படியே ஆகட்டும், அண்ணா!” என்றான் வேங்கடாத்திரி. “குதப்ஷாவின் கர்வத்தைக் குலைக்க நம்முடைய படைகள் மட்டுமே கூடப் போதுமே!”

“தோற்றவன் இத்தனை விரைவில் மறுபடி போருக்கு வருவதென்றால்... நாம் அவன் பலத்தைக் குறைவாக மதிப்பிடக் கூடாது, வேங்கடாத்திரி. அலி ஆதில்ஷாவின் படைகள், பீடார் ராஜ்யத்தின் சுல்தான் அலி பரீத்ஷாவின் படைகளுடன் நான் கலியாண் கோட்டையை விடுவிக்கப் போகிறேன். நிஜாம் ஷா, குதப் ஷா இவர்கள் இரண்டு பேரின் பெரும் படையும் இங்கு தான் கொண்டு வந்து குவிக்கப்பட்டிருக்கிறது. இவர்களை முறியடித்துக் கலியாண் கோட்டையைக் கைப்பற்றியபின் அகமது நகருக்குள் புகுந்து அதன்

தலைநகர் வரை செல்வத என் திட்டம். இதற்குள் நீ கோல் கொண்டாவைத் தக்கபடி கவனித்துக் கொள்ள வேடும். "உன் செயலை முழுமையாக்க அகமது நகர் வழியாக நானும் கோல் கொண்டாவிற்குள் புகுந்து உதவுகிறேன்" என்று தம் போர்த் திட்டத்தை விளக்கினார் ராமராயர்.

இத்தனை நேரம் எதிலும் கலந்து கொள்ளாமல் ஆனால் எல்லாவற்றையும் கவனித்து வந்த திருமலை தாங்க முடியாத ஆத்திரத்துடன், "வாளெடுத்துப் போர் புரியவே தெரியாதவன், போர்க்களத்தையே அறியாதவன் என்று என்னைப் பற்றி எண்ணமா அண்ணா உங்களுக்கு?" என்று கேட்டான். உள்ளத்தில் குமுறும் கோபம் அவன் உதடுகளின் படபடப்பிலிருந்து தெரிந்தது.

ஆத்திரத்தினால் படபடக்கும் தம்பி திருமலையை அமைதியுடன் நோக்கினார் ராமராயர். அவர் பார்வையையும், அவர் சொல்லப் போகும் பதிலையும் கேட்க விரும்பாத திருமலையே தொடர்ந்தான். "எந்தப் போரானாலும் என்னை விலக்கியே திட்டமிடுகிறீர்களே, அது ஏன்? வேங்கடாத்திரி இல்லாத போர் உண்டா? அவனை விடப் போர்க் கலையிலே எந்த வகையில் நான் குறைந்தவன்? நேற்று வந்த கத்துக் குட்டி களுக்கெல்லாம் பட்டம் பதவிகளை கொடுத்துப் பாராட்டு விழா நடத்துகிறீர்கள். எத்தனையோ போர்களில் உங்களோடு தோளோடு தோள் கொடுத்துப் போரிட்ட என்னை இப்போ தெல்லாம் எங்குமே அனுப்பாத காரணந்தான் என்ன?" எரியும் தீயாக ஜ்வலித்தான் திருமலை.

"இல்லாதவர்களுக்குத்தான் எதையும் கொடுப்பார்கள். நிறைந்த பாத்திரத்திலிருந்து எடுத்துத்தான் குறைவான பாத்திரத்திற்கு இட்டு நிரப்புவார்கள். உன் வீரத்திலோ திறமை யிலோ நான் என்றுமே குறைபாடு கண்டதில்லை திருமலை. தலைநகரிலே தகுதி வாய்ந்த நீ இருக்கிறாய் என்ற தைரியத்தினால்தான் விஜயநகரம் தான் திட்டமிட்டு நடத்தும் போர்களிலே வெற்றி வாகை சூடி வருகிறது. எல்லோரும் போர்க் களத்துக்குச் சென்று விட்டால் பிறகு நாட்டை நிர்வகிப்பதோ, போர்க்களத்திலே உள்ள வீரர்களின் தேவைகளைக் கவனிப்பதோ யார்?" என்றார் ராமராயர்.

திருமலையின் ஆத்திரம் அர்த்தமற்றதல்ல. முன்பு ஒரு தடவை ராமராயர் தலைநகரில் இல்லாத போது திருமலை வேங்கடாத்திரியுடன்

சேர்ந்து கொண்டு புரட்சி நடத்தி ஆட்சிப் பொறுப்பைக் கைப்பற்றிக் கொண்டதை அவரால் மறக்க முடியுமா? அதன் பிறகு ராமராயர் தலைநகரிலே வேங்கடாத்திரியையும் திருமலையையும் தனித்திருக்க விடுவதே இல்லை. அது மட்டுமல்ல, எந்தப் போரையும் திருமலையிடம் ஒப்படைப்பதுமில்லை. அந்தப் புரட்சியின் வித்து திருமலைதான் என்று அவருக்குத் தெரிந்து விட்டதே அதற்குக் காரணம். அதனால்தான் அவனை அதன் பிறகு தனிமைப்படுத்தியே செயல் புரிந்து வந்தார்ா ராமராயர். ஆனால் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் சமத்காரமாகப் பதில் சொன்னார் அவர்.

“உங்கள் சமாதானங்கள் எதுவும் நியாயமாகப் படவில்லை எனக்கு. வேண்டுமென்றே என்னை நீங்கள் ஒதுக்கி உதாசீனப் படுத்துகிறீர்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடியாதவனல்ல நான்” என்று கூறியபடியே விருட்டென்று அங்கிருந்து வெளியேறினான் திருமலை.

முதுமையின் முறுக்கேறிய ராமராயரின் முகத்தில் இளநகை தோன்றியது. வேகமாக வெளியேறிப் போகும் திருமலையையே வெறித்துப் பார்த்தபடி சிரித்துக் கொண்டிருந்தார் உள்ளூற. சினந்து சென்ற சின்னண்ணா திருமலையையும் சிரிக்கும் பெத்தண்ணா ராமராயரையும் பார்த்தபடி சிந்தனையில் ஆழ்ந்து போனான் வேங்கடாத்திரி.

தலைநகரை நோக்கித் தளவாய்களும் அமர நாயகர்களும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய படைகள் விஜயநகரத்தில் வந்து குவிந்த வண்ணமிருந்தன. சாகுனிகர்கள் வகுத்துக் கொடுத்ததொரு நல்ல நாளில், மங்கல வேளையில் ராமராயர் பட்டத்து யானை மீது ஏறி அமர்ந்தார். இரண்டு தலைமுறைகளைக் கண்ட கிழட்டு யானை அது. ஆனாலும் கம்பீரம் குன்றவில்லை. விஜயநகரத்து யானைப் படையிலே மிகப் பெரியது, உயர்ந்தது, அந்த யானைதான். அதற்கு உயர்ந்த அணிமணிகளைக் கொண்டு அலங்கரித்திருந்தார்கள் பொருத்த மாக. அதன் இரண்டு காதோரங்களிலும் நல் முத்துக்களைக் கொத்தாக்கிய குஞ்சலங்கள் இரண்டு தொங்கிக் கொண்டிருந்தன. கரிய உடல் ஆடி அசையும் போது அந்த வெண்முத்துச் குஞ்சங்கள் கலகலத்து ஒளிவீசிப் பளபளப்பது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். அந்த யானையின் உயர்ந்த நெற்றியிலிருந்து துவளும் துதிக்கைவரை அணிவித்திருந்த முக படாத்தில் நவரத்தினங்களையும்

வைத்து இழைத்திருந்தார்கள். தன்மீது விழும் சூரிய கிரணத்தை வண்ண ஒளிகளாக்கி வாரி இறைத்தது அது. மத்த கஜத்தினுடைய உடலின் கருமையை மறைப்பதற்குத் தானோ என்னவோ அதன் முதுகில் வண்ணப் பட்டுக்களைக் கொண்டு உருவாக்கிய அங்கியை இருபுறமும் தரையில் புரளும்படி போர்த்தியிருந்தார்கள். தங்கத்தாலாகிய அம்பாரியிலே போர் அனுபவத்தாலும், உருவத்தாலும் முதுமையடைந்து ஆனால் உள்ளத்தாலும் செயல்களாலும் வாலிபராக விளங்கிய ராமராயர் தமது மீசையைச் சொகுசாக ஒதுக்கி விட்டவாறு உட்கார்ந்திருந்தார்.

நீண்டு வளைந்த, தங்கப் பூண் கட்டிய தந்தங்களில் தொங்கும் குஞ்சங்கள் அசையக் கம்பீர நடை போட்டுச் சென்று கொண்டிருந்தது விஜயநகர சாம்ராஜ்யத்தின் பட்டத்து யானை. அதன் இரு பக்கத்திலும் வேலும் வாளும் தாங்கிய வீரர்கள் குதிரைகளில் அணிவகுத்து வந்து கொண்டிருந்தார்கள். அந்தக் குதிரைப் படையணிக்குத் தலைவனாக, நடுநாயகனாக ஒரு வெண் புரவியில் வந்து கொண்டிருந்தான் வேங்கடாத்திரி.

இதன் பின்னால் மற்றுமுள்ள யானைப் படைகளும் ஏராளமான குதிரைப் படைகளும் கணக்கிலடங்காத காலாட் படை களும் வெள்ளமெனப் பெருகியபடி தொடர்ந்து கொண்டிருந்தன. இவைகள் கிளப்பிய புழுதிப் படலம் பகலவனின் ஒளியை மறைத்துக் கொண்டது.

விஜயநகருக்கு வெளியே கூடாரமிட்டுத் தங்குவதற்காகவே இத்தனை கோலாகலமுடன் அவர்கள் போய்க் கொண்டிருந் தார்கள். பகையரசனின் மீது படையெடுத்துக் கிளம்புமுன் ஒரு சில நாள், நகருக்கு வெளியே முகாமிடுவது வழக்கம். இதை 'வேலிகுதாரா' என்பார்கள். சாம்ராஜ்யத்தின் பல்வேறு பகுதிகளிலு முள்ள தளவாய்களும் அமரநாயகர்களும் வந்து கலந்து கொள்வதற்கு அவகாசமளிக்கவே இந்தக் கால இடைவெளி.

குறிப்பிட்ட பெருவெளியை அடைந்ததும் ராமராயர் யானை மீதிருந்து கீழிறங்கினார். நன்கு அலங்கரிக்கப்பட்ட அவரது குதிரை தயாராக நின்று கொண்டிருந்தது. அதன் அருகே வில்லும் அம்பும் தாங்கிய வீரன் ஒருவனும் நின்று கொண்டிருந்தான். தம் அசுவத்தின் மீது தாவி ஏறிய ராமராயரிடம் அந்த வீரன் தான் தாங்கி நின்ற

வில்லையும் அம்பையும் பணிவுடன் நீட்டினான். அதைப் பெற்றுக் கொண்ட அவர், தாம் படையெடுத்துச் செல்லும் நாடு உள்ள திசையை நோக்கி வில்லிலே நாணேற்றி ஓர் அம்பை எய்தார். கொம்பு வாத்தியங்கள் முழங்கின. சங்கம் ஒலித்தது. முரசு அதிர்ந்தது. நால் வகைப் படைகளும் நாலா திசைகளிலும் வகை வகையாகப் பிரிந்து ஒதுங்கின. நடுவிலே வீரர்கள் வெகு வேகமாக ராயர் தங்குவதற்கான கூடாரத்தை நிர்மாணிக்க லானார்கள். இதைத் தவிரப் படை வீரர்களுக்காகப் பல்லாயிரக் கணக்கான கூடாரங்களும் வரிசை வரிசையாக நிர்மாணமாகிக் கொண்டிருந்தன. விஜயநகரமே வேறு இடத்துக்கு இடம் பெயர்ந்து வந்துவிட்டது போன்றதொரு வியத்தகு காட்சியாக அந்த மைதானத்திலே மன்னர் பாடி இறங்கிய 'வேலிகுதாரா' உருவாகிக் கொண்டிருந்தது. இத்தகைய சம்பிரதாயச் சடங்குகள் முறைப்படி நடந்தேறியதும் திட்டமிட்டபடி படையெடுத்துக் கிளம்பினார் ராமராயர்.

கலியாண் கோட்டையைக் கைப்பற்றி விட்ட குதூகலத்திலே மூழ்கிக் கிடந்தார்கள் குதப்ஷாவும் நிஜாம்ஷாவும். வெற்றியை விழாவாகக் கொண்டாடி விருந்தும், கேளிக்கையுமாகத் தங்களை மறந்த ஆனந்தத்திலே மகிழ்ந்திருந்த போதுதான் தூதுவன் அந்தச் செய்தியைக் கொண்டு வந்தான். ஒரு வகையில் அது எதிர்பார்த்த செய்திதான் என்றாலும் அவன் கொடுத்த தகவல்களோ அச்சமூட்டுவதாக இருந்தன. அலி ஆதிஷாவுக்கு உதவியாக அலியா ராமராயர் வருவார் என்பது அவ்விரு சுல்தான்களும் எதிர்பார்த்ததுதான். ஆனால் ராமராயர் தங்களை வெற்றி கொள்ள மட்டும் வரவில்லை; இனி எப்போதுமே தலைதூக்காதபடி அழித்து ஒடுக்கும் ஆக்ரோஷத்துடன் வருகிறார் என்பதை வேவுகாரர்கள் விளக்கிய போது அவர்கள் உள்ளத்திலே நடுக்கம் தலை காட்டலாயிற்று. பாசறையிலே பரபரப்பு மிகுந்தது. பீஜப்பூரின் பெரும் படையும் விஜயநகரின் படை வெள்ளமும் வெகு வேகமாக முன்னேறி வந்து கொண்டிருக்கும் செய்தியோடு ஓடி வந்தான் மற்றொரு தூதுவன். கோல்கொண்டாவை நோக்கி வேங்கடாத்திரி முன்னேறிக் கொண்டிருக்கும் செய்தி குதப்ஷாவைக் குழப்பத்திலாழ்த்தியது. வேங்கடாத்திரியின் வீரத்தை அறிந்தவர் இப்ராஹிம். அவனோடு அவனுக்கு உதவியாக வரும் ஜகதேவ ராவோ கோல் கொண்டாவின் அவையிலே இருந்து பணியாற்றி அந்த நாட்டின் அந்தரங்கங்கள் அனைத்தையும் அறிந்தவர். இன்றைக்கு விஜயநகரின் வீரத்

தளபதிகளில் ஒருவராக விளங்குகிறார். வேங்கடாத்திரி என்ற நெருப்போடு ஜகதேவராவ் என்ற காற்றும் கலந்து வரும் செய்தி அறிந்த குதப்ஷா தம் நாட்டுக்கு நேர்ந்துள்ள அபாயத்தை அறிந்தார். இனி அரைக்கணமும் தாமதிக்கக் கூடாதென்று உடனே தமது படைகளோடு சொந்த நாட்டைக் காக்க விரைந்தார்.

அன்று தம் உதாசீனத்தைத் தாங்கிக் கொண்டு நிதானமாக நடந்து கொண்ட ராமராயரின் கோபம் இன்று எப்படி வெளிப்படும் என்பதைக் கற்பனை செய்து பார்த்தார் நிஜாம்ஷா. கலியாண் கோட்டைக்கு ஆசைப்பட்டுச் சொந்த நாட்டையே பறிகொடுக்கும் ஒரு நிலை வந்து விடுமோ என்ற நடுக்கமும் ஏற்பட்டது. கைப்பற்றிய கோட்டையைக் கைவிட்டுத் தாயகத்தைக் காக்கத் தம் படைகளுடன் விரைந்தார்.

இப்படி இரண்டு பேரும் ராமராயரின் வரவைக் கேட்டுத் தங்கள் தங்கள் ராஜ்யத்தைக் காக்க விரைந்த போது ஆதில்ஷாவிற்கும் ராமராயருக்கும் கலியாண் கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்ற வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. ஆனால் வந்த காரியம் கைகூடியது என்று வெறுமனே திரும்பிவிடவும் விரும்பவில்லை ராமராயர். அகமது நகரை நோக்கிடும் ஹுசைன் நிஜாம்ஷாவைத் துரத்திக் கொண்டு தாம் செல்வதாகவும், கோல்கொண்டாவைக் காப்பாற்ற ஓடும் குதப்ஷாவைப் பின்பற்றி ஆதில்ஷா செல்ல வேண்டும் என்றும் திட்டமிட்டுச் செயலில் இறங்கினார் ராயர்.

காட்டுத் தீயைப் போல, காட்டாற்று வெள்ளத்தைப் போல, எல்லாவற்றையும் கபளீகரம் செய்து கொண்டு முன்னேறிக் கொண்டிருந்தார் ராமராயர். விஜயநகரப் படைப் புயலின் முன்னே அகமது நகரின் எதிர்ப்புகள் துரும்பெனப் பறந்தன. அடுத்தவன் சொத்துக்கு ஆசைப்பட்ட அகமதுநகர் நிஜாம்ஷா தன் சொந்த நாட்டையே பறிகொடுத்துப் பக்கத்து நாட்டில் போய்ப் பதுங்கும்படியான நிலைமை ஏற்பட்டது. அகமது நகரின் ஆணவம் அழிந்தது. நிஜாம்ஷாவை வெற்றி கொண்ட ராமராயர் அவனது தீராப் பகையையும் வளர்த்துக் கொண்டார்.

இப்ரஹிம் குதப்ஷாவினால் தான் நினைத்தபடி சுலபத்தில் கோல்கொண்டாவை அடைந்துவிட முடியவில்லை. உள்ளத்திலே பகையோடு நண்பனாக உறவாடியதை மறக்கவோ மன்னிக்கவோ தயாராக இல்லை ஆதில்ஷா. ஆகவே பீஜப்பூரின் படைகள் குதப்ஷாவைக் கோல்கொண்டாவுக்குப் போக விடாமல் வழி மறித்து

வதைக்கலாயின. வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் நெஞ்சத் துடிப்புடன் உள்ள சித்திஹாஸனது சீற்றமும் திறமையும் குதப்ஷாவின் படைகளைச் சீர்குலைய வைத்தன. தன் படைகளில் பெரும் பகுதியைப் பறிகொடுத்த பின் மிக்க சிரமத்தின் பேரில் தான் தலைநகரை அடைந்தார் குதப்ஷா. ஆனால் அங்குள்ள நிலைமையோ இன்னும் மோசமாக இருந்தது.

வேங்கடாத்திரியின் வீராவேசத்தினால் நாடே நலங்கெட்டுக் கிடந்தது. மக்கள் தாங்க முடியாத துன்பங்களுக்கு உள்ளாகித் தவித்துக் கொண்டிருந்தார்கள். பீஜப்பூர் படைகளின் பேய்த் தாக்குதலிலிருந்து ஒருவாறு தப்பி வந்த குதப்ஷா கோட்டையைக் காத்து நின்ற வீரர்களை ஒழுங்குபடுத்தி நாட்டிலே போர் வேட்டையாடி வரும் பொல்லாத வேங்கடாத்திரியை விரட்டும் வழியைப் பற்றித் திட்டமிடும் போது திடுக்கிடும் செய்தியொன்று வந்தது. அகமது நகரை அடிமை கொண்ட அரவீட்டு முதல்வர் தம் படைகளுடன் கோல்கொண்டாவிற்கு முப்பது மைல் தூரத்தில் தாரபள்ளி என்ற இடத்தில் வந்து பாடி இறங்கி யிருந்தார்; வேங்கடாத்திரிக்கு உதவியாகவே வந்திருக்கிறார் ராமராயர் என்பதை அறிந்த குதப்ஷா குமைந்து போனார். வேங்கடாத்திரியோடு ராமராயரும் சேர்ந்து விட்டால் சர்வ நாசம்தான். அவர்கள் ஒன்று சேர முடியாதபடி செய்தால்? அது முடியக் கூடிய காரியமா? நிஜாம்ஷாவின் படைகளைச் சிதறடித்துக் கொள்ளை கொண்ட பொருள்களோடு புதிய பலமும் போர்த் தளவாடங்களுமாக வந்திருக்கும் விஜயநகரப் படைவெள்ள மெங்கே, ஆதில்ஷாவிடமே தோல்வி கண்ட குதப்ஷாவின் பலமெங்கே? சிந்திக்கவோ, தம் படைகளைச் சீர்திருத்தி அமைக்கவோ குதப்ஷாவிற்கு அவகாசமே அளிக்கவில்லை ராமராயர். ஆதில்ஷாவுக்காக அகமது நகரைத் தாக்கினாரே தவிரக் கோல்கொண்டாவின் சுற்றுப்புறப் பகுதிகளை நாசமாக்கிச் சீர்குலைக்கும்படி கட்டளை பிறப்பித்தார். தமது சகோதரியின் புதல்வனும் கொண்ட வீட்டின் அதிகாரியுமான சித்திராஜு திம்மராஜா என்பவனுக்கு ஐம்பதினாயிரம் வீரர்களுடன் கொண்ட பள்ளியையும் மசூலிப்பட்டினத்தையும் தாக்கும்படி தாக்கீது அனுப்பினார். வித்தியாத்திரி, சீதாபதி இருவருக்கும் எல்லூர், ராஜமஹேந்திரபுரி ஆகிய பகுதிகளை ஒடுக்கும்படி ஓலை பறந்தது.

இப்படிக் குதப்ஷாவை நாலா பக்கங்களிலும் விரோதிகள் சூழ்ந்து கொண்டு நெருக்கியபோது செய்வதறியாது திகைத்தார்

இப்ரஹிம். இந்த இக்கட்டான் சமயத்தில் ஒரு நல்ல செய்தியோடு வந்தான் ஒரு தூதுவன். கொண்ட வீடு கோட்டை தக்க பாதுகாப்பின்றி இருப்பதாகவும். அதைத் தாக்கினால் அரண் அமைத்துள்ள விரோதிகளை விரட்டியடிக்க முடியும் என்றும் உளவறிந்து வந்தவன் உறுதியாகச் சொன்னான். அது உண்மை. கொண்ட வீடு கோட்டைத் தலைவன் சித்திராஜு திம்மராஜா தனது பெரும் படையுடன் ராமராயரின் உத்தரவுப்படி கோல் கொண்டாவில் உள்ள பகுதியைத் தாக்கச் சென்றிருந்தான். ஆகவே இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடக் கூடாதென்று முடிவு செய்த குதப்ஷா தம்மிடமுள்ள படையின் பெரும் பகுதியுடன் கொண்டவீடு கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றத் தானே கிளம்பினார். அவருடன் முஸ்தபாகான், அஸிம்கான், யாகூப்கான், சிந்தகுண்டதர்மாராவ் ஆகிய தளபதிகளும் சென்றார்கள்.

இத்தகைய ஒரு தாக்குதலை எதிர்பாராதவரா ராமராயர்? பலம் பொருந்திய கோல் கொண்டாக் கோட்டையிலே ஒளிந்திருக்கும் குதஷாவை வெளியே கொண்டு வருவதற்காகவே இப்படி ஒரு சூழ்நிலையை உருவாக்கி இருந்தார் அரவீட்டு அசகாய சூரர். தம் பலமெல்லாம் திரட்டிக் கொண்ட கொண்ட வீடு கோட்டையைத் தாக்கிக் கைக் கொண்டார் குதப்ஷா. வெற்றிதான். ஆனால்...?

ராமராயரின் திட்டப்படி யாராதிம்மராஜு என்ற தளபதி தனது உதவியாளனான வெலுகோட்டி சின்னதிம்ம நாயுடுவின் கீழ் ஒரு பெரும்படையை அனுப்பிக் கொண்ட வீட்டைக் காப்பாற்றும்படி பணித்தான்.

இந்த யாரா திம்மராஜு ராமராயருக்கு ஒன்றுவிட்ட சகோதரன் முறையாக வேண்டும். எழுபது வயது இளைஞரான ராமராயர் தம் உறவினர்கள் அத்தனை பேரையும் அரசியல் சதுரங்கத்தின் காய்களாக்கி விளையாடிக் கொண்டிருந்தார்.

சின்னத் திம்மன் கொண்ட வீடு கோட்டையை முற்றுகையிட்டு உள்ளிருந்தோரை ஓட்டம் எடுக்கும்படி செய்தான். ஆனால் குதப்ஷாவின் படைகளில் பெரும் பகுதி முஸ்தபாகானின் தலைமையில் கோட்டையை விட்டு வெளியேறிக் கிருஷ்ணா நதியைக் கடந்த கர்நூல் ஜில்லாவின் வடக்குப் பகுதியில் புகுந்து வஞ்சம் தீர்க்கலாயின. வீரர்கள் அங்குள்ள பாயா என்ற வகுப்பாரைத் தாக்கி அவர்களிடையே பெரும் பீதியை உண்டாக்கினார்கள்.

இவ்வேளையில், யாரா திம்ம ராஜுவும், திம்ம நாயுடுவும் முஸ்தபாகானை முறியடித்து அவனிடமிருந்து ஏராளமான யானைகளைக் கைப்பற்றினார்கள். தோற்று ஓடும் விரோதிகளை அவர்கள் நாட்டினுள்ளேயே புகுந்து துரத்திச் சென்று பாடம் கற்பிக்க எண்ணினார்கள் ராமராயரின் தளபதிகள். இந்த எண்ணத்துடன் கிருஷ்ணா நதிக்கரையை அடைந்த போது குதப்ஷாவின் தளபதிகள் நதியின் நடுவில் உள்ள ஒரு தீவில் தங்கி ஆற்றைக் கடக்கும் போது தங்களைத் தாக்கி வெற்றி கொள்ளத் திட்டமிட்டிருப்பதை உணர்ந்தார்கள். ஆனாலும் திம்மராஜுவும், நாயுடுவும் தங்கள் திட்டத்தை மாற்றிப் பின்வாங்கிவிட வில்லை. துணிவுடன் ஆற்றில் இறங்கிய போது இரு சாராருக்கும் பலமான போராட்டம் நடந்தது. தூய ஆடை புனைந்து ஓடிக் கொண்டிருந்த நதிக் கன்னி கிருஷ்ணா முஸ்லிம்களின் ரத்தத்தில் தோய்ந்த துவராடை புனைந்து துக்கம் கொள்ளலானாள்.

தோல்வியினால் மனமுடைந்த குதப்ஷா தலைநகரை நோக்கி ஓடினார். வெற்றி வெறி கொண்ட யாரா திம்மராஜுவின் படைகள் குதப்ஷாவின் நாட்டை நாசமாக்கிக் கொண்டு முன்னேறின. நாட்டின் பத்திரத்தைக் காத்து நின்ற கோட்டைகள் ஒவ்வொன்றாக விஜயநகரப் படைகளின் கையில் சிக்கலாயிற்று. தேவரகொண்டா கோட்டை ஒன்றுதான் தாக்குப் பிடிக்க முயன்றது; கடைசியில் அதுவும் தலை வணங்கியது. ஒட்டப்பள்ளி, நாகுலபாடு, தேவுலபள்ளி, சித்தேலா, நல்லகொண்டா, அருவபள்ளி ஆகிய கோட்டைகள் ஒன்றன்பின் ஒன்றாகச் சரியலாயின. வேறு பகுதிகளிலோ வேங்கடாத்திரியும் ஜகதேவராவும் விஜயநகரப் படைகளுக்கு வெற்றிமேல் வெற்றியாக வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். கோல்கொண்டா, பனகல், கான்புரா ஆகியவை விஜயநகரின் பகுதிகளாயின.

இந்த நிலையில் மேலும் போராடிக் கொண்டிருப்பதில் பயனில்லை என்பதை உணர்ந்த இப்ரஹிம் குதப்ஷா ராமராயருக்குச் சமாதானத் தூதனுப்பினார். தாம் கைப்பற்றிய பகுதிகளில் கான்புராவையும், பனகலையும் தமக்குக் காணிக்கை யாக அளிப்பதானால் முற்றுகையை முடித்துக் கொண்டு தம் நாடு திரும்புவதாகப் பதிலனுப்பினார் ராமராயர். போரை நிறுத்த எதையும் கொடுக்கத் தயாராக இருந்தார் குதப்ஷா. ஆகவே தமது சுதந்திரத்துக் விலையாக ராமராயரின் விருப்பப்படியே அவ்விரு

கோட்டைகளையும் விஜயநகரின் பகுதிகளாக்கிச் சமாதானத்தை வாங்கினார்.

ராமராயர் வெற்றி வீரராக விஜயநகரம் திரும்பினார். ஆனால் அந்த வெற்றியே ஒரு மகத்தான சாம்ராஜ்யத்தின் அழிவுக்கான அஸ்திவாரமாக அமைந்துவிட்டதை அவர் அறியவில்லை. அடிபட்ட இரண்டு சுல்தான்களின் ஆத்திரம் பிளவுபட்டுக் கிடந்த முஸ்லிம் இனத்தின் ஒற்றுமைக்கும் விஜய நகரத்தின் அழிவுக்கும் வழி வகுக்கலாயின. பாமினி சுல்தான்களாகிய தாங்கள் தலை நிமிர்ந்து வாழ வேண்டுமானால் அளவுக்கு மீறிப் பலம் பெற்று வரும் அண்டை நாடானா விஜயநகரத்தை அடக்கி ஒடுக்கியாக வேண்டும் என்ற அவசியத்தை உணர்ந்து கொண்டார்கள் பாமினி சுல்தான்கள். தான் பட்ட அவமானத்துக்குப் பழிவாங்கியே தீருவது என் சபதமிட்டார் கோல்கொண்டாவின் காவலர் இப்ரஹிம் குதப்ஷா. தம் இனத்தவர்களின் இணைப்பினால்தான் விஜயநகரத்தை வெற்றி கொள்ள முடியும் என்ற முடிவுக்கு வந்தவர் அதற்கான வழி வகைகளைப் பற்றித் திட்டமிடலானார். எதையும் அழகாக, ஆவேசமாக, கேட்பவர்களின் உள்ளத்தைக் கவரும் வகையில் சொல்லக்கூடிய இனப் பற்றுக் கொண்ட பிரசாரகர்களை எல்லாம் தேடிப் பிடித்து வருமாறு நாட்டின் நாலா பக்கங்களிலும் தூதுவர்கள் அனுப்பப்பட்டார்கள். முஸ்லிம் மதக்கோட்பாடுகளை நன்கறிந்த இமாம்களும் உலேமாக்களும் ஒன்று கூடும்படி ஏற்பாடு செய்தார் குதப்ஷா.

## 12

## ஒன்றுபடுவோம், ஒழித்துவிடுவோம்!

**பீ**ஜப்பூர் எங்கும் அதே பேச்சாக இருந்தது. நாட்டின் கௌரவப் பிரஜைகள் என்று கருதப்படும் உயர் குடிப் பிறந்தவர்கள், மன்னர் வெற்றி பெற்று வந்ததை எண்ணித் திருப்திப்படவில்லை. எங்கே இரண்டுபேர் சந்தித்தாலும் இது பற்றியேதான் பேசினார்கள். மசூதிகளில் தொழுகைக்காகக் கூடும்போது மதத் தலைவர்கள் இதை நினைத்தே மனம் மறுகத் தணிவான குரலில் பிரார்த்தனைகள் நடத்தினார்கள்.

"பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்..." என்று ஆகாயத்தை நோக்கிக் கைகளை உயர்த்தி, பேரருளாளனும் அளவற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்விடம் அலி ஆதில்ஷாவை மன்னிக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டு மண்டியிட்டமர்ந்து தலையைத் தரையில் பதித்துத் தொழுகை நடத்தினார்கள்.

"இஸ்லாம் இழிவுபடுத்தப் பட்டதற்குத் தங்கள் மன்னர் உடந்தையாக இருந்தார். முஸ்லிம் இன மக்களை விக்கிரக ஆராதனை புரியும் வெறியர்கள் மிருகங்களைப் போல் வேட்டையாடுவதற்கு விட்டுக் கொடுத்து விட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். காபிரிகளின் கைப்பொம்மையாகி விட்ட அலி ஆதில்ஷா. மசூதிகளின் புனிதத் தன்மையைக் கெடுக்கும் செயல்களில் விஜயநகரத்து வீரர்கள் ஈடுபட்டிருப் பதைக் கண்டும் காணாதது போல அதைத் தடுக்கும் செயலிழந்து சிறுமைப்பட்டுப் போனார்!' இவையே ஆதில்ஷாவின் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள். குதப்ஷாவினால் அனுப்பப்பட்ட முல்லாக்களும், இமாம்களும் உலேமாக்களும் ஒப்பற்ற முறையில் தங்கள் பிரசாரத்தைச் செய்து கொடிருந்தார்கள். இனத்தையும் மதத்தையும் மக்கள் எதிரே வைத்து வசீகரமான வார்த்தைகளால் உள்ளத்தை உலுக்கி எடுக்கும் உணர்ச்சி மிக்கதொரு பிரசாரத்தை உருவாக்கி அதில் ஓரளவு வெற்றியும் கண்டு விட்டார்கள். பீஜப்பூரின் பெருங்குடி மக்களில் பலரும், அவைத் தலைவர்களில் அனேகரும் தங்கள் சுல்தான் அலி ஆதில்ஷா, அலியா ராமராயரைத் தம் அன்புத் தந்தையாக ஏற்றுக் கொண்டதை எண்ணி அப்போதே அதிருப்தி அடைந்தவர்கள். இப்போது இப்படியொரு செய்தி - இனப்பற்று மிகுந்த அவர்களின் இதயங்களைக் கனக்க வைத்தது.

தன் நாட்டிலே தன்னைப் பற்றியே நடக்கும் தவறான பிரசாரத்தின் தகவல் ஆதில்ஷாவின் கவனத்துக்கு வந்தது. அவரது கவனத்தைக் கவரவேண்டித் தானே பிரசாரகர்கள் முயன்று கொண்டிருந்தார்கள்! முதலில் ஆதில்ஷா இதை அலட்சியமாகத்தான் நினைத்தார். ஆனால் நாளாக நாளாக நாட்டு மக்கள் அதற்கு முக்கியத்துவங் கொடுத்து முகங் கடுக்கிறார்கள் என்பதை ஒற்றர்கள் கொண்டு வந்த செய்திகள் உறுதிப் படுத்தின. இனி அதை அப்படியே விட்டால் விசுவரூப மெடுத்து விட்ட அது தன்னையே விழுங்கிவிடும் எப்தை உணர்ந்தபோது, உலேமாக்களும் அரசியலில் அங்கம் வகிக்கும் பிரபுக்களும் சுல்தானைப் பேட்டி காண விரும்புகிறார்கள் என்ற செய்தியும்கூட வந்தது.

பீஜப்பூரின் ஆலோசனை மண்டபமான தாதிமஹால், முஸ்லிம் மதக் கோட்பாடுளைத் தங்கள் மூச்சாக மதித்து வாழும் முதுகிழார்களின் கூட்டத்தால் நிரம்பி இருந்தது. உள்ளத்தின் தூய்மையை எடுத்துக் காட்டுவதே போல வெள்ளை ஆடை அணிந்திருந்தார்கள் அவர்கள். வயதின் முதிர்ச்சி முகத்தின் தாடியைத் தும்பைப் பூவாக்கி இருந்தது. அநுபவத்தின் அடிப்படையிலே பிறந்த அமைதியையும் சாந்தத்தையும் அணிகலன்களாகக் கொண்ட அந்தப் பெரியவர்களின் தோற்றம் பார்ப்பவர்களின் உள்ளத்தில் பக்தியையும் பயத்தையும் மரியாதையையும் உண்டாக்கின. இவர்களோடு இளமைத் துடிப்பும் இனவெறியும் கொண்ட வாலிபர்களும் அமர்ந்திருந்தார்கள். பழி வாங்கும் உணர்ச்சியால் உந்தப்பட்ட அவர்களின் கண்கள் பளபளத்துக் கொண்டிருந்தன.

அவைக்குள் நுழைந்த ஆதில்ஷா அங்கு அமர்ந்திருந்த பெரியோர்களுக்கு மரியாதையாகச் சற்றே சிரம் தாழ்த்தி இரு கைகளையும் நெற்றியின் அருகே கொண்ட போய் வணக்கம் செலுத்தினார். பிரிந்த அவரது இதழ்களின் வழியே ‘சலாம் ஆலே கும்’ என்ற வார்த்தைகள் மெல்ல உதிர்ந்தன. அவையினர் ‘ஆலே கும் சலாம்’ என்று முழக்கமிட்டுப் பதில் வணக்கம் செலுத்தினார்கள். இதன் பிறகு ஆதில்ஷா அவைத் தலைவர்கள் சூழத் தம் இருக்கையில் அமர்ந்து கொண்டார். அவர் அருகே தளபதி சித்திஹாஸனும் இடம் பெற்றிருந்தான்.

சபையின் சலசலப்பு அடங்கி அமைதி நிலவிய போது வயதிலே முதிர்ந்து உருவத்திலே உயர்ந்த ஒரு பெரியவர் எழுந்திருந்தார்.

“பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் அவர்களின் திருநாமமே நம்மை நேர்மை வழியில் நடத்திச் செல்லட்டும். அல்லாஹ்வின் மக்களாகிய நாம், அரசியல் அமைப்பால் பிரிந்திருந்தாலும் இனத்தால் ஒன்றுபட்டவர்கள். முஸ்லிம் இன மக்கள் எங்காவது கொடுமைப்படுத்தப் படுவதைக் கேட்டாலே கொதித்தெழ வேண்டியது நம் ஒவ்வொருவருடைய கடமையாகும். ஆனால்...” என்று உணர்ச்சி வசப்பட்ட அவர் பேச முடியாமல் நிறுத்தினார். அம்முதியவரின் உடல் தள்ளாடியது. வெண் பஞ்சுத் தாடியைத் தடவியபடியே தம் தடுமாற்றத்தைச் சமாளிக்க முயன்ற அவரது கரங்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. அதற்கு மேல் அவரால் தொடர்ந்து பேச முடியாது

என்பதை உணர்ந்துதானோ என்னவோ நடுத்தர வயதுடைய இமாம் ஒருவர் எழுந்திருந்து நடுக்கமின்றிப் பேசலானார்.

"அண்டை நாட்டிலே நம் முஸ்லிம் சகோதரர்கள் அநாகரிமான முறையிலே நடத்தப்பட்டார்கள். நம் புனித இஸ்லாம் அங்கு இழிவுபடுத்தப்பட்டது. ஈவிரக்கமற்ற முறையிலே நம் இன மக்கள் சொல்ல முடியாத கொடுமைகளுக் குள்ளானார்கள்" என்று ஆதில்ஷாவைப் பார்த்து முழக்கியவர் சட்டென்று தம் குரலைத் தாழ்த்தி எங்கோ பார்த்தபடி, "இவ்வளவுக்கும் நாம் காரணமாக இருந்தோம். - காபிரிகளின் கைப்பொம்மையாகி எதையும் கண்டிக்க முடியாத நிலையிலே என்பதை நினைக்கும் போது அவமானத்தால் குன்ற வேண்டி இருக்கிறது" என்றார்.

துள்ளி எழுந்தான் சித்திஹாஸன். "இனப்பற்றை மறந்து எல்லை மீறி எதையும் செய்து விடவில்லை. அண்டை நாட்டுச் சோதரன் நம்மோடு கொஞ்சிக் குலாவிக் கொண்டிருக்க வில்லையே. வலுச் சண்டைக்கு வந்தவனை விரட்டியடிக்க வேண்டியது நாட்டை ஆள்பவரின் கடமையில்லையா? போர் முனைச் செய்திகளுக்குப் புதிய விளக்கங்களை உண்டாக்கி ஆதில்ஷா அவர்களை இனத் துவேஷி என்று குற்றம் சாட்டுவது முறையல்ல."

மதத் தலைவர்களும் மக்களின் மதிப்பைப் பெற்றவர்களும் கூடியுள்ள சபையில் தமக்கு எத்தகைய தாக்குதல்கள் காத்திருக்கின்றன என்பதை அறிந்தே வந்திருந்த ஆதில்ஷா சித்திஹாஸனை அமைதியாக இருக்கும்படி கையமர்த்தினார். "உணர்ச்சிவசப் படுபவர்களால் ஒன்றுமே செய்ய முடியாது சித்திஹாஸன்! அவர்கள் கூற வேண்டியதைக் கூறி முடிக்கட்டும். பிறகு நாம் அவைகளுக்குப் பதில் கூறலாம்" என்றார்.

"அப்படியானால்... ஆதில்ஷா அவர்கள் நாங்கள் கூறப் போகும் எதையும் நம்பத தயாராக இல்லை போலிருக்கிறது" என்றார் தலைவராகத் தோற்றமளித்த ஒருவர்.

"அதற்கு நான் இங்கு உங்களைச் சந்திக்கச் சம்மதித் திருக்கவே வேண்டாமே! உங்கள் குற்றச்சாட்டுகளை முழுமையாகக் கேட்ட பிறகுதான் அதை மறுக்கவோ ஏற்கவோ முடியும் என்று கருதுகிறேன். ஆனால் பொதுவாக ஒன்றை மட்டும் கூற விரும்புகிறேன். அண்டை நாட்டான் நம் இனத்தானானாலும் போர் என்று போகும் போது

விரோதி என்ற மனப்பான்மை யோடுதான் செயல்பட முடியுமே தவிர...''

ஆதில்ஷாவை முடிக்க விடவில்லை அந்த முதியவர். ''அகமது நகர், கோல்கொண்டா இவற்றின் மீது பீஜப்பூர் மட்டும் தன்னிச்சையாக முற்றுகையிட்டி ருக்குமானால் முஸ்லிம் இனத்துக்கு இத்தகைய அநீதி இழைக்கப் பட்டிருக்காது. வஞ்சம் தீர்த்து கொள்ளச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த விஜயநகரத்தின் வன்முறைச் செயல்களுக்கு வழி வகுத்துக் கொடுத்து விட்டீர்கள். அதன் உதவியை வேண்டிப் பெற்று.''

''விஜயநகரின் உதவியைப் பெற்றது முறையா தவறா என்பதைப் பற்றி இங்கு நான் விவாதிக்கப் போவதில்லை. அது அரசியல் விஷயம். நாம் இங்கு இனத்தையும் மதத்தையும் பற்றித்தானே பேசிக் கொண்டிருக்கிறோம்! உதவிக்க வந்த ராமராயர் முறையற்ற செயல்களில் இறங்கியதாகக் கூறுகிறீர்களே, அவை என்ன என்பதைச் சற்று விவரிக்க முடியுமா? போர் முனையில் அவர் கூடவே இருந்த என்னால் அவர் புரிந்த அநீதிகளை அறிந்து கொள்ள முடியவில்லை. உள் நாட்டிலிருந்த உங்கள் மூலமாகவாவது அவற்றைத் தெரிந்து கொள்ளுகிறேன்!'' என்றார் ஆதில்ஷா. அவர் பேச்சிலும் முகத்திலும் ஏளனம் தெறித்தது.

''ஷாயன்ஷா அவர்களுக்கு விருப்பமில்லாத விஷயத்தை இங்கு நாங்கள் விவாதிக்க வந்திருப்பதாகக் கருத வேண்டியிருக்கிறது'' என்றார் ஒருவர். சுல்தானின் ஏளனத்தைப் புரிந்து கொண்ட சூட்டுடன்.

''என் விருப்பு வெறுப்புக்கள் இங்கு முக்கியமல்ல. முஸ்லிம் இனத்தின் காவலன் என்ற முறையில் அம்மதத்தின் தலைவர்களான உங்கள் வாதங்களை விரும்பிக் கேட்கக் கடமைப்பட்டவன் நான். சொல்லுங்கள்.''

''கோல்கொண்டாவிலும் அகமது நகரிலும் இந்துக்களால் அழிக்கப்பட்ட மசூதிகளின் எண்ணிக்கை ஏராளம்.''

''இந்த நாட்டிலே நாம் அழித்துள்ள கோயில்களை விடவா?'' என்று ஆதில்ஷாவின் பதிலால் அதிர்ச்சியடைந்தனர் அவையிலுள்ளோர். அதைக் கண்ட அவர், ''என் பதில் உங்களை ஆத்திரமடையச் செய்திருப்பதை அறிகிறேன். காட்டாற்று வெள்ளம்

தன் கரை மீதுள்ள மரத்தை. தான் வளர்த்தது என்று விட்டு வைப்பதில்லை. தன் அசுர வேகத்துக்கு அதையும் பலியாக்கிக் கொண்டு தான் போகிறது. அது போல... போர் என்ற போது அழிவையே குறிக்கோளாகக் கொண்டு முன்னேறிச் செல்லும் படை வெள்ளத்தின் வழியில் இத்தகைய அசம்பா விதங்கள் ஒரு சில நேரத்தான் செய்யும். அதைப் பெரிதாக்கிப் பேசுவது முறையல்ல.''

''முஸ்லிம் பெண்கள் விஜயநகரத்து வீரர்களால் முறை கேடாக நடத்தப்பட்டி ருக்கிறார்கள். மானமிழந்த மங்கையர்கள். கற்பிழந்த கன்னியர்கள் ஏராளம். எராளம்! இதைக் கேட்கும் போது இனப்பற்று மிகுந்த எங்கள் இரத்தம் கொதிக்கிறது. எங்களில் ஒருவரான உங்கள் நிலையும் அப்படித்தான் இருக்க வேண்டும்.''

''உங்கள் கூற்று உண்மையாக இருக்குமானால் என் நிலை பற்றித் தங்கள் கருத்தும் அப்படித்தானிருக்கும். ஆனால் மங்கையர்களுக்கு மதிப்பளித்து. அந்நியப் பெண்களை அன்னையாகக் கருதும் பாரத நாட்டு வீரர்களா இப்படிச் செய்வார்கள் என்று யோசிக்க வேண்டி இருக்கிறது. காரணம். நீங்கள் கூறும் இந்தச் செயல்களில் ஒன்றாவது போர் முனையிலே என் கவனத்துக்குக் கொண்டு வரப்படவில்லை. ராமராயரின் படையிலே முஸ்லிம் வீரர்களும். தளபதிகளும் கூட இருக் கிறார்கள் என்பதை நாம் மறந்து விடுவதற்கில்லை'' என்றார் ஆதில்ஷா.

விவகாரம் பேச வந்தவர் பேசாமல் நின்றார். தாங்கள் கூறும் எதையுமே ஏற்காமல் ஒவ்வொன்றுக்கும் காரணம் கூறித்தட்டிக் கழிக்கும் ஆதில்ஷாவின் போக்கு சபையோருக்குப் பிடிக்க வில்லை என்பதை அவர்களின் பார்வையே சொல்லிற்று. அதிருப்தியும் ஆத்திரமும் அடைந்த அவர்கள் தாங்கள் கூற வந்ததைக் கூறி முடித்து விடுவது என்ற முடிவோடு கொட்டலானார்கள்.

''இதை விவாத மேடையாக்கி அதிலே வெற்றி காண நாங்கள் இங்கு வரவில்லை என்பதை ஆதில்ஷா அவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். கோல்கொண்டாவிலும் அகமது நகரிலும் விஜயநகரத்துக் கொள்ளையர்கள் புகுந்து விளைவித்த கொடுஞ் செயல்களை விளக்கவே இங்கு வந்தோம். அறிந்தோ அறியாமலோ அவர்களின் வெறிச் செயல்களுக்கு நாமும் காரணமாகி இருந்தோம் என்ற அவச் சொல்லின் அவமானத்தைத் தாங்காமலே இந்த அவையை நாடி வந்தோம்...'' என்றார் ஒரு முதியவர்.

"ஆனால்..." என்று ஆரம்பித்த மற்றொருவர், "நாங்கள் கூறுவதெல்லாம் கற்பனை, பொய்ப் பிரசாரம் என்னுமளவுக்கு ஆலம்பனா அவர்களின் பதில்கள் இருக்கின்றன. ராமராயருடன் தாங்கள் இருந்திருக்கலாம். ஆனால் பரந்து கிடந்த போர்க் களத்தின் எல்லாப் பகுதிகளிலும் உங்கள் பார்வை பதிந்திருக்க முடியாதே! தங்கள் கண்காணிப்பிலிருந்த பகுதியிலும்கூட அவர்கள் நடத்திய பாதகச் செயல்களைத் தங்கள் பார்வையி லிருந்து மறைப்பது பலம் பொருந்திய அவர்களுக்கு ஒரு பெரிய காரியமல்லவே!"

"போர் என்றால் புனிதமான செயல்களை எதிர்பார்க்க முடியாதுதான். தோல்வி காணும் பகுதி மக்கள் துன்பங்களையும் தான் காண வேண்டும் என்பது எங்களுக்குத் தெரியும். ஆனால் இந்தப் போரிலே நடந்திருப்பது என்ன? நம் புனித இஸ்லாத்தை அவமானப் படுத்தவென்றே திட்டமிட்டுச் செயல்புரிந்திருக் கிறார்கள், ஆதிக்க வெறி கொண்ட விஜயநகரத்து வெறியர்கள்.

"மசூதிகளைக் குதிரை லாயங்களாக்கிக் கொட்டமடித் திருக்கிறார்கள். அதன் புனிதத் தன்மையை மதிக்காது அதனுள் குதிரைகளைக் கொண்ட போய்க் கட்டி அசிங்கப்படுத்தியிருக் கிறார்கள். இது மட்டுமா? அல்லாஹ்வின் திருநாமத்தைக் கூறித் தொழுகைகள் நடத்தப்பட வேண்டிய பள்ளி வாசல்களிலே பாவிகள் பஜனைகள் செய்திருக்கிறார்கள். ரஹீமின் திருநாமம் ஓதப்பட வேண்டிய இடத்திலே ராமனின் நாம சங்கீர்த்தனங்கள் நடத்தப்பட்டிருக்கின்றன!

"ஆதில்ஷா அவர்கள் இதற்கும்கூட நம் செயல்களை ஒப்பிட்டுச் சமாதானங்கள் கூறலாம். ஆனால் எல்லா மதத்தவருக்கும் சம உரிமை தந்து சகோதரர்களாகப் பழகுகிறோம் என்று பிரசாரம் செய்யும் ராமராயர் நடத்திய போரிலே இத்தகைய அட்டூழியங்கள் நடப்பதென்றால் அது திட்டமிட்ட செயல்தானே?"

வாதத்திலே வல்லவர்கள் வக்கணையாகப் பேசிய போது 'அப்படியும் இருக்கலாமோ!' என்று ஆதில்ஷா ஐயங் கொள்ளலானார்... "முஸ்லிம்களின் உணர்ச்சிகளை மதிப்பவர்தான் விஜயநகரத்து மன்னர் என்று எண்ணி இருந்தேன்... ஆனால்..." என்றபோது...

"அத்தனையும் வேஷம். அப்படி உங்களை நம்ப வைத்து அந்த நம்பிக்கையின் நிழலிலே முஸ்லிம்களை நசுக்கிக் கொண்டிருக்கிறார் நய வஞ்சகக்கார ராமராயர். நாங்கள் கூறிய இந்தக்

கூற்றுக்களை மெய்ப்பிக்க முடியும். கோல்கொண்டாவிலும் அகமது நகரிலும், துன்பங்களுக்கு உள்ளானவர்களும், அந்தப் பகுதிகளில் இந்துப் படைகள் புரிந்த அட்டூழியங்களை நேரில் கண்டு அவற்றைச் சொல்லிக் கதறி அழ இங்கு வந்திருக்கிறார்கள். இதோ" என்று சொல்லிக் கூடியிருந்தவர்களில் ஒரு பகுதியைச் சுட்டிக் காட்டினார். கும்பலில் ஒரு பகுதியினர் குனிந்த தலையோடு எழுந்து நின்றனர்.

ஆதில்ஷா மௌனமாக அவர்களைப் பார்த்தார். பிறகு அதே பார்வையை, இத்தனை நேரம் ஆவேசமாகப் பேசி அவையிலுள்ளோரின் அநுதாபத்தைச் சம்பாதித்துக் கொண்டுள்ள அந்தப் பெரியவரின் மீதும் பதித்தார். இந்து ராஜ்யமான விஜயநகரத்தோடு நட்புக் கொண்டிருப்பதை விரும்பாத இனப்பற்று மிக்கவர்களின் திறமையான பிரசாரம்; தோல்வி கண்டவர்களின் துவேஷ மனப்பான்மையிலே தோன்றிய துஷ்பிரசாரம் இது என்பதை அவரது இதயம் உணர்ந்தாலும் இந்த நிலையில் மக்களின் ஆதரவையும் அநுதாபத்தையும் பூரணமாகப் பெற்றுவிட்ட அவர்களின் பேச்சுக்கு எதிராக எதையும் சொல்வது வெற்றியளிக்காது, விவேகமுமாகாது என்பதை அறிந்த ஆதில்ஷா விவகாரம் பேச வேண்டாம் என்ற முடிவுக்கு வந்தார்.

மன்னரின் மனமாற்றத்தை எப்படியோ அறிந்த அந்த மதியூகியான மத போதகர் இளகி வரும் அவரைத் தம் பக்கம் இழுப்பதற்கு ஏற்ற பக்குவமான தருணம் இது தான் என்பதைக் கண்டுகொண்டு "ஆதில்ஷா அவர்களின் அவநம்பிக்கை இன்னும் தீரவில்லை என்று நினைக்கிறேன்! அவதிகளுக்கு உள்ளான கோல்கொண்டாவின் குதப்ஷாவே நேரில் வந்து கூறினாலாவது நம்பிக்கை கொள்வீர்களா?" பதில் கேட்டுத் தம் பார்வையால் அவர் இதயத்தையே துளைத்துக் கொண்டு நின்றார் அவர்.

ஆதில்ஷாவின் இதழில் இளநகை அரும்பியது. அது நடக்கக் கூடாத காரியம் என்று எண்ணினாரோ என்னவோ. "இத்தகைய தொரு இக்கட்டான வேளைக்கு அப்படியொரு அத்தாட்சி கூட நல்லதுதான்." என்றார்.

"இஸ்லாத்தின் புனிதத்தைக் காக்க அவமானப்படுத்தப்பட்ட நம் இன மக்களின் இதயங்களைக் குளிர்விக்க கோல்கொண் டாவின் குதப்ஷா தங்கள் ஆதரவை நாடி வருவாரேயானால் அவரை அவமானப்படுத்தி விடமாட்டீர்களே?"

“அத்தனைக்குப் பண்பு கெட்டவராக நினைக்க வேண்டாம் ஆதில்ஷாவை. பகைமை பாராட்டிப் போருக்கு வந்தது குதப்ஷாவே தவிர ஆதில்ஷாவல்ல. இஸ்லாத்தின் புனிதத்தைக் காப்பதில் எனக்கும் அக்கறை உண்டு. குதப்ஷா வருவாரே யானால் ஆதில்ஷாவின் அவமானத்துக்கு உள்ளாக மாட்டார். அவரது அன்புக் கரங்களின் ஆலிங்கனத்துக்கே உள்ளாவார்.”

“அப்படியானால் இதோ...!” என்ற அம்முதியவரின் வெள்ளை அங்கியும் வெண்மைத் தாடியும் கழன்று விழுந்தன. அந்த இமாம் இப்ரஹிம்குலி குதப்ஷாவாக உருமாறி அங்கே நின்றார். இதே போல இன்னும் சில முதியவர்களும் வேஷங்களைந்து வீரர்களாகிக் குதப்ஷாவின் பக்கத்தில் வந்து நின்றனர். அவையே ஆச்சரியத்தினால் அசைவற்றுக் கிடந்தது. யாருமே எதிர்பார்க்காத ஒரு நிகழ்ச்சி பிரமிப்பினால் பேச்சற்றுப் போனார் ஆதில்ஷா. தன்னிலை அடைவதற்குச் சில விநாடிகளாயிற்று அவருக்கு.

இத்தனை நேரம் தம் வாதங்களால் அவையோரின் இதயங்களை நெகிழ வைத்த குதப்ஷா இப்போது தம் வரவால் அவர்களின் உள்ளங்களிலே உயர்ந்து நின்றார். குதப்ஷாவாகித் தம் முன்னே நிற்கும் இப்ரஹிமைத் தம் இருக்கையிலிருந்து எழுந்து சென்று ஆரத் தழுவிக் கொண்டார் ஆதில்ஷா. சில நிமிஷங்கள் வரை யாருமே என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்றே தெரியாத ஒரு திகைப்பில் மூழ்கிக் கிடந்தார்கள். சித்திஹாஸனின் நெஞ்சமோ சினத்தால் கொதித்தது.

“என்னால் நம்பவே முடியவில்லை. இப்படி யெல்லாமா நடந்திருக்கும்?” என்று குழம்பினார் ஆதில்ஷா ராமராயரின் செயலைக் கோல்கொண்டாவின் காவலன் அந்தரங்க ஆலோசனைக் கூடத்தில் மேலும் விளக்கிய போது.

“நடக்காதது எதையுமே நான் கூறவில்லை. ஒரு காலத்தில் ராமராயரின் அன்புக்குப் பாத்திரமானவனாகத்தான் நானும் இருந்தேன். நான் கோல்கொண்டாவின் குதப்ஷாவாவதற்குக் கூட அவரது உதவிதான் தேவைப்பட்டது. அதை நான் மறந்துவிட வில்லை. மறக்கவும் மாட்டேன். ஆனால் அன்றைய ராமராயர் வேறு; இன்றைய ராமராயர் வேறு.”

சிந்தனையிலே மூழ்கிக் கிடந்தார் அலி ஆதில்ஷா.

“அன்று விஜயநகரத்தின் ஆட்சிப் பொறுப்பைக் கைக்கொள்ள அண்டை நாடுகளான நம் ஆதரவு அவருக்குத் தேவைப்பட்டது.

ஆனால் இன்றோ தாமடைந்த வெற்றிகளின் ஆணவச் செருக்கினால் நம்மை அவமதிக்கும் நிலையில் இருக்கிறார். அளவுக்கு மீறிய சூழ்ச்சி நயம்கொண்ட அவர், அரசியல் வாழ்வில் தாம் ஓர் அசகாய சூரர் என்ற கர்வம் கொண்டுள்ளார்..."

செந்தழலாக உள்ள சூடு மாறுவதற்குள் சம்மட்டி கொண்டு அடித்தால்தான் நாம் விரும்பும் உருவத்துக்கு இரும்பை வளைக்க முடியும் என்ற இரகசியத்தை அறிந்தவரான இப்ரஹிம்; அலி ஆதில்ஷாவின் குழம்பிக் கிடக்கும் உள்ளம் தெளிவடைவதற்குள் அதைத் தம் இயல்புக்கு ஏற்றபடி மாற்றுவதற்காக சாகஸம் நிறைந்த தமது வார்த்தைச் சம்மட்டிகளைத் தொடர்ந்து பிரயோகிக்கலானார்.

"நாம் அனுப்பும் பிரதிநிதிகளை ராயர் உரிய மரியாதை அளித்து வரவேற்றுக் கௌரவிப்பதில்லை. விஜயநகரின் அரசவையை நாடிப் போகும் நமது தூதுவர்களை உட்காரும்படி கூடக் கூறுவதில் லையாம். அத்தனை தூரத்துக்கு அகம்பாவம் கொண்டிருக்கிறார் அரவீட்டு ராயர். பவனி வரும்போது ராயர் பல்லக்கில் வர நம் பிரதிநிதிகள் கால்நடையாக நடந்தே பின்தொடரப் பணிக்கிறார்களாம். ராயரின் உத்தரவு இல்லாமல் இஸ்லாமியர் யாருமே குதிரைகளில் ஏறி வரக்கூடாதாம்!"

குதப்ஷாவின் குற்றச்சாட்டுக்களைத் தாங்க முடியாத சித்திஹாஸன் தவித்தான். குயவன் கைவண்ணத்துக்கு வளையும் மண்ணாகி விடக் கூடாதே மன்னர் என்ற கவலை அவனை ஆட்கொண்டது.

"நீங்கள் குறிப்பிடுவது போலெல்லாம் ராயர் மரியாதை தெரியாமல் நடப்பவரல்லவே. நட்புக் கரம் நீட்டியபோது தொட்ட இடம் மாசுபட்டு விட்டதாகச் சொல்லி மமதையோடு நடந்து கொண்ட அகம்பாவக்காரர்களைத்தான் நாங்கள் பார்த்திருக் கிறோம்!" என்றான் அந்த அபிசீனியன் ஆற்றாமையுடன்.

எரிக்கும் விழிகளால் அவனை ஏறெடுத்துப் பார்த்தார் குதப்ஷா. "குட்டுப்பட்டவனுக்குத்தான் அதன் வேதனை தெரியும். குட்டிய கரம் வலிக்குமே என்று எட்டி நிற்பவன் இரக்கப்படுவது போலிருக்கிறது தளபதியாரின் பேச்சு. அகமது நகரிலே அரவீட்டான் நடத்திய அழிவு வேலைகளையும் அட்டூழியங் களையும் நேரில் கண்டால்தான் நிஜாம்ஷாவின் செயல் நியாயமென்றே நினைக்கத் தோன்றும்."

“தோல்வி கண்டவர்களின் புலம்பல் எந்த நாளுமே எந்த நாட்டிலுமே இப்படித்தான் இருந்திருக்கிறது!” ஏகத்தாளமாகச் சிரித்தான் சித்திஹாஸன்.

அவன் சிரிப்பில் விசிறிவிடப்பட்ட நெருப்பாக ஜ்வலித்த குதப்ஷாவின் கவனத்தைத் தம் பக்கம் திருப்பினார் ஆதில்ஷா. “போகட்டும். உங்கள் திட்டம்தான் என்ன அதைச் சொல்லுங்கள்.”

“இன்று விஜயநகர் பீஜப்பூரின் நண்பனாக இருக்கலாம். ஆனால் நாளும் வளர்ந்து வரும் இந்தப் பேரரசின் நிழலிலே வாழுவதென்பது என்றைக்கும் ஆபத்துத்தான். தென்னக முஸ்லிம் அரசுகள் இனித் தனித்து வாழ முடியாது. வாழ முயன்றால் வளர்ந்துவிட்ட இந்துப் பேரரசின் காலடியிலே மானமிழந்து கிடக்க வேண்டியது தான். இதுவே நான் பெற்ற படிப்பினை. எப்பாடி பட்டாவது எல்லா முஸ்லிம் அரசுகளும் இணைந்து இந்த ஆணவம் பிடித்த பேரரசை ஒழித்தாக வேண்டும். இதுவே நான் கண்ட படிப்பினை வகுத்துக் கொடுத்த கொள்கை” என்று குமுறினார் குதப்ஷா.

கடகடவென்று சிரித்தான் காலனைப் போல சித்திஹாஸன். “உங்கள் படிப்பினையும் கொள்கையும் நடைமுறைக்கு ஒவ்வாத விஷயங்களாக அல்லவா இருக்கின்றன? விஜயநகரத்தை வீழ்த்தவா? முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதையல்லவா அது?”

ஆத்திரப்பட வேண்டிய குதப்ஷா அமைதியாகப் பேசினார். “ஆதில்ஷா அவர்கள் தமது தளபதியாரை இங்கிருந்து வெளியேற்ற வேண்டும் அல்லது வாயை மூடிக் கொண்டிருக்கும் படியாகவாவது உத்தரவிட வேண்டும். பாமினியாரின் பராக்கிரமத்தை அறியாத அந்நிய நாட்டவரான அவருக்கு மன்னர்களாகிய நம் பேச்சில் குறுக்கிடம் யோக்கியதை கிடையாது...” பீஜப்பூர் அரசியல் தலைவர்கள் குதப்ஷாவின் வாதத்தை ஆமோதிப்பவர்கள் போலத் தலையசைத்து முறுவலித்தார்கள். அவர்களின் உள்ளத்தை உணர்ந்த ஆதில்ஷா மௌனமாக இருந்தார். நிலைமையைப் புரிந்து கொண்ட சித்திஹாஸன் சிங்கமென உடலைச் சிலிர்த்து கொண்டு எழுந்திருந்தான். சீறிப் பாயும் வேங்கையென வெளியேறினான்.

“பழம் பெருமை பேசிப் பயனில்லை. இன்றைய நிலைமை என்ன?” என்று குதப்ஷாவைத் தன் நினைவுக்குக் கொண்டு வந்தார் பீஜப்பூர் சுல்தான்.

"பழம் பெருமையிலேதான் வீரன் பலம் பெறுகிறான். அன்று ஒன்றுபட்டிருந்தோம். விஜயநகரத்தை ஓட ஓட விரட்டிக் கொண்டிருந்தோம். வெற்றியே பாமினியின் வாழ்வாக இருந்தது. பின்பு பிளவு பட்டோம். பிரிந்து போனாம். கொள்கைகள் மாறுபட்டன. உட்பகைகள் அதிகரித்தன. இன்று பகைவன் பலம் பெற்றுவிட்டான். அவன் கை ஓங்கி விட்டது. அவனிடமே உதவி கேட்டுப் போகும் துர்ப்பாக்கிய நிலையும் நமக்கு ஏற்பட்டது. இன்று அகமது நகருக்கும் கோல்கொண்டாவுக்கும் நேர்ந்த பரிதாபம் நாளை பீஜப்பூருக்கும் நேரலாம். ஆகவே இந்த அவமானத்தை ஆதில்ஷா தன்னுடைய தாகவே கருதிச் செயல்பட வேண்டும்..."

"எப்படியோ?...." என்றார் எங்கோ பார்த்தபடி ஆதில்ஷா.

"நம்மிடையே உள்ள வேற்றுமைகளை மறந்து ஒன்று படுவோம். முஸ்லிம் இனத்தின் போது விரோதியாக விஜயநகரத்தைக் கருதி, வளர்ந்து வலிமை பெற்று வரும் அதை ஒழித்துக் கட்டுவோம்" என்றார் குதப்ஷா.

"நம்முள் ஒற்றுமையா? பாமினி சுல்தான்கள் நண்பர்களாகவா?" என்று நகைத்தார் ஆதில்ஷா. "அப்படி ஒரு எண்ணமிருக்குமானால் அகமதுநகர் பீஜப்பூரை வம்புச் சண்டைக்கு இழுக்குமா? கோல்கொண்டாவை நண்பனாக கொண்டு உதவிக்கு வருமாறு அழைத்ததே பீஜப்பூர், என்ன நடந்தது?" என்று கேட்டார்.

குத்திக் காட்டியபோது குன்றிப் போனார் குதப்ஷா. "மறக்க முடியாத செயல்தான். இருந்தாலும் நடந்து போனவற்றை மறந்து விடும்படி ஆதிலஷா அவர்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இந்துப் பேரரசின் தலைமையிலே முஸ்லிம்களாகிய நாம் இணைவது நடவாத காரியம். அதனால்தான் நமக்கு இந்த இழிநிலை ஏற்பட்டது. முஸ்லிம் இனத்தின் பெருமைகளைக் காக்க வென்றே தென்னக முஸ்லிம் அரசுகள் இணைய வேண்டம். நம் பொது எதிரியாக விஜயநகரத்தை எண்ணிச் செயல்பட வேண்டும். அப்போதுதான் நமக்கு வாழ்வுண்டு. இதற்காகவே நான் இங்கு வந்தது" என்றார் குதப்ஷா. இனத்தின் பெயரால் மதத்தின் பெயரால் மன்றாடியபோது அவைத் தலைவர்களும் அவருக்குச் சாதகமாகவே பேசினார்கள். ஆதில்ஷாவும் அசைந்து கொடுக்கும்படியாயிற்று.

"இஸ்லாத்தின் ஏற்றத்துக்காக எங்களோடு இணைவதானால், காபிரிகளின் உதவியை நீங்கள் நாடும்படியான சூழ்நிலையை

உருவாக்கிய அந்த நிஜாம்ஷாவின் மருமகனாகவே உங்களை ஆக்கி வைக்கிறேன்" என்று ஆசைகளை வளர்த்தார் குதப்ஷா.

ஆதில்ஷாவோ புதிய செய்தியைப் புரிந்து கொள்ள முடியாத வியப்பில் திகைத்தார். "என்ன சொல்கிறீர்கள்...?"

"அகமதுநகர் ஹுசைன் நிஜாம்ஷா தன் அருமை மகள் சாந்த் பீபியை பீஜப்பூரின் ஆதில்ஷாவுக்கு மணமுடித்து வைப்பார். அலி ஆதில்ஷாவின் அருமைச் சகோதரியைத் தம் மூத்த மகன் முர்துஸாவின் வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொள்வார்.

நிஜாம்ஷாவின் அருமை மகள் சாந்த் பீபியின் அழகையும் அறிவையும் பற்றிக் கேள்விப்பட்டவர் ஆதில்ஷா. அந்தச் சுந்தரி தனக்கு மனைவியாகக் கிடைப்பது சாத்தியமானால் அதைவிடப் பாக்கியம் வேறில்லை. நம்பிக்கைப்பட முடியாத நிலையில் "நடக்கக்கூடிய காரியமா?" என்றார்.

"நடத்திக் காட்டுகிறேன். எப்பாடு பட்டாவது எல்லா முஸ்லிம் அரசுகளையும் எந்த விதத்திலாவது இணைத்து ஆணவம் மிக்க விஜயநகரத்தை அழித்தே தீருவேன். அதுவே என் லட்சியம்" என்று சூளுரைத்தார் குதப்ஷா.

சாந்த் பீபியின் நினைவிலே தன்னை மறந்து போய் உட்கார்ந்திருந்தார் ஆதில்ஷா.

'வெற்றி வெற்றி' என்று எக்காளமிடடது குதப்ஷாவின் உள்ளம்.

## 13

# இந்தியா என்ற இந்திரஜாலம்

கப்பலில் இருந்தவர்களின் நினைவிலெல்லாம் நிறைந்திருந்தான் யூசப்கான். வியப்பு வழியும் கண்களால் நன்றிப் பெருக்கோடு அவனைப் பார்த்தார்கள் போர்த்துகீசியர்கள். தங்களால் உதாசீனப்படுத்தப்பட்ட ஒருவன், மரணக் கம்பத்திலே மாட்டி வைத்து உயிர் துடிக்கத் துடிக்கத் தங்களிடம் கசையடி வாங்கிய ஒருவன், அதை

எல்லாம் மறந்து மன்னித்துத் தங்கள் உயிர்களையும் உடைமைகளையும் காப்பாற்றிக் கொடுத்ததை நினைத்தபோது அந்த அந்நியனான யூசப்கான், அதிசய மனிதனாகத்தான் அந்த மாலுமிகளின் இதயங்களிலே இடம் பெற்றிருந்தான்.

கப்பலின் தலைவர் அவனைத் தம் அறையிலேயே தங்கச் செய்தார். யாருக்குமே கிடைக்காத தனிச் சலுகை இது. தம்முடனே தமக்குச் சமமாக ஒரே ஆசனத்தில் அமர்த்திக் கொண்டு உணவருந்தினார். வெற்றுடம்போடு வியர்வை கொட்ட வேலை வாங்கிய அடிமை யூசப்கானா இப்போது அவன்? அந்தக் கப்பலுக்கும் அதிலிருந்தோருக்கும் மறு வாழ்வளித்த மகத்தான வீர புருஷனல்லவா? விரட்டி விரட்டி வேலை வாங்கியவர்கள் விழுந்து விழுந்து உபசரித்தார்கள். இன்னும் எப்படி யெல்லாம் தம் நன்றியை, நல்லெண்ணத்தைக் காட்டுவது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார் கப்பல் தலைவர்.

வழுவழுப்பான தரையிலே வழுக்கிச் செல்லும் பொருளைப் போலத் தகதகக்கும் கடல் நீர்ப் பரப்பிலே அன்னமென ஆடி அசைந்தபடி ஆனந்தமாக மிதந்து கொண்டிருந்தது கப்பல். கலத்தைச் செலுத்துவதற்கு ஏற்ற வசதியான காற்று வீசிக் கொண்டிருந்தது. கப்பலுக்கு மட்டுந்தானா? யூசப்கானின் வாழ்க்கையிலும் இப்போது வசதியான காற்றுத்தான் வீசிக் கொண்டிருந்தது! கப்பலில் உள்ளோருக்கு முடிதிருத்தும் மாலுமி ஒருவன் யூசப்கானின் முகத்து இளந்தாடியைக் கத்திரித்து அழகுபடுத்தும் பணியில் ஈடுபட்டிருந்தான். அந்த நிலையிலும் கூட அவன் அருகே ஓர் ஆசனத்தில் அமர்ந்து சிரித்தபடி உரையாடிக் கொண்டிருந்தார் கப்பல் தலைவர். மற்றவர்கள் பொறாமை கொள்ளுமளவுக்கு அவர் யூசப்கானிடம் அன்பு காட்டினார். விசேஷமான சமயங்களில் தான் அணிந்து கொள்வதற்காக வைத்திருந்த உயர்ந்த ஆடைகளை எடுத்து யூசப்கானிடம் கொடுத்து அதை அவன் அணிந்து கொள்ளத்தான் வேண்டும் என்று வற்புறுத்தினார். அவருடைய அன்புப் பிடியிலே சிக்குண்ட அவன் சில வேளைகளில் அவஸ்தைப்படவும் வேண்டியிருந்தது.

அன்று அவனைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பாதவர்; தெரிந்து கொண்ட ஒரு சில செய்திகளையும் அலட்சியமாக மதித்தவர் இன்று அவைகளில் ஆர்வம் காட்டலானார். போர்த்துகீசியர்களின் உடையில் பொலிவுடன் விளங்கிய அவனைப் பார்த்துக் கூறினார்:

"யூசப்கான். இந்த உடையில் நீ எங்களைப் போலவே இருக்கிறாய். அந்தத் தலைப்பாகை மட்டும் இல்லா விட்டால் உன்னை எங்கள் நாட்டில் அந்நியன் என்றே யாராலும் கூற முடியாது" என்றார் கப்பல் அதிகாரி. யூசப்கான் ஒரு நீண்ட துணியை எடுத்துத் தன் நாட்டு வழக்கப்படி தலையிலே முண்டாசு கட்டிக் கொண்டிருந்தான். அதுவும் அவனுக்குக் கம்பீரமாகத்தான் இருந்தது. சுல்தானைப் போல. தலைவரின் பாராட்டுக்குத் தன் முறுவலையே பதிலாக்கி விட்டுத் தன்னையே தங்கள் பார்வையால் விழுங்கிக் கொண்டிருக்கும் மற்ற மாலுமிகளைப் பார்த்தான். அன்று மதிப்போடு பார்த்தவர்களின் முகத்திலே இன்று இலேசான வெறுப்புப் படர்ந்திருப்பதை உணர்ந்தான் யூசப்கான். கப்பல் தலைவரிடம் தான் பெறும் சலுகைகள் தான் அதற்குக் காரணம் என்பதை அவன் அறியாமலில்லை.

"யூசப், நீ எங்கள் நாட்டுக்கு வந்து எங்களில் ஒருவனாகவே ஆகி விடேன். உன் வீரத்துக்கும் திறமைக்கும் எங்களிடம் நல்ல வரவேற்பிருக்கும். பெரு வாழ்வு வாழலாம்" என்றார் கப்பலின் தலைவர்.

யூசப் அவரைப் பார்க்காமலேயே, ஆனால் கீழ்த் தளத்தில் தங்களையே பார்த்தபடி காரியங்களில் ஈடுபட்டிருக்கும் மாலுமி களைப் பார்த்து முறுவல் செய்துகொண்டே, "அப்படியென்றால்?" என்று கேட்டான்.

"எங்கள் இனத்தவனாகி விட ஏற்றமிக்க வாழ்வுக்கு ஏற்பாடு செய்கிறேன்." யூசப்கானைக் கிறிஸ்துவ மதத்தைத் தழுவச் செய்யும் முயற்சியிலே ஈடுபடலானார் அவர்.

"உங்கள் இயேசுவின் வழியைப் பின்பற்றச் சொல்கிறீர் களா?" என்று கேட்டு இடி இடியென நகைக்கலானான் யூசப்கான்.

அவனது வெறிச் சிரிப்பைக் கண்டு வெகுண்டவர் விட்டுக் கொடுக்காமல், "மதம் மாறினால், இந்தியத் துறைகளை நிர்வகிக்கும் பிரதிநிதியாக உன்னை ஆக்கும்படி எங்கள் மன்னரிடம் சிபாரிசு செய்வேன்" என்றார்.

"என் புனித இஸ்லாத்தைத் துறந்து இன்னொரு மதத்தைத் தழுவுவதா? அதுவும் பதவிக்கும் பகட்டான வாழ்வுக்கும் ஆசைப்பட்டு. அதைவிட என்னை அந்த மரணக் கம்பத்திலேயே கட்டி வைத்திருக்கலாம் ஐயா!" என்று மனம் நொந்து போய்க்

கூறினான் இனப் பற்று மிகுந்த யூசப்கான். இஸ்லாத்தைத் தன் உயிருக்கும் மேலாக மதிப்பவன் அவன்.

யூசப்கானின் உள்ளத்தைப் புரிந்து கொண்ட கப்பல் தலைவர் இது விஷயமாகத் தங்களிடையே கசப்பை வளர்க்க விரும்பாதவராக, "உன்னைக் கட்டாயப்படுத்தும் நோக்கத்துடன் நான் இதைச் சொல்ல வில்லை, யூசப். இதனால் எங்கள் நாட்டிலே ஏற்றம் பெரும் வாய்ப்பு உனக்கு உண்டு என்ற கூறினேனே தவிர உன் மத உணர்ச்சியைப் புண்படுத்தும் எண்ணத்தோடு இதைக் கூறவில்லை" என்றார்.

"ஐயா! தாங்கள் என் நண்பரானால், என் நல் வாழ்வில் அக்கறை உள்ளவரானால் நான் உங்களிடம் ஒரு சிறு உதவியை வேண்டிப் பெறலாமென்று நினைக்கிறேன்" என்றான் யூசப்கான்.

"இந்தக் கப்பல் இன்று கடலில் மிதந்து கொண்டிருப்பதற்கு, இதில் உள்ளவர்கள் உயிரோடு உலாவிக் கொண்டிருப்பதற்கு, விலை மதிப்பற்ற பொருள்களோடு நாங்கள் எங்கள் தாய்நாட்டுக்குத் திரும்பிக் கொண்டிருப்பதற்குக் காரணமான நீ கேட்பதை நான் மறுப்பதானால் அது நன்றி கொன்ற தன்மை யாகவல்லவா ஆகும்?"

"விசேஷமாக ஒன்றுமில்லை. நான் என் தாய்நாட்டுக்குப் போக விரும்பவில்லை. இந்திய் நாட்டின் துறைமுகங்கள் ஏதாகிலும் ஒன்றில் என்னை இறக்கி விட்டு விடுங்கள். என் நாட்டினரில் எத்தனையோ பேர் இந்திய மன்னர்களின் அவையிலே தங்கள் திறமைக்குத் தக்க பெருமை பெற்று வாழ்ந்து வருவதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களைப் போல நானும் என் அதிர்ஷ்டத்தை நாடி அங்கே போகலாம் என்று எண்ணுகிறேன்" என்றான் யூசப்கான். அவனது மனத் திரையிலே கள்ளிக் கோட்டையில் கண்ட பாரதத்தின் பசுமையான காட்சிகள் படங்களாக விரிந்தன.

"இவ்வளவுதானே? உன் விருப்பப்படியே உன்னை இந்திய மண்ணில் இறக்கி விட்டுச் செல்கிறேன். இன்னும் இரண்டு நாளில் நமது கப்பல் கோவா துறைமுகத்துக்குப் போகும். அங்கிருந்தே நீ, அதிர்ஷ்டத்தை நாடி உன்னுடைய பிரயாணத்தைத் தொடங்கலாம்" என்றார் கப்பல் அதிகாரி.

அன்றிரவு யூசப்கான் படுக்கச் செல்லவே இல்லை. அவன் தூக்கத்தைப் பூரணமாக அநுபவித்து எத்தனையோ நாட்களாயிற்றே. சுருண்டு சுருண்டு உருளும் கடல் அலைகளையே கண் கொட்டாமல்

பார்த்தபடி கப்பலின் மேல்தளத்தின் நின்று கொண்டிருந்தான் தன்னந் தனியாக. அவன் உள்ளத்திலும் எண்ண அலைகள் அப்படித்தான் உருண்டு உடைந்து கொண்டிருந்தன. வீரவாழ்வு என்னும் தீராத வேட்கையோடு தாய்நாட்டிலிருந்து கிளம்பிய நாள் முதல் இன்றைய நிலை வரை எண்ணிப் பார்த்தான் யூசப்கான். விதி ஏதோ ஒரு காரியத்துக்காகவே காரணத்துடன் இப்படி யெல்லாம் தன்னை ஆட்டுவித்துக் கொண்டிருக்கிறது என்ற முடிவிலேதான் முற்றுப் பெற்றது அவன் சிந்தனை. இன்னும் இரண்டு நாளில் கோவா துறைமுகத்தில் விடுதலை பெறவேண்டும் என்ற தவிப்போடு இருந்தவனுக்கு அந்தக் கப்பல் தன் வேகத்தை இழந்து நங்கூரம் பாய்ச்சி நடுக்கடலில் நிற்பதாகத் தோன்றியது.

விடுதலை வேட்கையில், தன்னை மறந்து கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த யூசப்கானைக் கப்பலில் ஏற்பட்ட சல சலப்பு தன் நிலைக்குக் கொண்டு வந்தது. பாய்மரத்தின் உச்சியில் உள்ள தொட்டியில் நின்றபடி தொலைதூரத்துக் காட்சியைக் கண்டு சொல்பவன் கப்பல் தரையைச் சமீபித்து விட்டதாக உற்சாக மிகுதியோடு கூறிக்கொண்டிருந்தான். கப்பலின் ஓரத்துக்கு ஓடி வந்து குவிந்த மாலுமிகள் தூரத்தே தெரிய வேண்டிய கரைப் பகுதியைக் கண்களை இடுக்கிக் கொண்டு ஊகித்து உணரும் முயற்சியில் ஈடுபடலானார்கள்.

எல்லையில்லாது பரந்து கிடக்கும் கருநீலக் கடலில் கவலையோடு பிரயாணம் செய்யும் மாலுமிகளுக்கு மகிழ்ச்சியைத் தரும் காட்சி தூரத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. புகையின் நடுவே முளைத்த கருநீலக் கோடுபோலக் கரை தெளிவாகிக் கொண்டிருந்தது. கப்பலில் உள்ளவர்களின் முகத்தில் ஒளி பரவுவதைப் போல மங்கலான அந்தக் காட்சியிலும் மெள்ள மெள்ள விவரங்கள் கூடலாயின. அவர்கள் காட்சிக்கு எல்லைக் கோடாக உயர்ந்தும் தாழ்ந்தும் ஓடிய மலைத் தொடரை அடுத்து அடர்ந்த காடுகளின் பசுமை செறிந்த தோற்றமும் சற்று நேரத்துக் கெல்லாம் தென்னை மரங்களின் தெவிட்டாத காட்சியும் புலனாயின. அதைத் தொடர்ந்து படகுகளில் கப்பலை நோக்கி வரும் சுதேசிகளின் ஆரவாரம் மிக்க ஓசையும் கேட்கலாயிற்று. கப்பலில் உள்ளோர் பரபரப்புடன் இங்கும் அங்கும் ஓடி நங்கூரம் பாய்ச்சுவதற்கான காரியத்தில் ஈடுபட்டிருந்தார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் கப்பல் கோவா துறை முகத்தில் போய் நங்கூரமிட்டு நின்றது.

போர்த்துகீசியர் சீருடை அணிந்து கப்பலில் அணிவகுத்து நின்றார்கள். கப்பல் தலைவரும் தமக்கு உரிய கம்பீரமான உடையணிந்து துறைமுக அதிகாரியை வரவேற்பதற்குத் தயாராக இருந்தார். துறைமுகத்தில் வேறு சில கப்பல்களும் சிறிய பெரிய படகுகளும் குழுமிக் கிடந்தன. கோவா துறைமுகத்தின் அதிகாரியும் இந்தியாவில் உள்ள போர்த்துகீசியப் பகுதிகளின் நிர்வாகியுமான டாம் பிரான்ஸிஸ்கோ கோடென்ஹோ (Dom Francisco Coutinho) ஒரு படகில் கப்பலை நோக்கி வந்து கொண்டிருந்தார். அவர் படகு கப்பலை அணுகியதும் கப்பலி லிருந்து அவரை வரவேற்பதற்கு அறிகுறியாக எக்காளத்தை முழக்கினார்கள். நூலேணி வழியாக கோடென்ஹோ கப்பலின் தளத்துக்கு ஏறி வந்த போது கப்பல் அதிகாரி கைலாகு கொடுத்து அவரை வரவேற்றார். சம்பிரதாயமான சடங்குகள் நிகழ்ந்தன. கப்பல் வீரர்கள் அணிவகுத்து நின்று செலுத்திய மரியாதையைப் பெற்றுக் கொண்டு தலைவருடன் சம்பாஷித்தவாறே அவரது அறைக்கு வந்தார் துறைமுக நிர்வாகி. இத்தனை நேரமும் தனியுடையில் தன்னிச்சையாக நின்று கொண்டிருந்த யூசப்கான் அவர்து கவனத்தைக் கவர்ந்ததில் வியப்பில்லை. அந்த அந்நியனைப் பற்றி அவர் கப்பல் தலைவரிடம் விசாரித்த போது அவர் யூசப்கானின் கதையை அவரிடம் விவரித்து, அந்தக் கப்பலைக் கொள்ளையர்களிடமிருந்து காத்துக் கொடுத்த வீரன் என்று அவனை அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். மகிழ்ச்சியால் அவர் முகம் மலர்ந்தது. நன்றிப் பெருக்கினால் அவர் கண்கள் பளபளத்தன. யூசப்கானின் கரம் பற்றிக் குலுக்கித் தம் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டார். கப்பலிலிருந்து விடைபெறும் போதும் அவனிடம் தனிப்படக் கையசைத்து விடைபெற்றார்.

துறைமுக நிர்வாகியின் விஜயத்துக்குப் பிறகு கப்பலிலுள்ளோர் கரைக்குச் செல்லுவதற்கான ஏற்பாடுகளில் ஈடுபடலானார்கள். அந்தத் துறைமுகத்தில் சில நாட்கள் தாமதிக்கத் திட்டமிட்டிருந்தார் தலைவர். புதிய உணவுப் பொருள்களை நிரப்பிக் கொள்ளவும் சாமான்களை ஏற்றவும் இன்னும் அவகாசமிருந்தது. ஆகவே கப்பலில் உள்ள அனைவருமே கரைக்குச் சென்று உள்நாட்டில் ஓரிரு நாட்களை இன்பமாகக் கழிப்பதற்கு அனுமதி அளித்தார் அதிகாரி.

யூசப்கானையும் கப்பல் தலைவரையும் தாங்கியபடி ஒரு படகு கோவாவின் கரையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது

தன்னிடமிருந்து விலகிச் செல்லும் கப்பலையே வெறித்துப் பார்த்தபடி படகில் உட்கார்ந்திருந்த யூசப்கானின் நினைவு பல மாதங்கள் பின்நோக்கிச் சென்றது. அதே கப்பலில் தான் ஓர் அடிமையாக எல்லோரது அவமதிப்புக்கும் அலட்சியத்துக்கும் ஆளாகி அடைபட்டுக் கிடந்ததை எண்ணிப் பார்த்துக் கொண்டான். அராபியக் குதிரைகளை ஆயிரக் கணக்கில் வாங்கும் ஆற்றல் மிக்க அரசான 'பிஸ்நாகா' என்ற சிறப்பு மிக்க ராஜ்யத்தைப் பற்றி அறிந்து கொண்டதும் நினைவுக்கு வந்தது. ஒதுங்கிப் போய்க் கொண்டிருந்த கப்பலின் ஓர் ஓரத்தில் ஓங்கிநின்ற மரணக் கம்பங்களின் மீது அவன் பார்வை பதிந்தது. 'என்னைத் தழுவியவர்கள் இதுவரை நழுவிச் சென்றதே இல்லை. இன்று நீ செல்கிறாய். உனக்கு நல்வாழ்வு காத்திருக்கிறது போய் வா!' பனித்த கண்களோடிருந்த அவன் பார்வைக்குப் படகின் ஆட்டத்தில் அந்தக் கம்பங்கள் அசைந்து விடை கொடுப்பது போலிருந்தது.

தங்களிடமிருந்து விடைபெறும் யூசப்கானுக்குப் போர்த்துகீசியக் கப்பல் தலைவர் ஒரு பெரிய விருந்தே வைத்தார். கொடுமைப்படுத்துவதில் எப்படி எல்லை மீறியவர்களாக இருந்தார்களோ அதேபோல் அன்பை வெளிப்படுத்துவதிலும் நடந்து கொண்டனர் போர்த்துகீசியர். பொற்காசுகள் நிறைந்த முடிப்பொன்றை வழிச்செலவுக்காக வைத்துக் கொள்ளும்படி அவனுக்கு வழங்கினார் கப்பல் தலைவர். பாரதத்தின் பழைமையான பட்டாக் கத்தி ஒன்றை விரும்பி விலை கொடுத்து வாங்கி வைத்திருந்தார் போர்த்துகீசியப் பகுதிகளை நிர்வகிக்கும் உயர் அதிகாரி. அற்புதமான வேலைப்பாடுகளைக் கொண்ட உறையோடு கூடியது அந்தக் கம்பீரமான கத்தி. கற்கள் வைத்து இழைத்திருந்த அதன் உறுதியான பிடியில் யாளியின் முகப்பும் யானைத் தந்த வேலைப்பாடுடனும் கூடிய கத்தி அது. அதனைப் போர்த்துக்கலின் மன்னருக்குப் பரிசாக அளித்துப் பெருமை அடைய எண்ணியே வாங்கி வைத்திருந்தார் டாம் பிரான்ஸிஸ்கோ கோடென்ஹோ. ஆனால் யூசப் கானின் வரவும் தோற்றமும் அவரது முடிவை மாற்றிவிட்டன. அந்த உயர்ந்த கத்தி பயனுள்ள இடத்திற்குப் போக வேண்டுமென்று விரும்பினாரோ என்னவோ. காட்சிப் பொருளாக மன்னர்களின் பொக்கிஷ அறையில் அடைபட்டுக் கிடப்பதை விட, யூசப் கானைப் போன்ற ஒரு வீரனின் கையில் அந்தக் கத்திக்கு அதிகப் பலனும் மதிப்பும் இருக்கும் என்ற முடிவோடு தமது அன்பளிப்பாக அதை அவனுக்கு அளித்துக்

கௌரவித்தார். அதுமட்டுமல்லாமல் பல்லாண்டுகளுக்குமுன் பீஜப்பூரின் புகழ் பெற்ற தளபதியும் மந்திரியுமாக இருந்த 'ஆஸாத் கான்' என்ற ஆற்றல் மிக்க வீரனின் உடைமைகளைக் கொள்ளை கொள்ளும் வாய்ப்புப் போர்த்துகீசியர்களுக்குக் கிட்டியது. ஆஸாத் கான் தமது ஜாகீரிலே சேமித்து வைத்திருந்த ஏராளமான பொக்கிஷங்களைக் கைக்கொண்டார்கள் போர்த்துகீசியர். அப்போது அந்த மாவீரனின் உயர்ந்த ஆடை அணிகளும் அவற்றோடு வந்தன. டாக்கா மஸ்லின், காசிப்பட்டு ஆகியவைகளால் கண் கவர் வனப்பு மிக்க வண்ணங்களில் தயாரிக்கப்பட்ட கம்பீரமான உடைகள் ஆஸாத்கானுடையவை. (ஆரம்ப காலத்தில் பீஜப்பூர் சுல்தான் இப்ரஹிம் ஆதில்ஷாவின் அன்புக்கும் மதிப்புக்கும் உரியவராக விளங்கியவர் ஆஸாத்கான். பிற்காலத்தில் மன்னரின் வெறுப்புக்கும் கோபத்துக்கும் ஆளானார். போர்த்துகீசியர்களோடு சேர்ந்து கொண்டு மன்னர் இப்ரஹிமுக்கு எதிராக அவரது சகோதரர் அப்துல்லாவை அரியணையில் அமர்த்த நடத்திய புரட்சியிலே தோல்வி கண்டார் ஆஸாத் கான். அப்போது அவரது உடைமைகளைப் போர்த்துகீசியருக்கு உரிமையாக்கினார் மன்னர்.) இந்த விலை உயர்ந்த உடைகளை அதன் அழகுக்காகத் தங்கள் பண்டகசாலையில் போர்த்துகீசியர் பாதுகாத்து வைத்திருந்தார்கள். முஸ்லிம் இனத்து உயர்குடிப் பிறந்தோருக்கு உரிய அந்த ஆடை அணிகளால் ஐரோப்பியராகிய அவர்களுக்குப் பயன் ஏதுமில்லை. அதன் நினைவு கோடென்ஹோவுக்கு வரவே ஆஸாத்கானின் சிறந்த ஆடைகளில் சிலவற்றையும் யூசப் கானுக்கு அளித்து அதை அணிந்து கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். பொன்னாடை போர்த்தி, பொற்கிழி அளித்து, என்னாளும் காக்கும் இரும்புக் கத்தி ஒன்றையும் தங்கள் நன்றியின் அடையாளமாக, யூசப் கானுக்குக் கொடுத்துவிட்டுப் பிரிய மனமில்லாமல் விடை அளித்தார்கள்.

யூசப் கான் போர்த்துகீசியர்களிடம் தான் பட்ட துன்பங்களை யெல்லாம் மறந்தான். அவர்களின் நட்பும் இன்றைய நல்லெண்ணமும்தான் அவன் இதயத்திலே நிறைந்திருந்தன. உணர்ச்சிப் பெருக்கால் பேச நாவெழாத நிலையில் அவர்களைத் தழுவிக் கொண்டு கண்கலங்கி விடை பெற்றுக் கொண்டான்.

'இந்தக் கோவா துறைமுகம் உன்னை என்றைக்கும் எந்த நிலையிலும் வரவேற்கக் காத்திருக்கும் யூசப்கான்! என்றாவது தாய்நாடு

செல்ல விரும்பினால் தயக்கமின்றி எங்கள் உதவியை நாடி வரலாம் நீ'' என்றார் உயர் அதிகாரி கோடென்ஹோ.

“உங்கள் அன்புச் சுமையோடு இந்தப் பொருள் சுமைகளையும் அளித்து என் போக்குக்கு வேலியிட்டு விட்டீர்கள்...'' என்று வேடிக்கையாகச் சொல்லி விடைபெற்றுக் கொண்டு கிளம்பினான் யூசப்கான். போர்த்துகீசிய மாலுமிகளின் கூட்டம் அவன் தங்களிடமிருந்து பிரிந்து செல்வதையே பார்த்துக் கொண்டு நின்றது. அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டும், சிலபோது அவர்களைப் பார்த்தபடியும் பின் நோக்கியேகூட நடக்கலானான் யூசப்கான்.

கோவாவின் துறைமுகப் பகுதியை விட்டுக் கூட்டம் நிறைந்த உள்நாட்டுக்கு வந்தான் யூசப்கான். விதவிதமான விலை உயர்ந்த பொருள்களைக் குவித்துக் கொண்டிருந்தார்கள் வியாபாரிகள். பாரதத்தின் செல்வங்களை வாரிக் கொண்டு போவதற்காக வரும் அந்நியர்களின் நடமாட்டம் மிகுந்த துறைமுகப்பட்டினமானதால் அங்கு எந்தப் பொருளும் எளிதில் கிடைக்கும் வாய்ப்பு இருந்தது. வீரனான அவன் கவனத்தைக் கவர்ந்தது ஆயுதங்களை அழகுபட அடுக்கி வைத்திருந்த அங்கிருந்த ஓர் அங்காடிதான். வாளிலே எத்தனை விதம், எத்தனை ரகம்! விரல் நீளமுள்ள குத்துவாளிலிருந்து வலிமை மிக்கவர்கள் இரண்டு கைகளாலும் பிடித்துச் சுழற்றும்படியான பெரிய வாள் வரை எல்லாமே இருந்தன அங்கே. மார்பை மறைக்கும் இரும்புக் கவசங்கள், முகத்தை மறைக்கும் முக மூடிகள், உடலில் அணிந்து கொள்ளும் இரும்பு நூலால் பின்னிய சட்டைகள், ஈட்டிகள், வேல், வாள், சூலம் இப்படி இந்திய நாட்டின் போர்க் கருவிகள் அததனையையும் காட்சிப் பொருளாக்கி இருந்தார்கள் அந்த அங்காடியிலே. வேல் எறிந்து வீழ்த்துவதிலே வல்லவன் யூசப்கான். வழுவழுப்பாக்கி நீண்ட உறுதியானதொரு கம்பிலே கருத்தைக் கவரும் வகையில் அதன் ஒரு முனையில் கூரான கொழு ஒன்றைப் பொருத்தி இருந்த ஈட்டி ஒன்று யூசப்கானின் கவனத்தை ஈர்த்தது. அதைக் கையில் எடுத்து வீசும் நிலைக்குச் சுழற்றிப் பார்த்தான். ஈட்டியின் வேலைப்பாடும் அதன் உறுதியும் தரமும் அதைத் தன்னுடைய தாக்கிக் கொள்ளும் தவிப்பை ஏற்படுத்தின. குத்து வாள் ஒன்றையும் அந்த ஈட்டியையும் வாங்கிக்கொண்டு மேலே நடந்தான்.

குதிரைச் சந்தை கூடியிருந்தது. வனப்பிலும் வலுவிலும் சிறந்த குதிரைகளைக் கொண்ட வந்து குவித்திருந்தார்கள் அராபியக் குதிரை

வணிகர்கள். கம்பீரமான அந்த அகவங்களின் தோற்றத்திலே மனத்தைப் பறிகொடுத்து பயங்கி நின்றான் யூசப்கான். தனது பிரயாணத்துக்கு இந்தப் பிராணியின் உதவி அவசியம் தேவை என்ற முடிவுக்கு வந்த யூசப்கான் வெண் புரவி ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதன் விலையை விசாரித்தான். இளமையும் வீரமும் பொலியும் உருவில், தன் இனத்தவன் ஒருவன் குதிரை கேட்டு நிற்பதைக் கண்ட வியாபாரி விலையைப் பற்றி அதிக பேரம் பண்ணவில்லை. கனைத்துக் கால்களால் தரையைக் கிளறியபடி கம்பீரமாக நின்ற அதைத் தட்டித் தடவிக் கொடுத்தான். உடலைச் சிலிர்த்துக் கொண்ட அதன் மீது தாவி ஏறி அமர்ந்தான் யூசப் கான். செழித்து வளர்ந்திருந்த தன் பிடரி மயிர் ஆடி அசையக் கம்பீர நடைபோட்டது குதிரை.

காலை இளம் வெயில் கொங்கணப் பிரதேசத்தின் குளிருக்கு இதமான கதகதப்பைக் கொடுத்துக் கொண்டிருந்தது. வண்ண மலர்கள் தேன் சிந்தி மலர்ந்து வண்டுகளின் வரவை எதிர்நோக்கி மனம் பரப்பிக் கொண்டிருந்தன. குஞ்சுகளுக்கு இரை தேடக் கிளம்பிய பறவைகள் தங்கள் காரியத்தை மறந்து காதல் விளையாட்டுக்களில் ஈடுபட்டுக் களிப்போடு கானமிசைத்துக் கொண்டிருந்தன. இரவுக் கன்னி தன் பனியாடையை களைந்து பசுமைப் பரப்பிலே காயவைத்திருந்தாள். அது வைரக் கற்களாக ஒளி வீசிச் சிரித்துக் கொண்டிருந்தது. இயற்கையின் இத்தனை கோலாகலங்களையும் பார்த்து, ரசித்து மகிழ்ந்தபடி இடையிலே வாளும், கையிலே வேலும், உள்ளத்திலே உவகையுமாக வளைந்து வளைந்து வழி காட்டிக் கொண்டு செல்லும் அந்தப் பாதையைத் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான் யூசப்கான். குதிரைமீதுதான்! ஆனால் அந்தப் பிராணியை விரட்டி ஓட்டவில்லை அவன். கடிவாளத்தைக் கூட அதன் கழுத்திலேயே துவளப் போட்டிருந்தான். அந்த ஆற்றல் மிக்க பிராணி தன்னிச்சைப்படி போய்க் கொண்டிருந்தது. ஆனால் அதன் அந்த மந்த நடையிலும் ஒரு கம்பீரமிருந்தது.

மேற்குக் கடற்கரைப் பகுதிக்கு அரண் போல அமைந்திருந்த மலைத் தொடரைக் கடந்து பெல்காம் வந்து சேர்ந்த யூசப்கான் பாரதத்தின் இயற்கை அழகைக் கண்டு பேச்சற்ற நிலையில் பிரமிப்படைந்து போனான். மந்திரவாதிகள் மாயா உலகைச் சிருஷ்டித்து அதனுள் அழைத்துச் செல்லும் அற்புதத்தைப் பற்றிக் கற்பனை உலகில்தான் கண்டிருக்கிறான். தேவதைக் கதைகளில்

தோன்றும் தெய்வீக அழகு நிறைந்த ஓர் இந்திர ஜால உலகைக் கண்ணெதிரே கண்டபோது யூசப்கானால் நம்பவே முடியவில்லை. இயற்கை தன் மரகத அங்கியை விரித்திருக்கும் அற்புதத்தைக் கண்ட வியந்தே போனான் அவன். எங்கு திரும்பினாலும் பசுமை! பசுமை! பசுமை! நெடுஞ்சாலைகளை ஒட்டினாற்போலக் குளிர் தரும் சோலைகள். சலசலத்து ஓடும் நீரோடைகள். பசி தீர்க்கும் பழ மரங்கள். தங்கக் கட்டிகளே போலச் சாலையோரத்து மரமொன்றில் தொங்கிய கனியொன்றைப் பறித்துச் சுவைத்தான் யூசப்கான். அப்பப்பா! எத்தனை இனிமையான சுவை! அதைப் போன்றதொரு கனியை அவ்வன் நாட்டிலே கண்டதேயில்லை. அவன் உண்டது மாங்கனி. அவன் மனமெல்லாம் நிறைந்திருந்தது அதை உண்டபோது. வெகு நேரம் வரை அதன் சுவை அவன் நாவை விட்டு அகலவே இல்லை.

'எத்தனை வளமான நாடு இது? அதனால் தான் என் தாயகத்திலிருந்து வந்தவர்களெல்லாம் இதைத் தங்கள் நாடாகவே எண்ணித் தங்கிவிடுகிறார்கள் போலும். அவர்கள் திரும்பாத ரகசியம் இப்போதல்லவா புரிகிறது!' என்று வியந்தவாறு வழிநடக்க லானான் யூசப்கான். வழியில் குறுக்கிடும் குக்கிராமங்களில் தன் பசியைத் தணித்துக் கொள்ள மக்களிடம் அணுகிய போது அவர்கள் அவனை அகமும் முகமும் மலர வரவேற்று வயிறார உணவு படைத்து உபசரித்த பண்பாட்டை எண்ண எண்ண இந்த நாட்டின் மீது ஒரு தனியான பற்றுதலே ஏற்பட்டு விட்டது அவனுக்கு.

தலைநகருக்குச் செல்லும் வழியைக் கேட்டறிந்து கொண்டு நீண்டு கிடந்த நெடுஞ்சாலையிலே தனது பிரயாணத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தான் யூசப்கான். பீஜப்பூர் என்ற பெருமை மிக்க முஸ்லிம் பேரரசின் அவையை நாடிப் போகிறோம் என்ற நினைவு அவனுக்குப் பிரயாணத்தில் களைப்பைத் தோற்றுவிக்கவில்லை.

அடர்ந்த கானக மொன்று குறுக்கிட்டது. அதன் வழியே கானகத்தின் கம்பீரான அழகை ரசித்தபடி குதிரையைச் செலுத்திக் கொண்டிருந்தான். கிருஷ்ணா நதியின் கிளையான மால்பிரபா என்ற ஆற்றின் கரையோரத்துக் காடு அது. வேங்கையின் உடலைப்போல நிழலின் இடையே வெயில் ஒளிப்பொட்டுக் களாகச் சிதறிக் கிடந்தது. எங்கோ தூரத்தில் பாறைகளில் மோதிச் செல்லும் நதியின் ஓசை அந்தத் தனிமையின் இனிமைக்குச் சுருதி சேர்ப்பது போலிருந்தது.

தங்குதடையின்றிச் சென்று கொண்டிந்த குதிரை எதையோ கண்டது போல மிரடு நின்று கனைத்தது. சுற்றுமுற்றும் பார்த்த யூசப்கானின் கண்களுக்கு எதுவும் புலப்படவில்லை. ஆனால் குதிரையோ முன்னே செல்ல மறுத்தது. உன்னிப்பாகப் பார்த்தபோது அவன் உடல் சிலிர்த்தது. அவனுக்கு முன்னேயுள்ள மரத்தில் நிழலும் ஒளியும் பின்னிக் கிடந்த அதன் கிளையில் பதுங்கியபடி அவனையே பார்த்துக் கொண்டிருந்தது ஒரு சிறுத்தை. அந்தச் சூழலில் அது இருப்பதே தெரியவில்லை. அப்படியொரு அதிசய உடலமைப்பு அதற்கு. தன் அனல் விழிகளை யூசப் கானின் மீது பதித்து எந்த நிமிஷமும் பாய்வதற்குத் தயாராக இருந்தது. தன்னை நோக்கி இருக்கும் ஆபத்தைத் தான் உணரு முன்பே தனக்கு உணர்த்திய குதிரையை நன்றியுடன் தடவிக் கொடுத்த யூசப் கானின் வலக் கரத்தின் பிடி ஈட்டியில் இறுகிற்று. தன்னை நோக்கி வந்த இரை நின்று நிதானிப்பதைக் கண்ட சிறுத்தை பாய்வதற்குத் தயாரானபோது யூசப்கானின் கரத்திலிருந்த ஈட்டியும் பாய்ந்தது. ஈட்டியிலே செருகிக்கொண்டு சிறுத்தை சுருண்டு விழுந்தபோது உண்டாக்கிய கர்ஜனையினால் அந்தக் கானகமே கலங்கியது. பறவைகள் பீதியுடன் சிறகடித்துப் பறந்தன. குரங்குகள் கிறீச்சொலியிட்டுக் கிளைகளில் தாவியோடின. யூசப்கானின் குதிரை வெகுண்டு முன்னங் கால்களைத் தூக்கிக் கனைத்துக் குதித்தது. உடலில் பாய்ந்து வெளிவந்துவிட்ட ஈட்டியிலிருந்து விடுபட வீணான முயற்சியில் ஈடுபட்ட சிறுத்தையின் மூச்சு மெள்ள மெள்ள அடங்கிக் கொண்டிருந்தது.

## 14

# திருமணக் கோலாகலம்

**சி**றுத்தையின் இதயத்தில் செருகி நின்ற ஈட்டியை உருவி இழுத்தபோது பொங்கி வழிந்த குருதியை அதன் பொட்டுடலிலேயே துடைத்து விட்டுப் பெருமையோடு அந்த ஆயுதத்தைத் தடவிக் கொடுத்தான் யூசப்கான். தான் விரும்பி வாங்கிய அந்த ஈட்டி தன் தகுதியை நிரூபித்து விட்டதில் தாங்க முடியாத மகிழ்ச்சி அடைந்தவனாகக் குதிரையின் மீது தாவி ஏறி அமர்ந்தான்.

எஜமானனின் குதூகலத்தை உணர்ந்த குதிரையும் குதி போட்டு நடந்தது.

குளுமை நிறைந்த இனிமையான அந்தக் காலை வேளையில் குதிரைச் சவாரி உடலுக்கும் உள்ளத்துக்கும் ஆனந்தமாக இருந்தது. அதன் பிறகு அந்தக் கானகத்தைக் கடக்கும் வரை வேறு சம்பவம் எதுவும் நிகழவில்லை. இடக்கையிலே குதிரையின் லகானைத் துவள விட்டுப் பிடித்தபடி வலக்கரத்தில் தன் வழித் துணையாக வந்து வாய்த்த ஈட்டியின் அடியை வலப்பாதம் வைக்கக் குதிரைச் சேணத்தோடு அமைந்த இரும்பு வளையத்தின் மீது இருத்தி அதை முன்னே நிறுத்திப் பிடித்தபடி யூசப்கான் அந்தக் கானகத்தின் வழியே வந்த காட்சி கம்பீரம் நிறைந்ததாக இருந்தது. குதிரையின் வேக நடைக்கு ஏற்ப அந்த வீரனின் உடலும் அவன் பிடித்த ஈட்டியும் சீராக ஆடும் நிலை ரசிக்கும்படியாகவும் இருந்தது. குதிரைக் குளம்பொலி யினால் குழி முயல்களும் புள்ளி மான்களும் துள்ளியோடிய அழகை ரசித்து மகிழ்ந்தபடி போய்க் கொண்டிருந்தான் யூசப்கான்.

பகலின் உக்கிரம் உச்சிக் வந்த போது பசியின் உபாதையை உணரலானான் அவன். நெடுஞ்சாலையிலிருந்து ஒதுங்கி ஓடிய ஓர் ஒற்றையடிப் பாதையின் முடிவிலே மசூதியின் தங்க முலாமிட்ட விமானம் தகதகப்பதைக் கண்ட யூசப் கான் அங்கு ஏதோ ஓர் ஊர் இருக்க வேண்டும் என்ற முடிவோடு வளைந்து வரவேற்ற அந்தப் பாதையிலே இறங்கி நடக்கலானான். ஆம்! நடந்துதான் சென்றான். ஓடிக்களைத்து வியர்வை வெள்ளத்தில் குளித்திருக்கும் குதிரையை மேலும் விரட்டி வேலை வாங்க மனமில்லாமலே அதை நடத்தித் தானும் நடக்கலானான்.

தூரத்தே தெரிந்த ஊர் உற்சாகத்தை ஊட்டியது யூசப்கானுக்கு. பசுஞ்சோலை சூழ்ந்த அந்தப் பிராந்தியத்தை அடைந்ததுமே பசிகூட மறந்து விட்டது அவனுக்கு. சலசலத்து ஓடும் நீரோடையைக் கண்டதும் உணவு தேடும் முயற்சியை ஒத்திப்போட்டு விட்டு அமிழ்ந்து குளித்து ஆனந்தமடைய நினைத்து விட்டான் அவன். முதலில் குதிரையின் சேணங்களை யெல்லாம் கழற்றி ஒரு மரத்தடியில் வைத்துவிட்டு அதன் உடல் வலி போக அதைத் தேய்த்துக் குளிப்பாட்டிப் பசும் புல் தரையில் மேயவிட்டான். பிறகு அவனும் ஆற்றில் இறங்கித் துளைந்து விளையாடலானான். நீந்தி மகிழ்ந்தவனுக்கு நீர் விளையாட்டு அலுக்கவில்லை. ஆனால் பசிதான்

அவனைக் கரையேற்றியது. பசி இருந்தாலும் ஆற்று நீரில் அமிழ்ந்து குளித்தது அவன் உடலிலும் உள்ளத்திலும் புதிய சக்தியைக் கொடுத்திருந்தது. ஊரை நெருங்கிக் கொண்டிருக்கும்போது ஒற்றையடிப் பாதையிலே ஒரு சிறு குழந்தை தத்தித் தத்தித் தளர் நடை நடந்தபடி தன்னந் தனியே வந்து கொண்டிருந்தது. அதன் கவனமெல்லாம் எட்டி எட்டிப் போய் உட்கார்ந்து தன் கிட்ட வரும்படி அழைக்கும் ஒரு காக்கையினிடம் லயித்திருந்ததால் குதிரை வருவதைக் கவனிக்கவில்லை. அந்தக் காகம் இந்தக் குழந்தையை எவ்வளவு தொலைவிலிருந்து அப்படி இழுத்து வருகிறதோ தெரியவில்லை. எட்டிப் பிடித்துவிடலாம் என்ற நம்பிக்கையோடு தன் பிஞ்சுக் கைகளை நீட்டியபடியே தள்ளாடி நடக்கும் குழந்தையைக் குதிரையிலிருந்து குதித்த யூசப்கான் தாவி எடுத்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தான். அப்போதுதான் குழந்தையும் தன் குறுகுறுக்கும் கருவண்டுக் கண்களால் அவனைப் பார்த்து, கள்ளமில்லாத கவலையே இல்லாத உள்ளத்துடன் தன் பொக்கை வாய் திறந்து அந்தப் பொல்லாத சிரிப்பை வழிய விட்டபடியே காக்கையைப் பிடித்துத் தரும்படி கை நீட்டி உதவி வேண்டியது. குழந்தையின் சிரிப்பும் ஸ்பரிசமும் அவன் சிந்தையைக் கவர்ந்ததில் வியப்பில்லை. வெகு தூரத்தில், அடர்ந்த மரநிழலில் ஒரு கூட்டம் காணப்பட்டது. அங்கிருந்தே இந்தக் குழந்தை வந்திருக்க வேண்டுமென்று யூகித்த யூசப்கான் குழந்தையுடன் குதிரை பின்தொடர அவர்களை அணுகினான்.

ஆலமர நிழலில் இரண்டு மூன்று வண்டிகள் அவிழ்த்து விடப்பட்டிருந்தன. நாலைந்து குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் அங்கு கூடி இருந்தார்கள். ஆண்கள் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டே தாம்பூலம் தயாரித்துக் கொண்டிருப்பதிலிருந்து அவர்கள் உணவருந்தி விட்டார்கள் என்பதைப் புரிந்து கொண்டான் யூசப்கான். நாலைந்து நாள் பிரயாணத்தில் இந்தியர்களைப் பற்றி அவன் அறிந்து கொண்ட புதிய விவரம் அது. உணவருந்திய பின் வாய்மணக்க இதழ் சிவக்க ஏதோ ஒன்றைத் தயாரித்துச் சுவைக்கிறார்கள் இந்தியர்கள். அதன் பெயர் தாம்பூலம் என்பதையும் தெரிந்து கொண்டிருந்தான் அவன். அங்கு கூடியிருந்தவர்கள் இந்துக்கள்.

யூசப்கானின் அணைப்பிலே ஒய்யாரமாக வரும் குழந்தையைக் கண்டதும் துள்ளி எழுந்து ஓடிவந்தாள் உணவருந்திக் கொண்டிருந்த பெண்களிலே ஓர் இளமங்கை. அவளைக் கண்டதும் அன்னியனிடமிருந்து அன்னையை நோக்கித் தாவினான் ஆவலோடு

அந்தச் சுட்டிப் பயல். இதற்குள் புதியவனின் வரவு புருஷர்களின் கவனத்தையும் இழுக்கவே யூசப்கானைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்களில் சிலர் பீஜப்பூர் அரசாங்கத்தின் பிரதிநிதியாக இருந்து அலுவல்களைக் கவனிக்கும் அதிகாரிகளானதால் அவர்களுக்கு உருது மொழியில் ஓரளவு பரிச்சயம் உண்டு. யூசப்கானுடன் சரளமாக உரையாடி னார்கள்.

“குழந்தையைக் கவனிக்காமல் இப்படி அஜாக்கிரதையாக இருக்கலாமா?” என்று குற்றம் சாட்டிய யூசப்கானிடம் தங்கள் கவனக் குறைவுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள் அவர்கள். யூசப்கானின் கம்பீரத் தோற்றமும், கையில் ஈட்டியும், உடைவாளும், ஒப்பற்ற குதிரையும் அவனிடம் அவர்களுக்கு மதிப்பையும் மரியாதையையும் ஏற்படுத்தின. இதற்குள் குழந்தையை அடைந்த தாய் தன் கணவனின் காதில் ஏதோ கிசுகிசுத்தாள். பசித்த முகத்தைக் கண்டு பரிவோடு உபசரிக்கும் பண்பு பெண்களுக்குத்தானே தெரியும்?

“தங்களைப் பார்த்தால் வெகு தூரத்திலிருந்து வருவது போல் தெரிகிறது’ என்று ஆரம்பித்தார் அவர். “களைத்த முகம். தாங்கள் இன்னும் உணவருந்தவில்லை என்பதையும் அறிவிக்கிறது. தங்கள் தகுதிக்கு ஏற்ற உணவில்லாவிடினும் இதை ஏற்றுக் கொண்டு பசியாறிப் பிரயாணத்தை மேற்கொள்ள வேண்டும்” என்றவர், இதற்குள் தன் மனைவி தட்டிலே தயாராக வட்டித்துக் கொண்டு வந்திருந்த ஆகாரத்தை அவன் முன் நீட்டினார்.

“உணவை நாடித்தான் நான் அதோ அந்த ஊருக்குள் சென்று கொண்டிருக்கிறேன். என்னைப் போலப் பிரயாணத்தை மேற்கொண்டிருக்கும் உங்களுக்கு இது தேவைப்படலாம். நான் வருகிறேன்” என்று திரும்பியவனை அவர் விடவில்லை.

“எல்லா ஏற்பாடுகளுடனும் நாங்கள் இந்த வழிப் பிரயாணத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறோம். இதில் எங்களுக்கு எவ்வித அசௌகரியமும் கிடையாது. நீங்கள் இந்த உணவை ஏற்காது போனால்தான் எங்களுக்கு வேதனையாக இருக்கும்” என்று வற்புறுத்தி யூசப் கானைத் தங்கள் விருந்தாளியாக்கிக் கொண்டார்கள் அந்த வழிப்போக்கர்கள்.

உண்டு பசியாறிய பின் உரையாடிக் கொண்டிருந்த யூசப்கானைத் தேடி வந்து ஒட்டிக் கொண்டது அந்தக் குழந்தை. உணவுக்குப் பின்

தாம்பூலம் மடித்துக் கொடுத்து உபசரித்தார் விருந்தளித்தவர். யூசப்கானும் அதன் சுவையை ரசிக்க விரும்பி இந்தியர்களின் அந்த இனிய பழக்கத்தை ஏற்றுக் கொண்டான்.

"தாங்கள் பீஜப்பூரின் எந்த மண்டலத்துக்கு அதிகாரி என்பதை நாங்கள் அறியலாமா?" என்று கேட்டார் ஒருவர். யூசப் கானின் தோற்றமும் உடையும் அவனைப் பீஜப்பூரின் உயர் அதிகாரிகளில் ஒருவர் என்ற எண்ணத்தையே அவர்களிடம் உண்டாக்கி இருந்தன.

"நான் இந்த நாட்டைச் சேர்ந்தவனே அல்ல" என்றான் அடக்கமான புன்முறுவலுடன் யூசப்கான். அது அவர்களின் விழிகளை விசாலமாக்கியது.

"அப்படியானால் சுல்தான் ஆதில்ஷாவின் திருமண வைபவத்தில் கலந்து கொள்ள எந்த நாட்டிலிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டார்கள்.

தான் இந்த நாட்டுக்கே அந்நியன் என்று தன்னைப் பற்றி ஓரளவு அவர்களுக்கு யூசப்கான் விளக்கியபோது அவர்கள் அவன் ஆசையை வளர்த்தார்கள்.

"ஆண்டவன் உங்களைச் சரியான இடத்துக்குச் சரியான நேரத்தில்தான் கொண்டு வந்து சேர்த்திருக்கிறார். முஸ்லிம் பேரரசுகளான பீஜப்பூரும், அகமது நகரும் திருமணப் பிணைப்பால் ஒன்று சேரப் போகின்றன. பீஜப்பூரின் சுல்தான் அலி ஆதில்ஷா தன் அருமைத் தங்கையை அகமதுநகரின் சுல்தான் ஹுஸைன் நிஜாம் ஷாவின் ஆசை மகன் இளவரசன் முர்துஸாவிற்கு மனைவியாக்கிவிட்டு, நிஜாம்ஷாவின் செல்வ மகள் அழகு ராணி சாந்த் பீபியைத் தம் மனைவியாக்கிக் கொள்ளப் போகிறார்.

"இந்தத் திருமண வைபவத்தை இந்த நாடே ஒரு பெரிய திருநாளாகப் பல நாட்களுக்குக் கொண்டாடப் போகிறது. தலை நகரிலே ஒரே கோலாகலம். அதையெல்லாம் காணத்தான் நாங்கள் போய்க் கொண்டிருக்கிறோம். விளையாட்டுப் போட்டிகள், வீரர்களின் திறமைக்கு ஏற்ற பந்தயங்கள் எல்லாம் விசேஷமாக அமைக்கப்பட்ட அரங்கத்திலே நடைபெறப் போகின்றனவாம். வெற்றி பெற்ற வீரர்களுக்குத் தக்க பரிசும் பதவிகளும் தரப்படுமாம். உங்களைப் போன்ற வீரர்களுக்கு அங்கே நல்ல வரவேற்பிருக்கும். இந்த நாட்டுக்குப் புதியவரான நீங்கள் எங்களுடனேயே வாருங்கள். நாளைக்

காலையில் தலைநகரைச் சேர்ந்துவிடலாம்" என்று உற்சாகமாகப் பேசினார்கள் அவர்கள்.

யூசப்கானுக்கு எல்லாமே கனவு போல இருந்தது. புதிய நாட்டிலே எப்படி எங்கு போய்த் தன் வாழ்வைத் தொடங்குவது, யாரிடம் போய் எப்படித் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளுவது என்று யோசித்துக் கொண்டிருந்தவனுக்கு இப்படி ஓர் அரிய சந்தர்ப்பத்தை ஆக்கி வைத்துள்ள அல்லாஹ்வின் அளவற்ற கருணையை எண்ணி மனம் நெகிழ்ந்து போனான். தன் வீரத்துக்கு மதிப்புப் பெற்று வெற்றியால் வாழ்வு பெற முடியும் என்ற புதிய நம்பிக்கையும் உற்சாகமும் ஏற்பட்டது யூசப்கானுக்கு.

சற்று நேரத்துக்கெல்லாம் வண்டிகள் பூட்டப்பட்டன. அவர்களுடன் யூசப் கானும் கிளம்பினான். வண்டிகள் அவன் பிரிந்து வந்த நெடுஞ்சாலைக்குச் செல்லவில்லை. வேறு பாதை வழியே ஒரு ராஜ பாட்டையை அடைந்தது. யூசப்கான் ஆச்சரியத்தினால் பிரமித்துப் போனான். அந்தச் சாலையிலே ஏராளமான வண்டிகளும் வாகனங்களும் சாரி சாரியாகச் சென்று கொண்டிருந்தன. குதிரைகளில் வீரர்கள் விரைந்து கொண்டிருந்தார்கள். ஒட்டகங்களும் மாட்டு வண்டிகளும் பொதிகளைச் சுமந்தபடி போய்க் கொண்டிருந்தன. அத்தனை கூட்டமும் ஒரே குறிக்கோளுடன் ஒரே திசையில் சென்று கொண்டிருந்தன. மன்னரின் திருமண வைபவத்தைக் காணுவதற்காகவே தலைநகரை நோக்கி அத்தனை பேரும் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களின் தோற்றத்தையும், அலங்காரங்களையும் அணிமணிகளையும் கண்ட யூசப் கான் அந்நாட்டின் செல்வச் சிறப்பையும் வளமான வாழ்க்கையையும் ஒருவாறு யூகித்துக் கொண்டான்.

நேரமாக ஆக, தலைநகரை நெருங்க நெருங்க அந்தச் சாலையில் பிரயாணம் செய்வதே சிரமமாக இருந்தது. அத்தனை கூட்டம், நெரிசல்! தலைநகருக்கு வெகு தொலைவிலிருந்தே அலி ஆதில்ஷாவின் திருமண வைபவக் கோலத்தின் தன்மையை உணர முடிந்தது. சாலையின் இரு மருங்கிலும் ஏராளமான கூடாரங்கள் அமைத்துக் கொண்டு தங்கியிருந்தார்கள் திருமண விழாவில் கலந்து கொள்ள வந்திருக்கும் நாட்டு மக்களும் வீரர்களும். வண்ணக் கொடிகளும் தோரணங்களும் கொண்டு வழியெல்லாம் அலங்கரித்திருந்தார்கள். தலைநகருக்கு வெளியிலேயே இத்தனை ஆரவாரமும் ஆர்ப்பாட்டமுமானால் அங்கே எப்படி இருக்குமோ என்ற வியப்பில் ஆழ்ந்து போனான் யூசப்கான்.

மாலை மஞ்சள் வெயில் குளிப்பாட்டிய வானுயர நின்ற மதில் சுவர்களையும் ஒளி சிந்திச் சிரிக்கும் மசூதிகளின் 'மினார்' களையும் மாட மாளிகைகளின் கம்பீரமான தோற்றத்தையும் கண்டு பிரமித்துப் போனான் யூசப்கான். காலையில் பீஜப்பூர் நகருக்குள் போகலாம் என்று கூறி இரவு தங்குவதற்கு ஏற்றதொரு வழிப்போக்கர் விடுதியை நாடிச் செல்லலாயிற்று யூசப்கானுக்கு வழிகாட்டியாக வந்த வண்டிகள். வைபவத்தில் கலந்து கொள்ள வரும் வெளியூர்க் காரர்களுக்காக ஆங்காங்கே ஏராளமான விருந்தினர் விடுதிகளை ஏற்படுத்தியிருந்தார் சுல்தான் அலி ஆதில்ஷா.

விழாக் கோலம் பூண்டிருந்த பீஜப்பூர் நகரம் இரவு உறங்கவே யில்லை. மன்னரின் திருமண வைபவத்தை மகோன்னதமான தொரு நிகழ்ச்சியாக்கி, நாட்டு மக்களின் நினைவிலே என்றும் அது நிலைத்திருக்குமாறு செய்யக் கலைஞர்கள் இரவு பகல் பாராமல் நகரை அலங்கரிப்பதிலும் பந்தய மைதானங்கள், கலை அரங்குகள் ஆகியவற்றை நிர்மாணிப்பதிலும் ஈடுபட்டிருந்தார்கள். பல நாட்டு மன்னர்களும் வந்து பங்கு கொள்ளும் விழாவல்லவா அது? அப்போது தங்கள் நாட்டைப் பற்றித் தங்கள் கலை ஆர்வத்தைப் பற்றிப் பிறநாட்டவர் பெருமையாக மதிப்பிட வேண்டும் என்ற ஆர்வம் கவலையாகப் பரிணமித்திருந்தது.

பொழுது புலரு முன்னே எழுந்துவிட்ட யூசப்கான் வழிகாட்டியாக, வழித்துணையாக வந்தவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு தன்னிச்சையாகச் செல்லத் தீர்மானித்து அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த அவர்களை எழுப்பித் தனக்கு விடை கொடுக்குமாறு கேட்டுக் கொண்டான். அவன் முடிவை முழு மனத்தோடு வரவேற்ற அவர், "போய் வாருங்கள் ஐயா! இனி உங்கள் வழி வேறுதான். நாளை நடக்கவிருக்கும் வீர விளையாட்டுகளிலே வெற்றி வீரராக வரும் நபர் நீங்களாக இருக்க வேண்டும்" என்று வாழ்த்தி விடை கொடுத்தார்.

புலர்ந்து புலராப் பொழுதினிலே, புரிந்தும் புரியாததொரு நாட்டின் தலைநகரிலே, திகைப்பும், வியப்பும் கலந்த உள்ளத்தோடு உள்ளே புகுந்தான் யூசப்கான். தனது தாய் நாடான துருக்கியிலும்தான் எத்தனையோ சிறப்பு மிக்க நகரங்களைப் பார்த்திருக்கிறான். கான்ஸ்டாண்டிநோபிளில் உள்ள பெரிய மசூதிகளில் சென்று மனமுருகத் தொழுகை நடத்தியிருக்கிறான். இன்னும் புகழ் பெற்ற ஐரோப்பிய நகரங்கள் பலவற்றிற்கும் போயிருக்கிறான். ஆனால்

இப்போது அவன் காணும் இந்த நகரின் அமைப்புகளும் அதிசய வனப்புக்கும் கம்பீரத்துக்கும் அவற்றையெல்லாம் ஈடாக்க முடியவில்லை. அகன்ற வீடுகள், அழகிய மாளிகைகள், அமைதியான சூழலிலே இந்திய நாட்டில் இஸ்லாத்தின் ஏற்றத்தைப் பறைசாற்றும் பள்ளிவாசல்கள். பார்த்துப் பார்த்துப் பரவசமாகிப் போனான் யூசப்கான். அத்தனை விசாலமான வீதிகளிலும் வேகமாகச் செல்ல முடியாத அளவுக்கு ஜனக் கூட்டம் வழிந்து கொண்டிருந்தது. பலதிறப்பட்ட மக்கள், பலதிறப்பட்ட ஆடையணிகளிலே அலங்காரமாகச் சென்று கொண்டிருந்தார்கள். குதிரைகளில் போவோர், ரதங்களில் விரைவோர், வண்டிகளில் செல்வோர், கால்நடையாக வழி நடப்போர். இத்தனை கூட்டத்திலும் கலந்து, கடந்து கண்டதையெல்லாம் காட்சியாக ரசித்து மகிழ்ந்தபடி பீஜப்பூரின் பிரதான பகுதிக்கு வந்து சேர்ந்தான் யூசப்கான். பொதுமக்கள் முன்னிலையில் நடக்கும் பந்தயங்களையும், போட்டி விளையாட்டுக்களையும் கண்டு களிக்க மறுநாள் மன்னர் அங்குதான் வருகை தரப்போகிறார் என்ற செய்தி அறிந்தான். கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஒருபுறம் வண்ண வண்ணக் கூடாரங்கள் அமைக்கப்பட்டிருந்தன. ஆங்காங்கே வீரர்கள் மறுநாள் நடக்கப் போகும் விளையாட்டுக்களிலே தங்கள் சாகஸங்களைக் காட்ட அப்பியாசங்களில் ஈடுபட்டிருந்தார்கள். குதிரைகளின் கனைப்பொலி யும் யானைகளின் பிளிறலும், வாள்களின் மோதலுமாக அந்த இடம் வீரனான யூசப்கானின் இதயத்தை மகிழ்விப்பதாக இருந்தது.

இடையிலே வாளும், ஒரு கையிலே ஈட்டியும் மறு கைப்பிடியிலே ஒய்யாரமாக நடை போட்டுத் தொடர்ந்து வரும் குதிரையின் லகானுமாகத் தனித்து நின்றபடி திகைக்கும் யூசப்கானைக் கண்ட பீஜப்பூர் வீரனொருவன், “என்னப்பா வேல் பிடித்த கையோடு வீணாக இங்கே நிற்கிறாய்? நாளைக்கு நடக்கும் போட்டியிலே உன் வீரத்தைக் காட்ட விருப்பமானால் அதோ அங்கே சென்று உன் பெயரைப் பதிவு செய்துகொள். உரிய மரியாதைகளுடன் உனக்கு ஏற்றதோர் இடம் கொடுப்பார்கள்” என்று சொல்லி விட்டுப் போனான். கூட்டத்திலே வழி தவறிவிட்ட குழந்தை தன் வீட்டு மனிதரைக் கண்டதும் தாவியோடுவது போல அந்த நாட்டு வீரன் கூறிய செய்தியைக் கேட்டதும் குதித்தோடினான் யூசப்கான், வீர விளையாட்டுக்களிலே போட்டியிடுவோரின் வரிசையிலே தன் பெயரையும் பதிவு செய்து கொள்ள.

தன் விருப்பத்தை அறிவித்து நின்ற அந்த அந்நியனைக் கண்ட அதிகாரி அவனை அன்புடன் வரவேற்றார். யூசப்கானின் தோற்றமும் பார்வையுமே அவனுக்கு எங்கும் மதிப்பையும் மரியாதையையும் வாங்கிக் கொடுத்தன. மறுநாள் நடக்கவிருக்கும் பந்தயங்களின் விவரங்களையெல்லாம் விளக்கிய பின், "நாளைப் பகலுக்கு மேல்தான் உங்களைப் போன்ற வீரர்களின் சாகஸங்களுக்கு வேலை. அதுவரை காலையில் நடக்கும் பிராணிகளின் சண்டைக் காட்சிகளைக் கண்டு களிக்கலாம். போட்டிகளில் பங்கு பெற வரும் வீரர்கள் தங்குவதற்கென்றே ஒரு மாளிகை நிர்மாணிக்கப்பட்டுள்ளது. அதில் நீங்கள் தங்கிக் களைப்பாறலாம். எங்கள் நாட்டு விருந்தினராகி விட்ட உங்களுக்கு ஒரு குறையும் நேராதபடி கவனிப்பது இனி எங்கள் கடமையாகி விட்டது" என்று கூறிக் கைதட்டினார். இரண்டு சேவகர்கள் வந்து வணங்கினார்கள். அதிகாரி உத்தரவிட்டார். ஒருவன் யூசப்கானின் குதிரையை லாயத்துக்கு நடத்திக் கொண்டு சென்றான். மற்றொருவன் ககன் மஹல் என்ற விடுதிக்கு அவனை அழைத்துப் போனான்.

வீர விளையாட்டுக்களில் வல்லவர்களுக் கென்றே ஒதுக்கப்பட்டிருந்த அந்த விருந்தினர் விடுதியில் யூசப்கானுக்கு ஆசார உபசாரங்கள் நடந்தன. அன்று பகலெல்லாம் நகரில் சுற்றியலைந்த அலுப்புத் தீரத் தன் நாட்டு முறைப்படி நீராவிக் குளியலை முடித்துக் கொண்டு வெளி வந்தபோது அவன் புது மனிதனாகப் புத்துணர்ச்சி பெற்றவனாக விளங்கினான். அறுசுவை உண்டியும் போதை தரும் மதுவும் அவன் உணர்ச்சிகளுக்குப் புதிய பலத்தைக் கொடுத்தன. இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தது நகரிலே நாட்டு மக்கள் செய்திருந்த தீப அலங்காரங்கள். அன்றிரவுதான் அலிஆதில்ஷாவுக்கும் அழகு மங்கை சாந்த் பீபிக்கும் திருமணம். அரண்மனையின் மேல் மாடத்திலிருந்து வாணங்கள் விண்ணை நோக்கிச் சீறிக் கொண்டிருந்தன. இருள் திரையிலே எண்ணற்ற வண்ணப் பூக்களைச் சிதற விட்டுச் சிரித்த ஆகாச வாணங்களின் அழகை ரசித்தபடி உட்கார்ந்திருந்தான் யூசப்கான்.

நேரமாக ஆக - இருளின் ஆதிக்கம் அதிகரித்த போது நகரின் கோலாகலத்தில் கொஞ்சம் குறைவு ஏற்பட்டதே தவிர பூரண அமைதி பெற்றுவிட வில்லை. எங்கோ தொலை தூரத்தில் பாட்டும் கூத்தும் கும்மாளமும் குதூகலமும் கேட்டுக் கொண்டுதான் இருந்தன. சிந்தனையைக் கிரங்க வைக்கும் அந்த இசையிலே தன்னை மறந்து கண்ணயர்ந்து போனான் யூசப்கான்.

மறு நாள்...

திருமண விழாவின் கோலாகலங்கள் ஆரம்பமாகி விட்டன என்பதற்கடையாளமாகப் பீரங்கிகள் முழங்கின. யூசப்கானின் வாழ்வில் புதிய அத்தியாயம் தொடங்கப்படவிருக்கும் அன்றைய தினத்தின் பொழுது புலர்ந்தது. புதிய எண்ணங்களோடு எழுந்திருந்தான் யூசப்கான். பல்லாயிரம் பேர் கூடி இருந்து காணும்படி அமைத்த பந்தய மைதானத்திலே மக்கள் வந்து மொய்த்துக் கொண்டிருந்தார்கள். சுந்தரமான காலை வேளை. சுகமான இளங்காற்று வீசிக் கொண்டிருந்தது. மைதானத்தின் எடுப்பானதொரு பகுதியிலே ஏற்றமும் எழிலுமுற அமைத்த விதானத்தின் கீழ் முஸ்லிம் பேரரசரின் காவலரும் பீஜப்பூரின் மன்னரும் மணமகனுமான அலிஆதில்ஷா அவர்கள் கம்பீரமாக அமர்ந்திருந்தார். அவருக்கு வலப்புறத்திலே பெண்ணைக் கொடுத்துப் பெண்ணைப் பெற்றுக் கொண்ட பெருமையோடு வீற்றிருந்தார் - அகமது நகர் சுல்தான் ஹுஸைன் நிஜாம்ஷா. ஆதில்ஷாவின் இடப்பக்கத்திலே 'இத்தனை ஏற்றத்துக்கும் இணைப்புக்கும் நான்தான் காரணம்' என்ற இறுமாப்புடன் உட்கார்ந்திருந்தார் கோல்கொண்டாவின் குதப்ஷா இப்ரஹிம். அவர்கள் அணிந்திருந்த ஆடைகளின் அழகை வர்ணிப்ப தென்பது வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டதொரு காரியம். நவரத்தினங்களையும் நல்முத்துக்களையும் கொண்டு ஆக்கப்பட்டிருந்த அவர்களுடைய ஆடை அணிகளினூடே தங்க ஜரிகைகளின் வேலைப் பாடும் தகதகத்துக் கொண்டிருந்தன. பிரதானமாக அமர்ந்திருந்த இம்மூன்று மன்னர்களைத் தவிர பீடாரின் பாரித்ஷாவும் பேராரின் இமத்ஷாவும் மற்றும் திருமணத்துக்கு வந்திருந்த பல தேசத்து அரசர்களும், அரசப் பிரதிநிதிகளும், பிரபுக்களும், பெருங்குடி மக்களும் அவரவர் தகுதிக்கேற்ப அலங்காரமான ஆடையணிந்து அரங்குக்கே அழகாக அமர்ந்திருந்தார்கள். பந்தய மைதானத்துக்கு வரும் வழியெல்லாம் பீஜப்பூரின் பெருமை துலங்கும் வண்ணம் அலங்கரித்திருந்தார்கள். ஆரம்பத்தில் யானைப் படை இருபுறமும் அணிவகுத்து நின்று வரவேற்றது. அதையடுத்துக் கம்பீரம் நிறைந்த குதிரைப் படை நெடுந்தூரத்துக்கு வரிசையாக வழி வகுத்துக் கொண்டு நின்றது.

வீரர்களின் போட்டிகள் அன்று பகலுக்கு மேல்தான் என்று அரங்க அதிகாரிகள் குறிப்பிட்டிருந்ததால் யூசப்கான் ஒரு பார்வையாளனாகச் சாதாரண உடையணிந்து அரங்கினுள் நுழைந்தான். தனக்கு அளிக்கப்பட்டிருந்த அடையாளத்தைக் காட்டியதுமே ஒரு

வீரன் அவனைப் பணிவுடன் போட்டிகளில் கலந்து கொள்ளும் வீரர்கள் அமர்ந்து பார்ப்பதற்கென்று அமைக்கப்பட்டிருந்த பகுதிக்கு அழைத்துப் போய் அமர்த்தி னான். பிரபுக்களும் பெருங்குடி மக்களும் அரசியல் வட்டாரத்து ஆன்றோர்களும் அமர்ந்துள்ள பகுதியை அடுத்துத்தான் யூசப்கானுக்கு இடமளிக்கப்பட்டிருந்தது. பாமினி சுல்தான்களின் பெருமையைத் தன் இருக்கையிலிருந்து கண்டு ரசிக்க அது வசதியாகவே இருந்தது.

மன்னர் வந்து அமருவதற்கு முன்னே பந்தய மைதானம் மக்கள் வெள்ளத்தால் நிரம்பி வழியலாயிற்று. உள்ளே இடமில்லாத நிலையில் மைதானத்தின் மதில் சுவருக்கு அப்பால் அடுத்துள்ள மாளிகைகளின் உச்சியிலும் மரங்களின் மீதும் இடம் பிடித்துக் கொண்டிருந்தார்கள் ஏராளமான பேர்கள்.

ஒழுங்கையும் அமைதியையும் பாதுகாக்க ஏராளமான போர் வீரர்கள் அரங்கத்தினுள்ளே அணிவகுத்து நின்றார்கள்.

ஆதில்ஷா வந்து அமர்ந்ததும் பீரங்கிகள் முழங்கின. அலை ஓய்ந்த கடலைப் போல அங்கு நிசப்தம் நிலவியது. அத்தனை பேரின் கவனமும் மைதானத்தின் நடுவிலே நடக்கப் போகும் பந்தயங்களில் பதிந்தன.

காலை நடவடிக்கைகள் மிருகங்களின் போட்டா போட்டியோடு ஆரம்பமாயின. ஆட்டுச் சண்டையில் ஆரம்பித்து யானைப் போரில் முடிவதாக இருந்தது. சண்டைக்காகவே பழக்கப்படுத்தி வளர்க்கப்பட்ட இரண்டு பெரிய செம்மறி ஆட்டுக் கடாக்கள் அரங்கினுள் - ஆதில்ஷா அமர்ந்துள்ள விதானத்தின் இடப்புறமும் வலப்புறமும் அமைக்கப்பட்டிருந்த விசேஷ வாயில்களின் வழியே எதிர் எதிர்ப் பக்கங்களிலிருந்து நுழைந்தன.

ஆடுகளைக் கண்ட கூட்டம் ஆரவாரமிட்டு ஓய்ந்த போது சுருண்டு வளைந்த கொம்புகளோடு கூடிய ஆடுகள் ஒன்றை நோக்கி ஒன்று வெகுவேகமாகப் பாய்ந்தன. அடுத்த விநாடி இரண்டு இரும்புக் குண்டுகள் மோதிய ஒலி உண்டாயிற்று. தலையோடு தலையை 'மடார், மடார்' என்று மோதிக் கொண்டு ஆக்ரோஷமாகப் போரிட்டன ஆடுகள். மக்களின் மகிழ்ச்சிக்காக மண்டையை உடைத்துக் கொள்ளும் ஆடுகளின் ஆவேசமான போராட்டம் யூசப்கானுக்குப் புதுமையாக இருந்தது. இரண்டு ஆடுகளில் ஒன்று தளர்ந்து தரையில்

சாயும் வரை ஆடுகள் இரண்டும் விலகி விலகி வேகமாக வந்து முட்டி மோதிக் கொண்டன. மக்கள் ஆரவாரமிட்டுக் குதூகலித்தார்கள். போரிட்ட ஆடுகளில் ஒன்றின் உருக்கு மண்டை உடைந்து உயிர் துறந்ததும் இந்த விளையாட்டு முடிந்தது. அதையடுத்து அரங்கினுள் கரு மேகத்தை யொத்த காட்டெருமைகள் இரண்டு வந்து தங்கள் உடல்களைச் சிலிர்த்து நின்றன. மந்த 'குணத்துக்கும் சாதுத் தன்மைக்கும் பெயர் பெற்ற எருமைகளா இப்படிப் பயங்கரமான தோற்றத்துடன் காட்சியளிக்கின்றன?' என்று வியந்து போனான் யூசப்கான். போருக்காகவே வெறியூட்டி வளர்க்கப்பட்ட அந்த எருமைகள் இரண்டும் ஆரவாரமிடும் மக்கள் கூட்டத்தைக் கண்டு மருளவில்லை. தங்கள் வலிமையைக் காணக் கூடியுள்ளோரிடம் பெருமை பெற வேண்டும் என்ற பேரவாவுடன் போரிடலாயின. நெற்றியோடு நெற்றியை இணைத்து ஒன்றை ஒன்று முட்டி நகர்த்தும் மோதலிலே மூர்க்கமாக ஈடுபடலாயின. பருத்த உடல்களைக் கொண்ட அந்தக் காட்டெருமைக் காளைகள் இரண்டும் சம பலமுடையவை. ஆகவே எதுவுமே சளைக்க வில்லை. கொம்போடு கொம்பைப் பிணைத்து முறுக்கின. உடலோடு உடலை மோதி நகர்த்தப் பார்த்தன. ஆனால் எதுவும் நகரவில்லை. நாக்குத் தள்ள, வாயிலிருந்து வெண் பஞ்சு போன்ற நுரை வழியப் போராடும் நிலையில் புழுதிப் படலம் கிளம்பியரே தவிர வெற்றி தோல்வி ஏற்படவில்லை. இரண்டுமே களைத்துத் தரையில் சாய்ந்தன. தயாராக இருந்த வீரர்கள் தண்ணீரைக் குடம் குடமாக கொண்டு வந்து அவற்றின் மீது ஊற்றி அவைகளுக்கு மூர்ச்சையைத் தெளிவித்து உள்ளே விரட்டினார்கள்.

மக்களின் மகிழ்ச்சியொலி அடங்கி ஓய்ந்தபோது, அரங்கத்தின் நாலா பக்கங்களிலிருந்தும், தன்னைப் பிடிக்க வருவோரின் குடலைக் கிழித்துக் குருதியைக் கொப்புளிக்க வைக்கும்படி கொம்புகளைச் சீவிவிடப்பட்டிருக்கும் கம்பீரமான தோற்றம் கொண்ட காளைகள் வந்து சுற்றுமுற்றும் பார்த்தபடி நின்றன. முன்னங்கால்களால் தரையைக் கீறியபடி - சவால் விட்டு நிற்கும் காளைகளைக் கட்டிப் பிடித்து அடக்கக் கட்டுமஸ்தான உடலமைப்புக் கொண்ட மல்லர்கள் அரங்கத்தில் வந்து குதித்தார்கள். இடையிலே சல்லடம் மட்டும் கட்டிய வெற்றுடம் போடு காணப்பட்ட அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்று புரியாமல் தவித்தான் யூசப்கான். பாரத நாட்டுக்கே - அதுவும் தென்னகத்துக்கே உரித்தான இந்தக் கொல்லேறு தழுவும் காளை விளையாட்டைப் பற்றி அவனுக்கு ஏதும் தெரியாதாதலால்

ஆர்வமுடன் கவனிக்கலானான். காளையின் கொம்பிலே முடிந்துள்ள பொற்காசுகளைத் தங்கள் வீரத்தின் பரிசாகப் பெறுவதற்காகப் போட்டியிட்டனர் ஒப்பற்ற உடல் பலமும் தைரியமும் மிக்க இளைஞர்கள். நிலமதிரத் தலையைத் தாழ்த்தியபடி தன் எதிர்ப்படும் எதையும் நிர்மூலமாக்கும் மூர்க்காவேசத்தோடு பாய்ந்து வரும் காளைகளின் மீது பாய்ந்து, குத்திக் கிழிக்கும் அதன் கொம்புகளைப் பற்றித் தொங்கியபடியே போராடி, காளைகளைக் களைப்படையச் செய்யும் பாரத நாட்டு வீரர்களின் உடல் வலிமையைக் கண்டு வியப்படைந்து போனான் யூசப்கான். கொம்புகளை விடுவித்துக் கொள்ள வீம்புடன் போராடும் காளைகள். வீரர்களோ கொம்புகளைப் பிடித்த தங்கள் பிடியை விடாமல் அதன் கழுத்தை ஒடித்து நிலத்தில் சரித்துப் பொன் முடிப்பைத் தங்கள் பற்களால் கடித்து அவிழ்த்துக் கொண்ட பின்பே தங்கள் பிடியைத் தளர்த்துவார்கள். அதே சமயத்தில் லாகவமாகத் துள்ளிக் குதித்து எட்ட நின்று, கெக்கெலியும் கொட்டுவார்கள். தரையிலிருந்து தள்ளாடி எழுந்த காளையோ அவமானப்பட்டுத் தரையைக் கால்களால் கீறிப் புழுதியைக் கிளறியபடி தலை குனிந்து நிற்கும் பெரு மூச்சு வாங்க. உண்மை வீரத்தின் உயர்வை விளக்கும் இந்தக் காளைச் சண்டை யூசப்கானுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது.

அரங்கத்திலே அவன் அருகில் இருந்தவர்கள் "அடுத்தது யானைப் போர்!" என்று சொல்லிக் குதூகலப்பட்டார்கள். யூசப்கானும் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

## 15

# இருவரில் ஒருவர்

**யா**னைகளின் வரவை எதிர் நோக்கி அரங்கத்தினர் அசைவற்றுப் பதுமைகளாகப் பதைப்புடன் காத்திருந்தனர். அரங்கமே அதிரும்படியான தொரு பிளிறல் கேட்டது. ஒருபுறத்திலிருந்து கருங்குன்றை நிகர்த்த தோற்றம் உடைய யானை ஒன்று ஆவேசத்துடன் அரங்கினுள் நுழைந்து தன் துதிக்கையைத் தூக்கியபடி வெளியுடன் வீறிட்டு நின்றது. மறுபுறத்திலிருந்து வரவேண்டிய

மற்றொரு யானையோ அரங்கினுள் நுழைய மறுத்து முரண்டு பிடித்தது. 'கேவலம் இந்த மனிதர்களுக்காகத் தன் இனத்தானோடு எவ்விதக் காரணமுமின்றி ஏன் போராட வேண்டும்?' என்ற விவேகத்தின் விளைவோ என்னவோ. ஆனால் அவை இப்படிச் சிந்திக்க ஆரம்பித்தால் செயல் படாது என்றேதான் அவைகளுக்குக் காலையிலிருந்து மதுவைக் கொடுத்துப் போதை ஏற்றியிருந்தார்கள். அப்படி இருந்தும் இந்த யானை மதுவினால் மயங்கி மதி இழக்கவில்லை. அதன் விளைவுதான் இது. அங்குசத்தினால் குத்தி ஆக்ரோஷ மூட்டி அதை அரங்குக்குள் விரட்டினார்கள். குடி வெறியிலே பிதற்றிப் பிளிறியபடி ஆட்டம் போட்டு நிற்கும் தன் இனத்தானின் நிலையைக் கண்டு இரக்கங் கொண்டது நிதானமிழக்காத யானை. ஆனால் அந்த யானையோ இதைக் கண்டதும் பயங்கரமான கூச்சலுடன் அதன் மீது பாய்ந்தது. இனி பேசாதிருக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டு விட்டது. போரிட விரும்பாத யானையும் போருக்குத் தயாராகும்படியாயிற்று.

மலையோடு மலை மோதிக் கொள்வது போல இரண்டு யானைகளும் போரிட்டன. துதிக்கைகளை ஒன்றோடு ஒன்று இணைத்துப் பிணைத்து முறுக்கி ஒன்றை ஒன்று வீழ்த்தப் பார்த்தன. தலையோடு தலையை நெருக்கி மோதி ஹுங்கார மிட்டு உறுமின. நீண்டு வளைந்த தந்தங்களால் ஒன்றை ஒன்று குத்திப் படுகாயப்படுத்த முயற்சி செய்தன. பார்வையாளர்கள் பிரமிப்புடன் மூச்சு விடவும் மறந்து பார்த்துக் கொண்டிருந்தனர். பருத்த உடலைக் கொண்ட யானைகளின் உக்கிரமான போர் யூசுப்கானுக்குப் புதிய அனுபவமாயிருந்தது. மதுவின் போதையினால் வெறி கொண்டு போரிட்ட யானை விரைவிலேயே களைப்படைந்தது. அதைத் தன் கூரிய தந்தத்தினால் குத்தி விரட்டியது போரிட மறுத்த யானை. தோல்வியுற்று ஓடும் யானை தறி கெட்டுப் பார்வையாளர்களின் பக்கம் திரும்பிவிடாமல் வேல் கொண்டு அதைக் கட்டிப்போடும் கொட்டாரத்துக்கு விரட்டிப் போனார்கள் அரங்கினுள் இருந்த வீரர்கள். வெற்றி கொண்ட யானை வீரார்ந்த செருக்குடன் பிளிறிக் கொண்டு நின்றது. மக்களின் ஆனந்த் ஆரவாரம் அடங்க வெகு நேரமாயிற்று.

கம்பீரமாகத் துதிக்கையை ஆட்டியபடி நாற்புறமும் திரும்பித் திரும்பி நிமிர்ந்த பார்வையுடன் நிற்கும் வெற்றி கொண்ட களிற்றை நோக்கி அழகான குதிரைமீது அமர்ந்து வந்து கொண்டிருந்தான் ஒரு

வீரன். பீஜப்பூர் ராஜ்யத்துப் பாதுகாப்புப் படையின் தலைவன் அவன். குதிரைகளை லாகவமாக நடத்திச் செல்லுவதில் வல்லவன். அவன் ஏறியிருந்த குதிரையோ அசுவ லட்சணங்கள் அத்தனையும் குறைவின்றிப் பொருந்திய அராபியக் குதிரை. மினுமினுவென்ற அதன் உடலின் அழகே காண்பவரின் மனத்தைக் கவரும் வண்ணம் இருந்தது. தன் அருமைக் குழந்தைக்கு விதம் விதமாக அலங்காரம் செய்து பார்ப்பது போல அந்தக் குதிரைக்கு அவன் அலங்காரம் செய்து அழகுக்கு அழகுபடுத்தியிருந்தான். அந்தக் கம்பீரமான குதிரை ஒசிந்து ஒய்யார நடை போட்டபடி அரங்கினுள் பவனி வந்தது.

வெற்றி கொண்ட வெறியும் வீணாகத் தன்னைப் போரிட வைத்த வெறுப்புக் கலந்த கோபமுமாக ஆக்ரோஷத்துடனும் ஆரவாரத்துடனும் ஜனங்களைப் பார்த்துக் குமுறிக் கொண்டிருந்த யானையின் அருகில் அதைக் கேலி செய்வது போலத் தன் குதிரையைச் செலுத்திக் கொண்டு போனான் அந்த வீரன். யாருமே தன்னை அணுகாதபடி ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்த அந்தக் களிறு தன்னை நோக்கி நாட்டிய மாடியபடி வரும் குதிரையைக் கண்டதும் பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு அதன் மீது பாய்ந்தது. துதிக்கையை முறுக்கிச் சுழற்றியபடி மூர்க்கமாகத் தாக்க வரும் யானையைக் கண்டு அந்தக் குதிரை வீரன் கலங்கவே இல்லை. அது மிகச் சமீபத்தில் வரும் வரை காத்திருந்து குபீரென்று குதிரையைத் தட்டிவிட்டு எட்டப்போய் நின்று கொண்டு மறுபடியும் தன் குதிரையை மந்தகாச நடை போடவைத்தான். யானையின் தந்தத்தினால் குதிரையும் வீரனும் குத்திக் கிழிக்கப்பட்டுக் குதறப்படப் போகிறார்கள் என்று தவித்தவர்கள் வீரனின் சாகஸத்தைக் கண்டு சந்தோஷக் கூச்சலிட்டார்கள். ஏமாற்றமடைந்த அந்த யானையோ மறுபடியும் குதிரையைத் துரத்தியது. வீரனோ அதற்குப் போக்குக் காட்டிக் காட்டி அதன் கோபத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்தான். ஓரிரு சமயங்களில் யானையின் கொம்புகள் அந்த அற்புதக் குதிரையின் பட்டுடலின் பக்கவாட்டிலே பதிந்து குருதி வழியச் செய்தன.

இப்படி வெகு நேரம் அரங்கினுள் அந்த யானையை அலைக்கழித்து அதன் ஆத்திரத்தையெல்லாம் ஆயாசமாக்கிக் களைப்படையச் செய்தான் அந்தக் குதிரை வீரன். முன்னங் கால்களைத் தூக்கி முகத்துக்கு நேரே குதித்த போதுகூட ஏதும் செய்ய முடியாதபடி யானையைச் செயலிழந்ததாகச் செய்தபின் வீரன் கம்பீர நடை

போட்டபடி ஆதில்ஷா வீற்றிருக்கும் விதானத்தின் முன்னே போய் வணங்கி நின்றான். குதிரையின் பட்டுடலில் வியர்வை வெள்ளத்தோடு யானையின் கூரிய தந்தம் குத்திய இடங்களிலிருந்து வழிந்த ரத்தமும் கலந்து ஓடுவதைக் கண்ட சுல்தான் அந்தக் குதிரை வீரனின் சாகஸத்தைப் பாராட்டித் தாம் அணிந்திருந்த வைர மாலை ஒன்றைக் கழற்றி அவனுக் களித்துத் தம் மட்டற்ற மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்.

இந்நிலையில் முற்பகல் நிகழ்ச்சிகள் முடியும் கட்டத்தை அடைந்தன. காலை நிகழ்ச்சிகளின் கடைசிக் கட்டமாக மைதானத்தின் மத்தியிலே மற்போர் வீரர்கள் தோள் தட்டித் துடை தட்டி மண்டியிட்டு மண்ணெடுத்து மன்னருக்குச் சலாம் செய்து, உள்ளங் கையைத் தேய்த்து உறுதியாக்கிக் கொண்டு தங்கள் உடல் வலிமையை காட்டத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். பிற்பகல் நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்வதற்காக யூசப்கான் எழுந்திருந்தான். வஸ்தாதுகள் ஒருவரை ஒருவர் கட்டிப் பிடித்துக் கீழே உருட்டி முதுகுக்கு மண் காட்டும் முயற்சியில் ஈடுபடும்போது, பார்வையாளர்கள் பசியையும் மறந்த நிலையில் மற்போரின் சுவாரசியத்தில் ஈடுபட்டிருக்கும் போது, யூசப்கான் தன் இருக்கைக்கு வந்தான்.

அன்றைய விழாவிலேயே சிகரமான நிகழ்ச்சி பிற்பகலில் நடைபெறப் போகும் குதிரை வீரர்களின் சாகஸச் செயல்கள்தான். காலை நிகழ்ச்சிகளெல்லாம் வீர விளையாட்டுக்களானாலும்கூட பொழுது போக்குக்காக நடந்தவையே. மாலை நிகழ்ச்சிகள்தான் மன்னரின் பாராட்டையும் பரிசையும் எதிர்பார்த்து நடத்தப்படும் போட்டிப் பந்தயங்கள். அதில் போர்க் கலையில் வல்லவர்கள் கலந்து கொண்டு போட்டியிடவிருந்தார்கள். வேலும், வாளும் தாங்கி, உடலில் கனமான கவசம் தரித்துக் கேடயத்தின் பாதுகாப்போடு குதிரை மீது அமர்ந்திருப்பார்கள் வீரர்கள். முகத்தையும்கூட இரும்புக் கவசம் மூடி மறைத்திருக்கும். கையிலே நீண்ட ஈட்டியை ஏந்தி எதிரியை விரட்டிக் கொண்டு பாய்வார்கள். எதிரெதிராகப் பாய்ந்து வரும் இருவரும் அந்த வேகத்திலே ஒருவரை ஒருவர் ஈட்டியால் தாக்கிக் கீழே தள்ள முயலுவார்கள். எதிரியின் தாக்குதலுக்கு இலக்காகாமல், ஆனால் அதே நேரத்தில் தன் ஈட்டியால் எதிரியைக் குதிரையிலிருந்து கீழே வீழ்த்துவதே வீரனின் திறமையாக மதிக்கப்படும். ஐரோப்பிய

நாடுகளில் அந்தக் காலத்தின் வீர விளையாட்டுக்களாகக் கருதப்பட்ட இந்தப் பந்தயங்கள், பாரசீகம், துருக்கி, அரேபியா ஆகிய தேசங்களிலும் பரவிப் புகழ்பெற்றிருந்தன. இஸ்லாத்தின் ஆதிக்கம் இந்தியாவில் வேரூன்றிய போது இந்த வீர விளையாட்டையும் அவர்கள் பாரதத்திலே இறக்குமதி செய் தார்கள். தங்களுக்குப் புதுமையான இந்த வீர விளையாட்டிலே இந்தியர்கள் ஆர்வமும் அக்கறையும் காட்டியதில் வியப்பில்லை.

போட்டிகளில் பங்குபெறும் வீரர்களைத் தயாராக இருக்குமாறு அறிவித்து விட்டுப் போனான் ஒரு வீரன். யூசப்கானிடம் இந்தப் போருக்கு ஏற்ற கவசமும் கேடயமும் முகமூடியும் கிடையாது. இதை முதல் நாளே தெரிவித்திருந்ததால், அரண்மனையின் ஆயுதச் சாலையிலிருந்து இவைகளை அவனுக்கு அனுப்பி இருந்தார்கள். யூசப்கான் கவசமணிந்து, இடையிலே போர்த்துகீசிய உயர் அதிகாரி அளித்த உன்னதமான வாளைக் கட்டிக் கொண்டு, தான் வாங்கிய ஈட்டியையும் அவர்கள் அளித்த கேடயத்தையும் தாங்கியபடி கிளம்பிய போது அவனது அருமையான குதிரையையும் தயாராகக் கொண்டு வந்து நிறுத்தி இருந்தார்கள். ஒரு நாள் முழுவதும் ஓய்வு எடுத்துக் கொண்ட அந்த வெண் புரவி மிடுக்குடன் கனைத்து வரவேற்றது யூசப்கானை. அதன் உடலைத் தட்டித் தடவிக் கொடுத்து ஏறி அமர்ந்தவன் அரங்கை நோக்கி அதைச் செலுத்தினான்.

நான்கு வரிசைகளாக வழி வகுக்கப்பட்டிருந்த அரங்கிலே ஒவ்வொரு திசையிலிருந்தும் நான்கு வீரர்களும் எதிர்நோக்கி வரவேண்டும். இந்த நான்கு ஜோடிகளும் ஒருவரை யொருவர் தாக்கி வீழ்த்த முயலுவார்கள். அதில் நிலைகுலையாமல் யார் நிற்கிறார்களோ அவர்களுடன் அடுத்த நான்கு பேர் போட்டியிடத் தயாராக வேண்டும். இந்தப் போட்டியிடும் வீரர்கள் எண்ணிக்கையில் குறைந்து கொண்டே வந்து முடிவாக அரங்கத்திலே நான்கு பேரே மிஞ்சுவார்கள். அந்த நான்கு பேரும் இரண்டு இரண்டு பேராகப் போட்டியிட்டு மோதி அதில் இரண்டு பேர் மிஞ்ச, முடிவாக அந்த இருவரும் ஒருவரை ஒருவர் வெற்றி கொள்ள முனைந்து ஒருவரே வெற்றி வீரராக வாகை சூடி நிற்பார். அவருக்கே மன்னரின் பாராட்டும் பரிசும் உரித்தாகும். இதுவே இந்த விளையாட்டின் விதிமுறைகள். இருவரில் ஒருவர் என்ற கடைசிக் கட்டத்திலேதான் வீரத்தின் வியப்பூட்டும் சாகஸங் களைக் காணப் பிரமிப்பாக இருக்கும். அதுவே அந்த விழாவின் முத்தாய்ப்பாகவும் அமையும்.

பீரங்கிகள் முழங்கி அரங்கத்திலே மன்னர்கள் மறுபடியும் வந்து அமர்ந்து விட்டார்கள் என்பதை அறிவித்தன. கூட்டத்தில் பெரும் பகுதியினர் ஓய்வு பெறவோ உணவு கொள்ளவோ அரங்கத்தை விட்டு வெளியேறவோ இல்லை. வசதியாகப் பெற்ற இடம் போய் விட்டால் என்ன செய்வது? அத்தனை ஆர்வம் அவர்களுக்கு. வெளியேறியவர்களும் விரைவிலேயே வந்து கூடினார்கள். போட்டியிடும் வீரர்கள் இரு பகுதிகளாகப் பிரிந்து நிற்கும் காட்சி கம்பீரமாக இருந்தது. கவசமணிந்து ஈட்டி தாங்கி நின்றார்கள் வீரர்கள். ஒவ்வொரு வீரனின் ஈட்டி முனையின் கழுத்திலேயும் கட்டப்பட்ட குஞ்சமோ கொடியோ காற்றிலே அசைந்தாடுவது அழகாக இருந்தது.

தங்கள் இரும்பையொத்த குளம்புகளால் தரையைக் கீறிக் கனைத்தபடி தயாராக நின்றன குதிரைகள். போட்டிகள் ஆரம்பமாவதற் கடையாளமாகக் கொம்பு வாத்தியத்தை முழக்கினார்கள். இரு பிரிவிலும் முன் வரிசையிலிருந்த நான்கு வீரர்கள் முன் வந்து உயர்த்தி இருந்த தங்கள் ஈட்டிகளைத் தாழ்த்திப்பிடித்தபடி தயாராக நின்றார்கள். அரங்கத்தில் ஆதில்ஷாவின் பிரதிநிதியாக இந்த விளையாட்டுக்களின் விதிமுறைகளை அறிந்தவராக நடுநாயகமாக உருவிய வாளை உயர்த்திப் பிடித்தபடி நின்ற ஒருவர் தமது வாளைத் தாழ்த்தி அனுமதி அளிக்கவே இடியோசை உண்டாயிற்று. எட்டுக் குதிரைகளின் முப்பத்திரண்டு கால்களும் பூமியைக் கிடுகிடுக்க வைத்தபடி காற்றெனப் பறந்தன. பீரங்கியிலிருந்து வெளிப்பட்ட பெரு நெருப்பைப் போலத் தங்களை நோக்கி வரும் வீரனின் மார்பை, தலையைக் குறி பார்த்தபடியே பாய்ந்து கொண்டிருந் தார்கள் வீரர்கள். சில விநாடிகள்தான். அடுத்த நிமிஷம் ஒருசில வீரர்கள் குதிரையிலிருந்து அப்படியே கொந்தி எறியப்பட்டார்கள்; அல்லது நிலைகுலைந்து நிலத்தில் சரிந்தார்கள். வெற்றி பெற்றவர்கள் எதிர்ப்புறத்தில் போய் நின்றார்கள். அடுத்து வரும் வீரனை எதிர்நோக்கி - அவனை வீழ்த்தவோ அவனால் வீழ்த்தப்படவோ!

இப்படி நடைபெற்ற விறுவிறுப்பான போட்டியின் ஒரு நிலையிலே நான்கு குதிரை வீரர்கள் மட்டும் தன்நிகரற்றுத் தனித்து நின்றார்கள். இந்நால்வரில் ஒருவன் யூசப்கான். மற்றொரு வீரன் பீஜப்பூரின் சேனாதிபதியாகிய சித்திஹாஸன். ராட்சத உருவமும் நிகரற்ற பலமும் பொருந்திய சித்திஹாஸன் பீஜப்பூர் ராணுவத்தின் உயர் அதிகாரியாக இருந்தும், இந்தப் போட்டியில் தன் திறமையை

வெளிப்படுத்தவும் தனக்கு மேலாக எவரையும் வர விடக் கூடாது என்பதற்காகவுமே கலந்து கொண்டிருந்தான். மன்னரின் அபிமானத்தைப் பெற்றிருந்த அந்த அபிசீனியனுக்குப் பீஜப்பூரின் பெருங்குடி மக்களும் பிரபுக்களும் விரோதிகளாக இருந்தனர். மூன்றாவது, காலை நிகழ்ச்சிகளில் யானையைக் களைப்படையச் செய்த குதிரை வீரன். நான்காவது வீரன் டில்லியின் மன்னரான அக்பர் சக்கரவர்த்தியின் படைகளை நடத்திப் புகழ்பெற்ற மொகலாய வீரன். போட்டியிலீடுபட்ட வீரர்களை யெல்லாம் வென்று வெற்றிக் கொடி நாட்டி நின்றார்கள் இந்த நால்வரும். இந்நால்வரிலும் சிறந்த ஒருவர் யார் என்பதை முடிவு கட்டும் இந்தக் கட்டமே விழாவின் சிறப்புமிக்க சிகரம் போன்ற அம்சம். அதையும் அறிந்து கொள்வதில் மக்கள் ஆர்வம் காட்டினார்கள்.

பாதுகாப்புப் படைத் தலைவனும் யானையைக் களைப் படையச் செய்தவனுமான குதிரை வீரனையும், மொகலாயக் குதிரை வீரனையும் சித்திஹாஸனும் யூசப்கானும் எதிர்க்கத் தயாரானார்கள். முதலில் சித்திஹாஸன் ஜோடி தங்கள் இருவரில் ஒருவர் யார் என்று முடிவு கட்டுவதில் முனைந்தது. உருவத்திலே ஒப்பிடும் போது சித்திஹாஸனின் முன்னால் அந்த வீரன் சிறு துரும்பேதான். குதிரைகளும் அப்படியே. சித்திஹாஸனின் கருப்பு நிறக் குதிரை பார்வைக்கே பயங்கரமான தோற்றமும் ஆகிருதியும் கொண்டது. அந்த வீரனுடையதோ உருவிவிட்டது போன்ற உடலமைப்பும் அழகும் வேகமும் கொண்ட அராபியக் குதிரை. எதிரெதிராக நின்ற இவ்விருவரும் உத்தரவு கிடைத்ததும் தாழ்த்திப் பிடித்த ஈட்டிகளுடன் தங்கள் குதிரைகளை விரட்டிக் கொண்டு பாய்ந்தார்கள். சித்திஹாஸனின் கேடயத்தைத் துளைத்துக் கொண்டு அந்த வீரனின் ஈட்டி பாய்ந்தாலும், சித்திஹாஸனுடைய ஈட்டியின் அசுர வேகமும் பலமும் அந்த வீரனை அப்படியே ஆகாயத்தில் தூக்கி எறிந்து விட்டன. சித்திஹாஸனோ தன் எதிரியின் தாக்குதலைத் தன் உடலில் மோதிய கொசுவாக எண்ணிக் குலையாமல் நின்றான். சித்திஹாஸன் வெற்றி பெற்றது கூட்டத்தினரிடையே ஓர் அதிருப்தியையே உண்டாக்கிற்று. காரணம் அவ்விரு வருக்குமுள்ள பொருத்தமற்ற தன்மை மட்டுமல்ல, காலையில் அந்த வீரன் பார்வையாளரின் பாராட்டுதலைப் பெற்றவனாதலால் அவன் தோல்வி அடைந்ததனால் ஏற்பட்ட அநுதாபமாகவும் இருக்கலாம்.

ஆரவாரம் அடங்கியதும் யூசப்கானும் மொகலாய வீரனும் அரங்கத்திலே எதிர் எதிராக நின்றார்கள். ஆதில்ஷாவின் பிரதிநிதி தனது உருவிய வாளை உயர்த்தித் தாழ்த்தியதும் குதிரைகள் இரண்டும் ஒன்றை நோக்கி ஒன்று பாய்ந்தன. மொகலாய வீரனின் ஈட்டி யூசப்கானின் கேடயத்தைத் துளைத்துக் கவசத்திலே மோதி முறிந்தது. மொகலாயனின் தலையை மூடியுள்ள இரும்பு முகமூடியைக் குறி வைத்துப் பாய்ந்தான் யூசப்கான். யூசப்கானின் வேகமும் பலமும் மொகலாயனின் தலையணியைத் தட்டி விட்டதோடு அவனைக் குதிரையிலிருந்து நிலைகுலைந்து கீழே விழும்படியும் செய்து விட்டது. எதிரி எகிறி விழுந்ததும் யூசப்கான் தன் குதிரையிலிருந்து கீழே குதித்துத் தரையில் விழுந்தவனுக்குக் கைகொடுத்து உதவ ஓடி வந்தான். வெற்றி தோல்வி ஒருபுறம் இருந்தாலும் மனிதாபிமானத்துடன் நடந்து கொண்ட யூசப்கானின் செய்கை பார்வையாளரின் பாராட்டுதலைப் பெற்றது. பொறி கலங்கிப் போன மொகலாய வீரன் சமாளித்து எழுந்திருக்க உதவினான் யூசப்கான். ஆதரவுடன் அவனை அணைத்தபடி மெள்ளத் தாங்கிப் பிடித்து நடத்திச் சென்று உதவிக்கு ஓடி வந்த வீரர்களிடம் ஒப்படைத்து விட்டுத் திரும்பினான் யூசப்கான். இப்போது அரங்கத்திலே இரண்டு பேர்கள்தான். யூசப்கானும் சித்திஹாஸனும்! தன்னுடன் போட்டியிடத் தகுதி பெற்று நிற்கும் அந்த அந்நியனை அலட்சியமாக மதிக்க முடியவில்லை சித்திஹாஸனால். பொதுஜனங்களின் பரிவையும் பாராட்டுதலையும் பெற்ற யூசப்கானின் செய்கை அவன் சினத்தைக் கிளறி விட்டிருந்தது. பொறாமையும் ஆத்திரமும் பொங்கலாயின அவன் உள்ளத்தில்.

பெருத்த ஆரவாரத்தினிடையே சித்திஹாஸன் ஒருபுறமும் யூசப்கான் மறுபுறமும் ஒதுங்கலானார்கள். போட்டியின் உச்சகட்டமான இருவரில் ஒருவர் என்ற முடிவை அறிய மக்கள் மூச்சை அடக்கிக் கொண்டு காத்திருந்தனர். அப்போது யூசப்கானால் வெற்றி கொள்ளப்பட்ட மொகலாய வீரன் தன் கேடயத்துடன் ஓடி வந்தான். அவனது ஈட்டி துளைத்து யூசப்கானின் கேடயம் பழுதடைந்திருந்தது. ஆகவே அதற்குப் பதில் தனது கேடயத்தை அவனுக்கு அளிக்கவே அந்த மொகலாயன் ஓடி வந்தான். தோல்வியுற்ற தன்னிடம் யூசப்கான் காட்டிய பெருந்தன்மையின் விளைவே அவ்விருவரிடையேயும் அப்படியொரு நட்பை, அன்பை வளர்த்து விட்டது. மொகலாய வீரன் விருப்பமுடன் அளித்த கேடயத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்

கொண்டான் யூசப்கான். குதிரைகள் குறிப்பிட்ட இடத்தை அடைந்து தாக்குதலுக்குத் தயாராகி நின்றதும், 'ஜானே தோ!' என்று உரக்கக் கூவி உத்தரவிட்டார் அதிகாரி. பீரங்கி வாயிலிருந்து புறப்பட்ட நெருப்புப் பந்தமே போல இரண்டு குதிரைகளும் மைதானத்தை அதிரச் செய்தபடி கிளம்பின. உருவனத்தில் குறைவானாலும் சித்திஹாஸனின் வலிமைக்குக் குறைந்தவனல்ல யூசப்கான்.

இருவருடைய ஈட்டிகளின் குறியும் தவறவே இல்லை. குதிரைகள் இரண்டும் நிலைகுலைந்து தடுமாறின. அவன் மீது இருந்தவர்களும் நிதானம் இழந்தார்கள். கேடயங்களில் தாக்கி ஈட்டிகள் இரண்டும் முறிந்தன. தாக்குண்ட வேகத்தில் சித்திஹாஸன் ஒரு புறமாகச் சரிந்தான். கனத்த உடலைக் கொண்ட அவனது பளுவைத் தாங்காது இடது கால் வைக்கப் பயன்படும் இரும்பு வளையம் இணைக்கப்பட்ட தோல் கயிறு குதிரைச் சேணத்திலிருந்து பிய்ந்து அறுபடவே தடம் புரண்ட பார வண்டியைப் போலப் புழுதியில் மூட்டையாக உருண்டான் அவன்.

யூசப்கான் அபிசீனியனின் தாக்குதலினால் குலைந்து போனாலும் குதிரையிலிருந்து கீழே விழாமல் சமாளித்துக் கொண்டு விட்டான். எதிரி தரையில் விழுந்து விட்டதை கண்ட யூசப்கான் முன் போலவே சட்டென்று தன் குதிரையிலிருந்து குதித்து உதவிக்கு ஓடி வரலானான். ஆனால் குதிரையிலிருந்து உருண்டு விழுந்ததுமே அந்த அபிசீனியனின் ரத்தம் அவமானத்தினால் கொதிக்கலாயிற்று. வெற்றியையே இறுமாப்புடன் எதிர்பார்த்திருந்தவனுக்கு இந்தத் தோல்வி ஏமாற்றத்தையும் ஆவேசத்தோடு கூடிய ஆத்திரத்தையும் உண்டாக்கியது. உதவிக்கு வந்த யூசப்கானைச் சித்திஹாஸனின் உருவிய வாள்தான் வரவேற்றது. தற்காப்புக்காக யூசப்கானும் தனது உடைவாளை உருவ வேண்டி வந்தது. ஆத்திரத்தின் அடிமையாகி ஆவேசமாகச் சுழன்ற சித்திஹாஸனின் வாளுக்கு யூசப்கான் முதலில் விலகிக் கொடுத்துப் பின்வாங்கத்தான் வேண்டியிருந்தது. ஆனால் அது சிறிது நேரம்தான். வாள் வீச்சிலே வல்லவனான அவன் சித்திஹாஸனின் மூர்க்கத்தனமான தாக்குதலை லாகவமாகச் சமாளிக்கலானான். தோல்வி மனப் பான்மையிலே ஏற்பட்ட குமுறலின் விளைவாகச் சித்திஹாஸன் கண்மண் தெரியாமல் தன் வாளைச் சுற்றிக் கொண்டிருந்தான். யூசப்கான் நிதானமாகவும் அலட்சியமாகவும் அவனது தாக்குதல்கள் ஒவ்வொன்றையும் தடுத்து அவனது

ஆத்திரத்தை அதிகரிக்கச் செய்து. அதனால் அவன் களைத்துப் போகும்படி செய்து கொண்டிருந்தான்.

வாளெடுத்துப் போர் புரியும் அவனது முறைகேடான நடத்தையைத் தடுத்து நிறுத்த யாராவது வருவார்கள் என்று யூசப்கான் எதிர்பார்த்தது ஏமாற்றவாகவே முடிந்தது. நீதி வழங்க வேண்டியவர்கள் செயலற்று விட்ட நிலையில் தான் செய்ய வேண்டியதைப் பற்றி ஒரு முடிவுக்கும் வந்தான்.

ஆவேச வெறி கொண்ட தன் அத்தனை வாள் வீச்சுக்களையும் அலட்சியமாகத் தாங்கித் தடுத்துக் கொண்டிருக்கும் யூசப்கானின் மீது அடங்காச் சினம் கொண்ட சித்திஹாஸன் தன் பலத்தை யெல்லாம் ஒருங்கே சேர்த்துத் தப்ப முடியாதபடி ஓங்கி ஒரு போடு போட்டான். ஆத்திரக்காரனின் கடைசி அடியின் தன்மையை உணர்ந்த யூசப்கான் அதையும் தக்கபடி தனது கேடயத்தினால் தாங்கிக் கொண்டான். மொகலாய வீரன் அளித்த கேடயத்தின் உறுதியை அப்போதுதான் உணர்ந்தான் யூசப்கான். போர்த்துக்கீசிய உயர் அதிகாரி அளித்த அந்த ஒப்பற்ற வாள், சித்திஹாஸனின் இரும்புத் தலைப் பாகையை உடைத்துக் கொண்டு உருக்குத் தலையினுள்ளும் பதிந்து தன் ரத்தப் பசியைத் தணித்துக் கொண்டது. ஆத்திரமும் கோபமும் சித்திஹாஸனின் திறமைகளையும் சக்திகளையும் பங்கு போட்டுப் பாழாக்கி இருந்த நிலையில் யூசப்கானின் வலுவான அடி அவனை அந்த விநாடியே நினைவிழந்து விழச் செய்து விட்டது. மக்கள் வெள்ளத்தின் மகிழ்ச்சி அலைகளிடையே யூசப்கான் வெற்றி வீரனாக அறிவிக்கப்பட்டான். அத்துடன் அன்றைய விழாவும் முடிவு பெற்றதால், முடிவே இல்லாமல் கைதட்டிக் கரகோஷமிட்டும் உற்சாக மிகுதியால் உரக்கக் கூவியும் ஜனக் கூட்டம் ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தது. யூசப்கான் தன் நன்றியை அவர்களுக்குத் தெரிவித்த படியே ஆதில்ஷாவின் முன் போய்த் தலை வணங்கி நின்றான். ஆதில்ஷாவின் முகத்தில் மகிழ்ச்சியில்லை. அவரது மதிப்புக்குரிய சித்திஹாஸன் படுகாயமடைந்ததை அவரால் தாங்க முடியவில்லை. ஆனால் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் முறைப்படி வெற்றி பெற்ற வீரனான யூசப்கானுக்கு வீர வாளையும் விருதுகளையும் அளித்தார். அவரது மகிழ்ச்சியையும் சேர்த்து வெளிப்படுத்தினார்கள் கோல்கொண்டாவின் குதப்ஷாவும் அகமது நகர் நிஜாம்ஷாவும். வெல்ல முடியாத சித்திஹாஸனை வென்ற யூசப்கானின் வீரத்தை

வெகுவாகப் புகழ்ந்த குதப்ஷா தான் கழுத்தில் அணிந்திருந்த விலை உயர்ந்த வைர மாலையை எடுத்து அவனுக்கு அணிவித்தார்.

“ஆதில்ஷா அவர்கள் அநுமதி அளித்தால் இந்த வீரனின் சேவையை அகமது நகர் ஏற்றுக் கொள்ள விரும்புகிறது” என்றார் ஹுசைன் நிஜாம்ஷா.

“சபாஷ்! வெற்றி வாகை சூடிய வீரனுக்கு ஏற்ற பரிசுதான். அகமது நகரின் சேனாதிபதியாகவே ஆக்கி விடுங்கள் அவனை” என்று உற்சாக மூட்டினார் குதப்ஷா.

“தாங்கள் விரும்பிக் கேட்கும் போது நான் மறுத்துச் சொல்வேனா? அப்படியே ஆகட்டும்” என்று கூறி எழுந்தார் ஆதில்ஷா. சித்திஹாஸனை வென்றதனாலோ என்னவோ யூசப்கான் மீது ஒரு வெறுப்பேகூட ஏற்பட்டிருந்தது ஆதில்ஷாவுக்கு.

நகரெங்கும் வெற்றி வீரன் யூசப்கானின் திறமையையும், சாகஸத்தையும் அன்று வாள் வீச்சிலே அவன் காட்டிய வல்லமையையும், தோல்வியடைந்த வீரனிடம் பெருந்தன்மை யோடு நடந்து கொண்டதையும் பற்றியே மக்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். சித்திஹாஸனின் ரத்தப் பெருக்குக்கு ரணசிகிச்சை நடந்து கொண்டிருந்தது அரண்மனையின் ஓரிடத்திலே. தன் நினைவிழந்து கிடந்தான் அந்த அபிசீனிய வீரன்.

மறுநாள் அகமதுநகர் சுல்தான் ஹுசைன் நிஜாம்ஷாவின் முன்னிலையில் அவரது அழைப்பின்பேரில் ஆஜராகி இருந்தான் யூசப்கான். பத்தாயிரம் குதிரைப் படைகளின் தலைமைப் பொறுப்பை அளித்து அவனைத் தம் தளபதிகளில் ஒருவனாக்கிக் கௌரவித்தார் நிஜாம்ஷா. குதப்ஷாவும் அவனைப் பாராட்டுவதற்காக ஒரு விசேஷ விருந்தே வைத்தார்.

“இந்திய நாட்டில் இஸ்லாத்தின் ஏற்றத்துக்காகவே உங்கள் வீர வாழ்வு பயன்பட வேண்டும். உங்கள் திறமையையும் வீரத்தையும் வெளிப்படுத்த விரைவிலேயே ஒரு வாய்ப்பு ஏற்படப் போகிறது. சரியான சந்தர்ப்பத்தில்தான் அல்லாஹ் உங்களை இங்கு அனுப்பி இருக்கிறார்” என்று அந்த விருந்திலே யூசப்கானைப் பாராட்டிப் பேசினார் குதப்ஷா. மன்னர்களின் பரிவு நிறைந்த பாராட்டுரைகளின் பொருள் புரியாது போனாலும் ஏதோ ஒரு பெரிய செயலை நோக்கித் தன்னை விதி தள்ளிக் கொண்டு போகிறது என்பதை மட்டும் யூசப்கானின் உள் மனம் உணர்ந்தது.

# 16

# மண்டியிட்ட மாடப் புறா

இரு கரையும் தொட்டுக் கொண்டு ஓடும் காட்டாற்று வெள்ளத்தின் பேரொலியைப் போலக் கலகலவென்று சிரித்தார் ராமராயர். அறுபதைத் தாண்டிவிட்ட கிழவரின் சிரிப்பாக இல்லை அது. வாழ்க்கையை அனுபவிப்பதிலும் வல்லமையிலும் வாலிபராக விளங்கும் மகா மண்டலேசுவரரின் சிரிப்பில் மட்டும் கிழத்தன்மை புகுந்து விடுமா என்ன? அரவீட்டு ஆண்மகனின் அட்டகாசமான சிரிப்பொலியோடு வெள்ளி மணியோசையைப் போன்ற மந்தஹாஸமான சிரிப்பொலியும் கலந்து வந்தது.

பகைவர்களின் மனம் புகையுமளவுக்கு விஜயநகரத்தின் பெருமையை உன்னத நிலைக்கு உயர்த்தி ஒப்பற்ற முறையில் ஆட்சி செலுத்தி வரும் அரவீட்டு ராமராயரின் அன்புக்குப் பாத்திரமான ஆசை மனைவி சத்தியபாமாதான் தனது கணவரான மகாமண்டலேசுவரருக்குத் தாம்பூலத்தை மடித்துக் கொடுத்துக் கொண்டே அப்படிக் கிண்கிணி நாதம் எழுப்பிக் கிளுகிளுத்தாள்.

கோவா, ஹோனவார், பத்கல் ஆகிய துறைகளிலிருந்து சாம்ராஜ்யத்தின் குதிரைப் படைக்காகக் கொண்டு வரப்பட்டுள்ள அசுவங்களைப் பார்வையிடவே தர்ம பத்தினியுடன் வருகை தந்திருந்தார் ராமராயர். இன்றைய விஜயநகரத்தின் வீரார்ந்த வாழ்வு குதிரைப் படைகளின் மேன்மையில்தான் இருந்தது. மேனி மினுமினுப்பிலும், கட்டமைந்த வாளிப்பான உடலின் தளதளப்பிலும் தன்னிகரற்ற அராபிய, பாரசீகக் குதிரைகள் பரந்து கிடந்த மைதானத்தில் பல்லாயிரக்கணக்காகத் தரம் பிரித்துது நிறுத்தப்பட்டிருந்தன. பால் வெள்ளை நிறத்திலே, செஞ்சாந்து வண்ணத்திலே, காருண்ட மேகத்தின் கருமை நிறத்திலே, சாம்பல் வண்ணத்திலே, என்று இப்படிக் குதிரைகளை அவற்றின் நிறத்துக்கு ஏற்றபடியும் பாகுபாடு செய்திருந்தார்கள். வெண்மை யுடலிலே வண்ணப் பொட்டுக்களையுடைய இரு வர்ணக் குதிரைகளும் அந்தக் கூட்டத்திலே இடம் பெற்றிருந்தன. வேகத்திலே வேங்கையை யொத்த

அவை உருவத்திலும் அவற்றை நினைவுறுத்துவது போலிருந்தன. அசுவ சாஸ்திரத்திலே வல்லவரான அரவீட்டு ராயர் குதிரைகளின் லட்சணங்களுக்கு ஏற்ப அவற்றின் சேவையை நிர்ணயிக்கவே அன்று அங்கு வந்திருந்தார். அதற்காக நிர்மாணிக்கப்பட்ட அலங்காரமான கூடாரத்தில் அசைந்தாடும் ஊஞ்சலிலே அமைக்கப்பட்ட ஆசனத்திலே தம் இளமனைவி சத்தியபாமாவையும் அருகே இருத்திக் கொண்டு அமர்ந்திருந்தார் ராமராயர். சிற்பிகளின் சிந்தனையிலே உருவாகும் சிங்காரிகளைப் போன்ற ஆரணங்குகள் அருகிருந்து சாமரம் வீசிக் கொண்டிருந்தார்கள். இளமை சிந்தும் இருமகளிர் ஒரே சீராக அந்த ஊஞ்சல் ஆசனத்தை ஆட்டிக் கொண்டிருந்தார்கள். கண்டகார நாயகர்கள் கைகட்டி ஊசலாடும் ஆசனத்தின் ஒரு புறத்தில் சற்று ஒதுங்கி நின்று கொண்டிருந்தார்கள். மற்றும் சில அதிகாரிகள் ஆணையை எதிர்பார்த்து ஆங்காங்கு நின்று கொண்டிருந்தார்கள்.

அலியா ராமராயர் தாம் வந்த காரியத்தை முடித்த பின் தம் இளம் மனைவியின் கையினால் தாம்பூலம் வாங்கித் தரித்து இளைப்பாறிக் கொண்டிருந்தார். பாரதத்துக்கு வெளியிலுள்ள முஸ்லிம் அரசுகளான பாரசீகம், அரேபியா ஆகிய ராஜ்யங்களிலிருந்து வரும் குதிரைகளைப் பாரதத்திலுள்ள முஸ்லிம் அரசுகளான பாமினி ராஜ்யங்களுக்குப் போகாமல் அத்தனையையும் விலை பேசி வாங்கிவிடும் விஜய நகரத்தின் திறமையையும், பெருமையையும் பற்றித் தம் அருமை மனைவிக்கு விளக்கிக் கொண்டிருந்தபோது, ஆதிநாளில் நடந்த சம்பவங்கள் சிலவற்றைச் சொல்ல நேர்ந்தது. அதைக் கேட்டு அடக்க முடியாத சிரிப்பை அவிழ்த்து விட்டாள் அழகி சத்திய பாமா. அவள் ஆனந்தத்திலே அரவீட்டாரும் கலந்து கொண்டார்.

உயர்ந்த ஜாதிப் போர்க் குதிரைகள் இந்திய மண்ணில் பல்கிப் பெருகுவதில்லை. முஸ்லிம்களின் ஆதிக்கும் பாரதத்தில் பரவி வரும்போது அவர்களின் வெற்றிக்கக் குதிரைப் படைகளின் திறமைதான் காரணம் என்பதைப் புரிந்து கொண்டார்கள் இந்திய மன்னர்கள். ஆனால் பாரசீகம், அரேபியா ஆகிய நாடுகளிலிருந்து குதிரைகளைக் கப்பல்களில் கொண்டு வந்த வியாபாரிகள் தங்கள் இனத்தவர்களான முஸ்லிம் மன்னர்களுக்கே அவற்றை விற்று வந்தனர். விஜயநகர வேந்தர்களான ராயர்களால் நல்ல குதிரைகளை அடைய

முடியாத வேதனையைத் தாள முடியவில்லை. இரண்டாம் விரூபாட்சர் இன வேற்றுமை பாராட்டும் இந்த அராபிய வியாபாரிகளிடம் ஆத்திரம் கொண்டு. கோபா துறைமுகத்தில் உள்ள அவர்கள் அத்தனை பேரையும் கொன்று குவிக்கும்படி செய்தார். இந்தக் கொடுமையினால் நிலைமை சீர்திருந்திவிடவில்லை. அதற்குப் பதில் விஜய நகரத்துத் துறைமுகங்கள் ஒன்றிரண்டில் குதிரைகளோடு வந்திறங்கிய ஒருசில கப்பல்களும் ஓடி ஒளிந்தன. இப்படியாக அயல் நாட்டு அற்புதக் குதிரைகள் இன்றியே விஜயநகரம் வளர வேண்டியதாயிற்று. விரூபாட்கருக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த சாளுவ நரசிம்மர் அந்நிய வியாபாரிகளை மிரட்டித் தன்னிறைவு பெற முடியாது என்பதை உணர்ந்து பீதியடைந்திருந்த அராபிய வியாபாரிகளுக்கு அபயமளித்து ஆசை வார்த்தைகளை கூறி அளவுக்கு மீறிய சலுகைகளும் வழங்கி, அசுவங்களை விஜய நகரத்துக்கே விற்கும்படியான ஏற்பாட்டைச் செய்து முடித்தார். அராபிய வியாபாரிகள் தங்கள் கப்பல்களில் ஏற்றும் குதிரைகள் அத்தனையையும் கொழுத்த லாபத்துடன் கொள்முதல் செய்ய முடியும் என்று அறிந்தபோது ஏன் ஓடிவர மாட்டார்கள்? கேட்ட விலையை மறுக்காமல் கொடுப்பதாக மட்டும் ஒப்புக் கொள்ளவில்லை ராயர். கப்பல் பிரயாணத்தில் இறந்துபோகும் குதிரைகளுக்கும் கூடப் பொருள் கொடுத்தார் நரசிம்மர். இறந்த குதிரையின் அடையாளமாக அதன் வாலை வெட்டி எடுத்துவந்து காட்ட வேண்டும்! அது உயிரோடு இருக்குமானால் என்ன விலை பெறுமோ அதைக் கொடுத்தார் விஜயநகரத்து வேந்தர். குதிரைப் படையைப் பெருக்க இப்படி யெல்லாம் பாடுபட்ட கதையை விளக்கியபோது தான் சத்தியபாமாவுக்குத் தாங்க முடியாத சிரிப்பு வந்தது.

"அராபிய வியாபாரிகள் விஜயநகரத்தாரிடம் வாலைக் காட்டியே நல்ல விலை பெற முடியும் என்று தெரிந்ததும் குதிரைகளை விடக் குதிரை வால்களையே அதிகமாகக் கப்பலில் ஏற்றிக் கொண்டு வந்திருப்பார்கள்! அப்படித்தானே?" என்றாள் குறும்பாகப் பேசும் குணமுடைய குட்டி ராணி சத்தியபாமா. அதைக் கேட்டே அரவீட்டார் அப்படிச் சிரித்தார். அவரது கம்பீரமான சிரிப்புடன் அவளது சிங்காரச் சிரிப்பும் கலந்து ஒலித்தது.

"எவ்விதப் போட்டியுமின்றி அராபியர்கள் ஏகபோகமாக நடத்தி வந்த இந்த வியாபாரம் அதிக நாள் நீடிக்கவில்லை. போர்த்துகீசியர்கள் வந்து புகுந்ததும் பேராசை பிடித்த அராபிய வியாபாரிகளை அடித்து

விரட்டினார்கள். இப்போது இந்தியத் துறைகளில் வந்து இறங்கும் அந்நியக் குதிரைகள் அத்தனையை யும் நமது சாம்ராஜ்யத்துக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள் போர்த்துக்கீசியர். அப்படி ஓர் ஏற்பாட்டைச் செய்தவர் மாமன்னர் கிருஷ்ண தேவராயர்" என்றார் ராமராயர். தமது மாமனாரின் மகோன்னதமான அந்த நாட்களின் நினைவினாலோ என்னவோ அவரது நெஞ்சு நிமிர்ந்தது. இமையாத பார்வை நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் நிறைந்து கிடந்த குதிரைகளின் கூட்டத்திலே நிலைத்து நின்றது.

"இப்போது நாங்கள் குதிரைகளின் வால்களுக்கு விலை கொடுத்து வாங்குவதில்லை; குதிரையையே வாங்குகிறோம் என்கிறீர்களாக்கும்!" என்றாள் சத்தியபாமா மோகனமாகச் சிரித்துக் கொண்டே.

மனைவி மடித்துக் கொடுத்த மணம்மிகுந்த தாம்பூலத்தோடு அவளது குறும்பையும் மென்று கொண்டே மந்தஹாசமாக மனம் விட்டுச் சிரித்தார் ராமராயர். அப்போது தூதுவன் ஒருவன் வந்து வாய் புதைத்து நின்றான். மகிழ்ச்சியால் மனம் நிறைந்திருந்த ராயர் வாய் நிறைந்துவிட்ட தாம்பூலச் சாற்றை உமிழ நினைத்துத் திரும்பினார். ஒரு மங்கை தங்கப் பாத்திரத்துடன் ஓடி வந்து நின்றாள். சிவந்த வாய் திறந்து வந்தவனை விசாரிக்க அவன், "அகமது நகரிலிருந்து திம்மாஜி பீமாஜி தங்களைக் காண வந்திருக்கிறார்கள்" என்றான்.

"வரச் சொல்லேன்...!" என்று கூறி வசதியாகத் திண்டிலே சாய்ந்து உட்கார்ந்து கொண்டார் ராமராயர். விஜயநகரின் ராஜப் பிரதிநிதியாகவும் அதே சமயத்தில் பிரதம வேவுகாரராகவும் அகமது நகரில் வேலை பார்த்து வந்தவர் திம்மாஜி பீமாஜி. நடுத்தர வயதுடைய அவர் வந்து வணங்கி நின்றார்.

"என்ன திம்மாஜி, திருமணக் கோலாகலங் களெல்லாம் முடிந்தனவா? நிஜாம்ஷா இப்போது எங்கிருக்கிறார்?"

"மணவினை முடிந்து மாப்பிள்ளையுடன் தலைநகருக்கு வந்திருக்கிறார்."

திம்மாஜியின் பேச்சில் தயக்கத்தை உணர்ந்த ராயர் அதன் காரணத்தைப் புரிந்து கொண்டவராக, "திம்மாஜி, சத்தியபாமா இருப்பதற்காகத் தயங்க வேண்டாம். அவளுக்குத் தெரியாத அரசியல் ரகசியங்கள் ஏதுமில்லை. நீ வந்த காரியத்தை மனம் விட்டுச்

சொல்லலாம்'' என்று தம் மனைவியைப் பார்த்துப் புன்னகை செய்தார். அவள் முகம் சிவந்தது. திம்மாஜியின் முகம் மலர்ந்தது.

“இந்தத் திருமணங்களின் உள் நோக்கமே...”

“எல்லாம் கேள்விப்பட்டேன். விஜய நகரத்தை அழிப்பதற்காக முஸ்லிம் அரசுகளிடையே எப்பாடு பட்டாவது ஒற்றுமையை வளர்ப்பதற்கான முயற்சியிலே முழு மூச்சுடன் முனைந்திருக்கிறாராமே குதப்ஷா?”

“ஆமாம்... அவருடைய திட்டங்களின் படியேதான் எல்லாமே செயலாக்கப்படுகின்றன...”

“பைத்தியக்காரன்...” ராமராயர் சிரித்தார். “தோல்வியின் அடியிலே தோன்றிய ஞானோதயம்! விபரீதமான முடிவுக்கு வந்து விட்டான் இப்ரஹிம். போகட்டும். எப்படியோ என் மகன் ஆதில்ஷாவுக்கு அழகும் அறிவும் நிரம்பிய சாந்த் பீபி மனைவியாக வாய்த்தாள். அதிர்ஷ்டக்காரன்தான் ஆதில்ஷா. சாந்த் பீபியை நான் சிறு குழந்தையிலேயே பார்த்திருக்கிறேன்.”

“நிஜாம்ஷாவும் குதப்ஷாவும் ஆதில்ஷாவைத் தங்கள் அரசியல் சூதாட்டத்தில் பகடைக் காயாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். சூழ்ச்சிக்காரர்களின் கைப் பொம்மையாகி வருகிறார் ஆதில்ஷா என்பதுதான் கவலைக்கிடமாக இருக்கிறது.”

“இதில் நாம் கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஆதில்ஷாவும் அப்படியெல்லாம் மாறக் கூடியவன் இல்லை என்றே எண்ணுகிறேன். ஏதோ கட்டாயத்தின் நெருக்கடியில், கல்யாணத்தின் போதையிலே கட்டுண்டிருக்கிறார் அவ்வளவு தான்.”

“பாண்டி நாட்டு நல்முத்துப் பேழைகளையும் நவரத்தினங் களாலான ஆபரணங்களையும் ஆதில்ஷாவின் திருமணப் பரிசாகத் தாங்கள் அனுப்பினீர்களே. அதை எத்தனை அலட்சியப் படுத்திவிட்டார்கள் தெரியுமா? அரசாங்கத்தின் கீழ்த்தர ஊழியர்களுக்கு அவற்றை வெகுமதியாக வாரி வழங்கி விட்டார்கள்.”

ராமராயர் சிந்தனையிலாழ்ந்தார். வீணாக வன்மத்தை வளர்ப்பானேன் என்று எண்ணினாரோ என்னவோ? “அவர்களின் உடைமையாகிவிட்ட பின் அந்தப் பொருள்களின் போக்கிடம் எதுவானால் நமக்கென்ன?” என்று சமாளித்தார்.

“ஆதில்ஷாவே தம் கைகளால் அப்படி வாரி வழங்கியிருந்தாரானால் நாம் வருத்தப்படுவதற்கில்லை. விஜய நகரத்திலிருந்து வந்த வரிசைகள் என்று அறிந்தே அவற்றை அப்படிக் குதப்ஷாவும். நிஜாம்ஷாவும் மதிக்காமல் நடந்து கொண்டார்கள். ஆதில்ஷாவோ அவர்களின் செய்கைகளைத் தடுக்காதது மட்டுமல்ல. செயலற்றவராகவும் வீற்றிருந்தார்.” பீமாஜியின் மனம் எப்படிப் புண்பட்டிருக்கிறது என்பதை அவரது குரலே எடுத்துக் கூறியது.

ஆழ்ந்த சிந்தனையிலிருந்த அரவீட்டு முதல்வர் “யோசிக்க வேண்டிய விஷயம்தான்” என்றார் எங்கோ பார்த்துக் கொண்டு.

“விஜயநகரத்து இந்துப் படைகள் இஸ்லாத்தை இழிவுபடுத்தி விட்டதாகவும் முஸ்லிம் மக்களின் மத உணர்ச்சிகளுக்கு மதிப்பு அளிக்காமல் மனம் போனபடி இந்து மன்னர்கள் நடந்து கொண்டதாகவும் தீவிரமான பிரசாரம் நடைபெறுகிறது. மக்கள் மனம் பேதலிக்குமளவுக்கு அது சக்தி வாய்ந்ததாகவும் இருக்கிறது.”

“ஆதில்ஷாவின் அவையிலே குதப்ஷா ஆடிய நாடகத்தைப் பற்றி எனக்கு உடனே தகவல்கள் வந்து விட்டன. விஜயநகரத்தில் என் இனத்தவர்களின் அதிருப்தியையும் மதிக்காமல் நான் முஸ்லிம்களுக்கு இந்த விஜயநகரத்தில் அளித்துள்ள சலுகைகளையும். சந்தோஷ வாழ்வையும் அறிந்த யாரும் குதப்ஷாவின் கூற்றை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஆனாலும் இல்லாமல் வராது. அள்ளாமல் குறையாது என்பார்களே... அது போல...”

“அப்படியானால்...?” என்று ஆதுரத்துடன் அகல விழித்தாள் சத்தியபாமா.

“அகமது நகர் சுல்தான் என்னை அவமானப்படுத்தியதை நான் மன்னித்தாலும் வேங்கடாத்திரியால் மறந்திருக்க முடியாது. உணர்ச்சிகளுக்கு இருப்பிடமான அவன் முற்றுகையின்போது பழிவாங்கும் எண்ணத்துடன் ஏதாவது முறை தவறி நடந்திருக்கலாமோ என்று சந்தேகிக்கிறேன்” என்றவர் உடனே அந்த நினைப்பை உதறிவிட்டு “அப்படியே இருந்தாலும் கூட ஒன்றை ஒன்பதாக்கிக் கூறும் இந்த இன வெறியர்களுக்காக என் தம்பியை விட்டுக் கொடுத்து விடமாட்டேன் சத்தியபாமா. அவன் தவறு என் தவறு. அதற்காக எது வந்தாலும் அதைச் சமாளிக்கும் திறமை இந்த ராமராயருக்கு உண்டு. இந்தப் பாமினி சுல்தான்களைப் போல்

பத்துப்பேர் கூடிவந்து எதிர்த்தாலும் விரட்டியடிக்கும் வீரம் இந்த விஜய நகரத்துக்கும் உண்டு. 'ஜிஹாத்' (இஸ்லாமியத் தெய்விகத் திருப்போர்) என்று கூறிக்கொண்டு ஒரு காலத்தில் கொள்ளையும் கொலையும் நடத்திக் குதூகலித்தார்களே. அந்தப் பண்டைய நாளின் கோழைத்தனமான திட்டத்தை நினைத்து இப்போது ஆசையாக அசை போட்டுக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது. தீவானிப் போரிலே இந்த ஐந்து அரசர்களையும் அழவைத்து அடித்துத் துரத்தினாரே, கிருஷ்ண தேவராயர். அதை மறந்து விட்டார்கள் போலும்!"

ரதம் தயாராக நின்று கொண்டிருந்தது. தம் இருக்கையி லிருந்து எழுந்து நடந்தவர் திம்மாஜியின் அருகில் வந்ததும் நிதானித்து, "பாமினி சுல்தான்கள் ஒன்று சேர்ந்து திட்டங்கள் தீட்டட்டும் திம்மாஜி! விஜயநகர சாம்ராஜ்யத்தைத் தரை மட்ட மாக்கி விடலாம் என்று பகல் கனவு கண்டு கொண்டிருக்கட்டும். தீவானிப் போரைத் திரும்பவும் அவர்களுக்கு நினைவு படுத்துவோம். வெல்ல முடியாதபடி வளர்ந்து விட்ட நம் வலிமை கண்டு ஏற்பட்ட வயிற்றெரிச்சலின் விளைவுதான் இந்த முஸ்லிம் அரசுகளின் கூட்டணிக் கொண்டாட்டம். இது ஒரு நாளும் உருப்படப் போவதில்லை" என்று சொல்லிக் கொண்டே ரதத்தில் ஏறியவர் குதிரையின் லகானைக் கையில் எடுத்துக் கொண்டார். சத்தியபாமாவும் ரதத்தில் ஏறி அவர் அருகில் ஒட்டினாற் போல் ஒய்யாரமாக நின்று கொண்டாள். "திம்மாஜி, நீங்கள் எச்சரிக்கை யாக எல்லாத் தகவல்களையும் உடனுக்குடன் அனுப்பிக் கொண்டிருங்கள். உங்கள் ஒத்துழைப்பில்தான் சாம்ராஜ்யத்தின் உயர்வு இருக்கிறது" என்றார். ராமராயரின் குரல் தேர்ச் சக்கரங்களும் குதிரைக் குளம்புகளும் எழுப்பிய ஓசையில் ஒன்றிக் கலந்தது.

வேங்கடாத்திரி குதிரையில் விரைந்து கொண்டிருந்தான். அந்தக் குதிரையின் வேகத்தையும் முந்திக் கொண்டு முன்னால் சென்றது அவன் மனம். கோல்கொண்டா, அகமதுநகர் இவற்றின் முற்றுகையிலிருந்து தலைநகர் திரும்பியவனைத் தங்க விடவில்லை ராமராயர். கோவாத் துறைமுகத்தில் வந்து இறங்கி யுள்ள குதிரைகளைக் கொண்டு வந்து சேர்க்கும் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்து உடனே கிளம்பும்படி ஆணையிட்டு விட்டார் அண்ணா. ஆயிஷாவின் நினைவாகவே போர்க் களத்திலிருந்து திரும்பியவன் அவளைச் சந்திக்க முடியாமலே குதிரை வியாபாரிகளைத் தேடிப் போகும்படியாயிற்று.

குதிரைகளோடு வந்தவன், குதிபோடும் தன் உள்ளத் தவிப்பை ஆயிஷாவைச் சந்திப்பதனால்தான் தணிக்க முடியும் என்ற முடிவோடு அவளைத் தேடிப் போய்க் கொண்டிருந்தான். தேவி திருமலாம்பாளின் அரண்மனை அந்தப்புரத்தினுள் நுழைந்து அவன் ஆயிஷாவின் இருப்பிடத்தை விசாரித்து அறிந்து கொண்டான். அண்ணியார் அரண்மனையில் இல்லை என்பதையும் அறிவித்தார்கள் பணிப்பெண்கள். உத்தியான வனத்தில் உள்ள வசந்த மண்டபத்து நிலா முற்றத்தை நோக்கி அவன் நினைவு தாவியது.

புனையாத ஓவியமாய், பொங்கிப் புரளும் புது வெள்ளத்தின் பூரிப்போடு இளமை எதிர் நீச்சலிடும் மேனி எழிலுடன் ஏந்திழையாள் ஆயிஷா நிலாமுற்றத்திலே அமர்ந்திருந்தாள். அந்தப் பெண் மயிலைச் சுற்றிச் சூழ்ந்தபடி வண்ணப் புறாக்கள் கொட்டம் அடித்துக் கொண்டிருந்தன. காற்றை உள்ளடக்கி மார்பை உப்ப வைத்து நெஞ்சை நிமிர்த்தியபடி தங்கள் குஞ்சுச் சிறகை விசிறியாக விரித்து, கழுத்தை ஒடித்து 'க்கும்... க்கும்' என்று ஓசையிட்டபடி ஒய்யாரமாக நடை பயின்று கொண்டிருந்தன பால் வெள்ளை நிறத்தை யொத்த புறாக்களில் சில. தங்கள் நாட்டியத்தை நங்கை யொருத்தி ரசிக்கிறாள் என்ற கர்வம் அவற்றின் ஆட்டத்திலே நன்கு தெரிந்தது. முழங்கையை ஊன்றியபடி ஒருபுறமாக ஒருக்களித்த நிலையில் ஒயிலாக இடைக்கு மேல் உடலை உயர்த்தி அந்தப் புறாக்களுக்கு நேராக முகத்தை வைத்துக் கொண்ட, அவற்றைப் போலவே 'க்கும், க்கும்' என்று ஒலியெழுப்பிக் கேலி செய்த பிறகு கலகலவென்று சிரித்துத் தானே மகிழ்ந்து கொண்டிருந்தாள் ஆயிஷா. அந்தக் கலீர் சிரிப்பொலியினால் கலக்கமடைந்த சில புறாக்கள் அவள் தோள் மீதும் இடை மீதும் பறந்து வந்து உட்கார்ந்து பயம் தெளிந்த நிலையில் அவற்றின் பளிங்குக் கழுத்தை நொடித்துப் பவழ மூக்கினால் அந்தப் பாவையின் உடலைக் கொத்தி முத்தமிட்டு அவளுக்குக் குறுகுறுப்பை உண்டாக்கின. இப்படிக் குறும்பு செய்யும் புறாக்களைத் தன் தளிர்க் கரங்களால் அமுக்கிப் பிடித்து எடுத்து அவற்றின் பஞ்சு உடலைத் தன் பட்டுக் கன்னத்தோடு ஆசை தீர அணைத்துக் கொண்டாள்.

இப்படித் தனிமையிலே தன்னை மறந்த நிலையில் புறாக்களுடன் விளையாடிக் கொண்டிருக்கும் ஆயிஷாவை - அவள் அழகை - ஒயிலாக ஒருக்களித்த நிலையில் அவள் நிலா முற்றத்திலே படுத்திருக்கும் அந்தப் பாங்கை ரசித்தபடி தன் விழிகளுக்கு விருந்து படைத்துக் கொண்டான் வேங்கடாத்திரி.

"தன் ஆட்டத்தை நாட்டியத்திலே தேர்ந்த அழகியொருத்தி ரசிக்கிறாள் என்று அந்தப் புறாக்களுக்குத்தான் எத்தனை கர்வம்? எப்படி நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு அவை நடக்கின்றன!"

அந்தப்புரத்தில் ஆண் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பின ஆயிஷா தனக்கு மிக அருகே தன் அழகை விழுங்கிக் கொண்டு வேங்கடாத்திரி நிற்பதைக் கண்டு வெட்கித் தன் விழிகளைத் தாழ்த்திக் கொண்டாள்.

"ஆயிஷா, அந்த மாடப் புறாக்களுடன் அவற்றைப் போலவே ஒலியெழுப்பிப் பேசிக் கொண்டிருந்தாயே, உனக்கு அவற்றின் பாஷை தெரியுமா?" என்று கேட்டு அருகில் வந்தான் வேங்கடாத்திரி.

தனிமை என்று எண்ணித் தான் செய்த சேஷ்டைகளை ஆடவன் ஒருவன் கண்டுவிட்டான் என்பதை அறிந்தபோது ஆயிஷாவின் முகம் குங்குமமாகியது. அந்த நினைவிலிருந்து அவனைத் திருப்புவதற்காக, "தளபதியாரை நீண்ட நாட்களாக இந்தப் பக்கமே காணவில்லையே?" என்று கேட்டு வைத்தாள். வேங்கடாத்திரி போர் முனைக்குப் போயிருந்த செய்தி அவளுக்குத் தெரியாததல்ல.

"நீதான் எங்களைக் கண்டாலே பாயும் வேங்கையாகி விடுகிறாயே. அதனால்தான் இந்தப் பக்கமே தலைகாட்ட வில்லை."

"வேங்கடாத்திரி வேங்கைக்குப் பயந்தவரா என்ன?"

"வேங்கைக்குப் பயப்படவில்லை. மங்கையின் வேல் விழிகளைக் கண்டுதான்" என்று குறும்பாகச் சிரித்தவன் தொடர்ந்து, "தனிமையிலே புள்ளி மானாகவும், மாடப் புறவாகவும் மாறி மந்தகாசமாகச் சிரித்து மகிழும் இந்த ஆயிஷாவாகவே நீ எப்போதும் இருந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும் தெரியுமா?" என்றான்.

"இருக்க வேண்டிய இடத்தில் இருந்தால் நான் அப்படித்தான் இருப்பேன்" என்று நெஞ்சு முட்ட மூச்சை இழுத்து அதை நெருப்பாக்கி வெளியே விட்ட ஆயிஷா "ஆனால் என்னை இப்படி இரட்டை வாழ்வு வாழ வைத்து விட்டாரே உங்கள் அண்ணா" என்றபோது அவளிடம் தவழ்ந்த நளினம் மெல்ல விலகலாயிற்று.

"எழில் மங்கையர்களுக்கு இத்தனை கோபமும் வன்மமும் கூடவே கூடாது" என்று தன் இடைக் கச்சையிலே செருகியிருந்த எதையோ வெளியில் எடுத்தான். "இதோ பார் ஆயிஷா! இதை

உனக்காகவே கோல்கொண்டாவிலிருந்து கொண்டு வந்தேன். இதைக் கண்டபோது உன் கருங்குழலிலே இதைச் சூட்டினால் எத்தனை அழகாக எடுப்பாக இருக்கும் என்று தான் என் கற்பனை ஓடியது" என்று கூறியபடியே அதை அவளிடம் நீட்டினான். அது நெற்றிச் சுட்டி போன்றதோர் ஆபரணம். முஸ்லிம் மங்கையர் நெற்றியின் ஓர் ஓரத்தில் வந்து படியுமாறு அதைக் கூந்தலின் ஒரு புறமாக அணிந்து கொள்வார்கள். பிறைச் சந்திரப் பதக்கமும் அதன் கீழே முத்துச் சரமும் மேலே படிப்படியாக வைரங்களைக் கொண்டிழைத்த வேலைப்பாடுமாக வேங்கடாத்திரியின் கரத்தில் அது ஜ்வலித்தது.

அவனது நீண்ட கரத்தில் நெளிந்து கிடந்த அந்த விலைமதிப்பற்ற வைர அணியைப் பார்த்து விரக்தியோடு சிரித்தாள் ஆயிஷா. "ஏனோ தெரியவில்லை. உங்களிடம் மட்டும் என்னால் வெறுப்போடு பேச முடியவில்லை. உதாசீனமாக ஒதுக்க மனமுமில்லை. அப்படி ஏதோ ஒரு பாசம்."

வேங்கடாத்திரியின் உள்ளம் உவகையால் பொங்கிப் பூரித்தது. எதை அவளிடம் எப்படிக் கேட்பது என்று தயங்கிக் கொண்டிருந்தானோ அதையே அவள் வாயால் கூறியபோது அவன் மதுவுண்ட வண்டானான்.

"அன்பே, ஆயிஷா! அந்தப் பாசத்தை நேசமாக்கி வளர்ப்போம். என் இதய ராணியாகிவிடு. உனக்கு ஏற்றமிக்க வாழ்வளிப்பேன்" என்றபோது அவள் உடலைச் சிலிர்த்துக் கொண்டாள். அவள் கண்களில் அனல் வீசியது. அசையாச் சிலையாகி அவனையே இமையாத விழிகளால் எரித்து விடுபவளைப் போல் பார்த்தாள். ஆயிஷாவின் இந்த மாற்றத்தைக் கண்டு வேங்கடாத்திரி தவித்துப் போனான். அதிர்ச்சியிலிருந்து விடுபட்டு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தாள் ஆயிஷா. அனல் வீசிய அவள் விழிகளில் அடுத்த வினாடி புனல் பொங்கியது.

"ஐயோ! என் வார்த்தைகளைத் தவறாகப் புரிந்து கொண்டு தப்புக் கணக்குப் போட்டு விட்டீர்களே. நீங்கள் நினைப்பது போல் உங்கள் வாழ்க்கைத் துணைவியாக என்னால் முடியாது. அதற்குத் தகுதி பெற்றவளுமல்ல நான். இந்த விஜயநகரத்திலே எதையும் யாரையுமே வெறுக்கும் நான் உங்கள் ஒருவருக்கு மட்டும் என் இதயத்திலே ஓர் இடத்தை அளித்திருக்கிறேன் - கணவனாக அல்ல -

அண்ணனாக" என்றபோது அவள் பொங்கி வரும் அழுகையை அடக்க முடியாமல் விம்மினாள்."அது ஏன் என்று எனக்கே தெரியவில்லை. உங்கள் முன்னிலையில் மட்டும் உங்கள் நினைவில் மட்டும் நான் என் வேதனையை மறக்கிறேன். பழிவாங்கும் வெறிக் குணத்தை எண்ணி வெட்கப்படுகிறேன்."

மலை உச்சியிலிருந்து பாதாளத்துக்கு உருண்டு போய்க் கொண்டிருந்தான் வேங்கடாத்திரி. சற்று முன்பு இன்பச் சிறகடித்துப் பறந்த அவனது இதயம் இப்போது ரணமாக வலித்தது. "கண்ணே என்று அழைக்கத் தவித்தேன். அண்ணா என்று அழைத்து என்னை அசத்தனாக்கி விட்டாயே ஆயிஷா!" என்ற வேங்கடாத்திரியின் குரல் கம்மி விகாரமாக ஒலித்தது.

உணர்ச்சி மேலீட்டால் இறுக்கிக் கோத்த கரங்களைத் துடிக்கும் இதழ்களுக்கு ஆதரவாக அழுத்திக் கொண்டு நின்ற ஆயிஷா சட்டென்று வேங்கடாத்திரியின் முன் மண்டியிட்டு அமர்ந்து, "உங்கள் அன்புச் சகோதரியாக என்னை ஏற்றுக் கொள்ள மாட்டீர்களா அண்ணா?" என்று நீர் மல்க மன்றாடினாள்.

பிரமை பிடித்தவனாக நின்று கொண்டிருந்த அரவீட்டு இளவலின் துவண்ட கரங்கள் ஆயிஷாவைப் பற்றி தூக்கி நிறுத்தின. தாங்க முடியாத தாபத்தோடு அந்தத் தாமரை முகத்தைத் தன் இரு கரங்களாலும் தாங்கியபடி வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். உலர்ந்த அவன் உதடுகள் மெல்லப் பிரிந்தன. "ஆயிஷா! நீ என் அன்புச் சகோதரிதான். இந்த அழகை எந்த விதத்தில் பெற்றால் என்ன?" அதற்கு மேல் அங்கு, அவள் முன் அவனால் நிற்க முடியவில்லை. பெண்ணைப் போல் பெண்ணின் முன்னால் நின்று அழுது கொண்டிருக்க விரும்பாத வேங்கடாத்திரி வேகமாக வெளியேறினான். நிலா முற்றத்திலே விழுந்து கிடந்தது அவன் ஆசையோடு ஆயிஷாவுக்காகக் கொண்டு வந்திருந்த ஆபரணம். அதைக் கையில் எடுத்துக் கொண்ட ஆயிஷா, விஜய நகர சாம்ராஜ்யத்தின் பிரதம தளபதி தனது தமையனாகித் தவிப்போடு வேகமாக வெளியே போய்க் கொண்டிருப்பதையே பார்த்தபடி பதுமையாக நின்றாள்.

# 17

# வன்மம் வளர்ந்தது!

இயற்கையின் ஒவ்வொரு சிறு அசைவிலும் அழகைக் கண்டு ஆனந்திப்பவன் கல்லாகிப் போய் உட்கார்ந்திருந்தான், அந்த நீரூற்றின் கரையிலே. உடலும் உணர்வும் உள்ளமுமே உறைந்து போனதொரு நிலை. சலசலத்து ஓடும் துங்கபத்திரை அவனது துவண்ட கால்களைத் தொட்டுக் கிசுகிசுத்தபோது கூட அவனது நிலையில் மாற்றம் ஏற்படவில்லை.

வேங்கடாத்திரியின் உள்ளம் அப்படி வேதனையினால் நொந்து போயிருந்தது. ஆயிஷாவின் நினைவிலே, அவளைக் காதலித்த கனவிலே ஏற்பட்டதொரு கலக்கம். அவனால் அதைத் தாங்கவே முடியவில்லை. எண்ண எண்ண இசிவு கண்ட ரணமாக வலித்தது இதயம். வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் அந்த வாச மலர்ப் பூங்கா வெள்ளை மணல் பாலைவனமாகக் காட்சியளித்தது வேங்கடாத்திரிக்கு. பசுஞ்சோலைப் பறவைகளின் இன்னிசைக் கீதங்கள் நாராசமாக ஒலித்தன அவன் காதுகளுக்கு. எதையுமே, எதிலுமே வெறுப்படைந்தான். இதயத்தைப் பிழிந்தெடுக்கும் ஏமாற்றத்தின் தாக்குதலால் நிலைகுலைந்த வேங்கடாத்திரி அப்படியே புல் தரையில் மல்லாந்து விழுந்தான். எதையுமே பார்க்க விரும்பாதவனைப் போல் அவனது இமைகள் மூடிக் கிடந்தன. விழித்துக் கொண்டிருந்த இதயமோ விம்மி விம்மி அழுது கொண்டிருந்தது. மனத் திரையிலே எண்ணங்களின் எழிலுருவாக ஆயிஷா அற்புத அழகோடு ஆயிரம் கோலங்களில், கோணங்களில் குதி போட்டுக் கொண்டிருந்தாள். குலுங்கச் சிரித்தாள். கும்மாளியிட்டு நின்றாள். குறும்பாக, ஒயிலாக, ஒய்யாரமாக, இன்பமாக இன்னும் எப்படி யெப்படி யெல்லாமோ தோன்றி மோகலாகிரி கொள்ளச் செய்தாள்.

'ஆயிஷா, ஆயிஷா' என்ற அரற்றலானான் அரவீட்டு இளவல். திடீரென்று மின்னலைப் போன்ற ஓர் ஒளி தோன்றி அவன் உடலைக் குலுக்கி எடுத்தது. மோகனமாகச் சிரித்தவள் சோகமே உருவாகி நின்றாள். காதல் மொழி பேச வேண்டிய விழிகள் கண்ணீரை வழிய விட்டுக் கொண்டிருந்தன. 'அண்ணா!' என்றாள் ஆயிஷா. அடியுண்ட

மிருகமாக உடலைச் சிலிர்த்துக் கொண்ட வேங்கடாத்திரி வெறிகொண்டவனாக, 'கண்ணே, கற்கண்டே, காதல் கனியமுதே!' என்று கத்தினான். அவள் கண்ணீர் பெருகியது. கைகளைக் கூப்பியபடி அவன் காலடியில் விழுந்தாள். 'அண்ணா, அண்ணா' என்றே அடுத்தடுத்துக் கூறி அரற்றலானாள். வேங்கடாத்திரியோ வீம்புடன் அவளைக் 'கண்ணே, காதலியே' என்றழைத்தே கத்திக் கொண்டிருந்தான். மெல்ல மெல்ல அவன் வெறிக் குரல் மெலிந்து தேயலாயிற்று. அவள் குரல் மேலோங்கி ஒலிக்கலாயிற்று. ஆயிஷாவின் உருக்கமான வேண்டுகோள் அவனை வெற்றி கொண்டது; வெறியை அடக்கியது. விழிகளைத் திறந்தான் வேங்கடாத்திரி. ஒரு நீண்ட பெரு மூச்சினால் ஆசையை எரித்து அழித்துவிட்டுப் புதிய மனிதனாக எழுந்து உட்கார்ந்தான். எல்லாம் கனவு. நடந்து முடிந்து போனதொரு நாடகத்தின் நினைவுதான்!

'உடலுறவில்தான் இன்பமா? உள்ளத்தோடு ஒட்டி நிற்கும் உறவு முறையில் அதைவிட நிரந்தரமான, நித்தியமான இன்பத்தைக் காண முடியாதா? என்று தனக்குத் தானே கூறிக் கொண்டான், நிராசையை நிஷ்களங்கமான உள்ளத்துடன் ஏற்க முய்னற வேங்கடாத்திரி. இப்போது அவன்உள்ளம் சலனமற் றிருந்தது. களங்கம் நிறைந்த காட்டாற்று வெள்ளமான காதல் வெறி மறைந்து சலசலத்தோடும் தெள்ளத் தெளிந்த நீரோடை போன்ற சகோதர பாசம் மேலோங்கி நின்றது. புனிதமான இந்த மாறுபட்ட நினைவினால் உடலிலும் உள்ளத்திலும் புதிய தெம்பே கூடியிருந்தது.

'அண்ணா ஆதில்ஷாவைத் தம் அருமை மகனாக வரித்துக் கொண்டார். நான் அழகி ஆயிஷாவை அருமைச் சகோதரியாக ஏற்றுக் கொள்ளுவேன்! அன்பே, ஆயிஷா! வேங்கடாத்திரி இந்த விநாடி முதல் உன் அன்புச் சகோதரன்' என்று கூறிக் காலடியிலே ஓடும் துங்க பத்திரையாற்றின் புனிதமான நீரை அள்ளிக் கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்த அவன் உடல் சிலிர்த்தது. துங்க பத்திரை சிரித்துக் கொண்டாள். தளர்ந்து தள்ளாடி வந்து தன் கரையில் விழுந்தவனை உறுதி பெற்ற உள்ளத்தவனாக எழுப்பி நிமிர்ந்து நிதானமாக அடியெடுத்து வைத்து நடந்து போகச் செய்த தன் பெருமையை எண்ணி அந்த நதிப் பெண் அப்படிச் சிரித்தாளோ?

ஆயிஷாவை வேங்கடாத்திரி தன் சகோதரியாக ஏற்ற அதே சமயத்தில் அரண்மனையின் வேறோரிடத்தில் விபரீதம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

விஜயநகர சாம்ராஜ்யத்தின் மன்னர் என்ற பெருமைக்குரிய பொம்மை, பெண்கள் புடை சூழத் திண்டிலே சாய்ந்து கிடந்தது. கீர்த்தி வாய்ந்த கிருஷ்ண தேவராயரின் வமிசத்தில் வந்த பெருமையைத் தவிர வேறு எவ்விதமான தகுதியும் கிடையாது மன்னர் சதாசிவ ராயருக்கு. நாட்டின் ஆட்சியும் அதிகாரமும் அரவீட்டுச் சகோதரர்களின் கையில்தான் இருந்தன. மதுவையும் மங்கையர் களையும் அநுபவித்தபடி அரண்மனைக்குள்ளே அடைபட்டுக் கிடந்தார் அரசர். அதிலும் கூட அவருக்குச் சில தாபங்களிருந்தன. தமது இச்சைக்குகந்த பச்சைக் கிளியான அடிமைப் பெண் ஆயிஷாவை வேண்டுமென்றே தம்மிடமிருந்து அப்புறப்படுத்தி யதனால் தம்மை அவமானப்படுத்தி விட்டதாக ஆத்திரப்பட்டார். ஆர்ப்பாட்டங்கள் செய்தார். ஆனால் பலன் ஏதும் ஏற்படவில்லை.

இந்த நிலையில் அண்ணா தன்னை ஒதுக்கி உதாசீனப் படுத்திச் செயல் புரிகிறார் என்று வேற்றுமையை வளர்த்துக் கொண்டு வன்மம் பாராட்டிய திருமலை பதவியைக் கைப்பற்றும் வழி வகைகளைப் பற்றிச் சிந்தித்தவனாகச் சதாசிவராயருடன் சதியாலோசனை புரிய வந்தான். மதுவின் மயக்கத்திலிருந்தாலும் மன்னர் நிதானமிழக்க வில்லை. வந்தவரைப் புரிந்து கொண்டார்.

“வாரும், மதிமந்திரியாரே! மகாமண்டலேசுவரரின் இடது கையாக விளங்கும் தாங்கள் என்னைத் தேடி வந்திருப்பது ஆச்சரியமாக இருக்கிறதே” என்று கூறிச் சரிந்து கிடந்தவர் நிமிர்ந்து சரியாக உட்கார்ந்து கொண்டார்.

“என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்? விஜயநகர சாம்ராஜ்யத்தின் மன்னரான தங்களுக்கில்லாத மகிமையா மகா மண்டலேசுவரருக்கு?” மனமறிந்த பொய்யைச் சொல்லிக் கொண்டே மன்னரின் அருகில் போய் அமர்ந்து கொண்டான் திருமலை.

சதாசிவ ராயர் கடகடவென்று சிரித்தார். “ஆலயங்களில் உள்ள விக்கிரகங்களுக்கு அலங்காரம் செய்து விழாக் காலங்களில் வெளியே எடுத்துச் செல்கிறார்களே பகட்டாக; அதைப் போலத்தான் விஜயநகர சாம்ராஜ்யத்தின் மன்னரும் அலங்காரம் செய்து கொண்டு பட்டத்து யானை மீது பவனி வருகிறார் பகட்டாக. மானியங்கள் வழங்கும் பட்டயங்களில் கையெழுத்திடுகிறார் - மன்னரும் இருக்கிறார் என்று மக்களுக்குக் காட்டுவதற்காக. ஆனால் சாம்ராஜ்யத்தை ஆட்டிப்

படைக்கும் ஆட்சிப் பொறுப்பும் அதிகாரமும் அரவீட்டுச் சகோதரர்களான உங்கள் கையில்தானே?"

"'உங்கள்' என்று என்னையும் சேர்த்துச் சொல்லாதீர்கள் அரசே! தங்கள் நிலையில் தான் நானும் இருக்கிறேன். சற்று முன் கூறினீர்களே மகா மண்டலேசுவரரின் இடதுகை என்று. அது விளையாட்டாகச் சொன்னதோ அல்லது உண்மையை உணர்ந்து தான் அப்படிக் கூறினீர்களோ தெரியாது. இடக்கையின் இடத்தைத்தான் ராமராயர் எனக்களித்திருக்கிறார். வலக்கையின் பெருமையை வேங்கடாத்திரி பெற்றிருக்கிறான். இந்தச் சாம்ராஜ்யத்தில் தாங்கள் பெயருக்கு மன்னர், நான் பதவிக்கு மந்திரி. அவ்வளவுதான்" என்று நீண்டதோர் ஏக்கப் பெருமூச்சை இழுத்து விட்டான் திருமலை எங்கோ பார்த்துக் கொண்டு.

மன்னர் சதாசிவ ராயரின் புருவங்கள் நெரிந்தன. தலையைக் குலுக்கிக் கொண்டார். தாம் மதுவின் மயக்கத்தில் இருக்கிறோமோ என்ற சந்தேகம் அவருக்கு. கையிலிருந்த மதுக் கிண்ணத்தைக் கீழே வைத்தார். ஏதோ புதுமையைப் பார்ப்பது போலத் திருமலையை உற்று நோக்கினார். ஏதோ புதுமையைக் கேட்பது போல, "என்ன திருமலை, என்ன சொல்கிறாய் நீ?" என்று கேட்டார்.

புரியாத மன்னருக்குப் புரிய வைக்கலானான் திருமலை. "இந்த நாட்டிலே மன்னரிடம் விசுவாசமுள்ளவர்கள் இன்னமும் இருக்கிறார்கள் என்பதைத்தான் கூறுகிறேன், அரசே! இல்லாவிட்டால் என்றைக்கோ ராமராயர் தம்மையே இந்நாட்டின் மன்னராகப் பிரகடனப்படுத்திக் கொண்டிருப்பார்." வலையை வீசினான் திருமலை.

அவன் பேச்சு இனிமையாக, இதமாக இருந்தது மன்னருக்கு. "உண்மையாகவா?" என்று கேட்டார்.

"தன் பலத்தைத் தான் அறியாததனால் தான் யானை மனிதனிடம் அடிமைப்பட்டுக் கிடக்கிறது. உங்கள் மதிப்பை, பலத்தை நீங்கள் அறிந்து கொள்ளாததனால்தான் அடைபட்டுக் கிடக்கிறீர்கள்."

"அப்படியானால்..." ஆசைகளை வளர்த்துக் கொண்டார் சதாசிவ ராயர்.

"என்னுடன் ஒத்துழைத்தீர்களானால்...? உங்கள் உதவி மட்டும் எனக்குக் கிடைக்குமானால் நீங்கள் உண்மையான மன்னராகவே

மகிமையோடு வாழ வகை செய்து தருவேன். ஆட்சியையும் அதிகாரத்தையும் உங்கள் கையில் கொண்டு வந்து கொடுப்பேன்." வீசிய வலை விலகாமல் இருக்க வலுவாக முடிபோட்டான் திருமலை. மன்னர் சதாசிவ ராயரை ஏணியாக்கித் தான் ஏற்றம் பெற வழி வகுக்கலானான்.

நம்பிக்கைப்படவில்லை மன்னருக்கு. நம்பிக்கையாகவும் இருந்தது திருமலையின் துடிப்பான பேச்சு. நம்புவதே அந்த நலங்கெட்ட வாழ்வுக்கு மகிழ்ச்சியளித்தது. இப்படியொரு புரட்சி, உதவி, சூழ்ச்சி தனக்குச் சாதகமாகக் கிடைக்குமானால்? - கிடைக்க வேண்டும் என்று விரும்பி வரவேற்றது அந்த வாலிப உள்ளம். திருமலையின் பேச்சை உறுதியாக்கிக் கொள்ள உரக்கச் சிரித்தார் சதாசிவ ராயர்.

"ஏன் சிரிக்கிறீர்கள்? என் வார்த்தையில் நம்பிக்கையில் லாமலா?" நெருப்பாக ஜ்வலித்தான் ராமராயரின் தம்பி.

"கேவலம் ஒரு அடிமைப் பெண்ணைக்கூட எனக்காக நான் எடுத்துக் கொள்ள முடியவில்லை. இந்த நிலையில் இந்த சாம்ராஜ்யத்தின் அதிகாரத்தையே - ஆணை பிறப்பித்து ஆளும் உரிமையையே வாங்கித் தருவதாகக் கூறுகிறாயே, அதை நினைத்துத்தான்..." ஆதங்கத்தோடு நகைத்தார் அரசர்.

"மலையின் நிலை கண்டு உளி பயப்படுவதில்லை. உங்களிடமிருந்து ஓடிப்போனாளே ஒரு முஸ்லிம் பெண், அவளை நினைத்துத் தானே நெஞ்சம் புண்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்? நாளைக்கே அவளை உங்கள் காலடியில் வந்து விழுந்து கதறிக் கண்ணீர் வடிக்கச் செய்கிறேன். போதுமா?" புகையும் நெருப்பை ஊதிவிட்டான் திருமலை. தீப்பிடிப்பது கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது.

"அந்தப் பெண் ஆயிஷாவுக்கு உன் அண்ணா அபயமளித்துத் தம் மனைவியின் அந்தப்புரத்தில் பத்திரமாக பாதுகாத்து வருகிறார் தெரியுமா?"

"அதுவும் தெரியும். அதற்கு மேலும் தெரியும்! அழகுக் கலைக்கு அடிபணியும் அந்தப் பயல் வேங்கடாத்திரி ஆயிஷாவை அடிமை கொள்ள வட்டமிட்டுக் கொண்டிருக் கிறானாம். அதையும் கேள்விப்பட்டேன்."

“நிலைமை அவ்வளவு தூரத்துக்குப் போய் விட்டதா? அப்படியானால் அவள் எனக்கு இனி எங்கே கிடைக்கப் போகிறாள்? வீண் பகற் கனவுதான்.” நிராசை மேலோங்கி நின்றது சதாசிவ ராயரின் பேச்சில்.

“கவலைப்படாதீர்கள் அரசே? இந்தத் திருமலையின் திறமையை விரைவிலேயே காணப் போகிறீர்கள். அந்தப் பெண் ஆயிஷா உங்களைத் தேடி வரப் போகிறாள். அதன் பிறகு என் திட்டங்களுக்குக் கைகொடுத்தால் இந்த சாம்ராஜ்யத்தை ஆட்டிப் படைக்கும் ஆற்றலையும் அதிகாரத்தையும் உங்களுக்கு ஆக்கி வைப்பேன்” கன்று கொண்டிருந்த ஆசைத் தீயை விசிறி விட்டுக் கொழுந்து விட்டெரியச் செய்தான் அரவீட்டு இளையவன்.

ஆயிஷாவின் நினைவிலே காய்ந்து போயிருந்தவர், திருமலை மூட்டிய நெருப்பிலே கருகிப் போகத் தயாராக இருந்தார். ஆனால் தன் இச்சைக்கு இணங்காதவள் ராமராயரின் பாதுகாப்பிலே வேங்கடாத்திரியின் கண்காணிப்பிலே இருக்கிறாள் என்ற செய்தி உற்சாகமளிப்பதாக இல்லை. “ஏதோ பார்க்கலாம். சொல்லைச் செயலாக்கிய பிறகு தான் எதையும் நிலையாகச் சொல்ல முடியும். அது சரி, பீஜப்பூரிலிருந்து ஏதோ தூதுவன் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேனே என்ன விஷயமோ?” என்றார் சதாசிவ ராயர், அரசியலிலும் தனக்கு அக்கறை உண்டு என்பதைக் காட்டிக் கொள்ள.

“முஸ்லிம்களுக்கு அளவுக்கு மீறிச் சலுகைகள் அளித்து ஆதரித்தாரே அண்ணா, அது பலன் கொடுக்க ஆரம்பித்திருக் கிறது! பாமினி சுல்தான்கள் தங்கள் பகையை மறந்து இந்து சாம்ராஜ்யத்தை அழிக்க ஒன்று சேர்ந்து விட்டார்களாம். ஆதில்ஷாவிடமிருந்து வந்த மஹல்தாரை இரண்டு நாட்களாகக் காக்க வைத்திருக்கிறேன். அண்ணாவின் பேட்டிக்காக ஆனந்த மஹாலில் அமைதி இழந்தவனாகத் தங்கியிருக்கிறான்.” அர்த்தமுள்ள சிரிப்பொன்றைச் சிந்தவிட்டான் திருமலை. அயல் நாட்டுத் தூதுவர்களை அலட்சியமாக நடத்துவதனால் அவர்களின் கோபமும் ஆத்திரமும் பெருகும். அண்டை நாட்டின் நட்பையும் நல்லெண்ணத்தையும் குலைக்கும். அண்ணாவின் ஆட்சியும் ஆட்டம் கொடுக்கும் என்று மனப்பால் குடிக்கலானான் மகாமண்டலேசுவரரின் தம்பி!

இதே வேளையில் ராமராயர் அலி ஆதில்ஷாவின் தூதுவனாக வந்திருந்த மஹல்தாரின் கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தார்.

“விஜயநகர சாம்ராஜ்யத்தின் பராக்கிரமம் மிகுந்த மகா மண்டலேசுவரரின் சந்திப்பு எனக்கு இன்னும் கிடைக்கவில்லை. இரண்டு நாட்களாகத் தலைநகரின் விருந்தினர் மாளிகையில் வேதனையுடன் காத்திருக்கிறேன். எங்கள் சுல்தான் அலி ஆதில்ஷாவின் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த செய்தியைத் தாங்கிய லிகிதத்துடன் தங்கள் தரிசனத்துக்காகக் காத்திருக்கும் எனக்கு இதைக் கண்ட பிறகாவது சமூகத்திலிருந்து அழைப்புக் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறேன்.”

ராமராயரின் கண்கள் சிவந்தன. அயல்நாட்டுத் தூதுவன் வந்து இரண்டு நாட்களாகக் காத்திருக்கிறான் தன்னுடைய பேட்டிக் காக. ஆனால் அந்தத் தகவல் தனக்குத் தெரிவிக்கப்படவே யில்லை என்பதை உணர்ந்தபோது அவர் உள்ளம் தவித்தது.

உள்நாட்டு விவகாரங்களின் பொறுப்புக்கு உரியவனான திருமலையை அழைத்து வரும்படி செய்தி பறந்தது. ஆனால் வந்தவனோ வேங்கடாத்திரி!

“அவசரக் காரியமென்று அழைத்தீர்களாமே. அண்ணா திருமலையை அவர் அரண்மனையில் காணோம். அதனால் நான் வந்தேன்” என்று நின்றவனிடம் மஹல்தாரின் கடிதத்தை மௌனமாக நீட்டினார் ராமராயர்.

லிகிதத்தைப் படித்த வேங்கடாத்திரி, “தக்க மரியாதை களுடன் தூதுவனை ஆனந்த மகாலில் தங்கச் செய்திருப்பார் அண்ணா. தங்களிடம் இதை உடனே கூறாததற்கும் காரணமில்லாமலிருக்காது...” என்று காட்டிக் கொடுக்காமல் பேசினான்.

“அந்தத் தூதுவன் கொண்டு வந்திருக்கும் செய்தி என்ன என்பது எனக்குத் தெரியும். நமது ஒற்றர்கள் அது பற்றிய செய்தியை முன்னதாகவே அனுப்பி விட்டார்கள். இருந்தாலும் அயல் நாட்டிலிருந்து வந்திருக்கும் தூதுவனை அவன் இப்படி ஒரு கடிதம் எழுதும்படியாகவா காக்க வைப்பது?

“நாளைக்கு தர்பாரில் வந்து அவன் சந்திப்பதற்கான ஏற்பாடுகளைச் செய். வேற்றுமையை உண்டாக்கி விரோதத்தை வளர்ப்பதற்கு இம்மாதிரியான சந்தர்ப்பங்களையெல்லாம் பயன்படுத்திக் கொள்ளக் காத்திருக்கிறார்கள் நமது விரோதிகள். இந்த வேளையில்தான் நாம் விழிப்புடன் இருக்க வேண்டும். ஆதில்ஷா

தமது நட்புக்கும் நல்லெண்ணத்துக்கும் உறுதி அளித்திருக்கிறார். 'தம் செயல்களும் தாம் அனுப்பும் தூதுவர்கள் தாங்கி வரும் செய்திகளும் விபரீதமாக வேற்றுமையை வளர்ப்பது போலிருந்தாலும் அவற்றை அப்படியே நம்பிவிட வேண்டாம். அவை கூட்டணி வகுத்துள்ளவர் களின் நிர்ப்பந்தத்தினால் நிகழ்பவை' என்று கூறியிருக்கிறார். இது ஒருபுறமிருக்கட்டும். நாமும் சற்று விவேகத்துடன் நடந்துகொள்ள வேண்டுமல்லவா?"

அண்ணாவின் முன்னிலையில் என்றுமே அதிகம் பேசாதவன் வேங்கடாத்திரி. அன்றும் தலை குனிந்து நின்றான். அவர் கூறியபடியே செய்வதாகக் கூறி விடை பெற்றுக் கொண்டு வெளியேறினான்.

மறுநாள் ஆதில்ஷாவின் தூதுவனை வரவேற்பதற்காக வென்றே விசேஷமான தர்பார் கூட்டியிருந்தார் ராமராயர். மன்னர் நடத்தும் அரசவையல்ல. மகாமண்டலேசுவரர் தனிப்பட்ட முறையில் நடத்தும் கூட்டம் அது. விஜயநகரத்தின் அரசியலை நிர்வகிக்கும் உயர் அதிகாரிகளும் பெருங்குடி மக்களும் மற்றும் பலரும் குழுமியிருந்தார்கள். ஆதில்ஷாவின் தூதுவனைச் சந்திப்பது மட்டும் அன்றைய தர்பாரின் நிகழ்ச்சியல்ல. விஜய நகரத்தின் பழங்குடி மக்களும் நாடோடிகளுமான 'தொம்பர்கள்' என்ற இனத்தவர்களின் கலை நிகழ்ச்சிகளைக் காணவும் சம்மதம் தெரிவித்திருந்தார் ராயர். ஆகவே ஆதில்ஷாவின் தூதுவனை வரவேற்று உரிய ஆசனத்தில் அமரச் செய்த பின் அவனைக் கௌரவிப்பதற்காகவே ஏற்பாடு செய்யப்பட்டது போன்ற அவர்களின் கலை நிகழ்ச்சிக்கு அனுமதியளித்தார். தொம்பர்கள் கூத்து நடத்தி ஆடிப் பாடித் தங்கள் திறமைகளை யெல்லாம் காட்டினார்கள். உடல் வலிமைகளை வெளிப்படுத்தும் வித்தை களைச் செய்து காட்டிச் சபையினரை வியப்பிலாழ்த்தினார்கள். கபடு சூதறியாத தொம்ப ஜோடிகள் காதல் பாட்டுக்கள் பாடிக் களிப்பித்தார்கள். சபையினரின் ஒருமுகமான பாராட்டைப் பெற்ற அந்தக் கூட்டத்தினருக்குத் தாம்பூலம் அளித்துத் தட்டு நிறையப் பொன்னும் மணியும் பொருளும் வைத்துக் கொடுத்தபோது அவர்களில் தலைமகன் தரையில் விழுந்து வணங்கித் தங்களுக்கு இப்பொன்னாலும் பொருளாலும் பயனேதுமில்லை யென்றும். விருந்து வைத்து வயிறார உண்டு களிக்க பத்துப் பன்றிகளைக் கொடுத்தால் போதுமென்றும் வேண்டிக் கொண்டான். அவர்களின் இந்த எளிய வேண்டுகோள் உடனே நிறைவேற்றப்பட்டது.

கொழுத்த பத்துப் பன்றிகளைக் கொண்டு வந்து அவர்களுக்குப் பரிசாக அளித்தார் ராமராயர். இப்போதுதான் விபரீதம் நிகழ்ந்தது. பன்றிகளைக் கண்ட ஆதில்ஷாவின் அவையிலிருந்து வந்திருந்த தூதுவன் வெறுப்பும் கடுப்பும் வேதனையும் பொங்கத் தன் முகத்தை மூடிக்கொண்டான். தூதுவனின் இந்த அருவருப்புச் செயல் சபையோருக்கு எரிச்சலை உண்டாக்கியது.

"நான் முஸ்லிம் இனத்தைச் சேர்ந்தவன். அசுத்தத்தின் இருப்பிடமான இந்தப் பிராணிகள் எங்கள் முன்னிலையில் வரவே கூடாது. அப்படி வருமானால் அவற்றை நாங்கள் காணவே கூடாது. முஸ்லிம் இனத்தைச் சேர்ந்த ஒருவன் பன்றியைப் பார்ப்பானாகில் அவன் அந்தக் கணமே ஓர் இந்துவாகி விடுகிறான்" என்று தனது செயலுக்கு விளக்கம் கொடுத்த மஹல்தாரின் பேச்சைக் கேட்ட சபையோர் கொதித்தெழுந்தனர். ராமராயர் அவர்களை அமைதியாக இருக்குமாறு கையமர்த்தினார். வந்திருக்கும் தூதுவன் இம்மாதிரியான வன்முறைச் செயல்களுக்காகவே அனுப்பப்பட்டிருக்கிறான் என்பதை அறிந்தவர் ராமராயர். முள்ளை முள்ளாலேயே அகற்ற வேண்டும் என்று தீர்மானித்த வராக அந்த முஸ்லிம் தூதுவனை நோக்கி "முஸ்லிம் இனத்தைச் சேர்ந்தவர்கள் கோழியை விரும்பி உண்ணுவீர்களல்லவா?" என்று கேட்டார்.

"ஆம், அது எங்கள் சுவை மிக்க உணவாயிற்றே!" என்றான் தூதுவன்.

"ஆபாசத்தைத் தின்று வளரும் கோழியைச் சுவை மிக்க உணவாக உண்பவர்கள்...?" என்று அவர் கேட்காமல் கேட்டபோது தூதுவனின் முகம் சிவந்தது.

இனப் பற்று மிகுந்த அவன் இறுமாப்புடன், "பிராணி களிலேயே அசுத்தமானது பன்றி. ஆபாசமே அதன் ஆகாரம். அத்தகைய பிராணியையே கொன்று தின்றும் இனத்தை மிகக் கேவலமானதாக, இழிவானதாகத் தானே கொள்ள வேண்டும்? நீங்கள் கூறுவதுபோலக் கோழிகள் ஆபாசத்தைத் தின்பதில்லை. தானியங்களையே தின்று தன் உடலை வளர்த்துக் கொள்ளு கின்றன" என்று வாதாடினான் விஜயநகர சாம்ராஜ்யத்தின் முடிசூடா மன்னரிடம்.

யாருடைய விரல் அசைந்தால் நாடசையுமோ அந்த நரபதியான ராமராயர் இப்போதும் நகைத்தபடியே. "நாளை உனக்கு

உண்மையைக் காட்டுகிறேன்" என்று கூறிவிட்டு நாட்டில் உள்ள பன்றி களையெல்லாம் ஒரு கட்டடத்தில் கொண்டு வந்து அடைக்கச் செய்தார். அவைகளுக்கு உணவாகக் கம்பு, கேழ்வரகு ஆகிய தானியங்களைத் தரையில் கொட்டிக் குவித்துக் கட்டடத்தின் கதவுகளை மூடி முத்திரையிடச் செய்தார்.

மறுநாள் காலையில் அந்தத் தூதுவனை வரவழைத்தார். பன்றிகளை அடைத்திருந்த அறைக் கதவுகள் திறக்கப்பட்டன. தானியங்களை வயிறார உண்ட அந்த மிருகங்கள் அறையை ஆபாசமாக்கி யிருந்தன. நூற்றுக்கும் அதிகமான கோழிகளைத் தயாராக வைத்திருந்தார்கள் வீரர்கள். பன்றிகளை விரட்டிவிட்டு அந்தக் கட்டடத்தினுள் கோழிகளை விட்டார்கள். தூதுவன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே கோழிகள் பன்றிகளின் அசுத்தத்தில் உள்ள தானியங்களை உற்சாகமாகக் கொத்தித் தின்னலாயின. அதைக் கண்ட ஆதில்ஷாவின் தூதுவன் ஆத்திரமும் அவமானமும் அடைந்து தலையைக் கவிழ்த்துக் கொண்டான்.

"ஆபாசமான பன்றிகளைத் தின்றும் இனத்தவர்களான இந்துக்களைக் குறைவாக மதிப்பிட்டாயே; இப்போது பார்த்தாயா? எங்களில் எல்லோருமே பன்றி இறைச்சியை உண்பதில்லை. ஏன்? புலாலையே தொடாதவர்களும் எங்களில் உண்டு. எந்த இனம் உயர்ந்தது என்பதை இப்போது நீயே சொல்" என்றார் ராமராயர்.

தூதுவன் ஏதும் சொல்லவில்லை. அந்த அந்நியனின் ஆத்திரம் அடங்காததாக இருந்தது. விருந்தினர் விடை கொடுக்காத போதே விருட்டென்று எழுந்து வெளியேற முற்பட்டான். ஆத்திரத்தில் அறிவிழந்து விட்ட அவனை "நில்" என்று குரல் கொடுத்து நிறுத்தினார் ராமராயர்.

"தூதுவனாகப் பிற நாட்டுக்குச் செல்வதற்குத் தகுதியற்ற உன்னைத் தேர்ந்தெடுத்து அனுப்பினார்களே அவர்களுக்காக வருந்துகிறேன். நீ வந்த காரியத்தையே மறந்து வம்பு பேசி வன்மத்தை வளர்த்துக் கொண்டு போகிறாய். கொண்டு வந்த கடிதத்தை இன்னும் நீ என்னிடம் கொடுக்கவே இல்லை. ஆனால் அதில் உள்ள விஷயம் எனக்குத் தெரியும். அதற்கு விடை கூறுகிறேன். அதைப் போய் உன்னை அனுப்பியவர்களிடம் தெரிவி. பீஜப்பூருக்கு ஒரு காலத்தில் உரிமையாக இருந்து இன்று விஜயநகரத்தின் ஆளுகைக்கு உட்பட்டிருக்கும் சில பிரதேசங்களைத் திரும்பக் கேட்டு நிருபம்

வரைந்திருக்கிறார் உங்கள் சுல்தான். இல்லையா? விஜயநகரம் தனது உரிமையான நிலத்தில் ஓர் அடி மண்ணைக் கூட மாற்றானுக்கு விட்டுக் கொடுக்காது என்று போய்க்கூறு உன் மன்னரிடம்'' என்று கம்பீரமாகக் கூறினார் ராமராயர். முறைப்படி தாம்பூலமும் அவனது தகுதிக்குகந்த சன்மானங்களும் வழங்கித் தூதனுக்கு விடையும் கொடுத்தார்.

அவமானத்தின் அடியைத் தாங்க மாட்டாதவனாக அந்தத் தூதுவன் விஜயநகரத்திலிருந்து கிளம்பி நேரே பீஜப்பூர் சுல்தானின் அவைக்கு வந்தான். தலையில் சுற்றிக் கட்டியிருந்த தலைப்பாகையை அவிழ்த்துக் கழுத்தில் மாலையாகப் போட்டுச் சுற்றிக் கொண்டு, கண்ணீர் வழிய, ஆதில்ஷாவின் முன் மண்டியிட்டு விஜயநகரத்திலே தான் பட்ட அவமானத்தைச் சொல்லி அழுதான். அரற்றினான். பழிவாங்க வேண்டும் என்று படபடத்தான். ஆதில்ஷா அவன் கூறியவற்றையெல்லாம் அமைதியாகக் கேட்டார்.

"தூவனாகச் சென்ற உனக்கு நாவடக்கம் இருந்திருக்க வேண்டும். இடம் பொருள் ஏவல் அறிந்து செயல்படும் திறன் இல்லாதவன் நீ. அவர்கள் நாட்டுக்குப் போய், அதுவும் ராமராயரின் அவையிலேயே உன் இனப்பற்றை இங்கிதமற்ற முறையில் வெளிப்படுத்தியது உன் குற்றம். உன்னை இந்த மட்டோடு விட்டாரே என்று சந்தோஷப்பட வேண்டியதிருக்கப் பழி வாங்க வேண்டுமென்று குதிக்கிறாயே'' என்றார் ஆதில்ஷா. இப்படியொரு செய்தியோடு தூதுவனை அனுப்பவே விரும்பாதவர் அவர். குதப்ஷா, நிஜாம்ஷா இவர்களின் வற்புறுத்தலின் பேரிலேயே அந்தத் தூதுவனை அனுப்பியிருந்தார். அவன் அவர்களின் போதனையிலே புத்தி தடுமாறிப் போனவன்.

"அப்படியானால் நம் இனத்துக்கு இழைக்கப்பட்ட இந்த அநீதிக்குத் தாங்கள் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப் போவதில்லையா?''

"குற்றம் உன்மீது. இதில் நான் ஏதும் செய்வதற்கில்லை. தவிர, ராமராயர் என் மதிப்புக்குரியவர். ஒரு வகையில் என் தந்தையைப் போன்றவர். அவருடன் மனஸ்தாபப் பட்டுக் கொள்ள விரும்பவில்லை நான்'' என்று அவனைக் காணவே விரும்பாதவர் போல எழுந்து உள்ளே சென்றார் ஆதில்ஷா.

ராமராயரின் அவையில் அடைந்த அவமானத்தை விட ஆதில்ஷாவின் அலட்சியம் தாங்க முடியாததாக இருந்தது அவனுக்கு. ஆதில்ஷா போருக்கு ஆயத்தம் செய்வார் என நினைத்தான் அவன். ஆனால் நடந்ததோ...?

ராமராயரின் அவையில் அவமானப்பட்டு, ஆதில்ஷாவினால் கைவிடப்பட்ட இந்த நிர்க்கதியான நிலையிலும் பழிவாங்கும் வெறிக்குணம் மட்டும் அவனை விட்டு விலகவில்லை. ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாக வேகமாக வெளியேறினான்.

# 18

# காசிம்கான் உதயம்

**கோ**ல்கொண்டா அரண்மனை கோலாகலத்தில் மூழ்கிக் கிடந்தது. விருந்தும் கேளிக்கைகளுமாகப் பாலா ஹிஸார் விழாக் கோலமே பூண்டிருந்தது. திட்டமிட்டபடி காரியங்கள் வெற்றிகர மாக நிறைவேறி வருவதைக் கொண்டாடவே இப்ரஹிம் குதப்ஷா தம் நண்பர்களை யெல்லாம் கூட்டியிருந்தார். அகமதுநகரின் நிஜாம்ஷாவும், பீடாரின் அலி பரீத் ஷாவும் விருந்தினர்களில் முக்கிய இடம் பெற்றிருந்தனர். நிஜாம் ஷாவுடன் பத்தாயிரம் குதிரைப் படைகளின் தலைவனாகப் பதவியேற்றிருந்த யூசப்கானும் வந்திருந்தான்.

பாராதாரியின் பளிங்கு மண்டபத்தின் தரையிலே பொழிந்த நிலவு பாலாக வழிந்து கொண்டிருந்தது. அரை வட்ட வடிவமாக அமர்ந்திருந்தார்கள் மன்னர்களும் மற்றவர்களும். சாய்ந்து சரிந்து சொகுஸாக உட்கார்ந்து கொள்ளச் சுகமான திண்டுகள் போடப்பட்டிருந்தன ஒவ்வோர் இருக்கையிலும். இடையிடையே தட்டுக்களில் பழ வகைகளைக் குவித்து வைத்திருந்தார்கள். அவற்றின் அருகே மதுக் கிண்ணங்களும் வைக்கப்பட்டிருந்தன. அவற்றைக் குறையாமல் நிரப்புவதற்குப் போதை தரும் அழகுடைய கோதையர்கள் தயாராக நின்று கொண்டிருந்தார்கள். அரங்கத்தின் நடுவே வார்த்தெடுத்த வெண்கலச் சிலையை யொத்த வனப்புடைய

அழகி ஒருத்தி தன் அங்கங்களைக் குலுக்கி மினுக்கியபடி ஆடிக் கொண்டிருந்தாள். அவளை, அவள் உடலை ஆட்சி வைத்துக் கொண்டிருந்தன வாத்தியங்களும் வாய்ப்பாட்டும். உணர்ச்சிகளைக் கிளறும் அந்த இசைக் கேற்பத் தன் இடையை நெளித்தும், உடலைச் சிலிர்த்தும் ஒய்யாரமாக ஆடிக் கொண்டிருந்தாள் அந்தத் தாத்தாரியப் பெண்.

தட்டிலிருந்து எடுத்து உயர்த்திப் பிடித்த திராட்சைக் குலையிலிருந்து பழங்களைக் கையால் எடுக்காமல் வாயால் கௌவித் தின்று கொண்டிருந்தவர்களும், நங்கையர் கிண்ணங் களில் நிரப்பிய மதுரைச் சுவைத்துக் கொண்டிருந்தவர்களும், அந்த ஆடல் மங்கையின் மயக்கு நடனத்தில் மனத்தைப் பறிகொடுத்தவாறு, 'வாஹ்வா! வாஹ்வா!' என்று வாழ்த்தொலி எழுப்பித் தங்கள் வசமிழந்த நிலையில் மயங்கிக் கொண்டிருந் தார்கள். லஸ்தர் விளக்குகளின் ஒளியைத் தவிர ஆங்காங்கே வைக்கப்பட்டிருந்த இரும்புக் கொப்பரைகளில் எரிந்து கொண்டிருந்த பந்தங்கள் இருளை விரட்டுவதோடு இதமான கதகதப்பையும் அந்தச் சூழலுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தன. தபலாக்கள் அதிர்ந்தன. நடன மாதின் வெறியூட்டும் ஆட்டத்தில் வேகம் மிகுந்தது.

விருந்தினர் வரிசையில் உட்கார்ந்திருந்த யூசப் கான் எழுந்திருந்து அந்தக் கூட்டத்திலிருந்து விலகி அமைதியை நாடி மதில் சுவரின் ஓரமாகப் போய் நின்று கொண்டான். குன்றின் உச்சியில் நிர்மாணிக்கப் பட்டிருந்தது அந்தப் பாராதாரி. நிலவில் குளித்தபடி உறங்கும் கோல்கொண்டா நகரத்தின் அழகை அங்கிருந்தபடி ரசித்தான் யூசப்கான். கடந்த சில தினங்களாவே தொன்மை மிகுந்த பாரதத்தின் வளப்பமான காட்சிகளைப் பார்த்துப் பார்த்துப் பரவசமாகிப் போயிருந்தான் அவன். கலையுள்ளம் படைத்த இந்திய மக்கள் கல்லை மெழுகாக்கி எழுப்பியுள்ள எழில்மிகு கலைக் கூடங்களைக் கண்டு வியப்பும் விம்மிதமும் அடைந்து போயிருந்தான். நல்முத்துச் சிப்பியிலே பிறந்தாலும், சிங்காரிகளின் கழுத்தில் இருக்கும்போதுதான் அழகு கொழிக்கும் அதன் சிரிப்பை அநுபவிக்க முடிகிறது. வைரம் நிலத்திலே பிறந்தாலும் நங்கையரின் உடலிலே இருக்கும் போதுதான் ஒளி சிந்திச் சிலிர்க்கும் அதன் ஜொலிப்பை உணர முடிகிறது. அது போல் பிறந்த நாட்டை விடப் புகுந்த நாட்டிலே பெருமையோடு விளங்கும் இஸ்லாத்தின் ஏற்றத்தைக் கண்டு மகிழ்ந்தது அந்தத்

துருக்கியனின் மனம். காபிரிகளின் நாட்டில் தங்கள் இனத்தவர் கலைக் கூடங்களாக அமைத்திருக்கும் மசூதிகளின் எடுப்பான எழில் மிகுதோற்றத்தைக் கண்டு பூரித்துப் போனான் யூசப் கான்.

அகமதுநகரின் சேனாதிபதியாகிய சில தினங்களிலேயே இந்த நாட்டின் அரசியல் நிலையை ஒருவாறு தெரிந்து கொள்ளும் வாய்ப்பு அவனுக்குக் கிடைத்தது. பாமினி சுல்தான்கள் தங்கள் பகையை மறந்து ஒன்று சேரும் அளவுக்கு ஏற்றம் பெற்றிருக்கும் இந்து சாம்ராஜ்யத்தின் பெருமையைப் பற்றியும் அறிந்து கொண்டிருந்தான். அதன் பலத்தையும் பராக்கிரமத்தையும் பற்றிப் பகைவர்களான பாமினி சுல்தான்களே புகழ்ந்து பேசுவதைக் கேட்டு அந்த விஜய நகரத்தைக் காண வேண்டுமென்ற ஆவலை உள்ளத்துக்குள் வளர்த்துக் கொண்டிருந்தான் யூசப் கான். இந்தத் தன் ஆவலும் விரைவிலேயே பூர்த்தியாகும் என்பதையும் சூசகத்தினால் அறிந்திருந்தான். ஒரு பெரும் போரை எதிர் நோக்கி யிருக்கிறது இந்த நாடு என்பதைப் புரிந்துகொள்ள அவனுக்கு வெகுநாட்களாகவில்லை.

சல்லாத் துணி கொண்டு மறைத்ததைப் போலச் சந்திரனை மேகம் வந்து மூடிக் கொண்டது. கீழ் வானத்தில் மினுக்கட்டான் பூச்சிகளாக மொய்த்துக் கொண்டிருந்த நட்சத்திரங்கள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன. யூசப் கான் தன் கவனத்தைச் சற்றுத் தூரத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த தாத்தாரியப் பெண்ணின் ஆட்டத்திலே திருப்பினான். வாத்தியங்களின் அதிர்வுக்கு ஏற்றபடி துவளும் தன் உடலை வில்லாக வளைத்துக் காண்போரின் உள்ளங்களில் வெறி ஏற்றிக் கொண்டிருந்தாள் அவள். சட்டென்று அவனுக்குத் தான் கப்பலில் மரணக் கம்பத்திலே கட்டுண்ட நிலையில் கசையடி வாங்கியபோது தன் உடல் துடித்த அந்த நிலைதான் நினைவுக்கு வந்தது. அவன் தசைநார்கள் இறுகின. கூத்தைக் காண விரும்பாதவனாக முகத்தைத் திருப்பிக் கொண்டான். வெறித்த அவன் பார்வையின் முன்னே இருட் போர்வையில் முடங்கிக் கிடக்கும் கோல்கொண்டா ராஜ்யம் விரிந்து கிடந்தது. ஆனால் தன் முன்னே உள்ள எதையும் அவன் இப்போது பார்க்கவில்லை. தன்னையே தன்னுள் பார்த்துக் கொண்டு நின்றான் தன்னை மறந்த நிலையில்.

'என் வாழ்க்கையில்தான் சமீப காலத்துக்குள் எத்தனை சம்பவங்கள் - எண்ணிப் பார்க்கவே நெஞ்சம் நடுங்கும்படியான சம்பவங்கள் எல்லாம் எத்தனை துரிதமாக நடந்துவிட்டன? கப்பல்

கவிழ்ந்ததுமே என் வாழ்வும் முடிந்ததாக எண்ணினேன். கைதியாகிக் கசையடி பட்டுக் கம்பத்தில் கட்டுண்டு கிடந்தபோது உயிர் ஆசையை உதறினேன். இவ்வளவையும் மீறி என்னை வாழ வைத்து இந்த நிலையில் இங்கே கொண்டு வந்து நிறுத்தியிருக்கும் விதி இன்னும் என்னால் என்ன காரியங்களைச் சாதித்துக் கொள்ளத் திட்டமிட்டிருக்கிறதோ?'

நினைவின் முடிவை நீண்ட மூச்சாக்கி வெளியேற்றி விட்டுத் திரும்ப நினைத்த யூசப் கானின் பார்வையை, கோட்டையை நோக்கி வளைந்து நெளிந்து வரும் பாதையிலே வெகு வேகமாக ஒரு தீவட்டி தாவி வரும் காட்சி தடைப்படுத்தி நிறுத்தியது. உற்றுக் கவனித்தபோது தீவட்டி தனியாக வரவில்லை. அதை ஏந்திய உருவம் ஒரு குதிரையையும் விரட்டிக் கொண்டு வெகு வேகமாகக் கோட்டையை நோக்கி வருகிறது என்பது தெரிந்தது. அடுத்த சில விநாடிகளில் அது பாலாஹிஸாரின் பாதாள வாயிலிலே எதிரொலி மாளிகையின் முன்னே வந்து நின்றது. சங்கேதக் குறிப்புக்களைக் கொண்ட ஓசை எழுப்பப்பட்டது அங்கிருந்து. அடுத்த விநாடி அந்த ஒலி கோட்டையின் உச்சியிலுள்ள பாராதாரியிலே கூடி, கேளிக்கையில் ஈடுபட்டிருப் போரின் கவனத்தைக் கவர்ந்தது. மது மங்கையரின் மோகத்திலே கிறங்கிக் கிடந்தாலும் குதப்ஷா எதிரொலி கொண்டு வந்த செய்தியினால் உடலைச் சிலிர்த்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தார்: கையை உயர்த்திப் பாட்டையும் கூத்தையும் நிறுத்தினார். பாலாஹிஸாரிலிருந்து கைதட்டி எழுப்பும் மாறுபட்ட ஒலிகள் இப்போது ஸ்பஷ்டமாகக் கேட்டன. செய்தியை அறிந்தவர் 'மேலே வரச் சொல்' என்று உத்தரவுக்குக் காத்திருந்த தூதுவனிடம் கூறினார். அவன் பாராதாரியிலே பிரதானமாக அமைந்த ஓர் இடத்துக்கு ஓடிச் சென்று குதப்ஷாவின் உத்தரவைக் கைதட்டி அதே சங்கேத ஒலிக் குறிகளால் கீழே அனுப்பி வைத்தான். தீவட்டி தாங்கி வந்த குதிரை வீரன் பாராதாரியை நோக்கித் தனது குதிரையைத் தட்டி விட்டான். குதிரையிலிருந்து இறங்கி மேலே ஏறிவரவில்லை அவன். ஓர் எல்லை வரை கோட்டையின் மீது குதிரையின் மீதே செல்லலாம். அத்தனை விசாலமான படிகளையும் பாதைகளையும் கொண்டது அந்த அற்புதமான கோல்கொண்டாக் கோட்டை.

எதிரொலியைப் பயன்படுத்திச் செய்துள்ள இந்த ஏற்பாட்டைப் பார்த்து வியந்து போய் நின்று கொண்டிருந்தான் யூசப் கான். சற்று

நேரத்துக்கு முன் பாட்டும் கூத்துமாக இருந்த கோட்டை உச்சியில் இப்போது அமைதி நிலவியது. படிகளில் பாய்ந்து ஏறிவரும் குதிரைக் குளம்பொலி தான் அங்கிருந்தோரின் இதயத் துடிப்பைப் போலத் தனித்து ஒலித்துக் கொண்டிருந்தது. தூதுவன் என்ன செய்தியோடு வருகிறானோ என்ற தவிப்பே எல்லோருடைய நெஞ்சத்தையும் திருகிக் கொண்டிருந்தது. யூசப்கான் கோட்டையின் மதிற் சுவரிலிருந்து தன் இருக்கைக்கு வந்தமர்ந்து கொண்டான்.

காத்திருந்தவரின் கவனத்தைக் கவரும் வகையில் தூதுவன் வந்தான். முழங்கால் வளையாமல் இடுப்பை 'வளைத்துச் சலாம் செய்து நிமிர்ந்தவனின் முகத்திலே நெடுந் தூரப் பிரயாணத்தின் களைப்பு இல்லை. களிப்பே மிகுந்திருந்தது!

வந்த தூதுவன் வேறு யாருமில்லை. விஜயநகர சாம்ராஜ் யத்தின் மீது படையெடுத்துப் பகை தீர்க்க வேண்டுமென்று ஆதில்ஷாவிடம் முறையிட்டு அவரால் நிராகரிக்கப்பட்ட மஹல்தார்தான் அவன். தனக்கு நேர்ந்த அவமானம் தன் இனத் துக்கே இழைக்கப்பட்ட அநீதி என்று வாதாடி வன்மம் தீர்க்கவே குதப்ஷாவைத் தேடிக் கோல்கொண்டாவுக்கு ஓடி வந்திருந்தான். ஆனால் அவன் எதிர்பாராத வகையில் அங்கு நிஜாம்ஷாவும், இமத்ஷாவும் கூட இருப்பதைக் கண்டதுமே வந்த காரியம் வெற்றி என்று குதூகலப்பட்டது அவன் உள்ளம்.

மஹல்தாரைக் கண்டவுடனேயே புரிந்து கொண்டார்கள் நிஜாம்ஷாவும் குதப்ஷாவும். பீஜப்பூரின் அரண்மனையில் அவர்கள் எல்லாரும் சேர்ந்து இருக்கும்போதுதான் அவனை விஜயநகரத்துக்கு அனுப்பி வைத்தார்கள். அத்தகைய ஓர் ஏற்பாட்டைச் செய்தவரும் குதப்ஷாதான்.

"விஜயநகரத்துக்குப் போய் வந்த காரியம் வெற்றிதானே?" என்று கேட்டு மஹல்தாரின் மௌனத்தைக் கலைத்தார் குதப்ஷா.

மகிழ்ச்சி பூத்திருந்த அவன் முகம் மங்கியது. வேதனை, வெறுப்பு, ஆத்திரம், அவமானம் ஆகிய உணர்ச்சிகளின் கலவையாக உருமாறியது அவன் முகம். "ஒரு விதத்தில் வெற்றிதான். தாங்கள் என்னை அனுப்பும் போது எந்த முடிவை எதிர்பார்த்து அனுப்பினீர்களோ அதுதான் நடந்தது. மண்ணை இழப்பது மானத்தை இழப்பது போலாகும் என்று கூறினான் மமதை பிடித்த அந்த மன்னன். ஆனால் அதற்கும் மேலாக..." என்று பேச்சை அடக்கிய போது

அங்கிருந்தவர்கள் மூச்சடைக்க அந்த மௌனத்தை விரும்பாத வர்களாகித் தவித்தார்கள்.

"அதற்கும் மேலாக...?" அந்த மஹல்தார் பேச்சை மறந்து விட்டானோ என்று அடியெடுத்துக் கொடுத்தார் கோல்கொண் டாவின் இப்ரஹிம் குதப்ஷா.

"என்னை - உங்கள் பிரதிநிதியாகச் சென்ற என்னை - அவமானப்படுத்தி அனுப்பினார். அதற்கும் மேலாகப் போற்று தலுக்குரிய நம் முஸ்லிம் இனத்தின் மானத்தையே மண்ணோடு மண்ணாகப் புதைத்து விட்டார்கள் அந்தக் காபிரிகள்" என்று உருக்கமாக உள்ளத்தைத் தொட்டு உணர்ச்சிகளை உலுக்கி எழுப்பி இனவெறி கொள்ளும்படியாக விஜய நகரத்திலே வராகத்தினால் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை வக்கணையாக விளக்கினான் அந்த மஹல்தார். கண்ணீர் ஒழுகக் கைகளை உயர்த்தி, அல்லாஹ்வின் பெருமைக்கு ஏற்பட்ட இந்தச் சிறுமையைத் துடைத்துத் தூய்மைப்படுத்த அவர்கள் உடனே வீறு கொண்டெழ வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான்.

பழி வாங்க வேண்டும், படையெடுக்க வேண்டும், விஜயநகர சாம்ராஜ்யத்தை வேரோடழிக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்த குதப்ஷாவிற்கு, விஜயநகரம் பீஜப்பூருக்கு உரிமையான பகுதிகளை விட்டுக் கொடுக்க மாட்டேன் என்று கூறியதே போதும். அதையும்விடப் பல படி அதிகமாகவே சாதித்துக் கொண்டு வந்து விட்டான் தூதுவன்.

"இதற்கு மேலும் பேசாமலிருப்பதா? இந்துஸ்தானத்தில் என்றைக்குமே அடிமைப்பட்டுக் கிடக்கும் ஒரு வகுப்பாக இஸ்லாமியரை ஆக்கி விடுவான் அந்த அரவீட்டு ஆணவக்காரன்" என்று கொதித்தார் குதப்ஷா.

தூதுவனின் விளக்கம் இனப்பற்றுக் கொண்ட எவரையுமே வெறி கொள்ளச் செய்யும் வகையில்தான் இருந்தது. "கோபப்பட வேண்டிய விஷயம்தான்" என்றார் நிஜாம்ஷா நிதானமாக. ராமராயரை வெறுத்தாலும் பகைத்துக் கொண்டு படையெடுக்க ஏனோ அவருக்குத் தயக்கமாகவே இருந்தது.

"கோபப்பட்டால் மட்டும் போதாது! கொன்று குவிக்க வேண்டிய தருணம் இது. இனி சிந்திப்பதற்கே ஏதுமில்லை. போர், போர்!

தன்மானமுள்ள எந்த முஸ்லிமும் இந்த அவமானத்தைத் தாங்கிக் கொண்டிருக்க மாட்டான்" என்று சீறினார் குதப்ஷா.

"நம்முள் ஒற்றுமை வேண்டும் என்பதை ஒப்புக்கொள் கிறேன். முஸ்லிம் இனத்துக்கும் மதத்துக்கும் மாசு கற்பிக்கும் எவரையும் இலேசாக விட்டு விடுவதையும் நான் வெறுக்கிறேன். ஆனால்..." என்று அழுத்தம் கொடுத்து நிறுத்தினார் பீடார் நாட்டின் பெருமைக்குரிய மன்னர் அலி பரீத்ஷா. குதப்ஷாவும் நிஜாம்ஷாவும் அவரைப் பார்வையால் குத்தினார்கள். அதனால் பயப்படவில்லை பரீத்ஷா. தொடர்ந்தார்: "விஜய நகரத்தைப் பகைத்துக் கொண்டு படையெடுத்து வெற்றி கொள்வது என்பது விளையாட்டல்ல. அதனால் அந்தப் பேரரசின் பெருமை கண்டு நான் அஞ்சுவதாக நினைக்க வேண்டாம்" என்றவர் இத்தனைக்கும் காரணமான அந்த மஹல்தாரைப் பார்த்து, "பீஜப்பூரின் தூதுவனாகத்தானே விஜயநகரத்துக்கு நீ சென்றாய்? அப்படியிருக்க அங்கு உனக்கு நேர்ந்த இந்த அவமானத்தை அலி ஆதில்ஷாவிடம் சென்று முறையிடாமல் எங்களைத் தேடி வந்து விவரிக்கிறாயே, அது ஏன்?" என்று கேட்டார்.

"அவரைக் காணாமல் நான் இங்கு வரவில்லை. அங்குதான் முதலில் என் கண்ணீரைச் சிந்தினேன். கதறினேன்." ஆதில் ஷாவிடம் தான் அடைந்த ஏமாற்றத்தை விளக்கினான் அந்தத் தூதுவன். "மகாமண்டலேசுவரரால் மகனாக மதிக்கப்பெறும் மகிமையையும் தகுதியையும் அடைந்தவன் நான். அந்த நட்பை நான் நாசமாக்கிக் கொள்ள விரும்பவில்லை. அவருக்கு எதிரான எந்தச் செயலிலும் இறங்க மாட்டேன்" என்று கூறி விட்டார். அதன் பிறகே உங்களிடம் ஓடி வந்தேன்.

நிஜாம்ஷாவும் குதப்ஷாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். அதிலே ஆயிரம் எண்ணங்கள் எதிர்நீச்சலடித் தன. 'என் முயற்சிகளெல்லாம் வீணாகி விட்டனவா? தென்னக முஸ்லிம் அரசுகளின் இணைப்பிலே இந்து சாம்ராஜ்யத்தின் அழிவுக்கு வழிவகுத்த தெல்லாம் வெறும் கனவாகப் போக வேண்டியதானா?' என்று கலங்கியது குதப்ஷாவின் நெஞ்சம்.

'மண உறவுகளால் மனம் மாறி விடும், பகை முடிக்கப் பக்கபலமாக இருப்பான்' என்று எண்ணி என் மகளையே அவனுக்கு மனைவியாக்கி வைத்தேனே! எல்லாம் வியர்த்தம்தானா? குதப்ஷாவின்

பேச்சைக் கேட்டு முட்டாளாகி விட்டோமோ?' என்று குழம்பினார் நிஜாம்ஷா.

"படை பலத்திலும் பரந்த நிலப் பரப்பிலும், செல்வச் சிறப்பிலும் மிகுந்த பீஜப்பூரை ஒதுக்கி விட்டு நாம் செயல்பட முடியாது" என்று வெளிப்படையாகவே பேசினார் பீடாரின் பரீத்ஷா.

"ஆய்!" என்று அலட்சியமாக முழக்கி முகம் கடுத்தார் குதப்ஷா. "பீஜப்பூரை நம்பியா நாம் போர்த் திட்டம் வகுத்தோம்? இனத்தின் பெயரால் இணைய வேண்டும் என்று விரும்பினோம் - ஐவரில் ஒருவரை ஒதுக்கி ஒற்றுமை காண வேண்டாம் என்ற எண்ணத்தோடு. ஆதில்ஷா நம்முடன் ஒத்து வந்தாலும், வராவிட்டாலும், அதிகார வெறியும் சாம்ராஜ்யச் செருக்கும் கொண்டுள்ள அந்த ராமராயரின் கொட்டத்தை நாம் அடக்கியே தீருவோம். எப்படியும் போர். போரிட்டுத்தான் நம் புனித இஸ்லாத்தின் மதிப்பை உயர்த்தியாக வேண்டும். என்ன சொல்கிறீர்கள்?" என்று நிஜாம்ஷாவைப் பார்த்துக் கேட்டார் இப்ரஹிம். எங்கே அவரும் தமது மருமகப் பிள்ளையின் பக்கம் சாய்ந்து விடுவாரோ என்ற ஐயம் அதில் கலந்திருந்தது.

யோசித்தார் அகமது நகர் சுல்தான். அவரது சிந்தனை தளபதி யூசப்கானைப் பேச வைத்தது. "ஆரம்பத்தில் நம்முடன் ஒத்துழைப்பதாக உறுதி கூறிய ஆதில்ஷா அவர்கள் இப்போது இணைந்து வர மறுப்பதென்றால் அதற்கு ஏதோ காரணம் இருக்க வேண்டுமல்லவா?" என்று கேட்டான் அந்தத் துருக்கிய வீரன்.

"வெறும் மயக்கம்!" என்று வெறுப்போடு சிரித்தார் குதப்ஷா. "யூசப்கான்! உனக்கு இந்த நாட்டு அரசியலைப் பற்றி அதிகம் தெரியாது. போகப் போகப் புரிந்து கொள்வாய். பாமினி சுல்தான்களிடையே பகையை வளர்த்துத் தன் சாம்ராஜ்யத்தின் பலத்தையும் பரப்பையும் வளர்த்துக் கொண்டது விஜயநகரம். அந்த அரசியல் சூழ்ச்சிகளை அறியாத ஆதில்ஷா, தன்னை அந்தக் காபிரி அன்பு மகனாக ஏற்றுக் கொண்டான் என்பதற்காக நம் திட்டங்களுக்குக் கைகொடுக்கத் தயங்குகிறார். அந்த மயக்கத்திலிருந்து அவரை விடுவிப்பது என் பொறுப்பு. நிஜாம்ஷா அவர்களே! இன்னும் ஏன் யோசனை? ராமராயரின் படைகள் அகமது நகரிலே புகுந்து புரிந்த அட்டூழியங்களை அதற்குள் மறந்து விட்டீர்களா?" என்று கேட்டார் இப்ரஹிம்.

சவுக்கடி பட்டவரைப் போல் உடலைச் சிலிர்த்துக் கொண்டார் அகமதுநகர் சுல்தான். "எதையும் மறந்துவிட வில்லை. மறக்கவும் முடியாது. பழி வாங்கிப் பகை முடிக்க வேண்டும் என்ற என் எண்ணத்தையும் நான் மாற்றிக் கொள்ளவுமில்லை. ஆனால் நமது முயற்சிகள் பூரணமான நிச்சயமான பலன்களைத் தர வேண்டும். அதற்கான நடவடிக்கைகள் எதிலும் நாம் ஏமாந்து விடக் கூடாது என்பதே என் கவலை" என்றார் நிஜாம்ஷா. பீஜப்பூரின் பிரிவு அவரைப் பெரிதும் பாதித்திருக்கிறது என்பதைக் கூறாமல் கூறியது அவர் குரல்.

"நம் இந்தக் கலக்கத்துக்கெல்லாம் உறக்கம் ஒரு தெளிவான முடிவைக் கொடுக்கும் என்று நம்புகிறேன். காலையில் தொடர்ந்து விவாதிக்கலாமே?' என்று கூறி எழுந்தார் பரீத்ஷா. மற்றவர்களும் அதற்கு உடன்பட்டார்கள். சற்று நேரத்தில் பாரதாரி வெறிச் சோடிக் கிடந்தது.

"போர் போர், போர்! நமது புனிதமான இஸ்லாத்தின் ஏற்றத்துக்காகவும் தன்மானத்தை இழக்காமல், முஸ்லிம் இனம் பெருமை குறையாமல் வாழவும் வேண்டுமானால் பலம் பெற்று வரும் பகைவனை ஒழிக்க வேண்டும். இந்த லட்சியத்தை அடைய நாம் போரிட்டே ஆக வேண்டும். நமது இந்த முடிவை இனி எதுவும் மாற்றாது."

காலையில் மூன்று சுல்தான்களும் மறுபடி சந்தித்த போது சொல்லி வைத்தாற்போல ஒரே விதமாக - வார்த்தையில்கூட மாறுதலின்றி இதையே கூறினார்கள்.

ஒருமுகமான இந்த ஒப்பற்ற முடிவுக்கு வந்த மூவருமே இரவு முழுதும் உறங்கவில்லை. உறக்கமற்ற இரவின் கிறக்கம்கூட இந்த மகிழ்ச்சியில் அவர்களிடம் காணப்படவில்லை. தங்கள் நட்பின் இறுக்கத்தை, இணைப்பை வெளிப்படுத்தச் சுல்தான்கள் மூவரும் தோளோடு தோள் சேர நன்றாகத் தழுவிக் கொண்டார்கள்.

"ஆனால் ஒன்ற, பீஜப்பூர் இந்தக் கூட்டிலிருந்து விடுபட்டுப் போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எப்படியாவது ஆதில்ஷாவை நம் வழிக்குக் கொண்டு வந்தாக வேண்டும்" என்றார் நிஜாம்ஷா.

"அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள்" என்றார் நம்பிக்கையுடன் குதப்ஷா. "இந்த விநாடியிலிருந்தே போருக்கான

ஆயத்தங்களை நாம் முழு மூச்சுடன் தொடங்கியாக வேண்டும்"

"அதற்கு முன்னால் நாம் செய்ய வேண்டிய காரியம் ஒன்றிருக்கிறது" என்றார் பரீத்ஷா. "ஒப்பற்ற ஒற்றர் படையை உடையவர் ராமராயர். காற்றின் மோப்பத்திலிருந்தே காரியங்களின் கூறு அறியும் திறமைசாலிகள் உண்டு அவரிடம். நம்முடைய இந்தத் திட்டங்களை யெல்லாம் அவர் அறிந்திருப்பார். ஆகவே போருக்கு முன் விஜயநகரத்தின் நிலையை அதன் 'செயல் முறைகளை நாம் அறிந்து கொள்ளுவது அவசியம். தன் பலத்துடன் மாற்றான் பலத்தையும் அறிந்து கொண்டு போருக்குப் புறப்படுவதுதான் புத்திசாலித்தனம்."

"உண்மைதான். திறமை மிக்க தோர் ஒற்றனை விஜய நகரத்துக்கு அனுப்பி உளவறிந்து வரச்செய்ய வேண்டும்" என்றார் நிஜாம்ஷா. அப்போது யூசப்கான் அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தான். அவனைக் கண்ட குதப்ஷா குதூகலமுடன், "இதோ, அந்தப் பிரச்சினையும் தீர்ந்து விட்டது!" என்றார். "இந்தக் காரியத்துக்கு யூசப்கானை விடத் தகுதி வாய்ந்தவர் யாரும் இல்லை. இந்த வீரரைப் பற்றி அங்கு யாருக்கும் எதுவும் தெரியாது. அவர்கள் இவனைப் பார்த்தது கூட இல்லை. ஆகவே அந்நிய நாட்டானைப்போல ஆபத்தின்றி ஒரு நாட்டில் சுற்றலாம். உருமாறிப் போக வேண்டியது கூட இல்லை. யூசப்கான் அந்த நாட்டை இதுவரை பார்த்திராததால் எதையும் ஆர்வமுடன் பார்க்கலாம். பாசாங்கு செய்யவோ நடிக்கவோ தேவையில்லை. என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார் யூசப்கானைப் பார்த்து,

ஏதும் புரியாத நிலையில் திகைத்தவனுக்கு விஷயத்தை விளக்கினார் நிஜாம்ஷா. "விரோதியின் நாட்டுக்குச் சென்று உளவறிந்து வரும் பணியை உன்னிடம் ஒப்படைக்கலாம் என்றிருக்கிறோம். விஜய நகரத்துக்குள் சென்று அதன் படை பலத்தை அறிந்து வருவதோடு முஸ்லிம் இனத்தைச் சேர்ந்த தளபதிகள் பலர் அங்கு பணி புரிகிறார்கள். நமக்குச் சாதகமாகச் செயல்படவும் அவர்களைத் திருப்பி விட வேண்டும். சிரமமான காரியம்தான். ஆனால் உன் திறமையில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது."

விஜயநகரத்துக்குச் செல்ல வேண்டும் என்ற செய்தியே யூசப்கானுக்கு மகிழ்ச்சியளித்தது. அதுவும் தான் பணிபுரியும்

நாட்டுக்குத் தன் பயணம் பயன் தரும் வகையில் அமைவதை நினைத்து ஆனந்தமடைந்தான்.

"என்னிடம் தாங்கள் கொண்டுள்ள அன்புக்கும் நம்பிக்கைக்கும் நான் கடமைப்பட்டவன். தங்கள் கட்டளை எதையும் நிறைவேற்றி வைக்கச் சித்தமாக இருக்கிறேன்" என்றான் யூசப்கான்.

உடனே திட்டங்கள் வகுக்கப்பட்டன. விஜயநகரத்தைப் பற்றி அவன் அறிந்து கொள்ள வேண்டிய அவசியமான செய்திகளையெல்லாம் அவனுக்குத் தெரிவித்தார் குதப்ஷா. நகரின் அமைப்பு, நாகரிகம், பழகும் முறை முதலியவைகளை அவனுக்கு விளக்கினார். அந்தப்புரத்தினுள்ளும் செல்வதற்கு ஏற்ப அவன் இளமைத் தோற்றத்திலே சற்றே முதுமையைப் புகுத்தி உருமாற்றம் செய்யப்பட்டான் யூசப்கான். பாரசீகத்திலிருந்து வரும் வைர வியாபாரியைப் போலப் பகட்டான ஆடை அலங்காரம் செய்து கொண்டான். கோல்கொண்டாவின் பொக்கிஷ அறையி லிருந்து விலைமதிப்பற்ற ஆபரணங்கள் அவனது வியாபாரப் பொருள்களாயின. வழிச் செலவுக்கும் விஜயநகரத்திலே டாம்பீகமான வாழ்க்கை நடத்தவும் ஏராளமான பொற்காசுகளையும் கட்டிக் கொடுத்தார்கள். நெடுந்தூரப் பிரயாணியைப் போல ஒட்டகம் ஒன்று அவனது மூட்டைகளைச் சுமந்தபடி பின்தொடரு வதற்கு ஏற்பாடாயிற்று. விஜய நகரத்தின் மூலை முடுக்குகளையும் அறிந்த இரண்டு வீரர்கள் இந்த வைர வியாபாரிக்குப் பணியாளாகப் பின்தொடர்ந்தார்கள். அவ்விருவரின் உருவமும் கணிசமான அளவுக்கு மாற்றப்பட்டது. ஒப்பற்ற தனது வெள்ளைக் குதிரைமீது அமர்ந்து ஒய்யாரமாகக் கிளம்பினான் யூசப்கான் - இல்லை பாரசீகத்திலிருந்து வரும் வைர வியாபாரி! இப்போது அவன் பெயர் காசிம்கான்.

தனது கனவு நகரமும், மர்மங்கள் நிறைந்ததும், பகைவர் களின் இதயத்திலே முள்ளாகக் குத்தும் மகோன்னதமான வாழ்க்கையை உடையதும் தென்னகத்தில் தன்னிகரில்லாது விளங்குவதுமான விஜயநகரத்தை நோக்கிக் கிளம்பினான் காசிம்கான்.

அதே நேரத்தில் ஆதில்ஷாவின் அவையை நாடிப் பீஜப்பூரை நோக்கி மற்றொரு தூதுவன் குதிரையில் விரைந்து கொண்டிருந்தான்.

# 19

# ரதமும் மனோரதமும்

உருமாறிய யூசப்கானின் உள்ளம் உவகையால் துள்ளிக் கொண்டிருந்தது. மகோன்னதமாக விளங்கும் மகத்தானதொரு இந்து சாம்ராஜ்யத்தின் இரகசியங்களை அறிந்து வருவதற்கு ஆற்றலும் அனுபவமும் பெற்ற அநேகர் இருக்கத் தன்னைத் தேர்ந்தெடுக்கச் செய்த விதியை எண்ணி வியந்தவாறு வழி கடக்கலானான் காசிம்கானாகப் பெயர் மாறிய யூசப்கான். பகைமை பாராட்டும் பாமினி சுல்தான்களான குதப்ஷாவும் நிஜாம்ஷாவுமே, யூசப்கானுக்கு விஜயநகரத்தின் அமைப்பையும் அங்கு நடந்து கொள்ள வேண்டிய வழி முறைகளையும் பற்றி விளக்கிய போதே நகரின் செழிப்பை உயர்வாகத்தான் சொல்ல வேண்டி இருந்தது. 'அப்படியானால் அதன் உண்மை நிலை எத்தகையதாக இருக்கும்?' என்று சிந்திக்கலாயிற்று காசிம்கானின் உள்ளம். போர்ச்சுகீசியர் சிறப்பாகக் குறிப்பிட்ட 'பிஸங்கா' என்ற விஜயநகர சாம்ராஜ்யத்துக்குத் தன் கற்பனையில் ஓர் உருவம் கொடுத்துக் கொண்டான் யூசப்கான். அந்நிய நாட்டிலிருந்து வரும் அத்தனை குதிரைகளையும் வாங்கும் அந்த அதிசய நாட்டின் எல்லையை அடைந்த போது அந்தி சாயும் வேளையாகி விட்டது. விஜய நகரப் பேரரசின் தாய் நகரமான, துங்கபத்திரையாற்றின் வடகரையில் உள்ள ஆனகொந்தி நகரில் இரவு தங்கி மறு நாள் பகலில் தலைநகரத்துக்குப் போகலாம் என்று திட்டமிட்டான் அவன்.

அகமது நகர், கோல்கொண்டா, பீஜப்பூர் ஆகிய பிரதேசங்களில் அவன் கண்ட காட்சிகளுக்கும் விஜயநகரத்தை அடுத்து வரும் போதே அவன் காணுகின்ற காட்சிகளுக்கும் எத்தனையோ வித்தியாசமிருந்தது. வளப்பம் மிகுந்ததொரு நாட்டின் செழிப்பான இடங்களையும் அதற்குரியோரின் இதயங்களையும் வழியெல்லாம் கண்டு களித்தான். விக்கிரக ஆராதனை வேரோடிப் போனதொரு நாட்டில், வானுற ஓங்கி வசீகரமான தோற்றத்துடன் கம்பீரமாகக் காட்சியளிக்கும் ஆலயங்களின் கலையழகைக் கண்டு, அதை ஆக்கி வைத்த பாரதக் கலைஞர்களின் கைத்திறனைப் பாராட்டிக் கொண்டிருந்தது யூசப்கானின் ரசிக உள்ளம். யாரிடம் கேட்டாலும்

'விஜயநகரமா?' என்று வியப்பும் மதிப்பும் பொங்கி வழியத்தான் பேசினார்கள் இத்தனை சிறப்புக்கு உரியதொரு நாட்டுக்கு எதிராகத் தான் செயல்பட வேண்டி இருக்கிறதே என்ற வேதனை யூசப் கானின் உள்ளத்தின் ஒரு மூலையில் இலேசாக உறுத்திக் கொண்டு தானிருந்தது.

இருள் பிரியுமுன்னே உறக்கம் பிரிந்து எழுந்த காசிம்கான் ஒட்டகத்தையும் தன் உதவியாளர்களையும் கிளப்பிப் பிரயாணத் துக்குத் தயாராக்கினான். பட்சிஜாலங்களின் இன்னிசையோடு பகல் மலரும் வேளையில் துங்க பத்திரையாற்றைக் கடக்கும் பாலத்திலே காசிம்கானின் குதிரை விஜயநகரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. அவனுக்கும் முன்பாகவே சாரி சாரியாக மக்களும் மாட்டு வண்டிகளும் அந்தப் பாலத்தில் விஜயநகரை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. மறு கரையை அடைந்து, எனக்கு நிகர் எவருமில்லை என்ற இறுமாப்புடன் நிமிர்ந்து நிற்கும் கோட்டைச் சுவர்களை அண்ணாந்து பார்த்த யூசப்கான் ஆச்சரியப்பட்டுப் போனான். காலை இளங் கதிரவனின் மஞ்சள் வெயில் அந்த மங்கள நகரத்துக்குப் பொன் முலாம் பூசிப் பொலிவு கூட்டிக் கொண்டிருந்தது. உருக்கி வார்த்த தங்கத்தி னாலாகிய கோபுரங்களின் பொற்கலசங்கள் ஒளி சிந்திச் சிரித்துக் கொண்டிருந்தன. சீறிச் சினந்து ஓடும் ஆழங் காண முடியாத துங்கபத்திரை ஆறு ஒரு புறமும், கரடு முரடாக ஓங்கி உயர்ந்த கற்பாறைகளை மறுபுறமும் இயற்கை அரண்களாகக் கொண்டு வியாபித்து நிற்கும் விஜயநகர சாம்ராஜ்யத்தின் இன்னொரு பக்கத்தை விரோதிகளின் நெஞ்சங்களைக் கலங்க வைக்கும் விண்ணை எட்டும் கோட்டைச் சுவர்கள் காத்து நின்றன. அது மலைத் தொடரை நோக்கி ஓடி உயர்ந்திருந்தது.

வடக்குக் கோட்டை வாயில் வழியாக யூசப்கான் வெற்றி கொள்ள முடியாத அந்த விஜயநகரத்தினுள் புகுந்தான். கோட்டை வாயிலிலும் மேலேயும் வேலேந்திய வீரர்கள் காவல் காத்து நின்றனர். மல்லர்களைப் போலத் தோற்றமளித்த அந்த வீரர்களின் உடற்கட்டைக் கண்டு வியப்பெய்தினான் வியாபாரியாக உள்ளே புகும் வீரன். காவல் வீரர்கள் திறந்த உடலோடு பரந்த மார்புடன் விளங்கினார்கள். கட்டுமஸ்தான அவர்களுடைய கால்களிலும் கைகளிலும் காப்பணிந்திருந்தார்கள். முகத்திலே முறுக்கி விட்ட மீசையும் தலையிலே முண்டாசும் அவர்களுடைய தோற்றத்துக்கு ஏற்றமளித்துக் கொண்டிருந்தன. இடையிலே தார்ப் பாய்ச்சிக் கட்டியிருந்த ஆடை முழங்காலுக்குச் சற்றுக் கீழே அதை மூடியபடி அமைந்திருந்தது.

மற்றொரு துணியை முறுக்கினாற் போல மார்பின் குறுக்கே இடது தோள் மீதுபோட்டு வலப்பக்கத்து இடையில் வரும்படி முடிந்து கொண்டிருந்தார்கள். இந்தக் காவல் வீரர்களின் காந்தக் கண்கள் கோட்டை வாயிலில் நுழையும் ஒவ்வொருவரையும் அவர்கள் உருவத்தை மட்டுமல்லாமல் உள்ளத்தையும்கூட ஆராய்ந்து கொண்டிருந்தன. ஆனால் யாரையும் அவர்கள் தடுத்து நிறுத்தவில்லை. அயல்நாட்டு வியாபாரிகளை மரியாதையுடனேயே அனுமதித்துக் கொண் டிருந்தார்கள்.

யூசப்கான் தன் குதிரையில் அமர்ந்து கோட்டை வாசலை நோட்டம் விட்டபடி சற்று நேரம் தாமதித்தான். காவல் வீரர்களின் சுறுசுறுப்பையும் வியாபாரப் பொருள்கள் உள்ளே போய்க் குவியும் வேகத்தையும் பார்த்து வியந்தவன், பிறகு தன் குதிரையிலிருந்து கீழே இறங்கிக் கோட்டை வாயிலை நோக்கி நடக்கலானான். குதிரையும் ஒட்டகமும் மற்ற இருவரும் அவனைப் பின் தொடர்ந்தார்கள். காவல் வீரர்களின் பார்வை யூசப்கானின் மீது பதிந்தது. அவர்களில் தலைவனாகத் தோன்றியவன் வியாபாரியின் அருகே வந்தான். “தங்களைப் பார்த்தால் அயல்நாட்டவரைப் போலத் தோன்றுகிறதே! எங்கிருந்து வருகிறீர்கள்?” என்று கேட்டான்.

யூசப்கான் தன் வேஷத்துக்கு ஏற்றபடி காவல் வீரனுக்குச் சலாமிட்டு, “நான் அரேபியாவிலிருந்து வருகிறேன். தரை மார்க்கமாகவே பல நாடு நகரங்களையும் பார்த்துக் கொண்டு வரும் போது சிறப்பு மிக்க உங்கள் நாட்டைப் பற்றியும் கேள்விப் பட்டேன்_” என்றான்.

“அந்நிய நாட்டவர்கள் அனைவரையுமே எங்கள் நண்பர்களாக, விருந்தினர்களாக வரவேற்கும்படி கட்டளை பிறப்பித்திருக்கிறார் எங்கள் மன்னர். ஐந்தாவது கோட்டை வாசல் அதிகாரியிடம் உங்களை அறிமுகப்படுத்திக் கொண்டால் அவர் உங்களுக்கு ஏற்ற வசதிகள் செய்து தருவார்” என்றார் காவல் அதிகாரி.

யூசப்கானின் விழிகள் வியப்பால் விரிந்தன. “இதைப் போன்று இன்னும் உள்ளே நான்கு கோட்டைகள் உள்ளனவா?” என்று கேட்டான்.

“நான்கல்ல, இன்னும் ஆறு கோட்டைகள் இருக்கின்றன. ஏழு கோட்டைகளைக் கொண்டது எங்கள் நகரம். ஏழாவது கோட்டையில்

தான் மன்னரின் அரண்மனை. உங்களைப் போன்ற அயல்நாட்டு வியாபாரிகளும் யாத்ரீகர்களும் தங்குவதற்காகவே ஐந்தாவது கோட்டையினுள் சகல வசதிகளும் கொண்ட ஒரு விசேஷ விடுதி உள்ளது'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டான் அந்த வீரன்.

'ஏழு கோட்டைகள் சூழ்ந்த நகரம் என்றால் இதன் விஸ்தீரணம் என்னவாக இருக்கும்?' என்று சிந்தித்தவாறே குதிரை மீதேறினான் யூசப்கான். பாவம்! அவனது கற்பனைக்கு அப்பாற்பட்டதாக அமைந்திருந்தது அந்த அற்புத நகரம். அதன் சுற்றளவு அறுபது கல் என்பது அவனுக்குத் தெரியாது. வெளிக் கோட்டைச் சுவரிலிருந்து வடக்கு வாயிலுக்கும் தெற்கு வாயிலுக்கும் இடைப்பட்ட நீளம் எட்டுக் கல்லாகும். மேற்கு - கிழக்கு வாயில்களுக்கு இடையில் உள்ள தூரமும் ஏறக்குறைய இதுவேதான்.

முதல் கோட்டையைத் தாண்டிச் சென்ற யூசப்கானைக் கழனிகளில் துள்ளும் கயல்கள் கவர்ந்தன. துங்கபத்திரையாற்று நீரின் பாசனத்தில் பயிர்கள் பச்சைக் கம்பளமாகப் பரந்திருந்தன. முதல் கோட்டைக்கும் இரண்டாவது கோட்டைக்கும் இடையில் விஜயநகர சாம்ராஜ்யத்தின் வனப்பமிக்க விளைநிலங்கள்தான் இருந்தன. நாட்டின் உயிர் நாடியான உணவு தானியங்களின் உற்பத்தியில் மன்னர் கொண்டிருந்த அக்கறையையும் மண்ணைப் பொன்னாக்கும் வல்லமை கொண்ட மக்களின் உழைப்பின் உயர்வையும் விளக்கும் வகையில் பயிர்கள் ஆனந்தமாக அசைந்தாடி நின்று 'இங்கு பஞ்சமோ பட்டினியோ கிடையாது' என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன. இரண்டாவது கோட்டையைத் தாண்டிய போது பழ மரங்களைக் கொண்ட பசுஞ்சோலைகளும், பூந்தோட்டங்களும் அவற்றைப் பராமரிப்போரின் இல்லங்களுமாகக் காட்சியளித்தன. மூன்றாவது கோட்டைச் சுவர் வரை இந்தக் குளுமையான காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தவனுக்கு அதைத் தாண்டியதும், அவன் நாடி வந்த செய்திகளைத் தாங்கி நின்ற காட்சிகள் தோன்றலாயின. மூன்றாவது கோட்டைக்கும் நான்காவது கோட்டைக்கும் இடைப்பட்ட பகுதியில் தான் விஜயநகரத்துப் படை வீரர்களின் இல்லங்கள் பாங்குடன் இடம் பெற்றிருந்தன. ஆங்காங்கே குதிரைகள் மர நிழலில் கும்பல் கும்பலாக நிறுத்தப்பட்டிருந்தன. வீரர்கள் போர் விளையாட்டுக்களில் பயிற்சி எடுத்துக் கொண்டிருந்தார்கள். திரும்பிய பக்கமெல்லாம், கண்ணுக்கு எட்டிய தூரம் வரை குதிரைகளும், யானைகளும், வீரர்களுமாகத்தான் காட்சியளித்தது கோட்டையின் அந்தப் பகுதி.

வில்லை வளைத்து வல்லமை காட்டு வோரையும். வெற்றி வாகை சூட வேலை வீசி நிற்போரையும். வாளைச் சுழற்றும் காளையரையும் கண்ட யூசப்கான் தன் ஆவலை அடக்கிக் கொண்டான். எதையும் வியப்போடு பார்த்து வந்த அவனை இது வரை அந்நிய நாட்டினன் என்பதனால் எவரும் சந்தேகக் கண்கொண்டு நோக்கவில்லை. அந்தப் போர்வைக்குள் இருந்தபடியே தனது காரியங்களைச் சாதித்துக் கொள்ள விரும்பிய அவன் போர்ப் படைகளுள்ள கோட்டையின் இந்தப் பகுதியில் அதிக அக்கறை காட்டி நிற்பது சந்தேகத்தை வளர்க்கும் என்று அவசரமாக அந்தக் கோட்டையைக் கடந்து அடுத்த கோட்டைக்குள் புகுந்தான்.

விஜயநகரத்தின் குடிமக்கள் வாழும் பகுதி நான்காவது கோட்டையை அடுத்துள்ள இடைவெளியில்தான் இருந்தது. நகரின் நாகரிகத்தை வளர்க்கும் நானாவிதமான ஜனங்களும் இந்தப் பகுதியில்தான் வசித்து வந்தார்கள். அழகான, அமைப்பான மாட மாளிகைகளையும், குடியிருப்புக்களையும் கோயில்களையும் கொண்ட பகுதி இது. நகரமாந்தரின் மகிழ்ச்சிபூத்த மந்தகாசமான முகங்களையும், பல வண்ண ஆடை அணிந்த ஆரணங்கு களையும் அவர்கள் அணிந்துள்ள ஆபரணங்களின் மேன்மை யையும் பார்த்துக் கொண்டே ஐந்தாவது கோட்டையை அடைந்தான் யூசப்கான். அந்தக் கோட்டையை அடுத்த பகுதியில்தான் விசாலமான கடைத் தெருக்களும், வளமுற்று வாழும் வணிகப் பெருமக்களின் இல்லங்களும், இன்னும் பல விதமான கைத் தொழில்களால் கலை வளர்க்கும் கைவிளைஞர் களின் இல்லங்களும் இடம் பெற்றிருந்தன. யூசப்கானின் வேஷத்துக்கு உரிய பகுதி அதுதான். ஒட்டகத்தையும் எதையும் உற்று நோக்கி ஆராயும் பார்வையையும் பார்த்த உடனேயே கோட்டையின் பாராக்காரன், யூசப்கானை அயல்நாட்டு வியாபாரி என்பதைப் புரிந்து கொண்டு அன்போடு வரவேற்ற உபசாணையுடன் விருந்தினர் விடுதிக்கு அழைத்துச் சென்று அவனுடைய தேவைகளைக் கவனிக்கும்படி அதன் நிர்வாகியிடம் கூறி விடைபெற்றுக் கொண்டான். பாரத மக்களின் விருந்தோம்பும் பண்பாட்டைக் கண்டு விரோதியாக வந்து புகுந்துள்ள யூசப்கானே வியந்து போனான்.

விடுதியிலே அவனைப் போலப் பல வியாபாரிகளும், வழிப்போக்கர்களும் தங்கி இருந்தார்கள். அவரவர்களின் தகுதிக்கு ஏற்றபடி இல்லங்கள் அமைந்திருந்தன. விடுதியின் பின்புறத்திலே

குதிரை, ஒட்டகம் முதலியவைகளைப் பாதுகாத்துப் பராமரிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

அயல்நாட்டு வியாபாரிகள் தங்கும் அந்த விடுதிக்குச் சென்ற யூசப்கான் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் குதூகலமான தோற்றத்துடன் வெளியில் வந்தான். பகட்டான ஆடையணிந்து உல்லாச புருஷனாக விளங்கினான் அவன். பொற்காசுகள் கொண்ட மூட்டைகளைத் தோளில் முன்னும் பின்னுமாகத் தொங்கும்படி போட்டுக் கொண்டு அவனுடன் வந்த அவ்விரு வரும் தயாராக நின்று கொண்டிருந்தார்கள். கால்நடையாகவே கடைவீதியின் அழகைக் காணக் கிளம்பினான். அவன் பார்வை ஒவ்வொன்றையும் இதயத்தில் படமாக்கிப் பதித்துக் கொண்டிருந்தது.

யூசப்கான் கடைத் தெருவின் கம்பீரமான தோற்றத்தையும் அமைப்பையும் அழகையும் கண்டு வியப்பெய்தினான். நான்கு ரதங்கள் ஏககாலத்தில் வரிசையாகப் போகும் அளவுக்கு அத்தனை விசாலமான வீதியின் இருமருங்கிலும் அங்காடிகள் ஒன்றையொன்று எதிர்நோக்கி அமைந்திருந்தன. இப்படி நான்கு பெரிய கடைத் தெருக்கள் அந்த நகரத்தைச் சூழ்ந்திருந்தன. இந்தக் கடை வீதிகளின் இருமருங்கிலும் அழகுக்காகவும் நிழலுக்காகவும் ஆங்காங்கே அடர்ந்து குடை போல விரிந்து பரந்து நிற்கும் மரங்கள் பயிரிடப்பட்டிருந்தன.

கடைத் தெருவிலே பொருள்களைக் கொண்டு குவித்திருந்த முறை அவை பெரியதொரு பண்டகசாலை என்ற எண்ணத்தையே உண்டாக்கிக் கொண்டிருந்தது. விளை பொருள்களை விற்கும் பகுதி, கலைப் பொருள்களைக் கொண்ட பகுதி என்று கடைவீதியில் ஒவ்வொரு பொருளுக்கும் தனித்தனியே இடம் ஒதுக்கி இருந்தார்கள். நவரத்தினக் கடைகள், பொன் நகைக் கடைகள், பொன்னும் மணியும் கொண்டு செய்யப்பட்ட ஆபரணங்களை அழகுபடத் தரும் அங்காடிகள். இவைகளைக் கண்ட யூசப்கானுக்கு மலைப்பாக இருந்தது. 'இந்தச் செல்வம் கொழிக்கும் நகரத்தில் நாம் எதை வாங்குவது, எதை விற்பது? நம்முடைய வேஷத்துக்கு ஏற்ற வேலை இருக்காது போலிருக்கிறதே' என்று கலங்கலானான். நல் முத்துக்களை மரக்காலால் அளந்து கொண்டிருந்தார்கள் ஒரு வீதியிலே. இரும்பு, செம்பு, ஈயம் ஆகிய உலோகப் பொருட்களைக் கொண்ட கடைகளைத் தாண்டி வந்தபோது தந்தத்தினாலும், மரம், வெள்ளி, வெண்கலம்

ஆகியவைகளாலும் ஆன பலவகைப் பொருள்களின் நேர்த்தியையும் உறுதியையும் வேலைப் பாட்டை யும் கண்டு வியந்தபடியே வந்தான் யூசப்கான். நறுமணங்களைத் தரும் அகில் சந்தனம், குங்கிலியம் போன்ற வாசனைப் பொருள்களை விற்கும் கடைகள் அவனைக் கவர்ந்தன. ஒரு பக்கத்திலே ரோஜா மலர் மலைபோல் குவிக்கப்பட்டிருந்தது. மல்லிகை, முல்லை, சாமந்தி முதலிய பலவிதமான வண்ணங் களையும் மணங்களையும் கொண்ட மலர்கள் ராஜாவாக விளங்கியது. விஜயநகரத்தில் அரசர் முதல் ஆண்டி வரை தினந்தோறும் ரோஜா மலர்களையே அதிகமாகப் பயன்படுத்தி வருகிறார்கள் என்று அறிந்து கொண்டான். இதைக் கருவிகளைக் கொண்ட கடைகளையும் கூல வாணிபத்தைக் கொண்ட வீதிகளை யும் கடந்து பட்டாடையும், பருத்தியாடையும் விற்பனை செய்யும் பகுதிக்கு வந்தான்.

சீனத்துப் பட்டிலே சிங்கார வேலைப்பாடுகளைக் கொண்ட அமைப்பானதொரு அங்கிகளை விலை பேசி வாங்கிக் கொண்டபோது வீதியிலே மக்களின் பரபரப்பான பீதி நிறைந்த குரல் கேட்டு வியப்புடன் திரும்பினான். இரண்டு குதிரைகள் பூட்டிய அழகான ரதமொன்று சூறாவளியைப் போலச் சாரதியின் கட்டுப்பாட்டுக்கு அடங்காமல் கடிவாளத்தை அறுத்துக் கொண்டு ஓடி வந்து கொண்டிருந்தது. வெறி கொண்ட குதிரைகள் இரண்டும் தறி கெட்டு நிலமதிர வீதியிலிருப்போர் பயந்து விலகி ஓடும்படியாக ரதத்தை இழுத்துக் கொண்டு வந்தன. ரதத்தின் சாரதி ஒரு பெண். ரதத்திலே இருந்ததும் மற்றொரு பெண். இடியும் மின்னலும் போல வரும் அந்தக் குதிரைகளை இழுத்துப் பிடித்து அடக்கி நிறுத்த யாருக்கும் துணிவு பிறக்கவில்லை. ரதத்திலே பெண்கள் இருக்கிறார்கள் என்பதை அறிந்த உடனேயே யூசப்கான் தன்னைத் தாண்டிச் சென்று விட்ட அதை நோக்கிப் பாய்ந்தோடினான். குதிரைகளின் ஓட்டத்துக்கு ஈடு கொடுத்துச் சிறிய தூரம் அதன் உடலோடு உரசியபடியே ஓடியவன் தாவிப் பாய்ந்து, அவற்றின் தலைக் கயிற்றைப் பற்றினான். நிலை தடுமாறி அலைக்கழிந்து விழச் செய்தன குதிரைகளின் வேகமும் வெறியும். அவற்றின் கால்களுக்கிடையே மிதிபட்டுத் துவைக்கப்படப் போகிறான் என்று எல்லோரும் தவிப்புடன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே தன் பிடியை விடாது குதிரையின் முதுகில் தாவி ஏறி அமர்ந்து கொண்டபோது, மக்கள் சந்தோஷ ஆரவாரமிட்டுத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். குதிரைகளின் பிடரியைப்

பற்றி அதன்மீது படித்தபடி கடிவாளத்தையும் கைக்கொண்டு, அதை இழுத்துப் பிடித்து ஒரு நிலைக்குக் கொண்டு வந்து நிறுத்தினான். நுரை தள்ள வெறி அடங்கி நிற்கும் குதிரைகளைத் தட்டிக் கொடுத்துச் சமாதானப்படுத்திய பின்பே கீழிறங்கினான். அதற்குள் கடைத் தெருவிலிருந்த மக்கள் கூட்டம் வந்து ரதத்தைச் சூழ்ந்து கொண்டது. அவர்களை விலக்கிக் கொண்டு வீரர்களும் ஓடிவந்தார்கள்.

ரதத்திலிருந்தவர்களைப் பார்த்தான் யூசப்கான். ஐம்பது வயதைக் கடந்த மூதாட்டியின் அருகிலே இருபது வயது கூட ஆகாத கன்னிப் பெண். அவள்தான் அந்த ரதத்தை ஓட்டி வந்தவளாக இருக்க வேண்டும். பயத்தினால் அவர்கள் உடலில் படபடப்புக் காணப்பட்டாலும் உறுதி குலையாதிருந்தார்கள் அவ்விருவரும். நிலைமையைச் சீர்திருத்தி நின்ற குதிரை வீரர்களிடம் அந்த மூதாட்டி கூறியதை அவர்களில் ஒருவன் அராபிய மொழியிலே மொழிபெயர்த்து யூசப்கானிடம் தெரிவித்தான்.

"வெறி கொண்ட குதிரையை அடக்கி நிறுத்தி ஆபத்தைத் தவிர்த்த தங்கள் தீரத்தைப் பாராட்டித் தங்களுக்குத் தம் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறார் மகாராணியார்" என்றான் வீரன்.

முறுவல் பூத்த மூதாட்டியின் முகத்தைப் பார்த்தவாறே இடையை வளைத்துச் சலாம் செய்த யூசப்கான் கடிவாளத்தைக் கன்னியின் கையில் கொடுத்து விட்டு ஒதுங்கிக் கொண்டான். குதிரை வீரன் பின் தொடர ரதம் நகர்ந்தது. கூடியிருந்தோரின் காட்சிப் பொருளாக நின்று கொண்டிருந்த யூசப்கானின் கவனமோ போகும் ரதத்தைத் தொடர்ந்து ஓடிக் கொண்டிருந்தது. அந்த ரதத்தின் பின்னாகவே அவனது மனோரதமும் ஓடிற்று.

விஜய நகரத்துக் கடை வீதியிலுள்ளோரின் கவனத்தைக் கவர்ந்து விட்ட யூசப்கானுக்கு இப்போது திரும்பிய பக்கமெல்லாம் வரவேற்புக் கிடைத்தது. செல்வங் கொழிக்கும் அந்த நகரத்தின் சிறப்புமிக்க பகுதிகளைத் தொடர்ந்து சுற்றி வரலானான். அரசியார் ஏறிவந்த ரதத்தின் குதிரைகளை அடக்கி நிறுத்திய அருஞ் செயலைப் பற்றிய செய்தியெங்கும் பரவி விடவே அவனை மதிப்போடும் மரியாதையோடும் வரவேற்று உபசரித்தார்கள். அவன் அறிந்து கொள்ள விரும்பி ஆர்வங் காட்டியவற்றைப் பற்றி யெல்லாம் விவரமாக விளக்கினார்கள். இந்த நிலை பல புதிய விஷயங்களை அறிந்து கொள்ளுவதற்கு அனுகூலமாக இருந்தது அவனுக்கு.

பாமினி சுல்தான்களின் போர்த் திட்டத்தை அறிந்து எந்த நிமிடமும் அதை எதிர்பார்த்தே இருக்கிறது இந்து சாம்ராஜ்யம் என்ற உண்மையைத் தெரிந்து கொள்ள அதிக சிரமமிருக்க வில்லை யூசப்கானுக்கு. பொன்னும் பொருளும் கொழிக்கும் அங்காடிகளைக் கொண்ட ஐந்தாவது கோட்டையை அடுத்து ஆறாவது கோட்டை யினுள் அமைச்சர் மண்டலத் தலைவர், பிரபுக்கள், தானாதிபதி, சேனாதிபதி, அரசாங்க அலுவலாளர், அவைப் புலவர்கள், நடனமாதர், கலைமகளிர், கலைஞர்கள் ஆகிய பெருங்குடி மக்கள் வதியும் மாடமாளிகைகளையும் கூடகோபுரங்களையும் கண்டு களித்த பின் கால் ஓய்ந்து போய்த் தனது விடுதிக்குத் திரும்பி யூசப்கானுக்கு அங்கே வியத்தகு செய்தி யொன்று காத்திருந்தது. விஜயநகரத்து அரண்மனை அதிகாரி ஒருவர் - யூசப்கானின் வருகைக்காகக் காத்திருந்தவர் - அவனைக் கண்டதும் ஆர்வமுடன் அருகில் வந்து அவன் உடனே தன்னுடன் கிளம்பி வர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். ஆறாவது கோட்டையினுள் இருக்கும் விசேஷ விருந்தினர் மாளிகை யில் அவன் தங்குவதற்கான வசதிகளைச் செய்து கொடுக்குமாறு மகாமண்டலேசுவரர் ராமராயர் உத்தரவிட்டி ருப்பதாகவும், மறுநாள் காலை அவனை காண ஆவலோடிருப்ப தாகவும் தெரிவித்து நின்றார் அதிகாரி. அப்போதிருந்த யூசப்கானின் மனோநிலையை விவரிக்க வார்த்தைகளால் ஆகாது. அரண்மனைக்குள் போவது எப்படி என்பதைப் பற்றிக் குழம்பிக் கொண்டிருந்தவனுக்கு இப்படி அரண்மனையிலிருந்தே ஓர் அழைப்பு வருவதென்றால்? எத்தனை வேகமாக, தனக்குச் சாதகமாகக் காரியங்கள் நடைபெறுகின்றன என்று எண்ணி வியந்த போதே, இதன் முடிவு அபாயத்தின் எல்லையாக இருக்குமோ என்று தயங்கித் தவிக்கவும் செய்தது மனம்.

## 20

# புதிர் மங்கை

**அ**ரண்மனை போன்ற விசேஷ விருந்தினர் விடுதியில் யூசப்கானைக் கொண்டு சேர்த்து விட்டு மறுநாள் காலை வருவதாக விடை பெற்றுக் கொண்டார் அதிகாரி. அன்று இரவு யூசப்கான்

தூங்கவே இல்லை. அவன் கண்ட விஜயநகரத்தின் வளப்பமிக்க காட்சிகளைத் தான் சிந்தனை அசை போட்டுக் கொண்டிருந்தது. மறுநாள் அரண்மனைக்குள் நுழையப் போகிறோம் என்ற ஆனந்தத் தவிப்போடு, அங்கு தன் வேஷத்துக்கு ஏற்ப எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி உள்ளத்தினுள்ளேயே ஒத்திகை பார்த்துக் கொள்ளலானான். சந்தேகம் தோன்றாதபடி, சரளமாக, சாதுரியமாக எப்படிப் பேசிப் பழக வேண்டும் என்றெல்லாம் திட்டமிட்டுக் கொண்டான். வியாபாரியின் வேஷத்துக்கு ஏற்ப வக்கணையாகப் பொருள்களைக் கொண்டு செல்ல வேலைப்பாடமைந்த இரண்டு பேழைகளைத் தயார் செய்தான். போர்ச்சுகீசியக் கப்பல் அதிகாரியும் துறைமுக அதிகாரியும் அவனைப் பாராட்டிப் பரிசாக அளித்த பொருள்களில், ஐரோப்பிய நாகரிகத்தின் மேன்மையை விளக்கும் விலை மதிப்பற்ற வேலைப்பாடமைந்த ஆபரணங்கள் சில இருந்தன. அவற்றையும் கோல்கொண்டாவின் குதப்ஷா தம் பொக்கிஷத்திலிருந்து அள்ளிக் கொடுத்திருந்தத அணி மணிகளுடன் ஒழுங்குபடுத்தி வைத்துக் கொண்டான். விடியும் நேரத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கும் தன் துடிப்பை நினைத்த போது அவனுக்கே சிரிப்பு வந்தது. போர்க்களத்திலே, வாள் முனையிலே வீரத்தை விலை பேச வேண்டிய தான், கம்பளத்தை விரித்துக் கடை பரப்பி அதன் மீது, வைர நகைகளை வரிசைப் படுத்தி வாய்ச் சொல் வீரம் பேசும் வியாபாரியாகத் தன்னை மாற்றியுள்ள சூழ்நிலையை எண்ணிய போது சிரிப்பாகத்தான் இருந்தது.

சொல்லிச் சென்றபடியே மறுநாள் குறிப்பிட்ட நேரத்தில் பல்லக்குகள் விடுதியின் முன் வந்து நின்றன. யூசப்கானை அழைத்துச் செல்ல அதிகாரி வந்து விட்டார். அவனுக்கான பல்லக்கிலே அவன் ஏறிக் கொள்ள அதிகாரி தமது சிவிகையில் அமர்ந்தார். வீரர்கள் முன்னும் பின்னும் அணிவகுத்துச் செல்லப் பல்லக்குகள் விஜயநகரத்தின் நடுநாயகமாக விளங்கிய அரண்மனைகள் சூழ்ந்த ஏழாவது கோட்டையை நோக்கிக் கிளம்பின.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் பல்லக்கிலிருந்து கீழிறங்கி நடக்கலானார்கள். கனவுலகிலே வரும் ஏதோ ஒரு மாய உலகத்துக்குள் போவது போல் இருந்தது யூசப்கானுக்கு. கருங்கற்களால் ஆன கூடங்களையும், வெண்கலத்தாலும் வெள்ளியாலும், பொன்னாலும் போர்த்திய தூண்களையும் சுவர்களையும் - கொண்ட

மண்டபங்களையும் வளைவுகளையும் கடந்து வந்தவன் இப்போது தந்தத்தினால் ஆன அறையின் அருகே வந்தான். அந்தப் பெரிய விஸ்தாரமான கூடத்தின் தூண்கள் சுவர்கள், கூரை எல்லாமே தந்தத்தினால் அமைந் திருந்தன. அதன் நடுவே உயர்ந்த தோர் ஆசனத்திலே அந்தக் கூடத்தின் கம்பீரத்துக்கே உரியவராக உட்கார்ந்திருந்தார் மகாமண்டலேசுவரர். யாருடைய பெயரால் பாமினி சுல்தான்களின் நெஞ்சும் நினைவும் நெருப்பாகிப் போகிறதோ அந்த ராமராயரைக் கண்டான் யூசப்கான். வெறுப்பையும் விரோதத்தையும் வளர்த்துக் கொண்டு வேவு பார்ப்பதற்காக வந்திருக்கும் அவனது உள்ளத்திலும் அந்த உருவம் ஒரு மதிப்பையும் மரியாதையையும் ஏற்படுத்தியது. முதுமையிலே இளமை கலந்து விளங்கும் அவரது உடற்கட்டையும் உருவப் பொலிவையும் கண்டு வியப்பெய்திப் போய் நின்று கொண்டிருந்தான். யூசப்கான். திறந்து கிடந்த அவரது பரந்த மார்பிலே வைர வடம் ஒன்று மின்னிக் கொண்டிருந்தது.

அந்தரங்கத்தை யெல்லாம் ஆராயும் ஆற்றல் படைத்த ராமராயரின் காந்தப் பார்வையைத் தாங்க முடியாமல் ஒரு கணம் கலகலத்துப் போய் விட்டான் யூசப்கான். உடனே சுதாரித்துக் கொண்டு திட்டமிட்டிருந்தபடி வெகு வேகமாகச் செயல்பட லானான். வியப்பையும் திகைப்பையும் உதறி விட்டு மந்தஹாஸம் மலர்ந்த முகத்துடன் ஒயிலாக இடுப்பை வளைத்துத் தலையைத் தாழ்த்தித் தன் நாட்டு வழக்கப்படி சலாம் செய்து நிமிர்ந்தான்.

“நேற்று கடை வீதியிலே சாகஸம் விளைத்தது தாங்கள்தானே?” சரளமான அராபிய மொழியிலேயே பேசினார் அரவீட்டு முதல்வர். முஸ்லிம் இனத்தவர்களுடன் பல வருடங்கள் நெருங்கிப் பழகியதனால் அது கைவந்த கலை அவருக்கு.

“சிறு செயல்! அதை இவ்வளவு பெரிதாக்கி என்னைக் கௌரவிப்பதைக் கூச்சமுடன் தான் ஏற்றுக் கொள்ள வேண்டி இருக்கிறது” என்றான் யூசப்கான் அடக்கமுடன்.

ராமராயரின் முகத்தில் இளநகை தோன்றியது. “தாங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்? என்ன வியாபாரம்...?”

“என்னைப் பற்றிக் கூற வேண்டுமானால் வியாபாரி என்பதைவிடப் பல நாடுகளைக் காண வேண்டும் என்ற ஆசையால் பாரசீகத்திலிருந்து கிளம்பிய யாத்ரீகன் என்று சொல்வதே

பொருத்தமாக இருக்கும். எங்கள் நாட்டுக் குதிரைகளை ஏராளமாக வாங்கும் இந்திய நாட்டை - அதிலும் இந்த இந்து சாம்ராஜ்யத்தைக் காண வேண்டுமென்று வெகுநாளாக ஆசை. அதன் விளைவே... இந்த என் வரவு!"

"தங்கள் தாய்நாட்டுக்காரரைக் காண வேண்டும் என்ற அவாவினால்தான் அந்தக் குதிரைகளும் அப்படி விரைந்தோடி வந்திருக்கின்றன போலும்" என்றார் ராமராயர் மெல்ல நகைத்த படி. "உங்களை வியாபாரி என்றுதான் என்னிடம் அறிவித்தார்கள்... ஆனால் தங்கள் தோற்றத்தையும் உடற்கட்டையும் தங்களுடைய செயலோடு ஒப்பிடும்போது தங்களைப் பண்பட்ட வீரராகத்தான் நினைக்கத் தோன்றுகிறது."

யூசப்கானுக்குச் சுருக்கென்றது. உடனே சட்டென்று "தங்கள் பாராட்டுக்கு அருகதையற்றவன் நான். ஊர் சுற்றுவது எனக்கு உவப்பானாலும் வியாபாரியாகத்தான் வாழ்க்கை நடத்துகிறேன். போகுமிடங்களில் கிடைக்கும் அபூர்வமான பொருள்களைச் சேகரிப்பதே எனது ஆர்வமிக்க தொழில். அதுவும் பொன்னும் மணியும் கொண்டு ஆக்கப்பட்ட ஆபரணங்களிலே அக்கறை கொண்டவன். இதோ எனது சேகரிப்புக்களில் சிலவற்றைச் சமூகத் தின் பார்வைக்கு..." என்று கூறித் திரும்பியதும் யூசப்கானோடு வந்திருந்தவரில் ஒருவன் ஓர் உயர்ந்த வேலைப்பாடமைந்த ரத்தின கம்பளத்தை விரித்துக் கடை பரப்பத் தயாரானான்.

அப்போது ராமராயரைக் காண வேறு சிலர் உள்ளே நுழைந்தார்கள். அவர்களின் வரவினாலோ அல்லது சுபாவமாகத்தானோ ராமராயர், "தங்கள் வியாபாரப் பொருள்களை இங்கு நான் காண்பதைவிட, அந்தப்புரத்தில் அரசியாரின் பார்வைக்கு அவற்றை விருந்தாக்குவதே பொருத்தமாக இருக்கும். தவிர நேற்று ரதத்தை நிறுத்திப் பேரபாயத்திலிருந்து காப்பற்றிய உங்களை மறுபடி காண வேண்டுமென்று கூறி இருந்தார்கள். ஆகவே" என்று கூறி அருகிலிருந்தவரிடம், "இந்த அராபிய வைர வியாபாரியைத் தேவியாரின் அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்" என்று கட்டளை பிறப்பித்து விட்டு யூசப்கானை நோக்கி "தங்கள் பெயர் என்ன வென்று கூறவில்லையே!" என்றார்.

"என் பெயர் காசிம்கான்" என்றான் யூசப்.

"நீங்கள் போகலாம். பிறகு சந்திப்போம்" என்று விடைகொடுத்து விட்டுக் காத்திருந்த அரசாங்க அலுவலில் மூழ்கிப் போனார் அரவீட்டு முதல்வர்.

விரித்த கம்பளத்தைச் சுருட்டிக் கொண்ட அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்லும் அதிகாரியைப் பின்தொடர்ந்தான் யூசப்கான். அந்தப்புரத்தின் காவலாளியான வாளேந்திய வேல்விழியாளிடம் தாம் வந்திருக்கும் காரியத்தைத் தெரிவித்தார் அதிகாரி. அதைக் கொண்டு உள்ளே ஓடினாள் மற்றொரு காவல் நங்கை. பளிங்கு மண்டபத்தின் அழகிலே தன் மனத்தைப் பறிகொடுத்துப் போய் நின்றிருந்தான் யூசப்கான். சற்று நேரத்துக்கெல்லாம் அவனை அழைத்துச் செல்ல அழகிகள் இருவர் வந்தார்கள். அதிகாரி அந்த இடத்திலேயே விடைபெற்றுக் கொண்டார். யூசப்கான் அழகிகளைப் பின்தொடர்ந்து அந்தப்புரத்தினுள் நுழைந்தான். திரும்பிய பக்கமெல்லாம் இதயத்தைக் குளிர்விக்கும் இனிய காட்சிகள். வாசமிகு வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கின. செய்குன்றங்களிலிருந்து துங்கபத்திரை குதித்து நகைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். பளிங்கு மண்டபங்களையடுத்த பசுஞ் சோலைகளில் தென்றல் புகுந்து கீதமிசைத்துக் கொண்டிருந்தது. விசாலமான கூடங்களையும் நடன மண்டபங்களையும் பூஞ்சோலைகளையும் கடந்து போகும் போது ஆங்காங்கே எழுந்த நங்கையர்களின் நகையொலி அது அந்தப்புரமென்பதை நினைவுபடுத்திக் கொண்டிருந்தது.

ஆழமற்றுத் தெளிந்த நன்னீரைக் கொண்ட செய் குளங்களால் சூழப்பட்டதொரு பளிங்கு மண்டபத்துக்கு யூசப்கானை அழைத்துப் போனார்கள் அந்தப் பாவைகள். அதன் தூண்களிலே மலர்க் கொடிகள் படர்ந்து சுற்றிக் கொண்டிருந்தன. மண்டபத்தின் நடுவிலேயுள்ள மேடை மீது ராமராயரின் மூத்த மனைவியாரான திருமலாம்பா தேவியார் உட்கார்ந்திருந்தார்கள். பார்த்தவுடனேயே- முதல் நாள் ரதத்திலே பார்த்த மூதாட்டியார்தான் அவர்கள் என்பதைப் புரிந்து கொண்டான் யூசப்கான். இரண்டு அணங்குகள் பின்னாலிருந்து சாமரம் வீசிக் கொண்டிருந்தார்கள். அருகே அமர்ந்திருந்த ஒரு பெண் தாம்பூலம் மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவர்களைத் தவிர அங்கு வேறு யாருமில்லை.

யூசப்கானைக் கண்டதும் முறுவலித்துத் தலையசைத்து வரவேற்றார் தேவி திருமலாம்பா. முறைப்படி சலாமிட்டு நிமிர்ந்த

போது யூசப்கானின் பேழைகள் இரண்டையும் தாங்கி நின்ற பெண்கள் அவற்றைக் கீழே வைத்துவிட்டு அரசிக்கு வணங்கி வெளியேறிக் கொண்டிருந்தார்கள். அப்போதுதான் யூசப் கானுக்குத் தன்னுடன் வந்த உதவியாளர்கள் அந்தப்புரத்தின் வெளியிலேயே நிறுத்தப்பட்டு அவர்களிடமிருந்த பேழைகளை இந்தப் பணிப் பெண்கள் சுமந்து கொண்டு தன்னைத் தொடர்ந்து வந்திருக்கிறார்கள் என்று தெரிந்தது.

“நல்ல சமயத்திலே வந்து உதவிய உங்களுக்கு நடு வீதியில் நன்றி தெரிவித்ததோடு என் உள்ளம் திருப்திப்படவில்லை. ஆகவே தான்...” என் சுந்தரத் தெலுங்கிலே பேசிய தேவியாரின் மொழியைப் புரிந்து கொள்ள முடியாமல் விழித்தான் யூசப்கான். அப்போதுதான் திருமலாம்பா தேவிக்கும் தம் தவறு தெரிந்தது. தனக்கும் அந்த அந்நியனின் மொழியில் பரிச்சயம் கிடையாது என்பதை உணர்ந்ததும் சிரிப்புத்தான் வந்தது. உடனே இந்த நிலைமையைச் சமாளிக்கும் தகுதி வாய்ந்தவள் ஒருத்தி தன்னிடம் இருக்கிறாள் என்ற நினைவு வந்ததும், வெற்றிலை மடித்துக் கொண்டிருந்த பணிப் பெண்ணிடம், “உடனே ஓடிப் போய் ஆயிஷாவை அழைத்து வா” என்று உத்தரவிட்டாள்.

ஏதும் பேச முடியாமல், பேசியவற்றைப் புரிந்து கொள்ளவும் முடியாமல் தவிப்போடு நின்று கொண்டிருந்தான் யூசப் கான். அந்த ஒவ்வொரு விநாடியும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றியது அவனுக்கு. அப்போது இருட் குகையிலே ஒளி பரவுவதைப் போல, பாலைவனத்திடைப் பசுஞ் சோலை தோன்றியதைப் போல ஆயிஷா அங்கு வந்தாள். அந்தப்புரத்திலே அந்நிய ஆடவனை அதுவும் ஒரு முஸ்லிம் ஆண்மகனைக் கண்டதும் அந்த அழகியின் கைகள் தோள் மீது சரிந்து கிடந்த துகிலை எடுத்து மதிமுகத்தை மூடி மறைத்துக் கொண்டன. ஆனால் அந்த ஒளி முகத்தின் அழகை மூடி மறைக்கும் திராணியில்லாத துகில் அதை இன்னும் எடுப்பாக்கித்தான் காட்டியது. அவள் வரவால் அந்த மண்டபமே புதிய சோபை அடைந்தது போலிருந்தது யூசப் கானுக்கு. இந்துக்களின் அந்தப்புரத்திலே முஸ்லிம் அழகியைப் பார்த்த, அந்த இனக் கவர்ச்சியினால் மட்டுமே ஏற்பட்ட எண்ணமல்ல அது. ஆயிஷாவின் அதீதமான அழகே, ஒயிலான அவளது தோற்றமே அவனது திகைப்புக்குக் காரணமாக இருந்தது.

ஆயிஷாவைக் கண்ட திருமலாம்பாதேவி “பெண்ணே! உன் உதவியோடுதான் நான் இவரோடு உரையாடியாக வேண்டும். நேற்று

கட்டுக் கடங்காமல் ஓடிய ரதத்தை நிறுத்தியதாகக் கூறினேனே அது இவர்தான். உன் நாட்டவர்தானாம். வியாபாரி என்று கேள்விப்பட்டேன். என்ன வியாபாரம் என்று கேட்டு அவரைப் பற்றி இன்னும் ஏதாவது தகவல் உண்டானால் அறிந்து சொல்."

ஆயிஷாவோடு தேவியார் பேசிக் கொண்டிருந்தார். ஆனால் அவளோ அந்த வியாபாரியையே வைத்த கண் வாங்காமல் முகத்திரையினுள் இருந்தவாறு நோக்கிக் கொண்டிருந்தாள். அரசியாரின் வார்த்தைகளை மட்டும் காது வாங்கிக் கொண்டிருந்தது. விழிகளோ அந்த வியாபாரியைத் துளைத்துக் கொண்டிருந்தது. இத்தனை காலமும் இல்லாத ஏதோ ஒரு தவிப்பு. துடிப்பு. அவள் உடலெங்கும் பரவியது. தன் இனத்தவன் என்பதற்கும் மேலாக அவனால் தன் வாழ்வில் ஏதோ ஒரு மாற்றம். மலர்ச்சி ஏற்படப் போகிறது என்று அவளது உள்ளுணர்வு சொல்லியது.

விழிகளால் விழுங்கிக் கொண்டிருக்கும் அந்த ஏந்திழையாளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டு நின்றான் யூசப் கான். வேலையும் வாளையும், போரையும் தவிரப் பெண்களைப் பற்றியே எண்ணாதவனுக்கு ஆயிஷாவின் அழகு புதுமையாக இருந்தது.

அந்தப் பேச்சற்ற நிலை நீடிக்குமானால் விபரீதமாகிப் போகும் என்பதை உணர்ந்தவன் சட்டென்று பேசத் தொடங்கினான். "நான் பாரசீகத்திலிருந்து வருகிறேன். என்னை வியாபாரி என்பதை விட யாத்திரிகன் என்றே கூறலாம். என்னிடம் உள்ள சில அபூர்வமான அணிகளை அரசியாருக்குக் காட்ட வேண்டுமென்று ஆர்வமுடனிருந்த என்னை அரசர் இங்கு அனுப்பி வைத்தார்" என்று சொல்லிக் கம்பளத்தை விரித்துக் கடையைப் பரப்பலானான் யூசப்கான். துபாஷியாகப் பணியாற்ற வந்துள்ள ஆயிஷா அவன் கூறியவற்றை அரசியாருக்கு விளக்கினாள். இதற்குள் யூசப் கான் மின்னல் ஒளிக் கற்றைகளை ஒன்றாகச் சேர்த்து வைத்தது போன்ற வைர நகைகளையும், தீப்பிழம்பாக ஜ்வலிக்கும் ரத்தினங்களையும், பசும்புல் தரையின் செழுமையோடு கூடிய மரகதக் கற்களையும், வானத்தின் வண்ணத்தை நினைவூட்டும் நீலக் கற்களையும் கொண்டு ஆக்கப்பட்ட எண்ணிறந்த ஆபரணங்களை எடுத்துக் காட்சிப் பொருளாக்கினான். அழகிலும் அமைப்பிலும் ஒன்றை ஒன்று மிஞ்சுவதாக இருந்தன. ஒவ்வொன்றைப் பற்றியும் அவன் கூறிய

விளக்கங்களைத் திருமலாம்பா தேவிக்கு ஆயிஷா தன் குயிலினும் இனிய குரலில் மொழிபெயர்த்துக் கூறிக் கொண் டிருந்தாள். அதே போலத் தேவியாரின் வார்த்தைகளை அராபிய மொழியாக்கி அவனிடம் கூறிக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் உள்ளமெல்லாம், உணர்வெல்லாம், பார்வையெல்லாம் அந்தப் புதியவனை எடை போட்டுக் கொண்டிருந்தது.

யூசப் கான் விரித்த கம்பளத்தில் உட்கார்ந்தபடி விலைமதிப்பற்ற பொருள்களை வரிசைப்படுத்துவதற்குச் சாதக மாகத் தன் உடைவாளை எடுத்துப் பக்கத்தில் வைத்திருந்தான். நகைகளை ஒவ்வொன்றாக எடுத்து அதன் அழகைப் பருகிப் பின் அரசியாரிடம் கொடுத்து வந்த ஆயிஷாவின் முகத்திலே மெல்ல மெல்ல ஒரு புதிய சோபை மலரலாயிற்று. பொருள் பொதிந்த பார்வையால் வியாபாரியை நோக்கலானாள். அப்போது கம்பளத்தின் மீதிருந்த அவனது உடைவாளை - அது காட்சிப் பொருளில்லாது போனாலும் - தற்செயலாக எடுத்துப் பார்த்த போது அவள் கண்கள் மின்னின. எதையோ புரிந்து கொண்டவளைப் போலப் புன்னகை செய்தாள். அவனது உருவத்தை உற்று நோக்கியபோது அது உறுதிப்பட்டது.

ஆயிஷாவின் அற்புத அழகிலே, அங்க அமைப்பிலே, பேசும் குரலிலே, வீசும் பார்வையிலே, தன்னையே, தன் உணர்வுகளையே பறிகொடுத்தவனாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தான் யூசப் கான். திருமலாம்பா தேவியாருக்காகவே அவனது சொல்லும் செயலும் இருந்தாலும் அவற்றைத் துபாஷியாக விளங்கிய ஆயிஷாதான் ஏற்க வேண்டி இருந்தது. ஆகவே அவன் ஆயிஷாவின் மீது பதித்த பார்வையை விலக்க மனமில்லாதவனாக அவளது அழகு என்ற மந்திரத்தால் கட்டுண்டு கிடந்தான். அதனால் அவள் பார்வையிலே சிரிப்பிலே தோன்றிய மாறுதலை அவன் உணரவில்லை.

நகைகளை யெல்லாம் பார்வையிட்ட தேவியார் அற்புத வேலைப்பாடமைந்த ஒரு வைர மாலையைக் குறிப்பிட்டு அதன் விலை என்ன என்று கேட்கும்படி ஆயிஷாவிடம் கூறினாள்.

"ஐயா, வைர வியாபாரியாரே! வைத்த கண் வாங்காமல் என்னையே பார்த்துக் கொண்டிருந்தால் தாங்கள் வந்த காரியமும் வியாபாரமும் என்ன ஆவது? அரசியாருக்கு இதன் விலையைக் கூறுங்கள்!" என்று கூறி அவனைத் தன் நிலைக்குக் கொண்டு வந்தாள்.

ஆயிஷா குறிப்பிட்ட ஆபரணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, "இது விலை மதிப்பற்றது. இதை விற்பதற்கில்லை. ஆனால் அரசியாருக்கு இதை எனது காணிக்கையாகவே கொடுக்க விரும்புகிறேன். ஏற்றுக் கொள்ளச் சொல்லுங்கள்" என்று கூறி அதை ஆயிஷாவிடம் நீட்டினான். அவளுக்கே இதைக் காணிக்கையாகச் செலுத்துபவனைப் போல..

அவனிடமிருந்து அந்த அணியைப் பெற்றுக்கொண்ட ஆயிஷா விஷமப் பார்வையுடன், "தங்கள் செயலைப் பார்த்தால் உங்களை வியாபாரியாக மதிக்கத் தோன்றவில்லையே" என்றாள்.

"ஏன்? இந்த வைர மாலையைப் பொருள். பெறாமல் தருகிறேனென்றா? பெரிய லாபங்களை எதிர் பார்க்கும் வியாபாரிகள் சிறிய நஷ்டங்களைப் பொருட்படுத்த மாட்டார்கள்" என்றான் யூசப்கான்.

"அப்படியானால் ஏதோ பெரிய லாபத்தை எதிர்பார்த்துத் தான் இங்கு வந்திருக்கிறீர்கள் என்று தெரிகிறது" - குறும்பாகச் சிரித்தாள் குமரி.

"அது வியாபார ரகசியம். அரசியாரிடம் அம்பலப்படுத்த வேண்டாம்" என்று கெஞ்சுவதுபோல் பாவனை செய்தான் யூசப்கான். இவர்களுக்கிடையே நடந்த இந்தச் சம்பாஷணையைப் பற்றித் தேவியாருக்கு எதுவும் தெரியாது. நகையைப் பற்றித்தான் ஏதோ கேட்கிறாள் என்று நம்பினாள் ராணி. அதே போல ஆயிஷா வைர மாலையைத் திருமலாம்பாளிடம் கொடுத்து, அதை விற்க விரும்பாத வியாபாரி தன் காணிக்கையாக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டுவதாகக் குறிப்பிட்டாள். முதலில் எதையும் இலவசமாகப் பெற விரும்பாது மறுத்துரைத்த மகாராணி முடிவில் வியாபாரியின் வற்புறுத்தலின் பேரில் அதை ஏற்றுக் கொண்டாள். தன் மகிழ்ச்சியைத் தெரிவித்து விடை கேட்ட அவனிடம் ராணியார், இன்னும் ஏதாவது அணிகலன்கள் வியாபாரத்துக்கு இருக்குமானால் அவற்றுடன் மறு நாள் வருமாறு கூறினார். ராணியின் வார்த்தையை மொழிபெயர்க்க வேண்டிய ஆயிஷாவோ அதைக் குறிப்பிடாமல் வேறு விஷயத்தையே கூறினாள்.

"அபூர்வமான பொருள்களைச் சேகரித்துக் கொண்டு வந்து இலவசமாகத் தானம் செய்து விட்டுப் போகும் வியாபார வள்ளலே,

இன்று நள்ளிரவில் இந்நகரத்தின் நதிக் கரையோரமுள்ள பெரிய சிவன் கோயிலுக்குப் போனால் உங்களிடமுள்ள உயர்ந்த பொருள்களை யெல்லாம்விட விலை மதிக்க முடியாத தொரு பொருளைப் பெறலாம். அது உங்கள் வீரத்துக்கும் வேஷத்துக்கும் ஏற்ற பரிசாகக் கூட இருக்கும்!'' என்று மோகனமாக ஒரு முறுவலையும் அள்ளி வீசிவிட்டு அரசியாரைப் பார்த்து அமர்ந்து கொண்டாள் ஆயிஷா.

பொருள்களைப் பேழைக்குள் அடுக்கிக் கொண்டிருந்த யூசப் கானை ஆயிஷாவின் வார்த்தைகள் அலமலங்க வைத்து விட்டன. சவுக்கடி பட்டவனைப் போல் தவித்துப் போனவன் அவளை வெறித்து நோக்கினான். அவளோ அவன் பார்வையைச் சந்திக்காமல் பாராமுகமாக இருந்தாள். யூசப் கானுக்கு இப்போது அவள் அழகு, பேச்சு, பார்த்த பார்வை எல்லாமே புதிய பொருளைக் கொடுத்து எதையோ புரிய வைக்கவும் முயன்று கொண்டிருந்தன. 'அப்படியானால்.. அப்படியானால்... அவளுக்குத் தன்னைப் பற்றிய ரகசியம் தெரிந்து விட்டதோ?' என்ற திகைப்புடன் உள்ளம் மருகலாயிற்று. ஆனால் ஒன்றுமே செய்ய முடியாத ஒரு நிலை. முகம் காட்டி முறுவலித்தவளோ புறங் காட்டிப் புரியாப் பொருளாக உட்கார்ந்திருக்கிறாள். விடை பெறும் சாக்கிலே பேசினால் பதில் கூறத் திரும்புவாள். அப்போது அவள் முக பாவத்திலிருந்து ஏதாவது புரிந்து கொள்ளலாமோ என்ற ஒரு சபலம் ஏற்பட்டது அவனுக்கு.

"விலை மதிக்க முடியாத பொருளை விரும்பாதவரும் இருப்பார்களோ? பரிசை நாடிச் செல்ல எனக்கு விடை கொடுக்க வேண்டும்'' என்று முறைப்படி வணங்கி நின்றவனுக்கு முகத்தைத் திருப்பாமலேயே அரசியின் பதிலைப் போல ஆயிஷா கூறினாள். "போய் வாருங்கள், தங்கள் முயற்சிக்குத் தக்க பலன் இருக்கும்.

ஆயிரம் எண்ணங்களோடு அந்தப்புரத்திலிருந்து தன் விடுதிக்கு வந்த யூசப் கானுக்கு அதன் பிறகு எதிலுமே நாட்டம் செல்லவில்லை. அந்த அதிசயப் பெண்ணின் அற்புத எழிலையும் மர்மமாக அவள் கூறிய வார்த்தைகளையுமே எண்ணி எண்ணி வியந்து கொண்டிருந்தான். இந்து சாம்ராஜ்யத்தின் அந்தப் புரத்திலே அரசியின் அந்தரங்கத்துக்குப் பாத்திரமான ஒரு முஸ்லிம் அழகி. அவளைத் தன் இனத்தவள் என்ற உரிமையோடு நம்புவதா, அல்லது வேறு விதமாக எண்ணித் தள்ளுவதா? முடிவு காண முடியாத நிலையில் வெகு நேரம் குழம்பியவனை ஒரு முடிவுக்குக் கொண்டு

வந்தது அவள் அழகு. ஒளி வீசும் அவளது கரு விழிகளை நினைவுக்குக் கொண்டு வந்தான். அந்தத் துருதுருத்த பார்வை எதையோ சொல்லத் துடித்ததை நினைவு படுத்தியது விழியால் மொழி பேசிய அந்த விந்தைப் பெண்ணின் வார்த்தையை அலட்சியப்படுத்த விரும்பாதவனாக அன்று நள்ளிரவில் அவள் குறிப்பிட்ட இடத்துக்குச் செல்வதென்று முடிவு செய்தான்.

## 21

# அவளும் அவனும்

**ம**ன்னர் அலிஆதில்ஷாவுடைய மண வினை விழாக்களிலே யூசப்கானால் மண்டையில் அடிப்பட்டுப் படுகாய மடைந்த தளபதி சித்திஹாஸன், ஏராளமான ரத்தப் பெருக்குக் காரணமாகப் பல நாள் படுத்த படுக்கையாகக் கிடந்தான். 'உயிருக்கு அபாயமில்லை. ஆனால் உடல் தேறி எழுந்திருக்கச் சில காலமாகும்' என்று கூறி விட்டார்கள். ரண வைத்தியத்தில் வல்லவர்களான ஹக்கீம்கள். மன்னர் அதில்ஷாவோ தாமே சித்திஹாஸனின் அருகிருந்து அவனது காயங்களுக்குச் சிறந்த மூலிகைகளைக் கொண்டு சிகிச்சையளித்து விரைவில் குணப்படுத்துவதில் கண்ணும் கருத்துமாகக் கவனம் செலுத்தி வந்தார். மன்னரின் அன்பும் விசேஷ கவனிப்பும் சித்திஹாஸனை விரைவில் எழுந்து நடமாடவைத்தன. கரிய பெரிய உருவங் கொண்ட அபிசீனியனான அவன் சாதாரணமாகவே காண்பதற்கு அச்சம் தரும் தோற்றம் உடையவன். இப்போதோ தலையிலிருந்து இடது கன்னத்தின், வழியே தாடை வரை வாள் பதிந்த வடு வேறு அந்த முகத்தின் பயங்கரத்தை அதிகமாக்கிக் கொண்டிருந்தது. தன்னை இந்த நிலைக்கு ஆளாக்கியவனைத் தனக்குச் சமமாகப் பீஜப்பூர் படையில் பதவியளித்துக் கௌரவிக்காமல், அகமதுநகர் சுல்தானுக்குப் பரிசாகக் கொடுத்து விரட்டிய மன்னர் ஆதில்ஷாவிடம் அவனுக்கு முன்னைவிட அதிகமாக மதிப்பும் பக்தியும் ஏற்பட்டன. யூசப்கானிடம் அடைந்த தோல்வியினாலும் பட்ட காயத்தினாலும் புண்பட்டிருந்த நெஞ்சுக்கு அவன் பீஜப்பூர் படையிலே பதவி பெறாதது இதமாக இருந்தது. சித்திஹாஸனுடைய

விரோதிகளின் பட்டியலிலே இப்போது அகமது நகரும் ஒன்றாகியது. சகோதரனைக் கொன்றதற்குக் கோல் கொண்டாவின் இப்ரஹிம் குதப்ஷாவையும், தன் முதக்தை விகாரமாக்கியதற்கு அகமதுநகர் ஹுஸைன்நிஜாம் ஷாவிடம் படைத் தலைமை பூண்டிருக்கும் யூசப்கானையும் பழி வாங்குவதென்று உறுதிபூண்டான் சித்திஹாஸன்.

ஒரு நாள் மன்னர் ஆதில்ஷாவிடமிருந்து அழைப்பு வந்தது சித்திஹாஸனுக்கு. அரண்மனைக்குப் போன போது அந்தரங்க ஆலோசனை மண்டபத்திலே அவர் அவனுக்காகக் காத்திருப்ப தாக அறிந்து அங்கே விரைந்தான். சிந்தனை வடிவிலே சிலையாக வீற்றிருந்தார் ஆதில்ஷா அவர்கள். கவலையின் கீற்றுக்கள் கனத்துக் கிடந்தன அவர் முகத்தில்.

"அரசே! ஏன் இத்தனை வாட்டம்? தங்கள் நிலையைப் பார்க்கும் போது என்னை வரச் சொன்ன காரணம் சாதாரணமான தல்ல என்று நினைக்கிறேன்" சிந்தனையைக் கலைத்தான் சித்திஹாஸன்.

"நம்மை அமைதியாக வாழ விட மாட்டார்கள் போல் இருக்கிறது நம் அண்டை நாட்டுக்காரர்கள். தங்கள் தவறான முடிவுக்கு என்னையும் சாதகமாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள்" என்று கூறிச் சித்திஹாஸனிடம் நிலைமையை விளக்கினார் ஆதில்ஷா.

"அடிபட்டவர்கள் ஆத்திரப்படுகிறார்கள். அவமானமடைந்த வர்கள் ஆதங்கம் அடைகிறார்கள். பழி தீர்த்துக் கொள்ளப் பலம் தேடும் முயற்சியில் ஈடுபட்டுள்ள அவர்களுக்காக நாம் விஜயநகரத்தின் நட்பை முறித்துக் கொள்ளுவது விவேகமாகப்பட வில்லை" என்றான் சேனாபதி.

"வேதனையாகவும் இருக்கிறது. ஆனால் இனத்தின் பெருமையைக் காக்க இஸ்லாத்தின் புனிதத்தைச் சொல்லி என்னை இணங்க வைக்கிறார்கள். என்ன செய்வதென்றே புரியவில்லை. மமதையும், மண்டைக் கனமும், இளவெறியும் பிடித்த மஹல்தார் ஒருவனை ராமராயரிடம் என் சார்பில் தூதாக அனுப்பினார்கள். எனக்கு அதில் விருப்பமே இல்லை. பெண்ணைக் கொடுத்தவரின் மனத்தைப் புண்படுத்த வேண்டாம் என்று பேசாதிருந்தேன். வாயடக்கமில்லாத அந்த முட்டாள் மஹல்தார், வன்மத்தை வளர்த்துக் கொண்டு வந்து விட்டான். இவர்களோ அதையே காரணமாக்கி இஸ்லாத்தின் புனிதத்தைக் காக்கப் போர் தொடுத்தே ஆகவேண்டும்

என்று துரிதமாக ஏற்பாடுகளைச் செய்து கொண்டு நானும் துணை நிற்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். இந்து சாம்ராஜ்யத்தோடு நான் இணக்கமாக இருப்பது இஸ்லாத்தின் பெருமையைக் குலைக்குமாம். ராமராயரின் நட்பு எனக்குப் பெருமையையோ, புகழையோ கொடுக்காதாம்..."

சித்திஹாஸன் பயங்கரமாகச் சிரித்தான். "அந்த இந்து சாம்ராஜ்யத்தின் நட்பை நாடி இவர்கள் ஓடினார்களே. அப்போது? ராமராயரின் அன்பும் ஆதரவும் தங்களுக்குக் கிடைக்காதா என்று தவிப்புடன் தவம் கிடந்தார்களே அப்போது இஸ்லாத்தின் நினைவு இவர்களுக்கு இல்லையாமோ?" என்று கேட்டான்.

"நடந்து போனதை யெல்லாம் மறந்து விடச் சொல்கிறார்கள். பாமினி புதிய பாதையில் அடியெடுத்து வைக்கிறது. நான்கு பாதுஷாக்களும் சேர்ந்து காபிரிகளின் ஆதிக்கத்தை ஒழித்துக் கர்னாடகத்தை வெற்றிகொள்வோம்" என்று கதைக்கிறார்கள். இது வெறும் கனவு என்பது எனக்குத் தெரியும். ஆனால் இதைக் கூறி நான் இணங்க மறுத்தால் என்னை இனத்துரோகி, இஸ்லாத்தை மதிக்காதவன் என்று மதத்தின் பெயரால் ஒதுக்குவார்கள். அவர்களுடன் நம் நாட்டிலுள்ள உலேமாக்களும் இமாம்களும் ஒன்று சேருவார்கள். ஆகவே...."

"விஜயநகரத்தைப் பகைத்துக் கொள்ள முடிவு செய்து விட்டீர்களா? தங்களைத் தன் மகனாக எண்ணி அன்பும் ஆதரவும் காட்டும் தந்தைக் கொப்பான ராமராயரைப் போர்க்களத்தில் விரோதியாகச் சந்திக்கப் போகிறீர்களா?" என்று கவலையுடன் கேட்டான் சித்தி ஹாஸன்.

"பாமினித் தோழர்களுடன் பகைமையைத் தவிர்க்க அவர்களுக்குப் பக்கபலமாக இருப்பதாக ஒப்புக் கொண்டேனே தவிர அதனால் விஜயநகரத்துடன் விரோதியாக வேண்டும் என்பதில்லையே."

புரியாமல் திகைத்தான் சித்திஹாஸன். மன்னர் தம் எண்ணத்தை அவனுக்குப் புரிய வைத்தார். "நீ உடனே விஜயநகரத்துக்குச் சென்று என் தந்தைக்கொப்பான ராமராயரிடம் என் உண்மை உள்ளத்தை விளக்க வேண்டும். நான் சாம்ராஜ்யத்துக்கு எதிரான நடவடிக்கைகளில் பங்கு கொண்டிருப்பதாக ஒற்றர்கள் தூதுவர்கள் மூலம் அவருக்குத்

தகவல்கள் கிடைத்தாலும் அது விரோதிகளின் வற்புறுத்தலின் பேரில் சூழ்நிலையின் காரணமான செயல்தான் என்றும் நடைமுறையில் நமது நட்பிலே எவ்வித மாறுபாடும் இல்லை என்பதை எடுத்துச் சொல்ல வேண்டும். இன்றே கிளம்பு" என்று கூறி அவனை விஜய நகரத்துக்கு அனுப்பி வைத்தார்.

நள்ளிரவை எதிர்பார்த்து அலைபாய்ந்து கொண்டிருந்தது யூசப்கானின் மனம். காபிரிகளின் கோயிலிலே தன்னை எதிர்நோக்கி யிருப்பது என்னவாக இருக்கும் என்று கற்பனை கூடச் செய்ய முடியவில்லை அவனால். அந்த மாயப் பெண்ணின் சங்கேத வார்த்தைகளின் மர்மத்தை அறிய வேண்டுமானால் அன்றிரவு வரை காத்திருக்கத்தான் வேண்டும். அது அதிர்ஷ்டத்தைக் கொடுக்குமா? அல்லது...? அபாயத்தையுமேகூட எதிர்பார்த்து அதையும் வரவேற்கத் தயாராகவே இருந்தான் அவன். அவள் குறிப்பிட்ட கோயில் நதிக்கரையில் எங்குள்ளது என்பதை அறிந்து கொள்ள அதிக சிரமம் இருக்கவில்லை. அவனுக்கு உதவியாக வந்திருந்த அவ்விருவருக்கும் தான் விஜயநகரத்தில் தெரியாத இடமே கிடையாதே.

மாலை மயங்கி இருள் கவியும் போதே தன் இருக்கையிலிருந்து கிளம்பி விட்டான் யூசப்கான். இதயத்திலே அடைந்து கிடக்கும் ஆவலைத் தாங்கிக் கொண்டு அவனால் தாமதிக்க முடியவில்லை. விஜயநகரத்திலே முஸ்லிம்களுக் காகவே அமைந்துள்ள குடியிருப்புப் பகுதிகளுக்குச் சென்று அவர்களின் மன நிலையை அறிந்து வருமாறு தன் பணியாளர் இருவரையும் அனுப்பி விட்டுத் தான் மட்டும் தனியாக நதிக் கரையை நோக்கிக் கிளம்பினான் குதிரை மீது. குறிப்பிட்ட பொழுதுக்கு இன்னும் வெகு நேரம் இருந்தது. அதை வீணாகக் கழிக்க விருப்பமில்லை. ஆவல் நிறைந்த கண்களோடு நகரின் பல பகுதிகளிலும் புகுந்து வரலானான். அவனது பார்வை ஒவ்வொரு காட்சியையும் அளவெடுத்துக் கொண்டிருந்தது. நகரின் ஒவ்வொரு மூலைமுடுக்குகளிலும் மக்கள் பெரும்போருக்கான ஆயத்தங்களில் ஈடுபட்டிருப்பதைக் கண்டான் அவன். பொழுது சாய்ந்து இருள் புகுந்த வேளையிலும் கூட உலைக்களங்கள் இரும்பை உருக்கி ஓட வைத்துக் கொண்டிருப்பதையும். வேல் வாள், ஈட்டி போன்ற போர்க் கருவிகளைச் சம்மட்டி கொண்டு ஆக்கிப் படைக்கும் ஆரவாரங்களும் அனுபவம் மிக்க அவன் கவனத்திலிருந்து தப்பவில்லை

சுறுசுறுப்பான நகர்ப்புறத்திலிருந்து, நாலுபடை வீடுகளைக் கொண்ட மூன்றாவது கோட்டைக்குள் குவிந்திருக்கும் எண்ணிறந்த படையணிகளைப் பார்த்துக்கொண்டே அமைதி நிறைந்த நதிக்கரைக்கு வந்த போது, அந்தப் பரந்த சாம்ராஜ்யத்தின் தலைநகர் பகல் உழைப்பின் அயர்வினால் ஏற்பட்ட ஆழ்ந்த உறக்கத்தில் அமிழ்ந்து போயிருந்தது. பின் நிலாக் காலமானதால் பிறை நிலவு கொள்ளை அழகுடன் குன்றுகளுக்குப் பின்னால் ஒளிந்தபடி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. அர்த்தஜாம பூஜைக்குப் பிறகு ஆளரவமற்றுப் போயிருந்தது கோயில் பகுதி. மங்கிய நிலவொளியிலே நெடிதுயர்ந்த கோபுரங்கள் நிழலுருவாய் நின்றதோடு தரையிலே தங்கள் நீண்ட நிழல்களையும் படிய விட்டுக் கொண்டிருந்தன. அந்த இருள் படிந்த பகுதியில் தான் தேடி வந்த மர்மம் எங்காவது மறைந்திருக்கிறதோ என்ற பதைப்போடு பார்வையை அலைய விட்டுக் கொண்டு வந்தவன் குதிரையிலிருந்து கீழிறங்கி அதை நிழல் செறிந்த ஆலமரத்தின் விழுதிலே கட்டிவிட்டு விழிகளை விசாலமாக்கிக் கொண்டு மெல்ல நடக்கலானான். இருளுக்கும், இரவு நேரத்துக்கும், மேற் கொண்டிருக்கும் காரியத்துக்கும் தக்கபடி அவன் உடையணிந் திருந்தான். தலைப்பாகையோடு சேர்ந்ததொரு அங்கி, தோள் மீது புரண்டு உடலையே மூடி மறைக்கும்படியாக வழிந்து கிடந்தது.

அந்த நிசப்பதமான இரவிலே நிலவு மேகங்களிடையே மறைந்தும் தோன்றியும் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தது. உறங்கும் நகர் நங்கையின் உயிர் மூச்சைப் போல, சவுக்குத் தோப்பினுள் புகுந்து ஓடும் காற்றின் ஓலத்தைத் தவிர அந்த ஆழ்ந்த அமைதியான இரவிலே வேறு அரவமே இல்லை. மங்கிய நிலவொளியிலே முங்கிக் குளித்து ஓடவிட்ட நிழலிலே ஓங்கி உயர்ந்து நின்ற தம் உடலுக்கு இருள் ஆடை புனைந்து அந்தப் புதியவனுக்கு ஒரு புதிராக நின்று கொண்டிருந்தது. அந்தக் கோயில், மண்டபத்திலும், மதில் சுவரிலும், கோபுரங்களின் மீதும் கண் இமைக்காமல் அவனைப் பார்த்து நின்ற கற்சிலைகளோ அந்த மௌனத்தின் பயங்கரத்தை அதிகமாக்கிக் கொண்டிருந்தன. தூரத்திலே பரந்து குடை பரப்பி வளர்ந்திருந்த பெரிய ஆலமரத்தின் விழுதுகள் பாம்புகளைப் போலப் பார்வைக்குப் பீதியூட்டிக் கொண்டிருந்தன.

தான் இங்கு ஏன் எதற்காக இப்படி வந்து உட்கார்ந்திருக்க வேண்டும் என்ற காரணம் புரியாமலே காத்துக் கிடந்தான் பூசப்கான்.

என்ன நிகழப் போகிறது என்பதைப் பற்றி அவனுக்கே விளங்காத எதையோ எதிர்பார்த்திருந்த அவன் தனது கண்களையும் காதுகளையும் கூர்மையாக்கிக் கொண்டான். வெகு நேரம் வரை எதுவுமே நிகழவில்லை. ஏமாற்றம் எரிச்சலாகும் தருணத்தில் ஏதோ ஒரு ஒலி அவன் உடலைச் சிலிர்க்க வைத்தது. அதே சமயத்தில் யூசப்கானின் குதிரையும்கூட ஏதோ அரவம் கேட்ட உணர்விலே கனைத்து அந்த மோனச் சூழ்நிலையிலே சலனத்தை உண்டாக்கியது.

இருள் கப்பிக் கிடந்த சில்ப மண்டபத்தின் படிகளிலே சாய்ந்து அமர்ந்ததிருந்தவனை நிமிர்ந்து உட்கார வைத்தது தூரத்திலே தெரிந்த அந்த ஒளி. இருளினால் விழுங்கப் பட்டு அணைந்தும் அணையாமலும் மண்டபத்தின் ஏதோ ஒரு பகுதியில் ஒரு விளக்கு வெகு நேரமாகவே மினுக்கிட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அந்தச் சுடர்தானா இது? நடுங்காமல் கீற்றாக ஒளிர்ந்த அதுவா இப்படி...? சுடர் நகர்ந்தது. வளர்ந்தது. இவனை நோக்கியும் வந்தது. இமைகளைச் சுருக்கி இருளிலே தோன்றிய அந்த ஒளியை இனங் கண்டு கொள்ள உற்று நோக்கினான். பல சுடர்களாகப் பரவி ஒளிக் கற்றைகளை உமிழ்ந்து கொண்டிருந்த பந்தத்தை ஒரு பளிங்குக் கரம் பற்றிக் கொண்டிருப்பது தெரிந்தது. அந்தக் கரத்தின் அழகையே கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த யூசப்கான் அந்தக் கரத்துக்கு உரிய உருவம் தன் அருகே வந்ததும், பந்தம் உமிழ்ந்த ஒளியில் அதன் ஒப்பற்ற அழகைக் கண்டதும் அதிசயத்தினால் திகைத்துத் திக்குமுக்காடிப் போனான். அவள்... அன்று பகல் அந்தப் புரத்திலே கண்ட அழகு மங்கையேதான்! அவள் - ஆயிஷா!

கரு நீலத் துகிலினால் தலையிலிருந்து கால் வரை உடலை மூடி மறைத்துப் போர்த்தியபடி பதுமையாக வந்து நின்றாள் அந்தப் பெண்ணழகி. நீல வானத்திலே மிதக்கும் முழு நிலாவாக மதிமுகம் மட்டும் ஒளிர்ந்து கொண்டிருந்தது. சிரித்துப் பேசிய சிங்கார விழிகளோ நிலத்தை நோக்கித் தாழ்ந்திருந்தன. தான் எதிர்பார்த்த அதிசயம் - பரிசு - அவளாகவே இருக்கும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. அந்தப்புரத்திலே அவள் அழகைக் கண்டு வியந்தவன் இப்போது இந்த நள்ளிரவில் தன்னந்தனியே தன்னைச் சந்திக்க வந்திருக்கும் அவள் துணிவை எண்ணி வியந்து கொண்டிருந்தான். அவளது குனிந்த தலை நிமிர்ந்த போது அவள் கண்கள் குளமாகி இருந்தன. உதடுகள் துடித்தன. வியப்பிலே மிதந்தவாறு அவளையே விழுங்கிக் கொண்டிருந்தவன் அவள் பேசத்

துடிக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டான். ஆனால் அந்தப் புரத்திலே இந்து மூதாட்டியின் முன்னிலையிலே சரளமாகப் பேசிய அவனால், இப்போது தனிமையில் அவளுடன் பேசுவதற்கு ஏனோ வார்த்தைகளே கிடைக்கவில்லை. இந்தப் பேச்சற்ற நிலையிலேயே ஒருவரை ஒருவர் பார்த்தபடி வெகு நேரம் நின்று கொண்டிருந்தார்கள். பிறகு...?

தீச்சுடரைத் தாங்கி நின்ற ஆயிஷாவின் கரம் நடுங்கியபோது தன் நிலை அடைந்த யூசப்கான் விரைந்து சென்று அவளிடமிருந்து அதை வாங்கிக் கொண்டான். நிழல் படிந்த கோயில் மண்டபத்துச் சூழலிலிருந்து மணல் செறிந்த ஆற்றங்கரையை நோக்கி நடக்கலானார்கள். கையில் இருந்த தீவர்த்தியை ஓரிடத்தில் மணலில் பதித்து நிறுத்தினான் யூசப்கான். அதன் அருகே தென்றலிடைக் கொடியெனத் துவண்டு நின்றாள் அந்தத் துருக்கிய அழகி. போர்த்தியிருந்த கருநீலத்துகில் நழுவித் தரையில் விழுந்த போது மடல் அவிழ்ந்த மலரைப் போல, சிப்பியிலிருந்து வெளிப்பட்ட நல்முத்துப் போல, உறையிலிருந்து உருவிய வாளைப் போலத் துவளும் கையிரண்டையும் கோத்து முன்னால் தொங்கவிட்டபடி அழகு ஒளிர ஒயிலாக நின்றாள் ஆயிஷா. உடல் எது, உடை எது என்று மயங்கும்படியான ரோஜா இதழ் வண்ணத்தில் கருநீலத் துகிலுக்கு உள்ளாக ஆடை அணிந்திருந்தாள் ஆயிஷா. சரிகை வேலைப்பாடு செய்த அந்தச் சல்லாத் துணி தலை மீதாக வந்து அந்தச் சுந்தர வதனத்தின் அழகை மூடி மறைக்க முயன்று தோல்வி கண்ட சோகத்திலே சுருண்டு கிடந்தது. விண்ணகத்து மங்கை யொருத்தி மண்ணகத் துக்கு வந்து இறங்கியதைப் போல நாணம் சூழ நின்றாள் அவள்.

"ஐயா! இந்த வேளையில் தனியாக ஓர் அந்நிய ஆடவனைச் சந்திக்க வந்துள்ள என்னைப் பற்றித் தாங்கள் கேவலமாக நினைக்கலாம். முஸ்லிம் இனத்தவளான என் மீது இந்தச் செயலுக்காகத் தாங்கள் கோபமும் கொள்ளலாம். ஆனால் என் சோகக் கதையைக் கேட்டால்..." சொல்லை மீறிய அழுகை அவளை ஆட்கொண்டது.

வியப்பிலிருந்து விடுபட்டுக் கொண்டிருந்த யூசப்கான் பேசினான். "அதிர்ஷ்டத்தை நாடி என்னை இங்கு போகச் சொல்லி அந்த அதிர்ஷ்டமாக என்னைத் தேடி நீயே வருவாய் என்று நான் எதிர்பார்க்கவில்லைதான்..."

"என்னை அதிர்ஷ்டமென்றா வர்ணிக்கிறீர்கள்? துரதிர்ஷ்டம் பிடித்தவளய்யா நான்! என் பெற்றோர்களின் மரணத்துக்குக் காரணமான மன்னவனைப் பழி வாங்க வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக உயிர் வாழ்ந்து வருகிறேன்" என்ற போது தீயாக ஜ்வலித்தாள் ஆயிஷா. அவளிடம் தோன்றிய திடீர் மாற்றத்தைக் கண்டு திடுக்கிட்டான் யூசப்கான். அவனிடம் தன் சோகக் கதையைச் சுருக்கமாக ஆனால் உருக்கமாக விவரித்தாள்.

"இப்போது சொல்லுங்கள். கற்சிலைகளை வணங்கும் கல் மனம் கொண்ட இந்தக் கொடியவர்களிடம் இப்படிக் கைதியாக, அடிமையாக, அவல வாழ்வு வாழும் நானும் என் இனத்தவரும் என் இனிய தாய்மொழி பேசுபவருமான உங்களைச் சந்திக்க வந்தது குற்றமானால் என்னை இங்கேயே கொன்று போட்டு விட்டுச் செல்லுங்கள். அங்கே வாழந்து கொண்டே சாவதைவிட இது எவ்வளவோ மேல். என்னுடைய இந்தத் துணிச்சலான செயல் மன்னிக்கத் தக்கதானால் இந்தச் சிறையிலிருந்து நான் விடுதலை பெற, இங்கிருந்து தப்பிச் செல்ல எனக்கு உதவுங்கள். என் தாய் நாட்டுக்கு இல்லாவிட்டாலும், புனிதமான இஸ்லாத்துக்கு ஏற்றமளித்து, அல்லாஹவின் அரசாட்சி எங்கே நடக்கிறதோ அந்த நாட்டுக்குச் சென்று வாழ எனக்கு உதவுங்கள்."யூசப்கானைச் சிலையாக்கிச் சிந்திக்க விட்டுச் சீறிப் பாயும் சிறுத்தையைப் போலத் தன் உள்ளத்து உணர்ச்சிகளை வார்த்தைகளாக்கிக் கொட்டினாள் அதிசயப் பெண் ஆயிஷா.

அவள் அழகைக் கண்டு பிரமித்தவன், துணிவைக் கண்டு திகைத்தவன் இப்போது, வாதத் திறன் கொண்ட அவள் பேச்சைக் கேட்டு வியந்து போனான். "ஆயிஷா! இதயம் படைத்தவன், இனப் பற்று மிகுந்தவன் யாருமே உன் சோகக் கதையைக் கேட்ட பின் உன்னைக் குற்றவாளியாகக் கருத மாட்டான். இந்தச் சூழ்நிலையில் இப்படி நீ வாழ்வதை அல்லாஹ் சகிக்கவே மாட்டார். ஆகவே..."

அதற்கு மேல் அவனைப் பேச விடவில்லை ஆயிஷா. "அப்படியானால்... அப்படியானால்! நான் தப்பிச் செல்ல உதவுங்கள். உதவுவீர்களல்லவா?" என்று கேட்டாள் தவிப்போடு.

சிந்தனையில் ஆழ்ந்து போன யூசப்கான், பலமிழந்து கொண்டிருந்த பந்தத்தை மணலில் புதைத்து அணைத்து விட்டு அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்ன யோசிக்கிறீர்கள்?" என்று கேட்டாள் ஆயிஷா. "வாக்குக் கொடுத்து விட்டு வம்பில் மாட்டிக் கொள்ளுவானேன் என்றா?"

"அதில்லை. நானோ அந்நியன். அதிலும் வியாபாரி. என்னிடம் உனக்கு இத்தனை நம்பிக்கை எப்படி வந்தது என்று எண்ணிப் பார்க்கிறேன். முஸ்லிம் இனத்தைச் சேர்ந்தவர்கள் இந்த விஜய நகரத்திலும் அரண்மனையிலும் எத்தனையோ பேர் இருக்கிறார்களே. இந்த எண்ணத்தைச் செயலாக்க அவர்களில் யாரையுமே நீ நாடவில்லையா?"

"கல்லுருவங்களைக் கடவுளாக வணங்கும் மன்னரும் மக்களும் வாழும் இந்த நகரத்திலே உள்ள, முஸ்லிம்கள் வயிற்றுப் பிழைப்புக்காகத் தங்கள் வீரத்தையும் ஏன், தன் மானத்தையுமே விலை பேசி வாழுபவர்கள். அவர்களால் என் எண்ணம் ஈடேற மார்க்கமே கிடையாது. அதுவும் தவிர..." என்றவள் அவனைத் தன் பார்வையால் அளந்தபோது அதரங்களிலே சிரிப்புச் சுழித்து நின்றது.

அந்தப் பார்வையின் குத்தலை, சிரிப்பின் குறுகுறுப்பைத் தாங்க முடியாத யூசப்கான், அவளையே பேசும்படி ஊக்கினான்.

"இங்கு வாழ்பவர்கள் இந்த மன்னரிடம் சேவகம் செய்பவர்கள். அவருடைய உப்புக்குத் துரோகம் இழைக்க மாட்டார்கள்."

"அப்படியானால் என்னை இந்நாட்டின் விரோதி, துரோகி என்று வர்ணிக்கிறாயாக்கும்? வம்புதான் போ!" என்றான் யூசப்கான் விளையாட்டாக.

"ஏன் பயமாக இருக்கிறதா. வீரரே! என்று விவரிக்க இயலாததொரு பார்வையை அவன் மீது வீசினாள். "எனக்கு மட்டுமல்ல, அடிமைப்பட்டுக் கிடக்கும் முஸ்லிம் அரசுகளின் விடுதலைக்காகவே இந்த வயோதிக வியாபாரி வேஷத்தோடு வந்திருக்கும் வீரர், வேவுகாரர் நீங்கள்!"

தூக்கிவாரிப் போட்டது யூசப்கானுக்கு. "என்னம்மா, ஏதேதோ பெரிய பெரிய வார்த்தைகளாகச் சொல்லி என்னைக் குழப்புகிறாயே?"

அவன் தவிப்பைக் கண்டு பொங்கி வரும் தன் சிரிப்பை அடக்கிக் கொண்டாள் ஆயிஷா. ஆனால் அந்த மகிழ்ச்சி அத்தனையும் அவள் முகத்தில் மந்தகாசமிட்டிருந்தது.

"என் வார்த்தைகள் பெரிதல்ல. தாங்கள் வந்திருக்கும் காரியம்தான் பெரிது. வேஷம் போட்டவருக்கு அநுபவம் போதாது

என்பதைத் தவிர அதில் விபரீதம் ஏதுமில்லை. ஏன் திகைக்கிறீர்கள்? கிழவன் வாலிபனாக வேஷம் போடலாம். ஆனால் இளமையான முகத்திலே முதுமையை ஒட்ட வைக்கும் போது சற்று அதிகக் கவனம் செலுத்த வேண்டும். குரலிலாவது கொஞ்சம் நடுக்கத்தைக் கூட்டிக் கொள்ள வேண்டாமா?" என்று குலுங்கச் சிரித்தாள். தன் குட்டு வெளிப்பட்டு விட்டதை எண்ணிப் பரிதாபமாக விழித்தான் யூசப்கான்.

"அரசியாரின் பார்வைக்கு ஆபரணங்களை விலை பேசக் கொண்டு வந்தீர்களே, அவைகளில் பலவற்றில் கோல்கொண்டா குதப்ஷாவின் அரச முத்திரையும், அகமதுநகர் நிஜாம்ஷாவின் அரசாங்க அடையாளங்களும் இருப்பதைக் கண்டேன். இன்று நான் இந்து மன்னரின் அந்தப்புரத்து அடிமையாக இருந்தாலும், என் தகப்பனார் ஒரு கோட்டையின் அதிபதியாக இருந்தவர். ஆகவே எனக்கு இந்த அரசியல் முத்திரைகளைப் பற்றியெல்லாம் தெரியும். அகமது நகரும் கோல்கொண்டாவும் சமீபத்தில் விஜயநகரத்திடம் தோல்வியடைந்து அவமானப்படடுள்ள விஷயத்தையும் உங்கள் வேஷத்தையும் ஒப்பிட்ட போது உங்களுக்குள்ளே ஒளிந்திருக்கும் உண்மை பளிச்சிட்டது. ஆனால் தங்கள் உடைவாளோ பீஜப்பூர் ஆதில்ஷாவின் ராஜ சின்னத்தைக் கொண்டிருந்தது. அவரோ ராமராயரின் அன்புக்குப் பாத்திரமானவர். உங்களைப் பற்றிய என் முடிவிலே இந்த ஒரு விஷயம் நெருடலாயிற்று. எப்படியோ ஆதில்ஷாவின் ஆதரவையும், அவரது பாராட்டடாக இந்தப் பட்டாக் கத்தியையும் பெற்றிருக்கிறீர்கள் என்று முடிவுக்கு வந்தேன். நான் சொல்வது சரிதானே?" என்று கேட்டாள் ஆயிஷா.

தன் அந்தரங்கத்தை யெல்லாம் அத்தனை அப்பட்டமாக அருகிருந்து திட்டமிட்டு அனுப்பியவளைப் போல விவரித்ததைக் கேட்ட யூசப்கானுக்குப் பேச வார்த்தைகளே கிடைக்க வில்லை. "சற்று முன்பு என்னிடம் ஏதோ உதவி கேட்டீர்கள். ஆனால் இப்போது அதை நானே தங்களிடம் கேட்க வேண்டியவனாக இருக்கிறேன். என் ரகசியங்கள் அத்தனையையும் அறிந்த உங்கள் கையில் தான் என் வாழ்வு இருக்கிறது. இங்கு இத்தனை திறமைவாய்ந்ததொரு பார்வைக்கு இலக்காக வேண்டியிருக்கும் என்று தெரிந்திருக்குமானால் இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்திருப்பேன். ஆனாலும்கூட உங்கள் முன்னிலையில் எனக்குத் தோல்விதான் ஏற்பட்டிருக்கும். அதில் சந்தேகமே இல்லை. இந்த நிலையிலும் மனத்துக்கு

மகிழ்ச்சியளிக்கும் விஷயம். நான் வந்திருக்கும் காரியத்துக்குத் தங்கள் உதவி எனக்குக் கிடைக்கும் என்பது தான். விரைவிலேயே பாமினி சுல்தான்களின் படைகள் இந்த விஜய நகரத்தை வெற்றி கொள்ள முற்றுகையிடப் போகின்றன. அதற்கான சில அரசியல் ரகசியங்களை அறிந்து வரவே என்னை அனுப்பியிருக்கிறார்கள். அந்த என் முயற்சி வெற்றி பெறுமானால்..." ஆதுரத்தோடு அவளைப் பார்த்தான் யூசப்கான்.

இது வரை எந்தப் பார்வைக்கும் குனியாத அவள் தலை குனிந்தது. பரபரப்புடன் எழுந்திருந்தாள். "நான் வந்து வெகுநேரமாகிவிட்டது. உதவி கேட்க மட்டும் நான் வரவில்லை. என் உதவியும் உங்களுக்குத் தேவைப்படும் என்று உணர்ந்தேதான் இங்கு வந்தேன். இதுவரை ஏற்படாத ஏதோ ஒரு வேகம் உங்களைப் பார்த்தவுடன் என்னுள் தோன்றியது. அது இத்தனை துணிவையும் எனக்கு உண்டாக்கியதை எண்ணினால் வியப்பாகவே இருக்கிறது. நாளை மறுபடியும் சந்திப்போம். இப்போது எனக்கு விடை கொடுங்கள்" என்று எழுந்திருந்தாள்.

கீழே சரிந்து கிடந்த சால்வையை எடுத்து அவள் தன் உடலைப் போர்த்தி மூடிக்கொள்ள உதவினான் யூசப்கான். "உங்களுக்கு ஆட்சேபணை இல்லையானால என் குதிரையி லேயே உங்களை..." என்று கூறிய அவனை மோகனமாகப் பார்த்து முறுவலித்தாள் ஆயிஷா.

"என் குதிரையும்கூட அதோ அந்த மண்டபத்துக்குப் பின்னால் ன் வரவுக்காகக் காத்திருக்கிறது" என்று கூறி வேகமாக நடந்தாள் அவள். அவளது நடையழகை ரசித்தபடியே அவளைத் தொடர்ந்தான் யூசப்கான்.

இரண்டு குதிரைகள் அருகருகே செல்வதையும் இடையிடையே எழும் சிரிப்பொலியையும் ஆலமரத்தின் விழுதுகளுக்கிடையிலே மறைந்திருந்தபடி விஜயநகரத்து வீரன் ஒருவன் இமைக்காத விழிகளால் விழுங்கிக் கொண்டிருந்தான்.

மறு நாள் காலை ஆயிஷா துயில் கலைந்து கண் விழித்த போது முதல் நாளிரவு நிகழ்ச்சிகளின் நினைவிலே உள்ளம் துள்ளலிடப் புதிய சோபையுடன் விளங்கினாள். நீராடும் துறையிலே அவள் துளைந்து விளையாடியதையும் அதன் பிறகு நந்தவனத்திலே அவள் பறவைகளை விரட்டிக் கொண்டு ஓடியதையும் கண்டவர்கள்

ஆயிஷாவை ஒரு மாதிரியாகத் தான் பார்த்தார்கள். அத்தனை குதூகலமாக அவளை அது வரை யாருமே பார்த்ததில்லை.

தேவியார் அழைப்பதாகச் செய்தி வந்தது. அங்கே போன போது தேவி திருமலாம்பா மட்டுமில்லை. ஈட்டி ஏந்திய இரண்டு வீரர்களும் இருந்தார்கள். அமைச்சர் திருமலைராயர் உன்னை உடனே இவர்களுடன் அனுப்பி வைக்கும்படி, ஓலை கொடுத் தனுப்பியுள்ளார் அம்மா. அதற்காகத்தான் கூப்பிட்டனுப்பினேன்..." என்றாள் ராமாராயரின் தர்மபத்தினி.

"எதற்காகவாம்...?" எங்கோ கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போலிருந்தது குரல்.

"யார் கண்டார்கள்? நேற்று வந்திருந்தானே ஒரு வியாபாரி. அவனோடு பேசுவதற்காக இருக்கலாம்" என்று சகஜமாகக் கூறினாள் திருமலாம்பா. அமைச்சர் திருமலைராயருக்கு அராபிய மொழியைப் புரிந்து கொள்ளுவதற்குத் துபாஷி தேவையில்லை என்ற உண்மை ஆயிஷாவுக்குத் தெரியும். ஆனால் அதைக் கூறி விவாதிக்க விரும்பவில்லை அவள். உடன் பிறந்த அந்தத் துணிச்சல் வந்து ஒட்டிக் கொள்ளவே, உள்ளத்திலே உறுதியை வளர்த்துக்கொண்டு அவர்களுடன் கிளம்பி விட்டாள்.

திருமலாம்பா தேவியின் அரண்மனை வாயிலைக் கடக்கும் போது எதிரில் வேங்கடாத்திரி வந்து கொண்டிருந்தான். தற்செயலாக வந்தானோ அல்லது அண்ணாவின் உத்தரவைப் அறிந்து தான் வந்தானோ தெரியாது. ஆயிஷாவின் அருகில் வந்து குதிரையிலிருந்து கீழே இறங்கினான். அவனைக் கண்டதும் அவள் வாய் அவளையும்மீறி, "அண்ணா!" என்றழைத்தது. அவள் கண்கள் கலங்கின.

"இந்தப் பெண்ணை எங்கே அழைத்துப் போகிறீர்கள்?" என்று கேட்டான் அந்த வீரர்களிடம் வேங்கடாத்திரி.

"அமைச்சர் திருமலைராயர் அழைத்து வரும்படி கட்டளை பிறப்பித்தார்கள்" என்றான் வாய் புதைத்து, உடல் ஒடுங்க ஓடி வந்து நின்று ஒருவன்.

"ஓ....!" என்றவன் சில விநாடிகள் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு சட்டென்று, "மகாமண்டலேசுவரர் ராமராயர் வேங்கட விலாச மண்டபத்திலே, பீஜப்பூரிலிருந்து வந்திருக்கும்

தூதுவனிடம் உரையாடிக் கொண்டிருக்கிறார். அவர்களுடைய தேவைகளைக் கவனிப்பதற்கு அநுபவம் மிக்க பணிப் பெண்ணான ஆயிஷாவை அங்கு அனுப்பும்படி என்னிடம் கூறினார். அதற்காகவே நான் வந்து கொண்டிருக் கிறேன். அமைச்சருக்கு அது தெரியாது போல் இருக்கிறது. போகட்டும், நான் அவரிடம் விஷயத்தைக் கூறி விடுகிறேன். நீங்கள் இந்தப் பெண்ணை வேங்கடவிலாச மண்டபத்துக்கு அழைத்துச் செல்லுங்கள்" என்று உத்தரவு பிறப்பித்து. ஆயிஷாவைப் பொருள் பொதிந்த பார்வையால் எச்சரித்து விட்டுச் சரேலென்று குதிரை மீதேறி உட்கார்ந்தான். திருமலையிடம் போக வேண்டிய ஆயிஷாவை ராமராயரிடம் திருப்பி விட்ட திருப்தியுடன் வேகமாகக் குதிரையை விரட்டிக் கொண்டு மறைந்தான் வேங்கடாத்திரி, அவன் போவதையே நீர்த் திரையிட்ட கண்களால் பார்த்துக் கொண்டு நின்ற ஆயிஷாவை வீரர்கள் வேங்கட விலாச மண்டபத்துக்கு அழைத்துப் போனார்கள்.

## 22

# கள்ளம் புகுந்த உள்ளங்கள்

**வே**ங்கட விலாச மண்டபத்திலே விஜயநகர சாம்ராஜ் யத்தின் மகாமண்டலேசுவரர் மகிழ்ச்சி பொங்க உட்கார்ந்திருந்தார். அவரது மகிழ்ச்சிக்குக் காரணமான சித்திஹாசன், மன்னர் ஆதில்ஷாவின் மாறாத நட்பைப் பற்றி விவரித்துக் கொண்டிருந்தான்.

"எனக்குத் தெரியும், ஆதில்ஷாவின் அன்புள்ளத்தைப் பற்றி, இருந்தாலும் சந்தர்ப்பவசத்தால் சதிகாரர்களின் கைப்பொம்மையாகி விடாதிருக்க வேண்டுமே என்றுதான்..." திராட்சையைச் சுவைத்துக் கொண்டே கூறினார் ராமராயர்.

"பீஜப்பூரைப் புறக்கணித்து அவர்களால் ஏதுமே செய்ய் முடியாது. அவர்களின் செயல்களை அறிந்து கொள்ளவே சிநேகமாக இருக்க முடிவு செய்துள்ளார் சுல்தான். அதுவும்கூட நீண்ட யோசனைக்குப் பிறகு, இனத்தையும் மதத்தையும் மனதில் வைத்து வற்புறுத்தியதன் பேரில் தான். பிணக்கு வேண்டாமென் பதற்காகத்

தெரிவித்த இணக்கமே தவிரப் போர் என்று வரு மானால் பீஜப்பூரின் படைகள் விஜயநகரின் விரோதிகளிடமிருந்து ஒதுங்கியே நிற்கும்" உறுதியாகச் சொன்னான் தளபதி சித்திஹாஸன்.

"போர் வருமானால்.... என்று இன்னும் மூடி மறைப்பானேன்? போர் வந்தே விட்டது. பெரும் படையெடுப்புக்கான ஏற்பாடுகளில் பாமினி சுல்தான்கள் முனைப்பாக ஈடுபட்டிருப்பது எனக்குத் தெரியும். எந்தத் தாக்குதலையும் எதிர்பார்த்தே எங்கள் நாடும் இருக்கிறது" என்ற ராமராயரின் இடக்கைச் சிறுவிரல் அலட்சியமாக முகத்து மீசையை ஒதுக்கி விட்டது.

இந்த நிலையில் தான் அங்கு ஆயிஷா வந்து கொண்டிருந்தாள் குழம்பிய உள்ளத்துடன், 'திருமலையின் அழைப்பு எதற்காக இருக்கும்? ஒருவேளை நேற்றிரவு என் நடத்தை கண்காணிக்கப் பட்டதா? அதன் காரணமாகவே, என்னைக் கைது செய்து வரும்படி உத்தரவு பிறப்பிக்காமல் கண்ணியமாக அழைத்து வரும்படி ஆட்களை அனுப்பி வைத்தாரா? அப்படியானால் அவர் கதி? ஐயோ!' அதை நினைக்கவே முடியாமல் குலுங்கியது அவள் உடல். 'அந்த வியாபாரியைப் பற்றிய எந்த விவரமும் தெரியாது எனக்கு. விசாரித்து அறிந்து கொள்ளவும் இல்லை. அப்படி இருந்தும் முதல் சந்திப்பிலேயே என் உள்ளம் அவர்பால் இப்படி ஈடுபாடு கொள்வானேன்?' புரியாத புதியதொரு உணர்ச்சியால் உடல் புல்லரித்தது அவளுக்கு. 'உறங்கும் நகரத்தின் ஓராயிரம் கண்களான ஒற்றர்களின் மூலம் நள்ளிரவிலே நடந்த தங்கள் சந்திப்பைப்பற்றிய சங்கதி அறிந்திருப்பார்களோ, நாட்டையாளும் அரவீட்டார்? சதிகாரர் என்று அந்தப் புதியவரையும் பிடித்திருப்பார்களோ?' தவித்தது அந்தத் தளிர்மேனியாளின் நெஞ்சம்.

இழிநிலையிலுள்ள இஸ்லாமியப் பேரரசின் ஏற்றமிகு எதிர்காலத்துக்குத் திட்டமிட்ட செயலுக்காக உளவறிய வந்தவரிடம் உதவி வேண்டிப் போய், அவர் உயிருக்கே அபாயத்தை உண்டாக்கியதை எண்ணிய போது இனம் புரியாததோர் ஏக்கம் அவள் இதயத்தைப் பிழிந்தெடுத்தது. வேங்கடாத்திரியின் சிரித்த முகம் தோன்றிய போதோ அவள் உள்ளம் அழுதது. 'தன்னைச் சகோதரியாக ஏற்றுக்கொண்ட அவருக்குத் தன் கள்ளம் புகுந்த உள்ளம் தெரியுமானால்?' அவரது நம்பிக்கைக்கு அருகதையற்றவள் நான் என்று அரற்றியது ஆயிஷாவின் அந்தராத்மா.

'தன் அந்தரங்கம் தெரியாமல்தான் திருமலைராயரின் ஆட்களிடமிருந்து தன்னை மீட்டு இங்கே அனுப்பினாரா அரவீட்டு இளவல்? எதையுமே முடிவாகக் கொள்ள முடியவில்லை. எந்த முடிவுமே அவள் இதயத்தைக் கீறிக் கிழிப்பதாக இருந்தது.'

இதே வேங்கடேச விலாச மண்டபத்தினுள் அன்றொரு நாள் கட்டுண்ட நிலையில் கைதியாகப் புகுந்தது. நினைவுக்கு வந்தது ஆயிஷாவுக்கு. அன்று சீறிப்பாயும் வேங்கையெனத் தலை நிமிர்ந்து தர்க்கமிட்டாள் - தான் குற்றவாளியல்ல வென்று. ஆனால் இன்றோ குனிந்த தலையோடு குமையும் உள்ளத்தோடு உள்ளே போகிறாள் - கற்றவாளி மனப்பான்மையோடு. அன்று அனல் தெறிக்கப்பார்த்தாள் அரவீட்டு முதல்வரை - பழிவாங்க வேண்டும் என்ற பதைப்புடன். .இன்றோ அவள் பார்வையில் பயம் நிழலாடியது! அவர் பார்வையைச் சந்திக்கத் துணிவில்லாத வளாகப் பதுங்கி ஒதுங்கி உள்ளே நுழைந்தாள்.

வேங்கட விலாச மண்டபத்துக் காவல் நாயகனிடம், கன்னியை ஒப்படைத்துத் தளபதியாரின் தாக்கீதையும் அறிவித்து விட்டுப் போனார்கள் ஆயிஷாவுடன் வந்த வீரர்கள். அப்படியும் ஓர் உத்தரவு இருக்கலாமென்றே எண்ணினார் அந்த அதிகாரி. அந்நிய நாட்டு விருந்தாளிகளை, மகிழ்விப்பதற்கு அந்தப்புரத்திலிருந்து ஆடல் பாடல்களில் வல்லவர்களை வரவழைக்கும் வழக்கமுண்டு. அதற்காகச் சிலர் அங்கு முன்பே வந்து காத்திருந்தனர். வந்த தூதுவனுடன் அந்தரங்க ஆலோசனை முடிந்ததும் அவரைக் கௌரவிப்பதற்கான ஆடல் பாடல்கள் ஆரம்பமாகும். ஆகவே ஆயிஷாவின் வரவினால் அதிகமாகச் சலனமுறவில்லை அந்த அதிகாரி. அங்கு ஓர் இடத்தில் வைக்கப்பட்டுள்ள இசைக் கருவிகளையும், நடனத்துக்கான சலங்கை போன்ற சாதனங்களையும் மௌனமாக அவளுக்குக் காட்டினார் அவர். அரண்மனை வாழ்விலே பழகிப் போன ஆயிஷாவுக்கு அவருடைய மௌன பாஷை அங்கே அவளுடைய பணி என்ன என்பதை விளக்கியது.

அலியா ராமராயரும் அபீசீனியன் சித்தி ஹாஸனும் உட்கார்ந்து உரையாடிக் கொண்டிருந்த இடத்துக்கு எதிரே ஒரு சிற்ப மண்டபம் இருந்தது. பாட்டு, கூத்து போன்ற கேளிக்கை களுக்கான கொலு மண்டபம் அது. சிதார் வாத்தியத்தை எடுத்துக் கொண்டு அதில் போய் உட்கார்ந்தாள் ஆயிஷா. அவளைச் சூழ்ந்துகொண்டார்கள் மற்றப்

பெண்கள், சிதார் வாத்தியத்தின் நரம்புகள் கிளர்ந்து இனிமையான ஒலியை எழுப்பி அந்த மண்டபத்தை நிறைத்தது. ராமராயரின் கவனத்தையும் அந்த சுநாதம் ஆயிஷாவின் பக்கம் திருப்பியது. சிதார் மீட்டும் சித்திராங்கியாக அவளை அங்கு கண்டதும் அவரது புருவங்கள் நெரிந்து உயர்ந்தன. வியப்பினால் விரியும் அவரது நயனங்களைக் கண்ட ஆயிஷாவின் விரல்களோ வாத்தியத்திலே வேகமாக விளையாடின. அன்று வெறுப்பு வழியும் விழிகளோடு வாதமிட்ட வடிவழகியாகக் கண்ட பெண் இன்று வியக்கும்படியாக வாத்தியத்தை மீட்டும் விமரிசையைக் கண்டு ராமராயரின் முகத்திலே மகிழ்ச்சி பூத்தது. காலம் அவள் மனப் புண்ணை ஆற்றிவிட்டது போலும் என்று ஆறுதல் கொண்டார்.

அதே நேரத்தில் ஆயிஷாவோ எந்த முகத்தைக் காணவே வெறுத்தாளோ அந்த முகத்தையே உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். ராமராயர் தன்னைச் சந்தேகக் கண்களோடு நோக்கவில்லை என்பதை அறிந்தபோது, அவர் முகத்தில் நிலவிய சந்துஷ்டியைக் கண்டபோது கலங்கிக் கிடந்த அவள் உள்ளத்திலே தெளிவு ஏற்பட்டது. கள்ளம் புகுந்த உள்ளத்தின் கவலை கரைந்து களிப்புத் துளிர் விட்டது. முதல் நாளிரவுச் சம்பவத்தைப் பற்றிய சம்சயம் ஏற்பட்டிருக்குமானால் அரவீட்டாரின் முகத்தில் அத்தகைய அமைதி நிலவாதே என்று நிம்மதிப் பெருமூச்சினால் இதயத்துக் கனத்தைக் குறைத்துக் கொண்டாள்.

சங்கீதம், சிருங்காரம் எதனாலுமே கவரப்படாதவன் சித்திஹாஸன். அவன் சிந்தனையெல்லாம் அரசியல்தான். அங்கே ஆடலுக்கோ, பாடலுக்கோ, ஆரணங்குகளுக்கோ இடமே இல்லை. ஆகவே, ஆயிஷாவின் அழகோ, சிதாரிலிருந்து சிதறிய சங்கீதமோ அவனைத் தொடவேயில்லை. விஜயநகரத்துடன் பீஜப்பூருக்குள்ள நட்பிலே நல்லெண்ணத்திலே விரிசலுக்கு வழியே இல்லை என்பதை ராமராயரின் உள்ளத்திலே விதைப்பதிலேயே முனைப்பாக இருந்தான். அவளை அவன் கவனிக்கவேயில்லை. அன்றைய சந்திப்பை முடித்துக்கொண்டு சித்திஹாஸனிடம் விடைபெற்ற ராமராயர் ஆயிஷாவின் அருகே வந்து அவளது சிதார் வாசிப்பைப் பாராட்டத் தவறவில்லை.

"ஆயிஷா! நீ இத்தனை அற்புதமாக சிதார் வாசிப்பாய் என்று எனக்குத் தெரியவே தெரியாதே!" அவரது பாராட்டையும், பார்வையின்

ஸ்பரிசத்தையயும் தாங்கும் தகுதியற்ற ஆயிஷா தலை குனிந்து நின்றாள் மௌனமாக.

அவரே தொடர்ந்தார். "அந்தப்புரத்துக்கு நான் வரும் போதெல்லாம் நீ என் கண்ணில் படுவதேயில்லையே. திருமலாம்பா தேவியார் உன்னை அன்புடன் நடத்துகிறார் அல்லவா?"

நடத்துகிறார்கள் என்பதற்கு அடையாளமாகத் தலை யசைத்தாள் ஆயிஷா. "நாளை தேவியாரைக் காண வரும்போது இத்தனை சிறப்பாக சிதார் வாசிக்கும் உன் திறமையைப் பற்றி என்னிடம் தெரிவிக்காததற்காக ராணியையாரைக் கடிந்து கொள்ளப்போகிறேன்" என்று கூறி மெல்ல நகைத்த படியே வேங்கட விலாச மண்டபத்திலிருந்து வெளியேறினார் ராமராயர்.

புலியின் பிடியிலிருந்து தன்னை விடுவித்த வேங்கடாத்திரி சிங்கத்தின் குகைக்கு அனுப்புகிறானே என்ற ஆதங்கத்தோடு வந்த ஆயிஷா சிங்கத்திடமிருந்தும் தப்பி ஆபத்து ஏதுமின்றி அந்தப்புரத்துக்குத் திரும்பப்போவதை எண்ணி மகிழ்ச்சி யடைந்தாள். அதன் பிறகு அன்று முழுவதும் அவள் உள்ளம் அந்த அன்னியனின் நினைவாகவே நிலைகொள்ளாமல் தவிக்கலாயிற்று. பகல் மாலையாக முதிர்ந்து இரவாகப் பழுப்பதை எதிர்பார்த்து ஏக்கமுடன் காத்திருந்தாள் கன்னி. இடையிடையே தான் செய்வது தவறோ என்ற நினைவும் தலைநீட்டி அவளைத் தடுமாறச் செய்தது. ஆனால் விடுதலை வேட்கையே முடிவில் வெற்றி கொண்டது. எப்படியாவது அந்தச் சூழலிலிருந்து வெளியேறிவிட வேண்டுமென்ற வெறி - உள்ளத்தின் அடியிலே அழுத்தி வைக்கப்பட்டிருந்த அந்த ஆசை இப்போது விசுவரூபம் எடுத்து அவளை வதைக்கலாயிற்று. அது மட்டும் தானா? அந்தப் புதியவனின் நினைவிலே இனம் புரியாததொரு இன்பக் கிளுகிளுப்படைந்தது அந்த ஏந்திழையாளின் நெஞ்சம். அதற்கு எதிரான எந்த வாதத்தையும் ஏற்க மறுத்தது. இப்படியொரு ஆசைக்கும் பாசத்துக்கும் தான் அடிமையானதை நினைத்து அவளுக்கே வியப்பாக வெட்கமாகக் கூட இருந்தது. ஆனால் அந்த வெட்கமே விருப்பமாக, காதல் நினைவுக்கு இனிப்பாக இதமாகவுமிருந்தது.

விருந்தினர் மாளிகையிலே வியாபாரி யூசப்கானும் இப்படியொரு அவஸ்தையிலே ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருந்தான். இரவெல்லாம் தூங்காமல், பகலெல்லாம் அடுத்து

வரும் இரவை எதிர் பார்த்து அன்றிரவு மறுபடி சந்திக்கப் போகும் அந்த அற்புத எழிலுருவத்தை எண்ணி எண்ணி ஏக்கப் பெருமூச்சுக்களால் பொழுதை விரட்டிக் கொண்டிருந்தான். அவள் அழகை, துணிவை, பார்வையை, சிரிப்பை, பேச்சை நினைத்துப் பைத்தியக் காரனைப் போலத் தனக்குத் தானே சிரித்து மகிழலானான். அந்நிய நாட்டின் அரண்மனை அந்தப்புரத்தில் உள்ள ஓர் அழகி வலுவிலே தன்னைத் தேடி வந்து நேசம் காட்டுவதை எந்த எல்லை வரை நம்பலாம் என்று தீர்மானிக்க முடியாமல் தவித்தாலும், இறுதியிலே, என்ன நேர்ந்தாலும் அவளைக் கைவிடுவதில்லை. காப்பாற்றியே தீருவது' என்ற முடிவுக்குத் தான் அவனால் வர முடிந்தது. இத்தனை காலமும் எந்தப் பெண்ணின் நினைவாலும் அலைக்கழிக்கப்படாத உள்ளம், ஆயிஷாவின் கடைக்கண் வீச்சிலே, கனிவாய்ச் சிரிப்பிலே மெழுகாகிப் போனதை எண்ணிய போது வியப்பாகத்தான் இருந்தது.

பகலின் ஆரவாரம் அடங்கி, இரவின் அமைதியிலே ஆழ்ந்து கிடந்தது விஜயநகரம். இந்த வேளையிலே எதிர்பார்த்துக் கிடந்த இரண்டு உள்ளங்கள் நதிக்கரையை நோக்கிக் கிளம்பின. நிலவு பாலேடாகப் பரந்து கிடந்தது. அவளுக்கு முன்னே அவன் வந்து காத்திருந்தான். வனதேவதையின் வடிவழகோடு வந்து கொண்டிருந்த எழில் மடந்தை ஆயிஷாவை எதிர்கொண்டழைக்க முன் சென்றான் யூசப் கான். விரிந்த அவன் கரங்களினுள்ளே வந்து புகுந்து கொண்ட அவளை அப்படியே வாரி அணைத்துக் கொண்டபோது, பேச்சற்ற நிலையிலே பிரிக்க முடியாத பிணைப்பிலே கட்டுண்டு கிடந்தார்கள் சில விநாடிகள். பிறகு தன் நிலையடைந்தவளாய்ச் சட்டென்று விலகித் தலை கவிழ்ந்து கொண்டாள் ஆயிஷா. அப்போது அவள் முகம் செந்தாமரையாகச் சிவந்திருந்தது. நேற்றை விட இன்று கவர்ச்சிகரமாக விளங்கினாள் அவள் - அவன் கண்களுக்கு. ஆடையாபரணங்களில் இன்று விசேஷ கவனம் செலுத்தி அலங்கரித்துக் கொண்டிருந்தது மட்டுமே அதற்குக் காரணம் அல்ல; அவன் பார்வையிலேயும் இன்று பசி ஏற்பட்டிருந்தது. அவள் வனப்பைப் பற்றி அவளிடமே விவரித்தபோது வெட்கமடைந்த அவள் விழியோரத்தினால் அவனைப் பார்த்தாள்.

"நேற்று வயோதிகராக இருந்த நீங்கள் இன்று வாலிபராகக் காட்சியளிக்கிறீர்களே. அதைப் போலத்தான்" என்றாள் ஆயிஷா ஆசை பொங்க அவனைப் பார்த்து முறுவலித்தபடியே.

"அன்னியர்களின் பார்வைக்கு முன்னே வேஷமணிந்து கொள்ள வேண்டியதொரு நிலை. இல்லாவிட்டால் வந்த காரியம் வழி மாறிப் போய்விடுமே.. ஆனால் என் இதயத்தில் இடம் பெற்றுவிட்ட இனியவளின் அருகிலிருக்கும் போது நான் நானாகத்தானே இருக்கவேண்டும்" ஆண்மை மிளிர ஆனந்தமாகச் சிரித்தான் யூசப்கான்.

வலிவும் வனப்பும் மிக்க அந்த வாலிப வடிவத்தைத் தனது விழிகளால் விழுங்கிக் கொண்டே ஆயிஷா, "தாங்கள் வந்த காரியத்தை முடித்துக் கொண்டு எனக்கும் விடுதலையளித்து விரைவில் இங்கிருந்து கிளம்ப வேண்டும். இங்கு தாமதிக்கும் ஒவ்வொரு விநாடியும் உங்களை அபாயம் நெருங்கிக் கொண்டிருக்கும்" என்று அன்று காலையில் தனக்கு நேர்ந்த அனுபவத்தையும் அதனால் தான் தவித்த தவிப்பையும் அவனிடம் விவரித்தாள்.

தலைசிறந்த ஒற்றர்களைக் கொண்டது விஜயநகரத்தின் அரசாட்சி என்று கேள்விப் பட்டிருந்தான் யூசப்கான். "நான் மேற்கொண்ட காரியம் இன்னும் இரண்டுடொரு நாளில் முடிந்துவிடும். நீ என்னோடு கிளம்புவதற்குத்தான் திட்டமிட்டாக வேண்டும்" என்றான் யூசப். இருவரும் அதைப் பற்றிப் பேசியபடியே குதிரைகளை மெல்ல நடத்திக் கொண்டு நதிக் கரையோரமாகப் போனார்கள். வழியில் ஒரு சிறு மண்டபம் குறுக்கிடவே குதிரைகளை அங்கிருந்த ஒரு மரத்தடியில் விட்டு விட்டு இருவரும் அதில் போய் அமர்ந்து கொண்டார்கள்.

"நீங்கள் குறிப்பிடும் நாளன்று நான் ஆண் உடையில் தயாராக இதைப் போலவே வந்து விடுகிறேன். உங்கள் உதவியாளர் இருவரில் ஒருவரை முன்னதாக அனுப்பிவிடுங்கள். அந்த ஒருவனாக நான் உங்களுடன் பிரயாணம் செய்தால் சந்தேகத்துக்கு இடமிருக்காது" என்று தன் திட்டத்தை அவனுக்கு விளக்கினாள் ஆயிஷா.

அதற்குத் தன் சம்மதத்தைத் தெரிவித்த யூசப்கான், "அன்பே ஆயிஷா! என் அந்தரங்கமெல்லாம் அறிந்தவளாகிவிட்டாய் நீ. என் வாழ்வே உன் கையில்தான் இருக்கிறது. இந்தத் துன்பச் சூழலிலிருந்து உன்னை விடுவிப்பதில் என் உயிரையே இழப்பதானாலும் அதற்காகக் கலங்க மாட்டேன் ஆயிஷா! எனக்காக நீ செய்ய வேண்டிய சில காரியங்கள் இருக்கின்றன. அரண்மனைவாசியான நீ அறிந்த ரகசியங்கள் - எனக்குப் பயன்படுபவை - ஏதாகிலும் இருந்தால் சொல்.

அது சரி. நேற்று மகாமண்டலேசுவரர் யாரோ அந்நிய நாட்டுத் தூதுவனுடன் பேசிக் கொண்டிருந்ததாகக் கூறினாயே. அவர்கள் சம்பாஷணையில் ஏதாவது உன்னால் அறிந்து கொள்ள முடிந்ததா?" என்று கேட்டான்.

"ஏதோ கொஞ்சம் காதில் விழுந்தது" என்று குறும்பாக விவரிக்கலானாள் வக்கணையுடன். அவள் வேங்கடவிலாச மண்டபத்துக்குப் போன போது பேச்செல்லாம் முடிந்து விட்டது. அவர்களின் உரையாடலைப் பற்றி அவளுக்கு ஒன்றுமே தெரியாது. ஆனால் ஆயிஷாவோ தன் கற்பனையால் ஒரு காட்சியையே உருவாக்கினாள். "பீஜப்பூர் சுல்தான் அலி அதில்ஷாவின் அந்தரங்கத் தூதுவனாம் அவன். அகமது நகரிலிருந்து விஜய நகரத்துக்கு ஒரு வேவுகாரர் வந்திருக்கிறாரே, தெரியுமா?" என்று கேட்டான். அதற்கு ராமராயர். 'தெரியாதே. அப்படி யாரும் என்னிடம் வந்து அறிமுகம் செய்து கொள்ளவில்லையே! அயல்நாட்டு வியாபாரிதான் சமீபத்தில் வந்தார்' என்றார்.

"உடனே நீ அந்த வியாபாரிதான் அவர் குறிப்பிடும் வேவுகாரர்" என்று ராமராயரிடம் விளக்கினாயாக்கும்." அவள் நடிப்பைப் புரிந்து கொண்டு அவனும் நகைக்கலானான்.

"அப்படி நான் கூறி உங்கள் வேஷத்தை அம்பலப்படுத்தி இருந்தால் நீங்கள் என்ன செய்வீர்களாம்?" என்று கேட்டு அமுத்தலாகச் சிரிக்கலானாள் ஆயிஷா.

"ஏதுமறியாத அயல்நாட்டு வியாபாரி ஐயா நான்! இந்த வயதுப் பெண் என்சாயலையொத்த யாரோ. வாலிபனைப் பார்த்து மனத்தைப் பறிகொடுத்து விட்ட மயக்கதில் ஏதேதோ கூறுகிறாள். அவள் கூறுவது எதையும் நம்பாதீர்களய்யா! என்று கூறுவேன்" குரலில் நடுக்கத்தை வரவழைத்துக்கொண்டு. கிழவனைப் போலப் பேசினான் யூசப்கான். இருவருமே கலகல வென்று சிரித்தார்கள்.

"நேற்று அரசியாரின் முன்னே இப்படிப் பேசியிருந்தால் என்னிடம் அகப்பட்டுக் கொண்டேயிருக்க மாட்டீர்கள்"

"உன் வடிவழகைக் கண்ட வயோதிகனும் வாலிபனாக மாறுவனே! அப்படியிருக்க இந்த வேஷதாரி வாலிபன் எப்படி வயோதிகனாக நடிக்க முடியும். நீயே சொல்!" என்று அவள் கருங்குழலை வருடிக் காதல் உள்ளத்தைக் குளிர்வித்தான். காதல்

திறக்கத்திலே கட்டுண்ட காரிகை யூசப்கானின் பரந்த மார்பிலே பச்சைக் குழந்தையாக ஒட்டிக் கொண்டாள்.

அந்த நிலையில் இந்த உலகத்தை மறந்த இருவரும். பன்னெடுங் காலமாக உலகத்துக் காதல் ஜோடிகள் ஏகாந்தத்திலே என்னென்ன பேசி வருகிறார்களோ அதை யெல்லாம் பேசிக் களித்தார்கள். அப்போது. அன்று காலை ராமராயருடன் பேசிக் கொண்டிருந்த தூதுவனின் பெயர் சித்திஹாஸன் என்பதைக் கூறியபோது யூசப்கான் தனக்கும் அவனுக்கும் திருமண விழாவிலே ஏற்பட்ட சந்திப்பை விளக்கி அவள் விழிகளை மலரவைத்தான்.

அந்தவேளையில் சித்திஹாஸன் தன்விழித்தூண்டிலை வீசிவிட்டு ஒரு மரத்தின் மறைவில் ஒதுங்கியவாறு யூசப் கானையே கவனித்துக் கொண்டிருந்தான். இரவு வேளைகளில் நெடுநேரத்துக்குப் பிறகே தூங்கும் பழக்கமுடைய அவன், தூக்கம் வரும் வரை பொழுதைக் கழிக்க நிலவு பூசி நிசப்தமாகக் கிடந்த விஜயநகரின் வீதிகளைக் கடந்து ஆற்றங்கரைக்கு வந்தான். தற்செயலாகத்தான் அந்தக் காதல் ஜோடிகளை அவன் காணநேர்ந்தது. முதலில், அது தான் காணுவதற்கு உவப்பான காட்சியல்ல என்று ஒதுங்கிப் போகவே நினைத்தான். அப்போது அவர்கள் பேச்சில் தனது பெயரும் கலந்து வருவதைக் கேட்டுத் திகைத்தவன் ஒதுங்கி நின்று உற்றுப் பார்த்த போது அவன் உள்ளம் கொதித்தது. அவனை அறியாமல் அவன் கை. முகத்துத் தழும்பைத் தடவிக் கொடுத்தது. அடுத்த உடை வாளையும் அதே கை உறுதியாகப் பற்றியது. ஆனால் உடனே தன்னை நிதானப் படுத்திக் கொண்டான் சித்திஹாஸன். அவன் பார்வைக்கு இலக்காகி இருந்தவன் யூசப்கான்தான். ஆயிஷாவை அவனால் பார்க்க முடியவில்லை. தூணின் மறைவில் இருந்த அவள் உருவம் அவன் பார்வைக்குப் படவுமில்லை. அவன் கவனமெல்லாம் கருத்தெல்லாம் பகையெல்லாம் யூசப்கானின் மீதே பதிந்திருந்தது. அவர்கள் சம்பாஷணையின் கடைசிப் பகுதியையே அவனால் ஒற்றுக் கேட்க முடிந்தது. அதிலிருந்து ஓரளவு புரிந்தும் கொண்டான். வேறொரு சமயமாக இருந்தால் மறைவிடத்திலிருந்து வெளிப்பட்டு, தனது விரோதியான அவனை மரணத்தின் வாயிலுக்கே அனுப்பியிருப்பான். ஆனால் சித்திஹாஸனுக்கு இன்னும் உடல் தேறவில்லை. வலுக்குன்றிய நிலையில் வாளைச் சுழற்றி விபரீதம் விளைக்க விரும்பவில்லை அவன். ஆகவே அவர்கள் கிளம்பும் வரை அமைதியாகவே தன் ஒளிவிடத்தில் காத்திருந்தான். அவனைப்

பின்தொடர்ந்து செல்வதென்ற முடிவுடன். யூசப்கானும் ஆயிஷாவும் அவனை அதிக நேரம் காக்க வைக்கவில்லை.

"இந்த வாலிபத் தோற்றத்தோடு இனி வராதீர்கள். அது வம்பில் கொண்டு விடலாம்" என்று கூறியபடியே எழுந்தாள் ஆயிஷா.

"கவலைப்படாதே. கண்ணே! விடுதிக்குச் சென்றதுமே என் உடையும் உருவமும் மாறிவிடும். ம்.... மறுபடி எப்போது நம் சந்திப்பு?" என்று அந்த மதிவதனத்தைத் தன் கரங்களில் ஏந்திக் கொண்டான் யூசப்கான்.

ஏந்திய கரங்களை எடுத்து ஒன்று சேர்த்து அவைகளில் தன் பட்டுக் கன்னத்தைப் பதித்து அணைத்தபடியே அரைக் கண் மூடிய ஆனந்த நிலையில், "பகலெல்லாம் பதைப்புடன் உங்கள் நினைவாகவே காத்திருந்து இரவெல்லாம் இங்கே ஓடி வந்து விடுவேன். ஆனால் இந்த நிலை மாறி என்றுமே நான் உங்கள் அருகிருக்கும்படி செய்வது உங்களிடம் தான் இருக்கிறது" என்றாள்.

"விரைவிலேயே இந்த அவல வாழ்விலிருந்து உன்னை விடுதலை செய்து அழைத்துப் போய் விடுகிறேன் ஆயிஷா! எனக்கு விடைகொடு. இன்று நான் உன்னோடு வர முடியாது. முக்கியமான காரியமாக வேறு வழியில் செல்லப்போகிறேன்" என்று கூறிப் பிரியாவிடை பெற்றுச் செல்லும் யூசப்கானைப் பின்தொடர்ந்தது அவள் பார்வை. விழிகளால் தொட முடியாத தூரத்துக்கு அவன் சென்று மறைந்ததும் அவள் குதிரை மீதேறித் தன் வழியில் விரைந்தாள்.

தன்னை விட்டுச் சென்ற காதலனை விரோதி ஒருவன் பின்தொடர்ந்து போகிறான் என்பதைப் பேதை அவள் அறியவில்லை. அவனும் அறியவில்லை. யூசப்கான் விருந்தினர் விடுதிக்குள் நுழைவதைக் கண்ட பிறகு சித்திஹாஸன் நேரே அரண்மனையை நோக்கித் தனது குதிரையை விரட்டிக் கொண்டு போனான்.

மறுநாள் விடியற் காலையில், மன்னருக்கும் மேலான மதிப்போடு வாழும் மகாமண்டலேசுவரர் ராமராயர் துயில் கலைந்து எழுந்தவர் தம் முகத்தை நிலைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டார். கமலம் போன்ற தமது கரங்களால் கண்களை ஒற்றி உறக்கத்தின் சாயலை ஒதுக்கி விட்டு வெளியே வந்தபோது அவரது தரிசனத்துக்காகக் காராம் பசு காத்திருந்தது. அதன் ப்ருஷ்ட பாகத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு திரும்பியதும் வேத விற்பன்னர்கள் வரிசையாக வந்து நின்று வாழ்த்துக் கூறினார்கள்.

காலைக் கடன்களை முடித்துக் கொண்டு உடற் பயிற்சிக் கூடத்துக்குப் போவதற்கு முன் நகரத்துக்கு வெளியேயுள்ள பெருவெளியில் குதிரை மீது அமர அதைச் சில மைல்கள் விரட்டிச் செல்வது வழக்கம். அத்தகைய குதிரைச் சவாரிக்குத் தயாராக ராமராயர் வெளியே வருவதற்கும் சித்திஹாஸன் படபடப்புடன் அவரைக் காண உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது. அந்த வேளையில் அப்படி அவனைக் கண்ட நரபதி, "தளபதியாரே! பனியில் நனைந்த ஆடையும், இடுங்கிய கண்களும் தாங்கள் இரவு தூங்கவில்லை என்பதைச் சொல்லு கின்றன. எங்கே போய் வருகிறீர்கள்? ஏன் இந்தப் படபடப்பு?" என்று கேட்டார்.

"எப்படித் தூங்க முடியும்? விஜயநகரத் திலே விரோதிகளின் ஒற்றர்கள் வந்து இந்நாட்டின் படை பலம் மற்றும் பல ரகசியங்களையும் சேகரித்துக் கொண்டு இரவிலே தனியாட்சி நடத்தும் போது...."

"என்ன...?" என்று இடைமறித்துக் கர்ஜித்தார் ராமராயர்.

"நகர சோதனை அதிகாரிகளையும் உள்நாட்டு ஒற்றர் களையும் நிகரில்லாத நகராட்சியையும் கொண்டது விஜயநகர சாம்ராஜ்யம் என்று பெருமை கொண்டிருந்தேன்"

"அந்தப் பெருமைக்குக் குறைவு வரும் படியான செயல் என்ன நடந்து விட்டது இப்போது?" சித்திஹாஸனின் குற்றச்சாட்டு அரவீட்டாரின் பொறுமையைச் சோதிப்பதாக இருந்தது.

"அகமது நகரிலிருந்து வந்துள்ள ஓர் ஒற்றன், விஜயநகரின் விருந்தினர் விடுதியில் தங்கி இருப்பதோடு அரண்மனை, அந்தப் புரங்களில் உள்ளவர்களோடும் தொடர்பு கொண்டு முக்கியமான அரசியல் ரகசியங்களைச் சேகரித்துக்கொண்டிருக்கிறான் என்ற செய்தி இன்னமும் தங்கள் கவனத்துக்குக் கொண்டு வரப்படாததை எண்ணித்தான் வியப்படைகிறேன்" என்றான் சித்திஹாஸன்.

"அப்படியா?... என்றவர், ஒரு விநாடி சிந்தனைக்குப்பின், அந்த வயோதிக வைரவியாபாரியைத் தானே சொல்கிறாய்?" என்று கேட்டார்.

"ஆமாம்" என்றவன் அதிசயத்துடன், "உங்களுக்கு உண்மை தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும், தெரியாது, இரண்டும் தான்!" என்றவர் எங்கோ பார்வையைப் பதித்து யோசனையில் ஆழ்ந்தார். ஓர் அந்நியன் வந்து

எச்சரிக்கை செய்யுமளவுக்கு சாம்ராஜ்யத்தின் நிர்வாகம் இருப்பதை எண்ணி அவர் உள்ளம் வெட்கத்தால் குன்றியது. சித்தி ஹாஸனின் முன்னிலையில் தம் சினத்தை வெளிப்படுத்தவோ விசாரணை நடத்தவோ விரும்பாத ராமராயர் சாதுரியமாகத் தம் உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டு. "அவனைச் சந்தித்த அன்றைக்கே சந்தேகங்கொண்டு கண்காணிக்கவும் சொல்லி விட்டேன். காரணத்தோடுதான் கைது செய்யாமல் சுதந்திரமாக உலவ விட்டிருக்கிறேன் அவனை. இதற்காகவா நீங்கள் இரவு தூங்காமல்..." என்று அவனை அநுதாபத்தோடு பார்த்தார்.

சித்திஹாஸனுக்குச் சப்பென்று போய் விட்டது. "எத்தனை தகவல்களைச் சேகரித்து வைத்திருந்தாலும் அவன் உயிருடன் திரும்பப் போவதில்லை. ஆகவே நீங்கள் நிம்மதியாகச் சென்று இரவு பறிகொடுத்த தூக்கத்தை நிறைவுபடுத்திக் கொள்ளுங்கள். எதிர் நோக்கியுள்ள யுத்தத்தைப் பற்றி உங்களோடு நிறையப் பேச வேண்டி இருக்கிறது. பிறகு சந்திப்போம்" என்று அவனை அனுப்பிய அதே வேகத்தில் நாட்டு நிர்வாகத்துக்குப் பொறுப் பாளியான திருமலையையும் காவல் படையின் தலைவனான வேங்கடாத்திரியையும் அழைத்து வரும்படி உத்தரவிட்டார்.

அழைக்க வந்த அதிகாரியிடமிருந்தே விஷயத்தை அறிந்து கொண்ட திருமலை வரும் போதே அண்ணாவிடம் சொல்ல வேண்டிய வார்த்தைகளை ஒத்திகை பார்த்துக்கொண்டு வந்திருந்தான். சித்திஹாஸனுக்காகச் சமத்காரமாகப் பேசினாலும், கூறிய பொய்யை எண்ணி அவர் உள்ளம் புண்ணாகி இருந்தது.

கோபத்தினால் மீசை துடிக்க நிற்கும் அண்ணாவைக் கண்ட திருமலைக்கு நடுக்கமாகத்தானிருந்தது. "நகர சோதனையில் ஈடுபட்டுள்ள நமது அதிகாரிகள் கொண்டு வந்த செய்தியின்படி அந்த அடிமைப்பெண் ஆயிஷாவை நேற்றுக் கைது செய்து வருமாறு உத்தரவிட்டேன். ஆனால், காதல் போதையிலே கட்டுண்ட விஜயநரகத்தின் தளபதியார் அவளை விடுதலை செய்து அழைத்துப் போய் விட்டார். உங்கள் உத்தரவு என்றதொரு பொய்யையும் அதற்குப் பயன்படுத்திக் கொண்டார்" என்றான் குரோதமுடன்.

அதே சமயத்தில் உள்ளே நுழைந்த வேங்கடாத்திரி, "அண்ணா தும்பை விட்டு வாலைப் பிடிப்பது போல உளவாளி யான வைர

வியாபாரியைக் கைது செய்யாமல் அபலை யொருத்தியை அழைத்து வரும்படி உத்தரவு அனுப்புவானேன்? அதிகார ஆசையிலே மன்னர் சதாசிவராயரோடு தாங்கள் செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதற்காகத்தானே அண்ணா அது?" என்று என்றுமில்லாத கோபத்தோடு கேட்டான்.

ஒரு விஷயத்திலிருந்து பல விஷயங்கள் துளிர்விடுவதைக் கண்ட ராமராயர் தம்பிகளின் முகத்தையே உற்று நோக்கினார். அதிலிருந்து அவர்களது உள்ளங்களையும் பார்த்தார். நேற்று திடீரென்று தம் முன் தோன்றிச் சிதார் வாசித்த ஆயிஷாவும் அவர் நினைவுக்கு வந்தாள். கள்ளம் புகுந்த உள்ளங்களைக் கண்முன்னே கொண்டு வந்து காரணகாரியங்களோடு நினைவு கூறுபோட்டுக் கொண்டிருக்கும்போது கபடற்ற குரலில் வேங்கடாத்திரி பேசினான்.

"அண்ணா, தாஙக்ள் ஆதில்ஷாவை மகனாக ஏற்றது போல ஆயிஷாவை என் சகோதரியாக வரித்து விட்டேன் என்ற உண்மை உங்களுக்குத் தெரியும். இதற்கு மேல் என் செயலுக்கு எவ்வித விளக்கமும் கூற விரும்பவில்லை."

ராமராயருக்கு வேங்கடாத்திரியின் உள்ளத்தையும் தெரியும். திருமலையின் திட்டங்களைப் பற்றியும் அறிவார். ஆகவே ஒரு முடிவுக்கு வந்தவராகத் திருமலையை நோக்கி, "உடனே விடுதியில் உள்ள அந்த வியாபாரியை - வேவுகாரனைக் கைது செய்து கொலைக் களத்துக்குக் கொண்டு போய்ச் சிரச்சேதம்" என்றவர் ஏதோ நினைத்தவராக, "வேண்டாம். அவனைக் கொல்ல வேண்டாம். பாதாளச் சிறையிலே பத்திரமாக அடைத்து வைக்க ஏற்பாடு செய்" என்றார். உத்தரவு பெற்றவன் அண்ணாவையும் தம்பியையும் உறுத்துப் பார்த்து விட்டு வெளியேறினான்.

திருமலை போனதும் வேங்கடாத்திரியின் அருகில் வந்த ராமராயர் அமைதியான குரலில், "சதிகாரர்களுடன் தொடர்பு கொள்ள வேண்டாம்; தப்பிச் செல்வதற்கு அது சரியான மார்க்கமுமில்லை என்று உன் சகோதரி ஆயிஷாவுக்கு எச்சரிக்கை செய்துவை." என்று சொல்லித் தம் குதிரையிலேறி உட்கார்ந்து வேகமாக அதை விரட்டிக் கொண்டு சென்றவர் காலைக் கருக்கலில் கலந்து போனார்.

# 23

# கெட்ட கனவாக மறந்துவிடு!

**ஆ**னந்தத்தின் அணைப்பிலே அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான் யூசப்கான். மகிழ்ச்சி மந்தகாசமிட்டிருந்தது அவன் முகத்தில். ஆயிஷாவின் நினைவு கனவாகிக் கண்ணிமைகளைத் திறக்க மனமில்லாத மயக்கத்திலே அவனை அழுத்திக்கொண்டிருந்தது. அப்போது விடுதியின் வாசலிலே வேகமாகப் பல குதிரைகள் வந்து நின்றன. அவைகளிலிருந்து வீரர்கள் பலர் இறங்கினார்கள். ஏதோ விபரீதம் என்பதைப் புரிந்து கொண்ட விடுதியின் அதிகாரி கலவரத்துடன் காரணமறிய வெளியே வந்தார். அந்நிய நாட்டு வைர வியாபாரி தங்கியுள்ள பகுதியை அவரிடம் கேட்டறிந்த வீரர்கள் வேகமாக அங்கு விரைந்தார்கள்.

விடிந்தும் விழித்துக் கொள்ளாத யூசப் கானை இழுத்துக் கொண்டு வந்து தலையாரியின் முன்னே நிறுத்தியபோது அவன் தடுமாறிக் கொண்டிருந்தான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. கனவுலகக் காதல் காட்சியின் கதாநாயகனான தன்னைக் காவல் வீரர்கள் சூழ்ந்து கொண்டிருப்பதைக் கண்டு கண்களைக் கசக்கி விட்டுக் கொண்ட போதே அவன் கைகளில் விலங்குகளை மாட்டினார்கள் விஜயநகரத்து வீரர்கள். யூசப் பானை அந்த நிலையில் கண்ட விடுதி அதிகாரியின் கண்கள் வியப்பினால் வெளியே வந்தன. தலையாரியின் கண்களிலோ கனல் பறந்தது. காரணம், வயோதிக வியாபாரி காசிம்கானாக அங்கு நிற்கவில்லை யூசப்கான். முதல் நாள் இரவு காதலியைக் களிப்பிக்கக் காளை யாகச் சென்றவன் உருவ மாற்றம் செய்து கொள்ளாமலேயே உறக்கத்தின் கிறக்கத்தில் மூழ்கிப் போயிருந்தான். தான் கைது செய்யப்பட்டதை அறிந்து கொள்ளவே அவனுக்குச் சில விநாடிகள் ஆயின. அப்போதும் தன் வேஷம் விளைவித்த விபரீதத்தை உணர்ந்து கொள்ளும் நிலையிலில்லை அவன்.

"அந்நிய நாட்டு வியாபாரிகளை இந்த நாட்டில் நடத்தும் முறை இதுதான் போலிக்கிறது? நேற்று அரச மரியாதை, இன்று அவமானம்!"

ஆத்திரத்தோடு கட்டிப் பிடித்து நின்ற காவலாளி களிடமிருந்து திமிறிக் கொண்டே உறுமினான் யூசப்கான்.

"நேற்றுவரை கிழவனாக இருந்து இன்று குமரனாக உருமாறும் உளவாளிகளுக்கு இந்த நாட்டின் தண்டனை என்ன என்பதையும் இன்னும் சற்று நேரத்தில் அறியப் போகிறாய்...ம்! கட்டி இழுத்துச் செல்லுங்கள் இவனை!" என்று தலையாரி உத்தரவு பிறப்பித்தபோது தான் அவன் தன்னைத் தானே பார்த்துக் கொண்டான். பதறியது நெஞ்சம். சிதறிப் போன தன் காரியங்களை எண்ணியபோது சினம் ஓடி ஒளிந்தது. குமையும் மனத்துடன் குனிந்த தலையுடன் அடங்கிப் போனான். வாதிட்டு வம்பு செய்ய வாயில்லாது வகையாக மாட்டிக் கொண்டோமே என்பதை நினைத்துக் கடமை தவறியதற்காகக் குன்றிப் போனான். அப்போது அவனது உதவியாளர்கள் இருவரையும் இழுத்து வந்தார்கள் சில வீரர்கள். உடல் நடுங்கத் தாங்கள் ஒரு பாவமும் அறியாதவர்கள் என்று ஓலமிட்டுக் கொண்டே ஓடிவந்து தலையாரியின் கால்களில் விழுந்து சலாமிட்டுக் கண்ணீர் ஒழுக நின்றார்கள் அவ்விருவரும்.

சிந்தனையையும் வேதனையையும் உதறி விட்டுத் தலை நிமிர்ந்தான் யூசப் கான். கம்பீரமாக, கணீரென்ற குரலில் கலங்காமல் கூறினான். "அவர்கள் ஏதுமறியாத அப்பாவிகள். ஊதியத்துக்காக ஆசைப்பட்டு என் பணியாளர்களாக என்னுடன் ஓடி வந்த அவர்களுக்கு என்னைப் பற்றியோ நான் மேற்கொண்டுள்ள காரியத்தின் நோக்கம் பற்றியோ ஏதும் தெரியாது. என் செயலின் விளைவாக நிரபராதிகளான அவர்கள் தண்டனை பெறுவதை நான் விரும்பவில்லை. தயவு செய்து அவர்களை விடுதலை செய்துவிடுங்கள்" என்றபோது அதற்கேற்ப அவர்களும் ஒன்றுமே தெரியாதவர்களைப் போல அற்புதமாக நடித்து உதடு துடிக்கப் பேச்சற்ற நிலையில் அடிக்கடி தலையாரியின் பாதங்களைத் தொட்டுத் தொட்டுச் சலாமிட்டுப் பதறியபடி, பரிதாபமாக நின்றார்கள். காவல் படையின் தலைவ னான தலையாரி ஒரு நிமிஷம் யோசித்தவாறே யூசப்கானையும் அவ்விருவரையும் உற்றுப் பார்த்தான். யூசப்கானின் கூற்றில் உண்மை இருக்கலாம் என்ற முடிவுக்கு வந்தவனாக "அவ்விரு வரையும் விடுதலை செய்து வெளியே விரட்டுங்கள்!" என்று கூறிவிட்டு வேகமாக வெளியேறினான். அந்நிலையில் அவர்கள் செய்ய வேண்டியது என்ன என்பதைப் பார்வையாலேயே அறிவித்து விட்டுக் கைதியாக நடந்தான் யூசப்கான்.

நடந்ததை அவ்விருவரும் நிஜாம்ஷாவிடமும் குதப்ஷா விடமும் கூறிவிடுவார்கள் என்ற நம்பிக்கைக்குப் பிறகே தன் நிலைபற்றிச் சிந்திக்கலானான். தான் இப்படிக் கைதியாகியதற்குக் காரணம்? தன்னைப் பற்றிய உண்மைகளையெல்லாம் அறிந்த அந்த ஒருத்தியிடம் தான் அவன் சந்தேகமெல்லாம் சரிந்தன. யாருடைய நினைவால் அவன் நெஞ்சமெல்லாம் குளிர்ந்ததோ நினைவெல்லாம் இனித்ததோ. அவள் நினைவு இப்போது நெருப்பாகச் சுட்டது உடலையும் உள்ளத்தையும். 'அந்தச் சதிகாரி சிந்திய சிரிப்பெல்லாம், சிதறவிட்ட சிங்காரப் பேச்செல்லாம் தன்னைக் கைதியாக்கிக் காட்டிக் கொடுக்கத்தானோ? பெண்ணின் அழகில் மயங்கி எத்தகைய பெருந் தவறு செய்து விட்டேன்? என் வேஷத்தை நான் அறிந்து கொள்ளாமல் அறிவிழந்து போனேனே! யாஅவல்ல, யா குதா! இத்தகைய அழகையும் படைத்து அத்துடன் எப்படிப்பட்ட அபாயத்தையும் அனுப்பி விட்டாய்?' என்று பெருமூச்செறிந்தவன் பேச்சற்ற நிலையிலே அந்தப் பெண்ணைப் பற்றி எண்ணலானான். 'விடுதலை வேண்டி வலிய வந்து உதவி கேட்டு விஷயத்தைக் கக்கிவிட்டுப் போய்விட்டாயே ஆயிஷா!' என்று விருப்புக் கொண்டவளிடம் வெறுப்பை வளர்த்துக் கொண்டு வந்தவனைப் பாதாளச் சிறையின் பயங்கரமான கதவுகள் வாயைத் திறந்து வரவேற்றன. அப்போது கிரீச்சிட்ட சிறைக் கதவுகளின் ஒலி முதல் நாளிரவு சிரித்து மயக்கிய சிங்காரியின் சிரிப்பாகத் தோன்றிச் சித்திரவதை செய்தது.

வறண்ட தன் வாழ்வுக்கு வான் மழையாக வருவாள் என்று யாரைப் பற்றி மனப்பால் குடித்துக் கொண்டிருந்தானோ. எந்த ஓர் ஒப்பற்ற அழகி தன் வாழ்வுக்கு ஒளியாக வருவாள் என்று கனவு கண்டு கொண்டிருந்தானோ. அவளே - அந்த ஆயிஷாவே - இந்த இருள் சூழ்ந்த பாதாளச் சிறைக்குள்ளே தன்னைத் தள்ளிக் கதவையும் மூடித்தாளிட்டுக் கொண்டு போவதற்குக் காரணமாக இருந்தாள் என்பதை எண்ண எண்ண அவன் இதயத்திலே ஏக்கம்தான் எஞ்சி நின்றது. திடீரென்று கண்கள் காணும் சக்தியையே இழந்து விட்டனவோ என்ற பீதி உண்டாயிற்று யூசப் கானுக்கு. அகலத்திறந்த கண் முன்னே ஆதியும் அந்தமுமற்ற அந்தகாரம் அடர்ந்து கிடந்தது. அதிலே ஓராயிரம் ஒளிப்பூச்சிகள் பறந்தன. அடுத்த விநாடி அவை ஓர் உருவமாக ஒன்று சேர்ந்து அந்த இருளிலே அவனது இமைக்காத விழிகளின் முன்னே ஒயிலாக வடிவெடுத்து வந்து நின்றாள், ஆயிஷா. 'வஞ்சகி' என்று வெறுப்போடு வெற்று வெளியை நோக்கிக் கையை

வீசினான். அந்த உருவெளித்தோற்றத்தை ஓட்டுவதற்கு. ஆனால் அதுவோ எட்டப்போய் நின்று கொண்டு கிட்டத்திலே வரும்படி அழைத்தது.

'ஒருவேளை தனக்கு நேர்ந்த இந்தக் கதிக்கு ஆயிஷா காரணமில்லாது போனால்?' அந்த எண்ணம் தோன்றியது போது விரிசல் கண்டு வேதனையுறும் நெஞ்சத்துக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருந்தது. "ஒருவேளை அவள் பயந்தது போலவே ஒப்பற்ற வேவு காரர்களைக் கொண்ட விஜயநகர சாம்ராஜ்யத்து ஆட்சியாளரே என் அரசியல் வேஷத்தின் ரகசியத்தை அறிந்திருப்பார்களோ?" அதற்குச் சாத்தியமே இல்லை என்று சாகஸம் பேசிய அவளையே குற்றவாளியாக்கிக் குமைந்தது மற்றொரு மனம். இப்படி அந்தப் பாதாளச் சிறையிலே பாமினிப் பாவையின் நினைவாகவே ஒரு கணம் அவளை வெறுத்தும் வேதனைப்பட்டும் மறு கணம் அவள் நினைவால் ஏங்கியபடியும் இத்தகைய எண்ணச் சுழலிலே சிக்கியவனாகத் தத்தளித்துக் கொண்டிருந்தான்.

'அந்தப்புரத்துக்கு வந்த வைர வியாபாரி பகை நாட்டின் வேவுகாரனாம். ஆகவே அவனைப் பாதாளச் சிறையிலே கொண்டு தள்ளியிருக்கிறார்களாம்! அந்த ஒற்றனோடு உறவாடி உளவுகளையும் சொல்லியிருக்கிறார்களாம் இங்கே உள்ள யாரோ ஒருவர்' என்ற செய்தி அரண்மனையெங்கும் பரவியது. அதைக் கேட்டு ஆயிஷா துடித்துப் போனாள். பதுங்கிய புலி பாய்ந்து விட்டது என்று எண்ணித் தவித்துக் கொண்டிருந்தபோது தளபதி ராயர் அந்தப்புரத்துக்கு வந்திருப்பதாகத் தகவல் வந்தது. அனர்த்தம் விளைந்து விட்டது என்று நடுங்கினாள் ஆயிஷா.

கொஞ்ச நேரத்தில் .வேங்கடாத்திரியிடமிருந்து அவளுக்கு அழைப்பு வந்தது. தாளமிடும் உள்ளத்தைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு, பொங்கி வரும் அழுகையை கட்டுப்படுத்திக் கொண்டு, குற்றவாளி மனப்பான்மை குனியவைத்த தலையுடன் தயங்கித் தயங்கி உள்ளே புகுந்தாள் ஆயிஷா. அது ஓர் அந்தரங்கமான அறை. அங்கு வேங்கடாத்திரி ஜ்வலிக்கும் நெருப்பாக நின்று கொண்டிருந்தான். அண்ணா திருமலை, அரசர் சதாசிவராயருடன் சதித் திட்டம் வகுத்திருக்கும் விஷயம் பற்றி அவன் அறிவான். அதை நிறைவேற்றவே ஆயிஷாவை அழைத்து வரத் தன் அதிகாரத்தைப் பயன்படுத்தியிருக்கிறார் என்று எண்ணினான். அவளைக் காப்பாற்றும்

பொறுப்பை ராமராயர் அவனிடம் ஒப்படைத்திருந்ததால் திருமலையின் ஆட்களிடமிருந்து அவளை விடுவிக்க நேற்று அந்த யுக்தியைக் கையாண்டு அவளைப் பெரிய அண்ணாவிடம் அனுப்பி வைத்தான் ஆனால் இன்று காலை ஆயிஷாவே குற்றவாளி என்பதை அறிந்தபோது அவன் அடைந்த அதிர்ச்சியும் ஆத்திரமும் கொஞ்ச நஞ்சமல்ல. அண்ணா திருமலை ஒரே கல்லில் இரண்டு கனிகளை அடிக்கும் தந்திரத்தைக் கையாண்டே நேற்று அவளைக் கைது செய்து அழைத்து வரும்படி தம் ஆட்களை அனுப்பியிருக்கிறார். அவருக்கு ஏமாற்றத்தை அளித்த வேங்கடாத்திரி தன்னை ஏமாற்றியவளை எதிர் நோக்கிக் காத்திருந்தான் இன்று.

கன்னியவள் வந்தாள், கலங்கிய கண்களோடு. நேற்று 'அண்ணா' என்று அபயக்குரல் எழுப்பியவளை எரித்துவிடுப வனைப் போலப் பார்த்துக் கொண்டு நின்றான் வேங்கடாத்திரி. அவன் வாய் திறக்கவில்லை. ஆனால் பார்வையே பல்லாயிரம் கேள்விகளாக அவள் இதயத்தைத் துளைத்துக் கொண்டிருந்தது. அவன் ஏதாவது கேட்டிருந்தால், ஆத்திரப்பட்டிருந்தால், ஆவேசமாகப் பேசியிருந்தால் கூட அவளுக்கு அது இதமாக இருந்திருக்கும். அவனது மௌனம் அவளைச் சித்திரவதை செய்தது. உரிமையோடு குற்றம் சாட்டி அவன் தன்னைக் கோபித்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பினாள் அவள். அவளே தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு கதற வேண்டும் என்று விரும்பினான் அவன். அவன் விருப்பமே நிறைவேறியது.

"இனப் பற்றும் மொழிப் பற்றும் என்னைப் பைத்தியமாக்கி அந்தப் பாமினி ஒற்றனின் பின்னால் ஓட வைத்தன அண்ணா! அதற்காக நீங்கள் என்ன தண்டனை அளித்தாலும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறேன். காரணம், தண்டனை அளிப்பது நீங்களானதால்" குரல் தழுதழுக்கக் கூறினாள் ஆயிஷா.

வேங்கடாத்திரி பதில் சொல்லவில்லை. தன் இமையாத விழிகளால் அவளை எடை போட்டுக் கொண்டிருந்தான்.

"அவன் ஒற்றன் என்பதை உணர்ந்த உடனேயே உங்களிடம் சொல்லி விடவேண்டும் என்றுதான் தவித்தது என் உள்ளம். ஆனால் ஏனோ அண்ணா! அதன் பிறகு தறிகெட்டுப் போன எண்ணங்கள் என்னைத் தடுமாற வைத்துவிட்டன." தாபத்தோடு பொருமினாள் பொற்கொடி

வேங்கடாத்திரியிடம் எவ்விதச் சலனமுமில்லை. அசையாச் சிலையாக அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவளே பேசினாள், "அண்ணா, உணர்ச்சிகளுக்கு மதிப்பளிக்கும் உத்தமர் தாங்கள் அதனால்தான் விஷமாக நினைக்கும் இந்த விஜய நகரத்திலே உங்கள் ஒருவருக்கு மட்டுமே என் மதிப்பையும் மரியாதையையும் உரிமையாக்கியிருக்கிறேன். என் உள்ளத்தைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் மட்டுமல்ல. அதன் அருமை தெரிந்த உங்களை உரிமையோடு ஒன்று கேட்கிறேன். என் உள்ளம் அந்த ஒற்றனிடம் ஒட்டிக் கொண்டதே. அது ஒரு குற்றமா?" கண்ணீர் உலர்ந்த விழிகளிலே காதல் ஒளி மின்னக் கேட்டாள் அவள்.

அப்போதும் அவன் பேசவில்லை. ஆனால் பார்வையின் உக்கிரம் தணிந்திருந்தது. அவனுடைய அந்த மௌனமோ அவளை வெறிகொள்ளச் செய்தது. மானாக மருண்டவள் வேங்கையாகச் சீறலானாள். "பேசமாட்டீர்களோ? எப்படிப் பேசுவீர்கள்? காபிரிகளாகிய நீங்கள் எனக்குச் செய்த கொடுமைகளோடு ஒப்பிடும்போது இது ஒன்றுமே இல்லை. என் இனத்தவனைக் காதலிக்கவும் செய்வேன். காட்டிக் கொடுக்கவும் மாட்டேன்" என்று கர்ஜித்தாள்.

இப்போதும் வேங்கடாத்திரி வாய் திறக்கவில்லை. அவன் விழிகளில் அமைதி பிறந்திருந்தது. புருவங்களை நெரித்து வெளிகொண்டிருக்கும் அவளையே வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தான். அவனது பேசாநிலை அவளை மேலும் பொங்க வைத்தது. "இந்த நரகத்திலிருந்து விடுபடுவதற்கு நான் எதையும் செய்வேன். என் பெற்றோர்களைக் கொன்றவர்களைப் பழிவாங்கு வதற்கு ஏற்ற தருணத்தை எதிர்பார்த்திருந்த எனக்கு உதவுவதற் காகவே அல்லாஹ் அந்த வேவுகாரனை இங்கு அனுப்பி யிருந்தார். அவனுடன் நான் உறவாடுவதைக் குற்றமாக்கிக் குறை கூறித் தண்டிக்க இந்தக் குவலயத்தில் யாராலும் முடியாது. உங்களால் கூடத் தான் அண்ணா, உங்களால் கூடத்தான்!" என்று உறுமியவளின் குரல் கம்மிக் கிடந்தது. இருளிலே எதையோ கற்பனை செய்து கொண்டு பயந்து கதறும் குழந்தையைப் போல, குற்றவாளி மனப்பான்மையால் குதறப்பட்டவள், வேங்கடாத் திரியின் மௌனத்தால் மன வேதனை கொண்டவள், தண்டிக்கும் அவனது பார்வையைத் தாங்க முடியாமல் தன்னை மறந்து ஆத்திர வசப்பட்டு ஏதோதோ பிதற்றிக் கொண்டிருந்தாள். வேங்கடாத்திரியோ வாய் பேசாமல் அவளது

உணர்ச்சிகளை வற்றடித்துக்கொண்டிருந்தான். இப்படிப் பலப் பல பேசியதால் தன் பலவீனத்தைத்தான் வெளிப்படுத்திக் கொண்டாள் ஆயிஷா. அவனது ஆத்திரத்தைக் கிளறி அவனைப் பேச வைக்க விரும்பியவள், தானே பேசிக் கொண்டிருந்தாள். பயந்து நடுங்கி வந்தவள் பயம் மாறிப் போனாள். ஆத்திரப்பட்டாள். அழுதாள், ஆர்ப்பாட்டம் செய்தாள், கெஞ்சினாள், கொஞ்சினாள், தான் குற்றமற்றவள் என்று குமுறினாள். குற்றவாளிதான்; குறைகூற முடியாது என்று கொதித்தாள். இப்படி வெகு நேரம் பேசி முழக்கியவள் இனிப் பேசுவதற்கு ஏதுமில்லாதவளைப் போல முடிவில்லா ஏக்கமுடன் துவண்டுபோனாள். வெறி அடங்கிய நிலையில் அவளிடமிருந்து விம்மல்கள்தான் வெளிப்பட்டன. வேங்கடாத்திரியின் கரங்களைப் பற்றி எடுத்து அதில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு குழந்தையைப் போலக் கோவென்று கதறி அழுதாள் ஆயிஷா.

"அண்ணா! என்னை ஏன் இப்படி உங்கள் மௌனத்தால் வதைக்கிறீர்கள்? விழியால் குத்துவதை விட வாளால் கொன்று விடலாமே. அண்ணா! நான் செய்த குற்றத்துக்கு வேறு எந்தத் தண்டனையாவது கொடுங்கள். என்னோடு பேசாதிருக்கும் இந்தத் தண்டனையை என்னால் தாங்கவே முடியவில்லை. விரோதி நாட்டு ஒற்றனிடம் உள்ளத்தைப் பறிகொடுத்தேன். உண்மை. ஆனால் அது பருவத்தின் கோளாறு என்று உங்களுக்கே தெரியும். அவரோடு ஓடிவிடத் திட்டமிட்டேன். உண்மை. உங்களைத் தவிர இங்கு என்னிடம் உண்மையான அன்போ அனுதாபமோ உள்ளவர்கள் யாருமில்லாதபோது இங்கு என்னால் எப்படி அண்ணா வாழ முடியும்? உங்கள் சகோதரி சந்தோஷமாக வாழுவதற்கு நீங்கள் தடை செய்ய மாட்டீர்கள் என்றே இத்தகைய முடிவுக்கு வந்தேன். அது தவறானால் நீங்கள் தரும் எந்தத்தண்டனையையும் ஏற்றுக் கொள்ளுகிறேன். எங்களை வாழ வைப்பதோ சாகடிப்பதோ இனி உங்கள் கையில்தான் இருக்கிறது."

தன் கால்களில் சரிந்தவளைத் தாங்கிக் கொண்டான் வேங்கடாத்திரி. தேம்பியழும் அவளைத் தேற்றுவதற்கு இப்போது அவன் பேசத்தான் வேண்டியிருந்தது. கண்ணீர்க் கறை படிந்த அவளது கன்னங்களைத் துடைத்தவாறே, "நடந்தவைகளை யெல்லாம் கெட்ட கனவு போல் மறந்து விட்டு. ஏதுமே நிகழாதது போல இருந்து விடு என் அருமைச் சகோதரிக்கு நான் இந்த நிலையில் கூறும் அறிவுரை இதுதான்" என்றான் சுருக்கமாக.

"கனவாக மறப்பதா? ஐயோ! அது எப்படியண்ணா முடியும்? இன்றைய என் நினைவில் நிறைந்திருப்பதெல்லாம் அதுதானே அண்ணா, அப்படி இருக்க... " ஆயிஷாவின் குரல் பரிதாபமாக ஒலித்தது.

"எப்படியானாலும், என் சகோதரியாகத் தகுதி பெற்ற உனக்கு எதையும் தாங்கும் இதயமும் இருக்க வேண்டும்" என்று கூறியபடியே அவளது பதிலையும் எதிர்பாராமல் அங்கிருந்து வெளியேறினான். அவளது விம்மல்கள் அவனைத் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தன. அந்த அபலைப் பெண்ணின் ஆத்திரமும் அழுமையும், விருப்பு வெறுப்புகளும் காதலும் கண்ணீரும் பலம் பெற்ற இந்த சாம்ராஜ்யத்தை எவ்விதத்திலும் குலைத்துவிட முடியாது என்ற அசைக்க முடியாத நம்பிக்கை யுடன் இதயத்தில் வந்து தாக்கும் அவள் அழுகையை லட்சியம் செய்யாதபடியே நடந்து கொண்டிருந்தான் அரவீட்டு இளவல் வேங்கடாத்திரி.

வெற்றி நகரத்து மக்களின் சிந்தனையெல்லாம், செய லெல்லாம் வரப்போகும் மகத்தான விஜயதசமி விழாவைப் பற்றியே திட்டமிட்டுக் கொண்டிருந்தன. சாம்ராஜ்யத்திலே நடக்கும் பல்வேறு திருவிழகர்களில் இதுவே சிறப்பு மிக்க பெரு விழா. ஒன்பது தினங்கள் ஒப்புயர்வற்ற முறையிலே கொண்டாடப்படும் இந்த மகா நவமி. பரந்த சாம்ராஜ்யத்தின் பல்வேறு பகுதிகளிலு முள்ள தளவாய்கள், திவான்கள், தளபதிகள், மண்டலாதிபதிகள், அத்தனைபேரும் இந்த விழாவிலே கலந்து கொள்ளுவதற்காகத் தலைநகருக்கு வருகை தருவார்கள் தங்கள் விசேஷப் படை களுடன். மகாநவமி முடிந்த பத்தாவது நாள் விஜயதசமியன்று மன்னர் தம்பெரும் படை பலத்தைப் பார்வையிட்டு மகிழ்வார். ஆண்டுக்கு ஒரு முறை படை வீரர்களுக்கும் படைக் கலன்களுக்கும் கௌரவமளிக்கும் கலை விழா அது. அன்று மன்னர் விருதுகள் வழங்குவார். சன்னதுகளைக் கொடுப்பார். பட்டங்கள், பதவிகள், சன்மானங்கள், தான தருமங்கள் எல்லாமே தடபுடல் படும். ஒவ்வொரு ஆண்டும் ஒன்பது நாட்கள் இந்த விஜயதசமி விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடினாலும் இந்த ஆண்டு அந்த விழா விசேஷ முக்கித்துவம் பெற்றதாக இருக்கும் என்று நகர மாந்தர் பேசிக் கொண்டார்கள். அழைப்பு ஏதுமின்றியே சாம்ராஜ்யத்தில் பரந்து கிடக்கும் அதிகாரிகள், அரசியல் நிர்வாகிகள் அரசரைத் தரிசனம் செய்து போக வருவது வழக்கம். ஆனால் இவ்வாண்டு அரண்மனையிலிருந்து விசேஷ அறிக்கை ஒன்று எல்லோருக்கும்

அனுப்பப்பட்டிருந்தது. அவசியம் ஒவ்வொருவரும் தங்களால் எத்தனை வீரர்களைச் சேகரித்துக் கொண்டு வர முடியுமோ அத்தனை படைகளுடனும் பெரு விழாவுக்கு வந்துவிடவேண்டும் என்பதைத்திருவோலை வற்புறுத்தியது. ஆகவே இவ்வாண்டு இதுவரை காணாததொரு மகத்தான காட்சியைக் காணும் வாய்ப்பு இருக்கிறது என்று குடிமக்கள் கூடிப் பேசிக் கொண்டார்கள்.

விரோதிகளின் நெஞ்சமெல்லாம் பொறாமையால் வீங்கும்படியான பொருட் செல்வமும் போர்ச் செல்வமும், கலைச் செல்வமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற விஜய நகர சாம்ராஜ்யம் விஜயதசமி விழாவுக்கான ஏற்பாடுகளில் முழு மூச்சுடன் முனைந்திருந்தது. அரண்மனை அந்தப்புரம், அங்காடிகள், ஆலயங்கள் எங்கும் இதே பேச்சு. உற்சவ நாள் நெருங்க நெருங்க எங்கும் ஒரே பரபரப்பு. பூரிப்பு, திட்டமிட்டுக் கட்டப்பட்ட அழகான வீதிகளையுடைய விஜயநகரை விதவிதமாக அலங்கரித்திருந்தார்கள் நாட்டு மக்கள்.

நகரில் உள்ள பிரதானமான பகுதியில் பரந்ததொரு இடத்தில் விஜயதசமி விழாவிற்கான அற்புதமான அரங்கமொன்று நிர்மாணிக்கப் பட்டிருந்தது. மூன்று நான்கு அடுக்குகளைக் கொண்ட அது ஒரு அரண்மனையைப்போலவே காட்சியளித்தது. வண்ணப் படுதாக்களாலும் பொன் இழைகளைக் கொண்டு நெய்யப்பட்ட துணிகளாலும் தூண்களும் சுவர்களும் விதானங்களும் விமரிசையாக அலங்கரிக்கப்பட்டிருந்தன. ஒன்பது நாள் பூஜைக்குரிய துர்க்கையின் விக்கிரகம் இந்த அரங்கத்தின் முக்கிய பகுதியில் இடம் பெற்றிருந்தது. மன்னரும் அவரைச் சார்ந்த அரண்மனை வாசிகளும் அவரவர் தகுதிக்கேற்ப வந்து இருந்து பூஜையிலும் அதையொட்டி நிகழும் கலை நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுவதற்கான இட வசதியோடு கட்டப்பட்டிருந்தது அந்தப் பிரம்மாண்டமான அரங்கம். ஆடல் பாடல்களுக்கும் மற்போர், விற்போர், வாள் வீச்சு, குதிரை, யானை இவைகளைக் கொண்டு நடத்தும் விளையாட்டுகளுக்கும், அவற்றைக் காண வந்து கூடும் பெருந்திரளான மக்கள் கூட்டம் வசதியாக இருந்து பார்ப்பதற்கு ஏற்ற வகையிலும் அந்த அரங்கம் அமைக்கப் பட்டிருந்தது.

இந்த ஒன்பது நாள் விழா துர்க்காஷ்டமி, மகாநவமி, விஜயதசமி என்று மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. முதல் மூன்று நாளும் நாட்டின் நல்வாழ்வு, மன்னரின் அரசியல் அதிகாரம், தேகாரோக்கியம்

இவைகளுக்காகத் துர்க்கா தேவிக்குப் பூஜை செய்யப்படும். போர்க் கருவிகள், குதிரை, யானை முதலியவற்றை வழிபடும் மகாநவமி அடுத்த மூன்று நாட்கள் கொண்டாடப்படும். கடைசி மூன்று தினங்களான விஜய தசமியின்போது நடத்தப்படும் பூஜைகளுக்குப் பிறகு மன்னர் தம் படைகளுடன் விரோதி நாட்டின் மீது படையெடுத்துச் செல்வதற் காக ஆயத்தமாவார். ஆக இந்த ஒன்பது நாட்களையுமே போரிலே வெற்றி வாகை சூடி வரவேண்டுமென்று யுத்தத்தின் அதிதேவதைகளின் ஆசியைப் பெறுவதற்காக நடத்தப்படும் பெருவிழா என்றே கூறலாம்.

மன்னரின் பிரதிநிதியான மகாமண்டலேசுவரர் ராமராயர் வருகை தந்த போது ஜனசமுத்திரம் ஆரவாரமிட்டது. கம்பீரமான தோற்றமுடைய ராமராயர் தமது தம்பிகள் பின்தொடர அரங்கிற்கு வந்தபோது வேதவிற்பன்னர்களான பிராமணர்கள் வாழ்த்துக் கூறி வரவேற்றார்கள். பிறகு ரோஜா மலர்களைக் கொண்ட பொற் குடலைகளை அவர் முன் நீட்டினார்கள். பதினோரு அழகிய குதிரைகளும் நான்கு யானைகளும் அற்புதமான அலங்காரங் களுடன் அங்கு வரிசையாக நிறுத்தப்படடிருந்தன. குடலைகளி லிருந்து இரண்டு கைநிறைய மலர்களை அள்ளிக் குதிரகளின் மீது வீசினார் ராமராயர். இப்படி மூன்று தடவை அவற்றின் மீது மலர்களைத் தூவிய பிறகு புரோகிதர்கள் குதிரைகளின் அருகில் சென்று அவைகளுக்குத் திலகமிட்டு தூப தீபங்காட்டி அசுவ பூஜை நிகழ்த்தி ஆரத்தி எடுத்தார்கள். இதே போல ராமராயர் யானைகளின் மீது மலர்க் குவியல்களை வாரி இறைத்ததும் முறைப்படி கஜபூஜை செய்யப்பட்டது. பிறகு துர்க்கை கொலு வீற்றிருக்கும் மண்டபத்துக்குச் சென்று உடல் தரையில் பதிய விழுந்து வணங்கி எழுந்தார் அரவீட்டு முதல்வர். பூஜைகள் முடியும்வரை பொறுப்போடிருந்து வழிபட்ட பின் தமக்கென அமைக்கப்பட்டுள்ள இருக்கைக்குத் திரும்பினார் தம்பிகளுடன்.

பிற்பகலில் தான் விழாவையொட்டி ஏற்பாடு செய்யப் பட்டுள்ள விளையாட்டுக்கள் தொடர்ந்து நடைபெறுவது வழக்கம். அப்போது மன்னரும் மற்ற அரண்மனை வாசிகளும் அரங்குக்கு வந்து இந்தக் கேளிக்கைகளைக் கண்டு களிப்பார்கள். வனப்பு மிக்க வனிதையர் தங்கள் உடல் வலிவைக் காட்ட மற்போர் புரிவது விழாவின் விசேஷ அம்சம். குதிரைகளையும் யானைகளையும் கொண்டு அதிசயமான

சாதனைகளைச் செய்து காட்டுவார்கள் வீரர்கள். ஒன்பது நாளும் மாலையிலே சாம்ராஜ்யத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்துள்ள நளவாய்கள், மண்டலாதிபதிகள் ஆகியவர்களுக்குப் பேட்டியும், அவர்களோடு வந்திருக்கும் படைகளின் அணிவகுப்பைப் பார்வையிடுவதும் நடைபெறும். இரவு இரண்டாம் ஜாமம்வரை மாலையில் பார்த்தவர்களுக்கு ராஜ மரியாதைகள் நடைபெறுவது வழக்கம். இப்படி ஒன்பது நாட்களும் ஒப்பற்ற முறையிலே விஜயதசமித் திருவிழா கோலாகலமாக நடந்து முடிவுக்கு வந்தது. மறுநாள்....

சாம்ராஜ்யத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்திருந்த படை வீரர்கள் தலைநகரில் கடலைப் போலக் குவிந்தனர். தமிழ் நாடு, மலையாளம், கன்னட தேசம்' ஆகிய இடங்களிலிருந்தெல் லாம் இவ்வாண்டு விஜயதசமி விழாவிற்கான விருந்தினர்களாகப் படையணிகள் வந்திருந்தன. குதிரைகளும் யானைகளும் எண்ணி மாளாத அளவுக்கு இடம் பெற்றிருந்தன. இத்தனை பேருக்கும் இடம் கொடுத்து, உணவு கொடுத்து, படைக்கலன் கொடுத்து உபசரிக்கும் நிலையில் இருந்தது அந்தப் பரந்த சாம்ராஜ்யம்.

பத்தாவது நாள், அணிவகுத்து நிற்கும் அத்தனை படைகளையும் பார்வையிட்டுப் பரவசமடைந்த ராமராயர் அவர்களுக்கு மகிழ்ச்சியூட்டும் செய்தியொன்றை அறிவித்தார், "வெற்றிகொள்ள முடியாத நம் விஜயநகரத்தை வீழ்த்த வேண்டுமென்று வீணாசை கொண்டு அதற்கான போர் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள் நமது விரோதிகள். எத்தனையோ ஆண்டுகளாக முயன்றும் முடியாத ஒன்றைச் சாதிக்க ஒன்று சேர்ந்திருக்கிறார்கள் பாமினி சுல்தான்கள். அவர்களின் ஆசையைப் பகற்கனவாக்கிவிட வேண்டும் நீங்கள். வெகு நாட்களாகக் காத்திருந்த மகத்தான சந்தர்ப்பம் வந்திருக்கிறது உங்களுக்கு. உங்கள் வீரத்தினால், தீரத்தினால், தியாகத்தினால் வளர்த்த இந்த நாட்டிலே விரோதிகளின் காலடிபடுவதைப் பார்த்துக் கொண்டிருப்பீர்களா நீங்கள்?" என்று கேட்டபோது, 'மாட்டோம்! மாட்டோம்!' என்று பேரொலி எழுப்பித் தங்கள் உணர்ச்சியை வெளிப்படுத்தினார்கள் போர் வீரர்கள். மகிழ்ச்சி பூத்த முகத்தோடு மகா மண்டலேசுவரர் கையமர்த்தி அவர்களை அமைதி கொள்ளச் செய்த பின், "... ஆகவே அவர்களுக்குச் சரியான பாடம் கற்பிப்போம். இனி எந்நாளுமே தலை நிமிராதபடி அவர்களை அடக்கி ஒடுக்கி

அவர்களின் ஆணவத்தைக் குலைப்போம். விஜயநகரம் விரைவிலேயே போர்க் கோலம் பூண்டு புறப்படும்" என்று அறிவித்த போது கடலலைபோலக் கரகோஷம் செய்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். திண்தோள் தட்டித் தாவிக் குதித்து அருகில் உள்ள வீரனைக் கட்டியுருட்டித் தங்கள் ஆனந்தத்தை வெளிப்படுத்தினார்கள் பலர். மீசையை முறுக்கியபடி அமைதியாகப் போர்க்களத்திலே தாங்கள் புரியப் போகும் சாகஸங்களை நினைத்து மகிழ்ந்து கொண்டிருந்தார்கள் சிலர். வாளைச் சுழற்றிக் கும்மாளமிட்டனர். வேலை வீசி வீரம் காட்டினர். 'போர், போர், போர்' என்றபோதே அவர்களின் உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளலாயிற்று. வீரர்களின் விண்ணார்ந்த மகிழ்ச்சி ஆரவாரத்தினிடையே மகாமண்டலேசுவரர் அரண்மனைக்குக் கிளம்பினார். யுத்த அறிவிப்பு நகரமெங்கும் காட்டுத் தீப்போலப் பரவியது.

## 24

# மோதிரம் செய்த மோசம்

**வி**ஜயதசமி விழாவிலிருந்து திரும்பும் கணவனை மங்கள ஆரத்தி எடுத்து வரவேற்கக் காத்திருந்தார்கள் அந்தப் புரத்திலே. தங்கத் தாம்பாளத்திலே மஞ்சளும் சுண்ணமும் கலந்து குங்கும வண்ண நீரிலே ஜோதிகள் சுடர் விட்டுக் கொண்டிருக்க, அந்த நந்நீரிலே வைரம், வைடூரியம், மாணிக்கம் மரகதம், நீலம், கோமேதகம், புஷ்பராகம், பவழம், முத்து ஆகிய நவமணி களையும் தூவி இருந்தார்கள். தீபஒளியிலே அவை ஜ்வலித்துக் கொண்டிருந்தன. அரவீட்டுச் சோதரர் அரண்மனை வாயிலை அடைந்ததும் அவர்களின் பத்தினிமார் அகமும் முகமும் மலர முன் வந்து தங்கத் தாம்பாளத்தைத் தாங்கி நின்ற பாங்கியரிடமிருந்து அந்த ஆரத்தியை வாங்கி திருஷ்டி சுற்றி வீரத்திலகமிட்டு வரவேற்றுத் தங்கள் கணவன்மார்களை அந்தப்புரத்துக்கு அழைத்துக் கொண்டு போனார்கள் ராஜபுவரா ராமராயரின் ராணிகள் எல்லோரும் ஒரே இடத்தில் கூடுவது இந்த ஒருநாளில் தான். ஒன்பது நாளும் உபவாசமிருந்து தேவியை வழிபட்டு வரம் பெற்று வரும் தங்கள்

கணவரைத் தேவிமார் கடவுள் ஸ்தானத்தில் வைத்து உபசரிப்பார்கள். இந்த ஒப்பற்ற விஜயதசமி விழாவுக்குப் பிறகு.

அலியா ராமராயரை நவரத்தினங்கள் வைத்து இழைக்கப் பட்ட இருக்கையொன்றில் அமர்த்திச் சூழ்ந்து கொண்டார்கள் அவரது பத்தினிகள். திருமலாம்பா, தெய்வசிந்தாமணி, சத்தியபாமா, சுபத்ரா, மோஹினி, காமவாரிணி என்று இப்படி ராமராயரின் ராணிகள் அத்தனை பேருமே அங்கு வருகை தந்திருந்தார்கள். துங்கபத்திரையாற்று நீர் அவர்கள் இருந்த வசந்த மண்டபத்தைச் சுற்றிச் சலசலத்து ஓடிக் கொண்டிருந்தது. புண்ணிய தீர்த்தங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட புனித நீர் பொற்குடங்களில் வைக்கப்பட்டிருந்தன அபிஷேகத்துக்காக. வாசனைத் திரவியங்களும் பாலும், பழமும், பன்னீரும், பாங்காக இடம் பெற்றிருந்தன. மங்கள ஸ்நானத்துக்குப் பிறகு அணிந்து கொள்ள ஆடை ஆபரணங்களை அழகாக அடுக்கி வைத்திருந்தார்கள். அறுசுவைக்கும் மேலாகப் பல்சுவையோடு கூடிய பாரணை உணவு தயாராகிக் கொண்டிருந்தது.

மகா மண்டலேசுவரராகிய தங்கள் கணவருக்குத் தைலக் காப்பிட்டார்கள் பத்தினிகள். பாட்டும் பரிகாசமும் வேடிக்கையும் விளையாட்டுமாக, மனைவிமார்களின் மனம் கோணாதபடி மங்கள ஸ்நானத்தை முடித்துக் கொண்டு அவர்கள் அன்புக்குக் கட்டுப் பட்டு அலங்காரங்களையும் செய்து கொண்டு விருந்துண்ண உட்கார்ந்த போதுதான் அவர்கள் அவரைக் கேள்விகளால் மொய்க்கலானார்கள். எல்லாமே அவர் மேற்கொண்டுள்ள மகத்தான போர்ப் புறப்பாட்டைப் பற்றித்தான்.

"நம் மகன் ஆதில்ஷாகூடவா அந்தச் சதிகாரர்களோடு சேர்ந்து கொண்டு விட்டான்?" என்று கேட்டாள் தேவி திருமலாம்பா.

"ஆதில்ஷா தான் அவர்களுக்கு ஒரு பிரச்சினையாக இருக்கிறான். நம் நாட்டையும் உறவையும் முறித்துக் கொள்ள விரும்பாத அவனை வற்புறுத்துகிறார்கள். இனத்தையும் மதத்தையும் எதிரே வைத்து, இன்று வரை அவன் நம் எதிரியல்ல. நாளை எப்படியோ?" என்றார் ராமராயர்.

"இந்தப் போரைத் தவிர்ப்பதற்கான மார்க்கம் ஏதுமில்லையா? அல்லது பயன்படுத்தவில்லையா?" என்றாள் இளமனைவி சத்தியபாமா ஏக்கமுடன். அவள் கண்கள் கலங்கின. ஏதோ ஓர் இனத்தெரியாத திகில்

அவள் உள்ளத்தை உலுக்கிக் கொண்டிருந்தது. தாம்பூலம் தயாரிப்பதில் வல்லவளான அவள் அதில் ஈடுபட்டிருந்தாள்.

"வளர்ந்து விட்ட விஜயநகர சாம்ராஜ்யத்தின் புகழிலே பொறாமை கொண்டவர்கள் போருக்கு வருகிறார்கள். அவர்களை ஓட்டுவது ஒரு பெரிய காரியமே இல்லை. எத்தனை பேர் சேர்ந்து வந்தாலும் இந்தச் சாம்ராஜ்யத்தை அசைக்க முடியாது என்பதை அவர்கள் தெரிந்து கொள்ளும்படி செய்யப் போகிறேன். வெற்றி நிச்சயம் என்று தெரிந்தே செயல்படும் ஒரு போர் இது. ஆகவே உங்களில் யாருமே கொஞ்சமும் அஞ்ச வேண்டாம்" என்று ஆறுதல் கூறினார் அரவீட்டு முதல்வர்.

"ஆதில்ஷாவின் தூதுவன் யாரோ வந்திருந்ததாகக் கேள்விப்பட்டோமே. பலனுள்ள செய்தியாக ஏதாவது அனுப்பி இருந்தாரா பீஜப்பூர் சுல்தான்?"

"தூதனாக வந்தது சாதாரண ஆளல்ல. தம் தளபதி சித்திஹாஸனையே அல்லவா அனுப்பி இருந்தார் அலி ஆதில்ஷா. அவன் என்னுடன் ஓர் ஒப்பந்தமே செய்து கொண்டு போயிருக்கிறான்" என்றவர் அதைப் பற்றி விளக்கிய போது மகாமண்டலேசுவரரின் மகிஷிகளிடையே மகிழ்ச்சி கலந்த புகழ்ச்சிக்குரல்கள் கிளம்பின. தாம்பூலத்தைச் சுவைத்துக் கொண்டே மனைவிமார்களின் மனத்தையும் குளிர்வித்துக் கொண்டிருந்தார் ராமராயர்.

இந்தக் குதூகலமான காட்சிகளைக் கண்டும் காண விரும்பாதவாறு ஒதுங்கிப் பதுங்கிக் கிடந்ததோர் உருவம். ராமராயர் சித்திஹாஸனுடன் தாம் செய்து கொண்டுள்ள திட்டத்தைப் பற்றி விளக்கியதைக் கேட்டுத் திடுக்கிட்டது. அதை உன்னிப்பாக ஒரு வார்த்தை விடாமல் உற்றுக் கேட்டுக் கொண்டபின் மெல்ல அங்கிருந்து நழுவியது நடுங்கும் உள்ளத்துடன்.

யூசப்கான் கைதியான செய்தியோடு குதப்ஷாவிடம் போய்ச் சேர்ந்தார்கள் ஒற்றர்கள் இருவரும். சிறந்ததொரு வீரனை இழந்த வேதனையில் மனம் வருந்தினார் இப்ரஹிம். அந்த இழப்புக்கு ஈடு செய்வது போல, தப்பி வந்தவர்கள் பல காரியங்களைச் சாதித்து வந்திருந்தார்கள். விஜயநகரத்து ராணுவத்திலே பணி புரியும் இஸ்லாம் இனத்துத் தளபதிகள் பலரைத் தக்க சமயத்திலே தங்களுக்குச் சாதகமாகச் செயல் புரியும் படி உறுதிமொழி வாங்கி வந்திருந்தனர் ஓடி வந்திருந்தவர்கள்.

பாமினி ராஜ்யங்கள் போருக்கான ஆயத்தங்களிலே அதிதீவிரமாக ஈடுபட்டிருந்தன. அகமதுநகர் கோல்கொண்டா, பீடார் ஆகிய ராஜ்யங்கள் படைகளையும் படைக் கலன்கைளயும் குவிக்கலாயின. 'முஸ்லிம்களாகிய நாம் மதிப்போடு, தன்மானத்தோடு தலை நிமிர்ந்து வாழ வேண்டுமானால் இந்தப் போரிலே வெற்றி பெற்றாக வேண்டும்' என்ற வேகத்தை உண்டாக்கி இருந்தார்கள் மக்களிடையே. திட்டப்படி எல்லாமே திருப்திகரமாக நடந்து வந்தது. ஆனால் ஒப்புக் கொண்டபடி ஆதில்ஷாவின் ஒததுழைப்பு தான் இருக்கவில்லை. இது குதப்ஷாவையும் நிஜாம்ஷாவையும் குழப்பத்திலாழ்த்திக் கொண்டிருந்தது. கூட்டணிப் படைகள் பீஜப்பூர் பகுதியில் தான் வந்து குவிய வேண்டும் என்பது ஒப்பந்தம். படைகளைக் கொண்டு வந்து குவிப்பதற்கு அனுமதியளித்து விட்டார் ஆதில்ஷா. ஆனால் அவரோ போர்ச் செயலில் அக்கறை இல்லாதவரைப் போல் ஆர்வம் காட்டாமல் அமைதியாகவே இருந்தார். அவரைக் குற்றம் சாட்டிக் குறை கூறவும் வழியில்லை. பீஜப்பூரும் போர்க் கோலம் பூண்டே விளங்கியது. அதன் பெரும் படையணிகள் தயாராகவே இருந்தன. ஆனால் இவர்களோடு வந்து சேரவில்லை. தனித்தே நின்றது தன்னிச்சைப்படி. படைபலத்தில் மட்டுமல்லாது பல விதங்களிலும் பலம் பெற்ற பீஜப்பூரை ஒதுக்கி விட்டு ஒன்றும் செய்வதற்கில்லை. ஆகவே நிஜாம்ஷாவும் குதப்ஷாவும் எப்படியாவது ஆதில்ஷாவைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்ளுவதற்கான வழி வகைகளைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தார்கள். இஸ்லாத்தின் ஏற்றத்துக்கான இந்தப் போரிலே இதயபூர்வமாகப் பங்கு கொள்ளும்படி அவர் மனத்தை மாற்ற மதத் தலைவர்களை அனுப்பினார்கள். பீஜப்பூரின் பெருங்குடி மக்களையும் அரசாங்க அதிகாரிகளையும் தங்க ளுக்குச் சாதகமாப் பேசும் படி தூண்டி விட்டார்கள். இத்தனை செய்ததன் பலன் முஸ்லிம் அரசுகளின் ஒற்றுமையிலிருந்து பீஜப்பூர் விலகி நிற்கவில்லை. விரோதியாகவு மில்லை. ஆனால் ராமராயருடன் நட்பையும் முறித்துக் கொள்ள வில்லை. இந்த நிலை மற்ற முஸ்லிம் மன்னர்களுக்கு மனத்தாங்கலாக இருந்தது.

"இந்தப் புனிதப் போரை நடத்தும் பொறுப்பையே அவரிடம் சுமத்தி விட்டால்?" என்று வினா எழுப்பிக் கூடி இருந்தவர்களைக் குறிப்பாகப் பார்த்தார் குதப்ஷா. "அதாவது முஸ்லிம் அரசுகளின்

கூட்டணிப் படையை நடத்திச் செல்லும் தலைமையை அதில்ஷாவிடமே ஒப்படைத்து விட்டால்?"

"நல்ல யோசனைதான். ஆனால் அவர் அதை ஏற்க வேண்டுமே? தம் தளபதி சித்தி ஹாஸனைத்தான் அவர் மகாசேனாதிபதியாக்குவாரே யொழியத்தம்மை அச்செயலுக்கு உட்படுத்திக் கொள்ள மாட்டார்" என்று நிஜாம்ஷா அபிப்பிராயப் பட்டார்.

"இருக்கட்டுமே! எப்படியானால் என்ன? அந்தச் செயலின் விளைவுக்கு அவர் காரணமாகி விடுகிறாரல்லவா? நம் அதிருப்தியை வெளிப்படுத்தவோ அதட்டிக் கேட்கவோ அப்போது முடியுமே" என்று கூறி எல்லோரையும் இணங்க வைத்தார் குதப்ஷா. எதிர்நோக்கியுள்ள பெரும் போருக்கான திட்டங்கள் பற்றிய விவாதத்தில் ஆதில்ஷா அவர்கள் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டும் என்று அழைப்பு அனுப்பினார்கள். பாசறையின் விசேஷக் கூடாரத்திலே பாமினி சுல்தான்கள் கூடினார்கள். அதில்ஷாவும் ஆஜராகி இருந்தார். படையெடுப்பின் பலதரப்பட்ட விவாதங்களுக்குப் பின் ஆதில்ஷாவின் ஒத்து ழைப்பு வற்புறுத்தப்பட்டது. முடிவில் இணைப்புப் படைகளைத் தலைமை தாங்கி நடத்திச் செல்லும் தகுதி ஆதில்ஷாவுக்கே உண்டென்று பாராட்டிப் பேசி அந்தப் பதவியையும் அவருக்கு உரிமையாக்கியபோது அவர் அடக்கமாக அதை ஏற்க மறுத்தார். வற்புறுத்தியபோது நிஜாம்ஷா கூறியபடியே சேனாதிபதி சித்தி ஹாஸனே அதற்குத் தகுதியானவன் என்று சிபாரிசு செய்தார். அந்த அபிசீனியனை விடத் திறமைசாலிகள், ஆற்றலுடைய வர்கள் இருந்தும் ஆதில்ஷாவின் ஆதரவுக்காக அது அப்படியே அங்கீகரிக்கப்பட்டது.

பழி தீர்த்துக் கொள்ளத் தருணத்தை எதிர்பார்த்திருந்த சித்திஹாஸன் இந்த முடிவினால் பூரித்துப் போனான். சர்வ சேனாதிபதியாக்கப்பட்ட மறு நாளே இரவோடிரவாக விஜய நகரத்துக்குக் குதிரையில் பறந்தான் அந்த அபிசீனியன். அரவீட்டாருடன் ஓர் அந்தரங்கமான உடன் படிக்கை செய்து கொண்டு திரும்பினான். சுல்தான் ஆதில்ஷாவிடம் தனக்குள்ள சலுகையைத் தவறாகப் பயன்படுத்திக்கொண்டு ஒரு சதித் திட்டத்தையே உருவாக்கிக் கொண்டு வந்தான் அந்த அபிசீனியன். இந்த விவரம் அதில்ஷாவுக்கும் தெரியாது. அலியா ராமராயரோ அது ஆதில்ஷாவின் திட்டமென்றே நம்பினார்.







விஜயநகரம் போர்க் கோலம் பூண்டிருந்தது. பெரும் போரின் முற்றுகைக்கான திட்டங்களெல்லாம் வகுத்தார் ராமராயர். அஷ்டப் பிரதானிகளின் அவையைக் கட்டி, அதிலே தளவாய்கள், பாளையக்காரர்கள், சேனாதிபதிகள் ஆகியோரை எல்லாம் தக்கபடி கௌரவித்து, களத்திலே அவர்கள் யார் தலைமையின் கீழ் எப்படி, எங்கே போரிட வேண்டும் என்பதையெல்லாம் திட்டமிட்டு முடித்த பின் சாகுனிகர்களைக் கொண்டு வேலிகுதாராவிற்கான மங்கல வேளையைக் கணித்துச் சொல்லும் படி உத்தரவிட்டார். தான தருமங்களைச் செய்தார். இறைவனின் ஆலயத்துக்குச் சென்று தான் மேற்கொண்டுள்ள காரியத்தை அரசர்க்கரசரான ஆண்டவனிடம் அறிவித்துக் கண்ணீர் மல்க அவனுடைய அருளையும், ஆசியையும் வேண்டி நின்றார். ஏதோ ஒரு காரணமற்ற ஏக்கம், வேதனை, அவர் இதயத்தின் ஒரு மூலையைக் கடித்துக் கொண்டிருந்தது. கலங்காத உள்ளம் படைத்த அவரையே அந்த வலி அலைக்கழிக்கலாயிற்று. எத்தனையோ போர்க் களங்களைக் கண்டவர் அரவீட்டு முதல்வர், ஆகவே இந்த உறுத்தலை உதறிவிட்டு அந்தப் புரத்துக்கு விரைந்தார்; இளம் மனைவி சத்தியபாமாவிடம் விடைபெற்று அவள் மடித்துக் கொடுக்கும் தாம்பூலத்தைத் தரித்துக் கொண்டு கிளம்புவதற்காக.

இதே நேரத்தில் வேங்கடாத்திரியும் விரைந்து கொண்டிருந்தான் திருமலாம்பாவின் மாளிகையை நோக்கி. போர்க் களத்துக்குப் போகு முன் அவன் செய்யவேண்டிய காரியம் ஒன்று அங்கு இருந்தது: நினைவை விட்டு அகலாது நெஞ்சத்தில் நிறைந்து விட்ட சகோதரி ஆயிஷாவிடம் விடைபெறாமல் அவனால் எப்படிக் கிளம்ப முடியும்? ஆயிஷாவைத் தேடிப் போன போது தனிமையிலே அவள் சோகமே வடிவாய் அமர்ந்திருந்தாள். தான் இருக்கும் இடத்துக்கே ஒரு தனி அழகைத் தரக் கூடியவள் தன் நிலை மறந்து போய்ப் பார்வையைச் சூனியத்தில் பதித்தவாறு உட்கார்ந்திருந்தாள். பாழடைந்த பளிங்கு மண்டபத்தைப் போலப் பொலிவிழந்து காணப்பட்ட அவளைப் பார்த்ததும் வேங்கடாத்திரி வேதனை யடைந்தான். 'ஆயிஷா...' என்றழைத்து அருகில் சென்ற போதும் அவள் இவனைத் திரும்பிப் பார்க்கவில்லை. சிரிப்பை இழந்த சிங்காரி, விலையாக வீற்றிருந்தாள். சினந்தாலும்கூட, அழகு சுடர் விடும் அந்தச் சுந்தர முகம் சோபை இழந்துகிடந்தது. 'போர்க் கோலம் கொண்ட நகரம் பூரித்துக் கிடக்கும்போது இந்தப் பெண் எதை நினைத்து இப்படி ஏங்கிப்போய் உட்கார்ந்திருக்கிறாள்?' என்று அவளைப் பார்த்து மற்றப் பாங்கியர்

அதிசயிக்கும்படி இருந்தது அவள் நிலை. ஆனால் அரவீட்டு இளவலுக்கு அதன் காரணம் தெரியுமே!

"என்ன ஆயிஷா, அந்தக் கெட்ட கனவின் மயக்கம் இன்னும் உன்னை விட்டகலவில்லையா? அந்த ஒற்றனை முற்றும் மறக்க முடியவில்லையா?" என்று கேட்டபோது அபலை அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவள் கயல்விழிகள் கண்ணீரில் மிதந்தன. ஏந்திழையாளின் அந்த ஏக்கப் பார்வையைக் கண்ட வேங்கடாத்திரி 'அவளை ஏன் அப்படிக் கேட்டோம்' என்றுகூட நொந்து கொண்டான்.

'இதயம் உள்ளவர், இங்கிதம் தெரிந்தவர் என்று உங்களை நினைத்திருந்தேனே அண்ணா! நீங்களா இப்படிக் கேட்கிறீர்கள்?' என்று விழியால் மொழி பேசினாள், வாய் பேசாத வடிவழகி.

"ஆயிஷா, உனக்கு வெறுப்பைத் தரும் காரியத்தைச் செய்வதற்குக் கிளம்பிக் கொண்டிருக்கிறேன். உன் இனத்தவர்களின் மீது படையெடுத்துச் செல்லும் என்னை நீ வெற்றியோடு திரும்ப வேண்டும் என்று வாழ்த்தி வழியனுப்புவாயா?" என்று குறும்பாகக் கேட்டான், அவள் கோபம் கொள்ள வேண்டுமென்பதற்காகவே.

ஆனால் கோதையவள் குமுறும் தன் உள்ளத்தை வெளிப்படுத்தவில்லை. கொவ்வைக் கனி இதழ் திறந்து பேசவுமில்லை. கவசமணிந்து வீர திலகமிட்டு வந்து நிற்கும் வேங்கடாத்திரியை வேதனை வழியப் பார்த்தாள். 'இனத்தை ஏன் அண்ணா இங்கு இழுக்கிறாய்? என் அருமை அண்ணாவின் நல்வாழ்வுக்காக நான் ஆண்டவனை வேண்டமாட்டேனா?' என்று பார்வையால் கேட்டாள். அன்று அவன் பேசாதிருந்து அவளைப் பொங்க வைத்தது போலவே இன்று அவள் தன் மௌனத்தால் அவனை ஆட்டிவைத்தாள்.

"ஆயிஷா! என்னோடு பேச உனக்கு விருப்பமில்லை என்பதைப் புரிந்து கொண்டேன். குற்றம் புரிந்தவள் நீ. அந்த நிலையிலும் உன்னை மன்னித்து மதிப்போடு நடத்துவதற்கு நீ காட்டும் நன்றியா, உன் உதாசீனத்தை வெளிப்படுத்தும் இந்த மௌனம்?" என்று கேட்டபோதும் அவள் வாய் திறக்கவில்லை. ஆனால் விசாலமாகிக் கொண்ட அவளது விழிகளிலே வியப்பும் வெறுப்பும் வழிந்தன. 'இதைச் சொல்லத்தான் என்னைக் காண வந்தீர்களா?' என்று வினாக் குறியிட்டு நின்றது நிமிர்ந்த அவளது பார்வை. அதைச் சந்திக்க மனமில்லாத வேங்கடாத்திரி, "ஆயிஷா! யுத்த களம் போகிறேன். நான்

இங்கு இல்லாதபோது உன் பத்திரத்துக்கு ஏதாவது ஆபத்து நேருமானால் அதிலிருந்து உன்னைக் காப்பாற்றிக் கொள்ள இது உனக்குப் பயன்படும். இந்தா" என்று கூறித் தன் விரலிலிருந்த விலையுயர்ந்த முத்திரை மோதிரத்தைக் கழற்றி அவளிடம் நீட்டிக் கொண்டே, "வாய் திறந்து பேசி உன் வன்மத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டாம். ஆனால் கை நீட்டி இதை வாங்கிக்கொள்ளலாமென்று நினைக்கிறேன்" என்றான்.

அவனது குத்தலான வார்த்தைகளைக் கேட்ட குமரியின் நயனங்கள் குளமாயின. மோதிரம் தாங்கி நின்ற கைகளைப் பற்றியவள் அதில் தனது முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மலானாள். அவளது அழுகை அவனது நெஞ்சை நெகிழ்த்தி விட்டது. கத்திக்குக் கலங்காதவன் கண்ணீரிலே கரைந்து போனான். வாஞ்சையுடன் அந்த வடிவழகியின் வதனத்தை நிமிர்த்தினான்.

"சோதரி, உன் உணர்ச்சிகளை நான் அறிவேன். ஆனால் இன்றுள்ள நிலையில் ஏதும் செய்ய முடியாதவனாக இருக்கிறேன். இது வரை வெற்றியையே கண்ட எனக்கு இப்போரில் அதற்குப் புறம்பான வேறொன்று நேருமானால், ஒருவேளை நான் திரும்ப முடியாமலே போக நேர்ந்தால்..." அவன் குவிந்த கரங்களுக்குள் கண் மூடிக் கிடந்தவள் பதறிப் போய்ப் பரபரப்புடன் அவனது வாயைப் பொத்தினாள் - அவலத்தைக் கேட்க விரும்பாதவளாக.

வேங்கடாத்திரி மெல்ல நகைத்தபடியே அவளது தளிர்க் கரங்களை அகற்றி அதைத் தன் கைகளுக்குள் புதைத்துக் கொண்டவனாக, "நெருப்பென்றால் வாய் சுட்டுவிடாது. எத்தனையோ போர்களைக் கண்ட என் நெஞ்சம் இன்று ஏனோ சஞ்சலமடைகிறது. அதனால் கூறினேன். இந்த சாம்ராஜ்யத்தை ஆட்டிப் படைக்கும் மூன்று சக்திகளுள் ஒன்றுக்கு உரியது இந்த மோதிரம். ஆகவே, இதை உபயோகிக்கு முன், அதன் அவசியம் அவசரம், ஆபத்து இவைகளைப் பற்றித் தீர யோசிக்க வேண்டும். இது சாதிக்காத காரியம் இந்த சாம்ராஜ்யத்தில் ஏதுமில்லை. இதை உபயோகிக்கும் ஒரு நிலை உனக்கு வரவே வேண்டாம். அப்படி ஏதாவது நேருமானால்..." என்று கூறி மோதிரத்தை அவளது தந்த விரலில் தானே அணிவித்தான். பிறகு பார்வையால் அவள் இதயத்தை ஊடுருவியவாறு, "சொல் ஆயிஷா... இதைத் தவறாகப் பயன்படுத்திவிட மாட்டாயே?" என்று கேட்டான்.

உணர்ச்சியற்ற முகத்திலே ஒளிர்ந்த கண்களால் அவனை நோக்கியவளிடமிருந்து உஷ்ணமானதொரு பெருமூச்சுத்தான் பதிலாக வந்தது.

அதே சமயத்தில் படையணிகள் கிளம்புவதற்கான பேரிகைகள் அதிர்ந்தன. பீரங்கிகள் முழங்கின. கொம்பு வாத்தியங்கள் கோஷமிட்டழைத்தன அவனை. "ஆயிஷா! நான் இல்லாத வேளையில் மறுபடியும் இங்கிருந்து தப்பிச் செல்ல முயற்சி செய்ய மாட்டாயே? நீ ஓடுவதற்கு உதவுவதற்காக என் முத்திரை மோதிரத்தை உனக்கு நான் தரவில்லை. உன் தன்மானத்துக்கோ கற்புக்கோ ஆபத்து வருமானால் அப்போது உன்னைக் காத்துக் கொள்ளவே இதைக் கொடுத்து விட்டுப் போகிறேன். இதைக் கொண்டு தப்பிச் செல்ல மாட்டேன் என்று சத்தியம் செய்து கொடு" என்று அவன் தன் கையை நீட்டியபோது கன்னியவளால் பேசாதிருக்க முடியவில்லை.

"அண்ணா! என்னை ஏன் இப்படி வார்த்தைகளால் வதைக்கிறீர்கள்? உங்கள் தகுதியைக் குறைக்கும் காரியம் எதையும் செய்ய மாட்டேன் அண்ணா. இனத்திலே மாறு பட்டவளாக இருக்கலாம். குணத்திலே குறைந்தவள் அல்ல அண்ணா உங்கள் சகோதரி ஆயிஷா. எந்த அபாயங்கள் வந்தாலும் இங்கிருந்து போக மாட்டேன். நீங்கள் நம்பிக்கையோடு போகலாம்" என்ற போதுதான் வேங்கடாத்திரியின் முகத்திலே மலர்ச்சி ஏற்பட்டது. வாஞ்சையுடன் அவள் நெற்றியில் முத்தமிட்டுவிட்டு வேகமாக அங்கிருந்து வெளியேறினான். அவனது சகோதர அன்பிலே. பாசத்திலே அசைவற்றுப்போய் அவன் செல்வதையே பார்த்துக் கொண்டு நின்றாள் ஆயிஷா.

சின்ன அண்ணா திருமலையினால் அவளுக்கு ஏதாவது அபாயம் வரலாமென்றே தனது மோதிரத்தைப் பாதுகாப்பாக அவளிடம் அளித்துப் போக வந்தான் அவன். சமீபகாலமாக எந்தப் போரிலும் திருமலையைக் களத்துக்கு அழைத்துச் .செல்லாத திருமலையைக் களத்துக்கு அழைத்துச் செல்லாத பெத்தண்ணா இந்தப் போரிலும் அப்படியே செய்வார் என்று எண்ணினான் வேங்கடாத்திரி. தலைநகரில் இருக்கும் அவன் தன் திட்டப்படி சதாசிவராயரின் இச்சையைப் பூர்த்தி செய்ய முனைவானோ என்று பயந்தான். ஆனால் ராமராயரோ இம்முறை வேறு விதமாக முடிவு செய்திருந்தார். மன்னர் சதாசிவராயருடன் சதிசெய்யத் தலைநகரிலே திருமலையைத்

தனித்திருக்க விட விரும்பாமல் தம்முடனேயே யுத்த முனைக்கு வரும்படி செய்துவிட்டார். அணிவகுத்து நின்ற படையணிகளின் முன்னால் திருமலையும் அலங்கரித்துக் கொண்டு வந்து நின்ற போது தான் விஷயத்தை அறிந்தான் வேங்கடாத்திரி. முதலில் வியந்தாலும் பெத்தண்ணாவின் அரசியல் சாதுரியத்தையும் ஆயிஷாவின் பத்திரம் பாதுகாக்கப்பட்டதையும் எண்ணி மகிழ்ந்து போனான்.

கடலன்ன சேனைகள் களத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தன. திரும்பிய பக்கமெல்லாம் படைவெள்ளம். பத்து லட்சம் காலாட்படைகள், ஒரு லட்சம் குதிரைப் படைகள், ஐயாயிரம் யானைகள், பதினையாயிரம் பீரங்கி வண்டிகள், இத்தனை பேர்களின் தேவைகளையும் நிறைவு செய்யச் சாரிசாரியாக எண்ணி மாளாத காளை மாட்டு வண்டிகளில் உணவுப் பொருள்களும் படைக்கலங் களும் மற்றும் பல பொருள்களும் போய்க் கொண்டிருந்தன. போர்க்களத்தோடு ஒரு கடை வீதியே பெயர்ந்து நகர்ந்து செல்வது வழக்கம். புகழ்பெற்ற கிருஷ்ண தேவராயர் நடத்திய போர்களிலே கூட இத்தனை பெரும் படைகள் பயன்படுத்தப்படவில்லை.

அற்புதமாக அலங்கரிக்கப்பட்டிருந்த பட்டத்து யானை மீது அலியா ராமராயர் கம்பீரமாக வீற்றிருந்தார். வலப்புறத்திலே வேங்கடாத்திரியும், இடப்பக்கத்திலே திருமலையும் குதிரைகளில் தொடர்ந்து கொண்டிருந்தார்கள். விஜயநகரத்து வீர புருஷர்களான இவர்களுக்கு முன்னும் பின்னும் புகழ் பெற்ற தளவாய்களும், பாளையக்காரர்களும், சேனாபதிகளும் தளபதிகளும் தகுதிக் கேற்பச் சென்று கொண்டிருந்தார்கள். விஜயநகரப் படைகளின் அந்த அணிவகுப்பு கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. இத்தனை படைகளின் புறப்பாட்டினால் செந்தூள் கிளம்பிச் சூரிய ஒளியையே மறைத்துக் கொண்டது. உப்பரிகைகளில் நின்ற பெண்கள் மலர்களைத் தூவி வீரர்களை வழியனுப்பினார்கள்; ஆலய மணிகள் ஆசி கூறிக் கொண்டிருந்தன. இத்தனை கோலாகலங்களுடன் துங்கபத்திரை நதியைக் கடந்து தவரகிரி, கண்ணகிரி ஆகிய ஊர்களுக்கு கிடைப்பட்ட பரந்த வெளியில் படியிறங்கிப் பகைவர்களின் செயலை எதிர்பார்த்துக் காத் திருந்தார் ராமராயர்.

தலைநகரிலோ அன்றாட அலுவல்களில் எவ்வித மாற்றமும் இல்லை. களத்திலுள்ள படைகளுக்குக் களஞ்சியங்களிலிருந்து அவ்வப்போது உணவுப் பொருள்களும் ஆயுத சாலையிலிருந்து

தளவாடங்களும் போய்க் கொண்டிருந்ததைத் தவிர எவ்விதப் புதுமையுமில்லை. அடிக்கடி குதிரை வீரர்கள் பாசறையிலிருந்து அரண்மனைக்கும் அரண்மனையிலிருந்து பாசறைக்குமாகப் பறந்து கொண்டிருந்தார்கள். போரைப் பற்றிய அச்சமோ, பரபரப்போ, ஆவலோ ஏதுமில்லை நாட்டு மக்களிடம். தங்களுக்குத்தான் வெற்றி என்ற உறுதியோடு உற்சாகமாகவே அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தனர்

உற்சாகமிழந்த நிலையில் அந்த விஜயநகரத்திலிருந்த ஆயிஷா ஒருத்தி தான். அவள் இதயத்திலே இடம் பெற்றவன் பாதாளச் சிறையிலே பரிதவித்துக் கொண்டிருக்கும் போது அவளால் எப்படி மகிழ்ச்சியோடிருக்க முடியும்? தன் காதலனின் வாழ்வு அந்தக் காராக்கிருகத்தோடு முடிய வேண்டியதுதானா? அதை அவளால் நினைக்கவே முடியவில்லை. நெஞ்சம் நடுங்கியது. யூசப்கானை எப்படியாவது விடுதலை செய்து இங்கிருந்து அனுப்பிவிட்டால் போதும். அவனோடு நடத்தும் ஆனந்த வாழ்வைக் கூட அவள் விரும்பவில்லை. தன் விடுதலையை விட அவன் விடுதலையையே பெரிதாக நினைத்தாள் இப்போது. ஆனால் அது எப்படிச் சாத்தியமாகும்? விஜயநகரத்தின் சிறையிலிருந்து ஒருவனை விடுவிப்பதென்பது இலேசான காரியமல்லவே! இதே நினைவால் ஏங்கலானாள் ஆயிஷா. 'வேங்கடாத்திரி கொடுத்துச் சென்ற மோதிரத்தைப் பயன்படுத்தி யூசப்கானின் விடுதலைக்கு வழி செய்தால் என்ன?' என்று அடிக்கடி அவள் உள்மனத்தில் ஓர் எண்ணம் குடையலாயிற்று. ஆனால் அந்த எண்ணத்தை வளரவிடாமல் கிள்ளிக் கொண்டே இருந்தாள். ஆனால் அதுவோ கிள்ளக் கிள்ளத் துளிர்விடலாயிற்று. வேங்கடாத்திரி தன்னிடம் கொண்டுள்ள நம்பிக்கையை நாசமாக்கித் தான் துரோகியாக மாறுவதை விரும்பவில்லை அவள். விவகாரம் பேசிய காதல் உள்ளத்துக்கு விசுவாசமுடன் 'மாட்டேன்', 'முடியாது' என்று வீம்பாக மறுத்து வந்தாள். ஆனால் அதை மறுக்க மறுக்க மறக்க முடியாமல் அதுவே அவள் நினைவெல்லாம் நிறைந்து நின்றது. தன் பார்வையை உறுத்திக் கொண்டு விரலில் இருக்கும் அந்த மோதிரத்தைக் கழற்றி உள்ளே வைத்தாள். ஆனால் உள்ளத்தினுள்ளே பதிந்து விட்ட அந்த எண்ணத்தை அவளால் ஒளிக்க முடியவில்லை. நாளாக ஆக அந்த எண்ணமே மெள்ள மெள்ள அவளை ஆட்கொண்டு விட்டது.

'இதன் உதவியால் நான் தப்பிச் சென்றால் தானே தவறு. அவருக்கு விடுதலை அளித்தால் என்ன?' என்று நினைக்கு மளவுக்கு, அவள் உறுதி வளர்ந்து விட்டது. அந்த உறுதியோடு அவள் உள்ளத்தினுள்ளே வெகு நாட்களாக அமுந்திக் கிடந்த பழிதீர்க்கும் வெறிக் குணமும் தலை தூக்கியது. 'உன் பெற்றோர்களைக் கொன்ற கொடுமையாளர்களுக்குத் தக்க பாடம் கற்பிக்கும் தருணம் வாய்த்திருக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொள். நழுவ விடாதே!' என்று நச்சரித்தது பேய்க் குணம். 'பலவீனங்கள் உள்ள பெண்ணாக வாழ்ந்து புண்ணானது போதும். உடனே புறப்படு. உன்னால் விடுதலை செய்யப்படுபவன் உன் இனத்துக்கே வாழ்வளிக்கலாம். இந்தப் போரின் போக்கையே மாற்றியமைக்கலாம். மயங்காதே!' என்று விரட்டியது.

'இது சாம்ராஜ்யத்துக்கு எதிரான செயல். மோதிரத்தைத் தவறாகப் பயன்படுத்த மாட்டாய் என்ற நம்பிக்கையில் தான் உன்னிடம் அதைக் கொடுத்துச் சென்றிருக்கிறேன் வேங்கடாத்திரி' என்று நியாயம் பேசிய மனம் வலுவிழந்து போயிற்று. சகோதரனின் கட்டளையைக் காதலின் வேகம் கடந்து நின்றது. மோதிரத்தின் உதவியால் யூசப்கானைக் காப்பாற்றிவிடுவது என்ற முடிவுக்கு வந்தபோதும் குற்றமிழைக்கும் மனப்பான்மையின் உறுத்தலை அவளால்தாங்க முடியவில்லை. அந்தத் தாபமும் தயக்கமுமே அவளிடம் போலியான தோர் உறுதியையும் வளர்த்தது.

ஒரு நாள் இரவு ஆயிஷா ஆண் வேடம் தரித்துக்கொண்டு கிளம்பினாள். அவள் இடக்கை விரலிலே தளபதி வேங்க டாத்திரியின் முத்திரை மோதிரம் மின்னியது. தான் செய்யப் போகும் காரியத்துக்குக் கற்பித்துக் கொண்ட பொய்யான சமாதானம் எப்படி உள்ளத்தில் ஒட்டாமல் நின்றதோ அதைப் போலவே அவள் ஒட்ட வைத்துக் கொண்டிருந்த பொய்யான மீசையும் ஒட்டுதலில்லாமல் மேலுதட்டில் குறுகுறுத்துக் கொண்டிருந்தது. தலையிலே கம்பீரமான தலைப்பாகையும், உடலை மூடிமறைத்து இறுக்கமாக அணிந்திருந்த அங்கியும் ஆயிஷாவை ஒரு முறுக்கான வாலிபனாகவே ஆக்கியிருந்தன.

பாசறையிலிருந்து தளபதி வேங்கடாத்திரியின் உத்தரவைத் தாங்கி வரும் வீரனாக வேகம் காட்டி நின்றான் ஆயிஷா. அரண்மனை அசுவசாலை அதிகாரியிடம். இரண்டு குதிரைகள் வேண்டும் என்றும். சிறைச்சாலையில் கைதியாக உள்ள அந்நிய நாட்டு

ஒற்றனை அழைத்து வரும்படி கட்டளை என்றும் கூறி மோதிரத்தைக் காட்டினாள். மிடுக்குடன், வீரனின் வார்த்தையைக் கேட்டு நம்பிக்கைப்படாதவன் மோதிரத்தைக் கண்டதும் ஓடி வந்தான் இரண்டு குதிரைகளுடன்.

வேங்கடாத்திரியின் மோதிரத்துக்குள்ள மதிப்பைக் கண்டு அவள் வியப்படைந்தாள். அவள் வியப்பை அதிகமாக்கும் செயல்கள் சிறைச்சாலையிலும் நடந்தன. மோதிரத்தைக் கண்டதும் சிறைச்சாலையின் மூடியு கதவுகள் திறந்து கொண்டன. வணங்கி வழிவிட்டு ஒதுங்கி நின்றார்கள் காவலாளிகள். இருள் கவிந்த பாதாளச் சிறையிலிருந்து பூசப் கானைக் கொண்டு வரச் செய்தாள். திடீரென்று இருளிலிருந்து ஒளிக்கு வந்த போது ஒன்றையுமே காண முடியாமல் கூசும் கண்களோடு கஷ்டப்பட்டான் பூசப்கான். ஒருவிதத்தில் அவனுடைய இந்த நிலை அவளுக்குச் சாதகமாகவே இருந்தது. காவலாளிகளின் மனத்தில் சந்தேகத்தின் சாயல் கூட விழா திருப்பதற்காக முன்னதாகவே, "அவன் கைவிலங்குகளை அகற்றாதீர்கள். அந்தக் காரியத்தை நான் பாசறையில் தளபதியாரின் முன்னிலையில் செய்துகொள்கிறேன்" என்று கூறி விலங்குகளுக்காக சாவியைத் தான் வாங்கிக் கொண்டாள்.

அசுவசாலையிலிருந்து தயாராகக் கொண்டு வந்திருந்த குதிரையின் மீது விலங்கிடப் பட்ட பூசப் கானை ஏற்றி விடுவதற்கும் சிறைக் காவலாளிகளின் உதவியையே நாடி அவர்களிடம் விடை பெறும்வரை அவள் உள்ளம் பட்டபாடு? அவள் அருகில் யாராவது போயிருந்தால் அந்த இதயத்தின் துடிப்பை நன்றாகக் கேட்டிருக்கலாம்.

பிணைத்த கரங்களோடு பிரமிப்பு நீங்காத நிலையில் குதிரை மீதமர்ந்தான் பூசப்கான். பாதாளச் சிறையிலிருந்து வெளிவந்தாகி விட்டது. இனி விதியின் வழியே போவதைத் தவிர வேறு மார்க்கமில்லை என்று உறுதியோடு உட்கார்ந்திருந்தான். அவனது குதிரையின் கடிவாளமும் ஆணுடையிலிருந்த ஆயிஷாவின் பிடியிலேயே இருந்தது. வெகு தூரம் குதிரைகளை விரட்டிக் கொண்டு போனவள் நகருக்கு வெளியே ஓர் இடத்துக்கு வந்ததும் குதிரைகளை நிறுத்திக் கீழே இறங்கினாள். அது நள்ளிரவு நேரம். நிழல் மூடிய பூமியிலே நிலவின் ஒளி சிந்திக்கிடந்த மாந்தோப்பிலே அவர்கள் இருந்தார்கள்.

"பாமினி ராஜ்யத்தின் ஒற்றரே! குதிரையிலிருந்து கீழே இறங்கலாமே?" என்ற ஆயிஷா தன் ஆணுடைக்கான மேலங்கியை மெல்ல விலக்கியவாறே நிலவொளிக்கு வந்து நின்றாள். அந்தக் குரல் அவனைக் குதூகலத்தில் ஆழ்த்தியது. குதிரையிலிருந்து குதித்தோடி வந்தவன் "ஆயிஷா!" என்று அவளை அணைக்க முயன்றபோதுதான் தன் கைகளை விலங்குச் சங்கிலி பிணைத்திருப்பதை உணர்ந்தான்.

"ஆயிஷா!ஆயிஷா! நீ..`நீயா? நான் நினைக்கவேயில்லை. என்னைப் பாதாளச் சிறைக்கு அனுப்பியவள் நீதான் என்று உன்மீது எத்தனை வெறுப்பை வளர்த்துக் கொண்டிருந்தேன் தெரியுமா?" என்ற போது உணர்ச்சிவசப்பட்ட அவன் குரல் அடைத்துக் கொண்டது.

"ஆண்கள் அவசர புத்திரக்காரர்கள் தானே? உங்கள் முடிவும் அதுவாகத்தான் இருக்கும் என்று எனக்கும் தெரியும்" அவன் விலங்குகளைத் தன்னிடமுள்ள சாவியால் அகற்றலானாள் ஆயிஷா.

ஆனந்த அதிர்ச்சியினால் பேச முடியாமல் அவன் உதடுகள் துடித்தன. விலங்கின் பிணைப்பிலிருந்து விடுதலை பெற்ற தன் கரங்களால் அவள் முகத்தை ஏந்திக்கொண்டு நீர்த்திரையிட்ட நயனங்களால் அந்த முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் யூசப்கான். உணர்ச்சிகள் ஒருநிலைப்பட்டதும் "ஆயிஷா! உன் விடுதலைக்கு உதவுமாறு என்னிடம் ஓடிவந்தாயே. அந்த நாளையும், இன்று நீயே என் விடுதலைக்குக் காரணமாக இருக்கும் இந்த நிலையையும் எண்ணிப் பார்க்கும்போது எனக்கே வெட்கமாக இருக்கிறது. ஆயிஷா. இதை எப்படி உன்னால் சாதிக்க முடிந்தது?" என்று கேட்டான்.

மோதிரத்தின் நினைவிலே வேங்கடாத்திரியின் முகமும் முன்னால் வந்து அவள் துணிவைக் குதறலாயின. பரபரப்புடன் "அன்பரே. இங்கு நீங்கள் தாமதிக்கும் ஒவ்வொரு விநாடியும் உங்களை அபாயம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. விஜய நகரத்தின் காற்றுக்கும் உணர்வு உண்டு என்பதை உணர்ந் திருப்பீர்கள். ஆகவே இந்த உடைகளை அணிந்து கொண்டு இந்துவாக மாறி உடனே இங்கிருந்து வெளியேறுங்கள்" என்று அவனிடம் ஒரு சிறு மூட்டையை நீட்டினாள். அவள் முக மாறுதலையும் முடிவான பேச்சையும் கேட்ட யூசப்கான் திகைத்துப் போனான்.

"அப்படியானால் என்னுடன் நீ வரவில்லையா?" என்று கேட்டான்.

"நான் வருவதற்கில்லை. இங்கிருந்து வெளியேறுவதில்லை என்று என் சகோதரருக்குச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறேன். அதன் விளைவுதான் உங்கள் விடுதலை. இதோ இந்த மோதிரத்தைக் காட்டினால் கோட்டைக் காவலாளிகள் உங்களை எவ்வித விசாரணையுமின்றி வெளியே செல்ல அனுமதிப்பார்கள்" என்ற ஆயிஷா பொங்கி வரும் அழுகையைச் சிரமத்துடன் அடக்கிக் கொண்டவாறு வேங்கடாத்திரியின் முத்திரை மோதிரத்தை அவன் முன் நீட்டினாள்.

ஆயிஷா அளித்த முத்திரை மோதிரத்தை வாங்கிக் கொண்ட யூசப்கானின் முகத்தில் சிந்தனை படர்ந்தது. "சிறைப்பட்டிருக்கும் உனக்கு இங்கொரு சகோதரர் இருப்பதாக எனக்கு நீ சொல்லவில்லையே?" என்று புரிந்துகொள்ள முடியாத புதிராக நிற்கும் அவளைப் புதுமையாகப் பார்த்தான் அவன். அவனது ஐயத்தைத் தீர்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது அவளுக்கு. பிப்பால் இல்லாது அன்பின் பிணைப்பால் தன் சகோதரனான வேங்கடாத்திரியைப் பற்றிச் சுருக்கமாக அவனிடம் கூறினாள். பதவி மோகம் கொண்டலையும் திருமலை தன்னைப் பணயமாக்கி வகுத்த திட்டங்களையும் அது பயனில்லாது போகும்படி தன் சகோதரனாகிவிட்ட வேங்கடாத்திரி புரிந்த செயல்களையும் விளக்கினாள் ஆயிஷா. உடன்பிறந்தவர்கள் மூவரில் ஒருவரைத் தன் அன்புச் சகோதரனாகவும் மற்ற இருவரையும் தனது பரம விரோதிகளாகவும் ஆக்கி இருக்கும் விதியின் விபரீத விளையாட்டைச் சொல்லும் போது அவள் விழிகள் குளமாயின.

"விதியின் கைப்பாவையாகிவிட்ட என் வாழ்வு இன்னும் எப்படியெல்லாம் மாறப் போகிறதோ?" என்று பெருமூச்சுடன் மௌனமானவள். சட்டென்று "நீங்கள் இங்கு இனியும் தாமதிப்பது விபரீதமாக முடியும். உடனே கிளம்புங்கள்" என்று துரிதப்படுத்திப் பரபரத்தாள்.

"ஆயிஷா! உன்னை இத்தனை அபாயங்களின் நடுவே விட்டு நான் மட்டும் ஏன் தப்பிச் செல்ல வேண்டும்" என்று தயங்கினான் யூசப்கான்.

விரக்தியோடு சிரித்தாள் அவள். "விஜயநகரத்துக்கு வேவு பார்க்க வேஷமணிந்து வந்தபோது இப்படியொரு சந்திப்பு ஏற்படுமென்று எண்ணினீர்களா? இல்லையே. அப்படி இருக்க. இப்போது நானில்லாது

நீங்கள் இங்கிருந்து செல்லத் தயங்குவது நியாயமில்லை. நான் இங்கிருந்து கிளம்புவதை விட, நீங்கள் அங்கு போவது முக்கியம். நேரத்தை வீணாக்காதீர்கள்" என்று வேண்டிக் கொண்டாள் ஆயிஷா.

விவாதிக்க விரும்பாத அவள் மன நிலையைப் புரிந்து கொண்ட யூசப் கான் அவளை விட்டுப் பிரிய மனமில்லாமல் உடை மாறினான் ஒரு இந்துவாக. விஜயநகரத்திலே இந்தியர்களிலும் பலர் அழகுக்காக முஸ்லிம்களைப் போல இளந்தாடியை வளர்த்துக் கொள்வது வழக்கமாதலால் யூசப் கானின் அழகு தாடி அவன் ஏற்ற வேஷத்துக்குப் பொருத்தமாகவே இருந்தது. உருமாறிய பிறகும் குதிரையேறாமல் ஆயிஷாவையே நீர்த் திரையிட்ட கண்களால் பார்த்துக் கொண்டு நின்றான் யூசப் கான்.

அவன் உள்ளக் குறிப்பறிந்தவள், "காதலரே! ஏன் இப்படிக் கலங்குகிறீர்கள்? எங்கோ பிறந்து எங்கோ வளர்ந்த நம் இருவரையும் இங்கே சந்திக்க வைத்த அதே சக்தியினால் நம்மை மறுபடி ஒன்று சேர்க்கவும் முடியும். அல்லாஹ்வின் அருள் இருக்குமானால் எதுவும் சாத்தியமாகும். ஆகவே சோர்வடையாமல் சென்று வாருங்கள்" என்று இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டவள் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியாமல் கலங்கினாள். உடனே அந்த நிலையை மாற்றியமைக்க வேண்டி ஒரு மயக்குப் புன்னகையை இதழ்களில் மலர விட்டவளாக, " அது சரி, உளவறிந்து போக வந்தீர்களே, என்ன சாதித்துக் கொண்டு திரும்புகிறீர்கள்?" என்று கேட்டாள் கரும்பு மொழியாள் குறும்பாக.

"உன் அன்பைச் சுமந்து செல்கிறேனே அது போதாதா ஆயிஷா?"

"உளவாளியாக வந்தவர் என் இதயத்தைக் களவாடிச் செல்கிறீர்கள், உண்மைதான். ஆனால் உங்கள் சாம்ராஜ்யத்துக்கு உதவும் சங்கதியொன்றைச் சொல்லட்டுமா?"

"வேண்டாமென்றா சொல்லுவேன்?"

"பாமினி சுல்தானின் படைகளை நடத்திச் செல்லும் பொறுப்பேற்றிருக்கிறான் ஆதில்ஷாவின் சேனாதிபதி - சித்திஹாஸன் என்ற அபிசீனியன். முஸ்லிம் அரசுகள் தங்கள் வெற்றிக்கு யாரை நம்பியிருக்கிறார்களோ அவன் ஒரு துரோகி. கூட்டணிப் படைகளை

'இங்குலிகி' என்ற இடத்துக்கு நடத்திச் செல்லப் போகிறான் அவன். அப்போது அங்கு மறைந்திருக்கும் ஆயிரமாயிரம் பீரங்கிகள் அனலைக் கக்கி அத்தனை படைகளையும் அழிக்கப் போகின்றன. இப்படியொரு ஏற்பாட்டை விஜயநகரத்துடன் செய்து கொண்டு போயிருக்கிறான் சித்திஹாஸன்" என்றாள் ஆயிஷா. அன்று ராமராயர் தம் பத்தினிகளிடம் சொல்லி மகிழ்ந்து கொண்டிருந்த செய்தியை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தபடி விளக்கினாள்.

இதைக் கேட்ட அவன் உடலும் உள்ளமும் பதறியது. 'அப்படியானல் ஆதில்ஷா...?' என்று வினா எழுப்பிய உள்ளத்துக்கு விபரீதமான விளக்கம் தான் கிடைத்தது. இத்தகைய உபயோகமான செய்தியைக் கூறிய ஆயிஷாவை ஆனந்த மிகுதியால் அணைத்துக் கொண்டான். பிரிந்து செல்ல வேண்டுமே என்று வருந்தியவன் இப்போது கடமை வயப்பட்டவனாகிக் கலக்கத்தை உதறிவிட்டு, "ஆயிஷா! என் அன்பே! எத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த செய்தி தெரியுமா இது? விபரீதம் விளையுமுன் அதைத் தடுத்தாக வேண்டும். நான் வருகிறேன்" என்று தாவி ஏறினான் குதிரை மீது. தாபமுடன் ஆயிஷாவை மறுபடியும் பார்த்தான். அப்படியே அவளைத் தாவி அணைத்துத் தூக்கிக் குதிரை மீது வைத்துக் கொண்டு போனால் என்ன என்று அவன் கைகள் பரபரத்தன.

"போரில் நம் இனத்துக்கே வெற்றி கிடைக்கும்படியாகச் செய்யுங்கள்; சென்று வாருங்கள்" என்று கண்ணீர் வழிய விடை கொடுத்தாள் ஆயிஷா. கடமையை நினைத்தான். காதலை மறந்தான். காற்றெனப் பறந்தான் யூசப் கான். அவன் செல்வதையே பார்த்துக் கொண்டிருந்த ஆயிஷாவின் பார்வைக்குக் கண்ணீர் வலை பின்னியது. நினைவிழந்து நெடுநேரம் அங்கேயே நின்றுகொண்டிருந்தவள் அந்தப் புரத்துக்குத் திரும்பியதும் தன் படுக்கையில் விழுந்து ஹோவென்று வாய் விட்டு அழுதாள் விம்மி விம்மி. எதற்காக? தன் வாழ்வில் மின்னலாகத் தோன்றி மறைந்த யூசப்கானை நினைத்தா? அல்லது வேங்கடாத்திரி கொண்ட நம்பிக்கையை நாசமாக்கிவிட்டோமே என்ற வேதனையினாலா? அது அவளுக்கே தெரியவில்லை!

# 25

# நதிக்கரை நாடகம்

துங்கபத்திரை ஆற்றின் வட கரையிலே நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் விஜய நகரின் படை வெள்ளம் குவிக்கப்பட்டிருந்தது. சாம்ராஜ்யத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து பாளையக்காரர்கள் தங்கள் படைகளுடன் இன்னும் வந்து வண்ணமாகவே இருந்தார்கள். முஸ்லிம் அரசுகளின் படைகளோ கிருஷ்ணா நதியின் இரு கரையையும் தங்கள் எல்லைகளாக்கிக் கொண்டிருந்தன. கிருஷ்ணையாற்றின் வட கரையிலே அதன் கிளையாகிய 'தான்' என்ற சிற்றாறு வந்து கலக்கும் இடத்தின் மேல் கரையில் அலி ஆதில்ஷாவும் இமத் உல்முல்க்கும் முகாமிட்டிருந்தார்கள். கிருஷ்ணா நதியைக் கடந்து முத்கலுக்கு அருகே தமது படைகளைக் கொண்டு வந்து குவித்திருந்தார் குதப்ஷா. இந்த முஸ்லிம் அரசுகள் தங்கள் படைகளில் பெரும் பகுதியை சித்திஹாஸனின் தலைமையின் கீழ் போரிடுவதற்காக அனுப்பியிருந்தன. இந்தக் கூட்டணிப் படையை நடத்திச் சென்று, பாரதத்தின் பலம் பொருந்திய இந்துப் பேரரசை எதிர்க்க வேண்டுமென்பது பாமினி சுல்தான்களின் பேராசை. அந்தப் பொறுப்பை ஆதில்ஷாவின் பிரதிநிதியான சித்திஹாஸனிடம் ஒப்படைத்து விட்டு ஆவலோடு தங்கள் பாசறைகளில் காத்திருந்தார்கள் பாமினி சுல்தான்கள்.

சித்திஹாஸனோ வேறு விதமாகத் திட்டமிட்டிருந்தான். முஸ்லிம் இனத்தவனானாலும் அவன் நட்பும் நல்லெண்ணமும் ராமராயரின் பக்கமே இருந்தன. ஆதில்ஷாவின் அந்தரங்கத்தை அறிந்த அந்த அபிசீனியன் அவர் அன்பையும் நல்லெண்ணத்தையும் தன் பழிதீர்த்துக் கொள்ளும் பகை எண்ணத்துக்குப் பயன்படுத்திக் கொண்டு இனத்துரோகியாகவே மாறி விட்டான். கிருஷ்ணா நதியின் ஆழமற்ற இங்குலிகி என்ற இடத்துக்குத் தன்னை நம்பி விடப்பட்டுள்ள படைகளை நடத்திச் சென்று நாசமாக்கத் தீர்மானித்திருந்தான் இந்தக் கூட்டணியிலே பீஜப்பூரின் படைகள் மிகக் குறைவாகவே கலந்திருந்தன. ஆழமற்ற அந்தப் பகுதியில் ஆற்றைக் கடந்து மறு கரையில் உள்ள மகா மண்டலேசுவரரின் படைகளைத்

தாக்க வேண்டுமென்பது ஏற்பாடு. இப்படி ஒரு திட்டத்தை வகுத்தவனும் அவன் தான். அதை அப்படியே அர வீட்டாரிடம் அறிவித்து அழிவுக்கு வழி வகுத்திருந்தவனும் அவன்தான்.

கறுத்த முகமும், அரக்கனையொத்த ஆகிருதியும் கொண்ட அபிசீனியன் - சித்திஹாஸன் நிலக்கரி நிறக் குதிரையிலமர்ந்து மிடுக்குடன் முன்னே போய்க் கொண்டிருந்தான். குதிரைக்குரிய அலங்காரங்கள் அத்தனையிலும் தங்கம் பயன்படுத்தப்பட்டிருந்ததால் மினுமினுத்த அதன் உடலிலே அவை ஜ்வலித்துக் கொண்டிருந்தன. அகமதுநகர், கோல்கொண்டா, பீடார் ஆகிய ராஜ்யங்களின் தளபதிகள் அவன் உத்தரவை எதிர்பார்த்து அவனைத் தொடர்ந்து கொண்டிருந்தனர். சித்திஹாஸனின் துரோக எண்ணம் அவர்களுக்குத் தெரியாது. ஒரு சிறந்த வீரனாகவே அவர்கள் அவனை அறிந்திருந்தார்கள். குறிப்பிட்ட இடத்தின் அருகே வந்ததும் எதிரிகளின் காவல் எப்படி இருக்கிறது என்பதை அறிந்து வருபவன் போலத் தன் குதிரையைத் தட்டிவிட்டு முன்னே சில மைல்கள் சென்றுவிட்டுத் திரும்பி வந்தான் சித்திஹாஸன். தன்னைத் தொடர்ந்து வரும் படையணித்தலைவர்களின் நம்பிக்கையை வளர்க்கவே இந்த நாடகமாடினான் அவன். ஆனால் உண்மையில் தன் வரவை ஒளிந்து கொண்டிருக்கும் விஜயநகரப் பீரங்கிப் படைகளுக்கு அறிவித்து எச்சரிக்கை செய்து தயாராகும்படி தகவல் தரவே அப்படித் தனித்துப் போனான் அவன். திரும்பி வந்தவன் எல்லாம் திருப்தியாக இருப்பதாகச் சொல்லி முன்னேறும்படி உத்தரவு அளிக்கும் அந்த வேளையில்...

அந்த அதிசயம் நிகழ்ந்தது. படைத்தலைவர்களின் கவனமெல்லாம், தங்களை நோக்கிப் பாய்ந்து வரும் அந்த ஒற்றைக் குதிரை வீரனின் மீதே பதிந்திருந்தன. கிழக்குத்திசையிலிருந்து வழக்கத்துக்கும் அதிகமான வேகத்துடன் இவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தான் அந்த வீரன். வரும் போதே எதையோ அறிவிக்கும் பரபரப்பு அவன் ஓங்கி உயர்த்திய கைகளின் துடிப்பிலே தெரிந்தது. துணுக்குற்ற சித்திஹாஸன் தன் படை வீரர்களை முன்னேறி வரும்படி துரிதப்படுத்தினான். வேகமாக வரும் வீரன் ஏதாவது விசேஷமான செய்தி கொண்டு வரலாம். அதை அறிந்து பிறகு ஆற்றைக் கடப்பதே அறிவுடைமை என்று அபிப்பிராயப் பட்டார்கள் தளபதிகள். ஆனால் குற்றவாளி நெஞ்சோடு கூடிய சித்திஹாஸனோ வரும் வீரனால் தன்

திட்டம் குலைக்கப்படலாமோ என்று எண்ணிக் குமுறினான். இவர்களுடைய இந்த உரையாடல் ஒரு நிலைப்படு முன்பே குதிரை வீரன் இவர்களால் அடையாளம் கண்டுகொள்ளக்கூடிய தூரத்துக்கு நெருங்கிவிட்டான். அவனை இனம் கண்டுகொண்ட அத்தனை பேர் இதயங்களும் ஆனந்தத்தால் துள்ளின. சித்திஹாஸனின் உள்ளமோ ஆத்திரத்தால் கருகியது.

வேகமாக வந்து கொண்டிருந்த வீரன் வேறு யாருமல்ல. விஜயநகரத்துப் பாதாளச் சிறையிலிருந்து விடுபட்ட யூசப் கான்தான் அவன். துங்கபத்திரை ஆற்றின் இரு கரையிலும் குவிந்து கிடந்த இந்துப் படைகளின் பார்வையிலிருந்து தப்புவதற்காக கிழக்கே வெகு தூரம் சென்று கிருஷ்ணா நதியைக் கடந்து அவசரமாக வந்து கொண்டிருந்தான் அவன்.

வாயில் நுரை தள்ள, உடலில் வியர்வை வெள்ளமாக வழிய வந்து நின்ற குதிரையிலிருந்து குதித்தான் யூசப் கான். குதூகலமுடன் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள் கூட்டணி வீரர்களும் தளபதிகளும். அவன் கொண்டு வந்திருக்கும் செய்தியை, அதை விட அவன் தப்பி வந்த அதிசயத்தை அறியவே ஆவலாக அவன் முகம் நோக்கினார்கள் அத்தனை பேரும்.

"அல்லாஹ்வின் திருநாமத்துக்கு ஆயிரம் சலாம்கள்! அளவற்ற கருணையாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அவனது திருநாமம் நம்மைக் காப்பதாக!" என்று கூறி மேற்கு நோக்கித் தரையில் மண்டியிட்டுத் தொழுது எழுந்தான். "சரியான சமயத்துக்கு வந்துவிட்டேன். சற்றுத் தாமதமாகி இருந்தாலும் நீங்கள் சதிக்குப் பலியாகி இருப்பீர்கள்" என்றான் சித்திஹாஸனை விழியோரத்தால் கண்காணித்தபடியே.

"அந்த வீணனோடு பேசி நேரத்தை ஏன் வீணாக்குகிறீர்கள்; திட்டமிட்டபடி முன்னேறுங்கள் சீக்கிரம்!" என்று கொதித்தான் சித்திஹாஸன்.

கடகடவென்று சிரித்தான் யூசப்கான். "வேவுகாரன் என்று அந்நிய நாட்டுச் சிறையிலே அடைபட்டுக் கிடந்த நான் வீணன். சொந்த நாட்டு மக்களை விரோதிகளிடம் காட்டுக் கொடுக்கும் கயவர்கள் கண்ணியமானவர்கள். ஏன், அப்படித்தானே?" என்று கேட்டு அலட்சியமாக நின்றான் அவன்.

"நீ எங்கு அடைபட்டுக் கிடந்தாலென்ன? இங்கு வந்து எனக்கும் என் படை வீரர்களுக்குமிடையே ஏன் பிளவை உண்டாக்குகிறாய்? ஒதுங்கி ஓடிப்போய் உன் வேலையைப் பார்!" என்று கர்ஜித்தவனின் நெஞ்சமோ 'இந்தப் பாவி விஜயநகரத்தின் பாதாளச் சிறையிலிருந்து எப்படித் தப்பி வந்தான்?' என்று குமைந்து கொண்டிருந்தது.

சூழ்ந்து நின்ற படைத் தலைவர்கள் இவர்களுடைய வாக்குவாதத்தில் தலையிடவில்லை. பிரதம சேனாதிபதிப் பட்டத்தைச் சித்திஹாஸனுக்கு அளித்ததில் அநேகருக்கு விருப்பமே இல்லை. ஆதில்ஷாவிற்காக அடங்கிக் கிடந்தார்கள். அந்த நிலையில் யூசப்கானின் வருகையும் சித்திஹாஸனின் திமிரான பேச்சும் அவர்களை வேடிக்கை பார்க்கவே வைத்திருந்தன.

"என் வேலையைப் பார்க்கத்தான் ஓடோடி வந்திருக்கிறேன்" என்றான் யூசப்கான்.

"நாட்டிலே எங்காவது விளையாட்டு மைதானங்கள் இருந்தால் அங்கு போய் உன் திறமைகளைக் காட்டிப் பெருமைப்படு. இது போர்க்களம்" என்றான் அகம்பாவத்துடன் அபிசீனியன்.

"விளையாட்டு மைதானங்களிலே தான் தோல்வியடைந்தவர் களிடம் கருணை காட்டி உயிரோடு விட முடியும். போர்க்களத்திலே அதுவும் துரோகிகளை, அப்படி விடமுடியாது" என்று யூசப்கான் குத்திக் காட்டிய போது சித்திஹாஸனின் முகத்துத் தழும்பிலே தணலிட்டது போலிருந்தது. தன்மானத்துக்கு ஏற்பட்ட அந்தத் தாங்க முடியாத அடியை அவனால் பொறுக்க முடியவில்லை.

"யாரடா துரோகி?" என்று கூறியவனின் கை உடைவாளை உருவி ஓங்கியது.

"விரோதிகளின் பீரங்கிப் படையை மறைந்திருக்கும்படி சொல்லி, அழிவை உண்டாக்கும் அவற்றின் முன்னால் என்ன நடக்கப் போகிறது என்பதை அறியாத பாமினிப் படைகளை அழைத்துக் கொண்டு போய்ப் பலியிடப் போகிறானோ அவன்தான் துரோகி! இன்னமும் விளக்க வேண்டுமா? அற்ப குணம் படைத்த அபிசீனியனே! இனத்துரோகி என்பதை அறியாமல் உன் கட்டளையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் படைகளுக்கு முதலில் உத்தரவிடு, திரும்பிச் சொல்லும்படி" என்று சீறினான் யூசப்கான். அவன் கூறியதைக் கேட்ட கூட்டத்தினர் திகைத்தார்கள். வெறுப்புடன் சித்திஹாஸனைப் பார்த்தார்கள்.

அபிசீயனின் கறுத்த முகம் மேலும் கறுத்துச் சிறுத்தது. நிலைமை கட்டுக்கடங்காமல் போவதைக் கண்டவன் கொதித்தெழுந்தான். "டேய், அற்பனே! கற்பனை செய்து கண்டபடி ஏதோதோ பிதற்றி என்படை வீரரிடையே குழப்பத்தை உண்டாக்கும் உன்னைக் கொல்லாமல் விடப் போவதில்லை" மூர்க்காவேசமாக முழக்கியபடி வாளைச் சுழற்றிக் கொண்டு ஓடி வந்தான். நிராயுதபாணியாக நின்றிருந்த யூசப்கான் "வாளிலே நீ காட்டும் வல்லமையைத் தான் நான் பார்த்து விட்டேனே!" என்று ஏளனமாகக் கூறியபடி லாகவமாக ஒதுங்கிக் கொண்டான். உடனே அங்கிருந்த தளபதிகளில் ஒருவன் தன் உடை வாளை உருவி அவனிடம் வீசினான். சித்திஹாஸனின் அடுத்த இலக்கு அவன் மீது விழுவதற்குள் அதைத் தடுக்க, வலிய வந்த வாளைப் பற்றிக் கொண்டு புயலாகப் பாய்ந்தான் யூசப்கான். வாளோடு வாள் மோதின. இல்லை, வஞ்சனையும் வன்மமும், கடமையும் இனப் பற்றும் மூர்க்கமாகப் போரிடலாயின. அவமானமடைந்த ஆத்திரமும், சூழ்ச்சி வெளிப்பட்டு விட்டதனாலே ஏற்பட்ட வெறியும் சேர்ந்து சித்திஹாஸனின் வாளை மின்னலாக வீச வைத்தது. மின்னல்களை இருள் விழுங்குவது போல அவனது அத்தனை வீச்சுக்களையும் வீணாக்கிக் கொண்டிருந்தான் யூசப்கான். இருவரும் சுழன்று சுழன்று சாடிக் கொண்டார்கள். வாள் வீச்சிலே வல்லவர்களான இருவரும் ஒருவரை ஒருவர் மிஞ்ச முயன்ற போது போர் உக்கிரமான கட்டத்தை அடைந்தது. அழிப்பது அல்லது அழிந்துபடுவது என்ற முடிவோடு போரிட்டனர் அவ்விருவரும். இருவர் உடலிலும் பல இடங்களில் வாள்முனை பட்டுக் குருதியை வழிய வைத்திருந்தது. அவர்களின் செயலைத் தடுக்கவோ விலக்கவோ யாருமே முயலவில்லை. அந்தப் போரின் முடிவிலே உண்மையை அறிந்து கொள்ளும் ஆவலுடன் காத்திருந்தனர் படை வீரர்கள். அவர்களை அதிக நேரம் காக்க வைக்கவில்லை யூசப்கான்.

தக்க தருணத்தை எதிர்பார்த்திருந்தவன் சட்டென்று திறமையான ஒரு வீச்சிலே சித்திஹாஸனின் வாள் அவன் இரும்புப் பிடியிலிருந்து நழுவி எகிறிப் போய் விழும்படி செய்தான். இமைக்கும் நேரத்தில் இடை வெளியே கொடுக்காமல் தனது அடுத்த வீச்சை அந்த அபிசீனியனின் இதயத்திலும் பாய்ச்சி விட்டான். வாள் புகுந்த நெஞ்சை இரு கைகளாலும் அழுத்திக் கொண்டு மூச்சு முட்டப் பரிதாபமாக ஓலமிட்டவாறு நிலத்தில் சரிந்தான் சித்திஹாஸன். அவன் இதயத்திலிருந்து உருவிய வாளில் படிந்த ரத்தத்தை அவன்

உடைகளிலேயே துடைத்த யூசப் கானின் முகத்திலே வெறுப்பு வழிந்தது

"இந்தத் துரோகியின் ரத்தத்தில் நனைந்த இந்தக் கத்தியைக் கூட இனி எந்த முஸல்மானும் தொடமாட்டான்" என்று கூறி அவன் அருகிலேயே அதை வீசினான் யூசப்கான்.

"இவனது இந்த ஈனச் செயலுக்கு இவன் மன்னனும்கூட உடந்தையாக இருக்க வேண்டுமே. இதை நம் மன்னர்களுக்கும் எச்சரிக்க வேண்டாமா?" என்று கேட்டான் ஒரு தளபதி.

இது காதில் விழுந்த போது மரணாவஸ்தையிலிருக்கும் சித்திஹாஸன். "இந்தச் செயலுக்கு என் சொந்த விருப்பு வெறுப்புக்கள் தான் காரணம். ஆதில்ஷா அவர்களுக்கு இதைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவர் நம்பிக்கையைப் பயன்படுத்திக் கொண்ட நான்... நான் மட்டுமே துரோகி" என்று திணறியபடியே ஓர் உண்மையை வெளியிட்டுவிட்டுப் பழி தீர்த்துக் கொள்ளமுடியாமலேயே உயிர் நீத்தான் அந்த ஒப்பற்ற வீரன்.

இதற்குள் ராமராயருக்குச் சித்திஹாஸனின் மரணம் அறிவிக்கப்பட்டு விட்டது. நதியின் படுகையில் நாணல் புதரில் மறைந்திருந்து நடந்தவற்றை யெல்லாம் கவனித்து வந்த விஜயநகரத்து ஒற்றர்கள் மகாமண்டலேசுவரரிடம் போய் நிலைமையை விளக்கினார்கள். பாமினி சுல்தான்களைப் பதறவைக்கும் மகத்தானதொரு சதித் திட்டம் நாசமானதும் மறைந்திருக்கும் தமது வீரர்களை வெளிவந்து பாமினிப் படைகளைத் தாக்கும்படி கட்டளை பிறப்பித்தார். சலனமற்றிருந்த நதியின் மறு கரையிலே திடீரென்று ஆயிரம் பத்தாயிரம் என்று அளவிட முடியாத விஜயநகரத்துப் படைகள் தோன்றியதும் தான் யூசப்கானுடைய குற்றச்சாட்டின் உண்மை உறுதியாயிற்று. தக்க சமயத்தில் அவன் வந்து தடுத்திரா விட்டால் எதிர்க்கரைக்குச் சென்றிருக்கும் தங்கள் அத்தனை பேரையும் விஜயநகரப் பெரும் படை பலி கொண்டிருக்கும் என்பதை நினைத்துப் பார்த்து நெஞ்சம் நடுங்கினார்கள். தங்களைக் காட்டிக் கொடுக்கத் திட்டமிட்ட சித்திஹாஸன் பிணமாக விழுந்து கிடந்த இடத்தின் பக்கம் காறி உமிழ்ந்து தங்கள் வெறுப்பை வெளிப்படுத்திக் கொண்டார்கள். இனத்துரோகியான அவனது உடலைக்கூடத் தீண்ட விரும்பாத அவர்கள் அதை எடுத்து அடக்கம் செய்யாமல்

அப்படியே கழுகுகளுக்கு விருந்தாக்கி விட்டு விஜயநகரத்து பீரங்கிப் படைகளின் தாக்குதலிலிருந்து தப்ப வேகமாகப் பின் வாங்கினார்கள். சித்திஹாஸனின் துரோகத்தினாலும் மரணத்தினாலும் காலியான அவனது இடத்தை யூசப்கானுக்கே அளித்து நிறைவு செய்தார்கள் தளபதிகள். வெள்ளமெனப் பொங்கி வரும் விஜயநகரத்துச் சேனைகளின் வீராவேசத் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் சொற்ப சேதத்துடன் மிக்க சாமர்த்தியமாகத் தப்பிப்பிழைக்க வழி வகுத்து அத்தனை படைகளையும் நடத்திச் சென்று பத்திரமான இடத்துக்குக் கொண்டு வந்து சேர்த்தான் யூசப்கான்.

இதற்குள் சித்திஹாஸனின் துரோகம் பற்றிய செய்தி பாமினிப் பட்டாளம் முழுவதும் பரவி விட்டது. யூசப்கானின் வரவு நிஜாம்ஷாவுக்கும் குதப்ஷாவுக்கும் மட்டற்ற மகிழ்ச்சியை அளித்தன. யூசப்கான் மூலம் சித்திஹாஸனின் துரோகச் செயலை அறிந்த அவர்களுக்கு ஆதில்ஷாவின் நல்லெண்ணத்திலே நம்பிக்கை தளரலாயிற்று. சித்திஹாஸன் இறக்கும்போது 'இந்தச் செயலுக்கு ஆதில்ஷா ஆட்பட்டவரல்ல' என்று கூறினாலும் அதை நம்ப முடியாத சூழ்நிலையில் இருந்தார்கள். குதப்ஷாவும் நிஜாம்ஷாவும், தன் நாட்டில் பலவந்தமாக மற்றவர்கள் புகுந்து காட்டையும் மேட்டையும் அழித்துப் படைகளின் போக்குவரத்துக்குப் பாதைகள் அமைத்துக் கொண்டு தன்னையும் இந்தக் கூட்டிலே கட்டாயப்படுத்திச் சேர்த்திருப்பதாகவும் தான் என்றுமே விஜயநகரத்துக்கு விரோதமாக இருக்கப் போவதில்லை என்று வாக்களித்து ராமராயரின் பாசறைக்குத் தூதனுப்பிய செய்திகளெல்லாம் ஒற்றர்கள் மூலம் அவர்களுக்குக் கிடைத்திருந்தன. அதற்கேற்றாற்போல ஆதில்ஷா போர்க் களத்துக்குத் தம் படைகளுடன் வந்தும் செயல் படாது சோம்பி இருந்தார். ராமராயருக்கும் ஆதில்ஷாவுக்கும் இடையே அடிக்கடி தூதுகோஷ்டிகள் போய் வந்து கொண்டிருந்தன. பரிசுகளும் காணிக்கைகளும் இரு பக்கங்களிலும் பரிமாறிக் கொள்ளப்பட்டன. இவைகளையெல்லாம் கொதிப்போடு கவனித்து வந்தார்கள் கூட்டணிப் படையினர்.

குதப்ஷாவும் நிஜாம்ஷாவும் தங்கள் படையுடன் விஜயநகரப் படையணியைத் தாக்கிய போதும்கூட ஆதில்ஷா உதவிக்கு வந்து ஒத்துழைக்கவில்லை. தோற்றோடி வந்தவர்களைச் சித்திஹாஸனின் இந்தச் செயல் சீறியெழச் செய்தது. நட்புப் போர்வைக்குள் இருந்து

கொண்டு நாச வேலை செய்யும் ஆதில்ஷாவிடம் நம்பிக்கை வைக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்தவர்கள் அவரது வேஷத்தைக் கலைத்து விட்டு உண்மையாக நடந்து கொள்ளும்படி வற்புறுத்தி வயதிலே மூத்த மதத்தலைவர்களை மறுபடி தூதாக அனுப்பினார்கள். "நாம் எல்லோரும் சேர்ந்து தான் விஜயநகரத்தை வீழ்த்துவதற்குத் திட்டமிட்டோம். எங்களோடு ஒத்துழைப்பதாக வாக்களித்த தாங்கள் ரகசியமாக ராஜபுவரா ராமராயருடன் தொடர்பு கொண்டிருப்பது நம் இனத்துக்கே இழிவான செயல் ஆகும். எங்களுடன் தொடர்பு கொண்டு அதே சமயத்தில் விரோதியுடனும் நட்புக் கொண்டிருப்பது முறையல்ல. பல முறை தங்களிடம் பணிவாகக் கேட்டுக் கொண்டும் தங்கள் போக்கில் மாறுதல் ஏதுமில்லை. ஒன்றுபட்டு நிற்போமானால் வெற்றி நமக்கே. அது உறுதி. இறுதியாகக் கேட்கிறோம். ராமராயருடன் உள்ள தொடர்பை விடுத்து எங்களுடன் சேர்ந்து விஜயநகரை வீழ்த்த வாருங்கள். இல்லாவிடில் நாங்கள் உங்களை விட்டுப் பிரிந்து சென்று போரிடத் தீர்மானித்துள்ளோம். தாங்கள் இப்படி நாணயமற்ற முறையில் நடந்து கொண்டால் இஸ்லாம் இன மக்களும், அல்லாஹவும் தங்களுக்குத் தகுந்த பாடம் கற்பிப்பார்கள் என்பதை மட்டும் மறக்க வேண்டாம்." வாதிட்டு விவகாரம் பேசி ஆதில் ஷாவை வழிக்குக் கொண்டு வரத் தக்க வயோதிக மதத் தலைவர்களையும் மந்திரிகளையும் இத்தகைய கடிதத்துடன் அனுப்பினார்கள். ஆதில்ஷா இதற்கும் மறுப்பதானால் முடிவாகப் பழி தீர்த்துக் கொள்ளுவோம் என்று கூறி வரும்படியும் சொல்லி இருந்தார்கள். ஆனால்...

தூதுவர்கள் விவகாரம் பேசுவதற்கே சந்தர்ப்பம் அளிக்கவில்லை ஆதில்ஷா. சித்திஹாஸனின் செயலும் மரணமும் அவரைச் சிந்திக்க வைத்து விட்டன. யாரைத் தம் நம்பிக்கைக்குப் பாத்திரமாக எண்ணி இருந்தாரோ அவனாலேயே தம் பெயருக்குக் களங்கம் ஏற்பட்டு விடடதை எண்ணிப் பார்த்தார். அவன் செயல் தம் மக்களிடமும் தம் இன மன்னர்களிடமும் தம்மைப் பற்றி எத்தகைய விபரீத மனப்போக்கை உண்டாக்கும் என்பதை உணர்ந்ததும் உள்ளம் நொந்து போனார். அல்லாஹ்வின் திரு உள்ளம் என்ன என்பது இப்போது அவருக்குப் புரியலாயிற்று. அப்போது நேரம் பிற்பகல். மூன்றாவது தொழுகைக்கான பதினோராவது 'டாஸி' மண்டியிட்டார். உள்ளம் உருக அல்லாஹ்வை நினைந்து தொழுகை நடத்தினார். "யா, அல்லாஹ்! யா, குதா! தங்கள் திருஉள்ளம் இதுதான் என்பதை இப்போது தான் புரிந்து கொண்டேன். இந்த நிமிடம் முதல் ராமராயரின்

நட்பை உதறிவிட்டு இஸ்லாத்தின் ஏற்றத்துக்காகவே இந்த உயிரை அர்ப்பணிப்பேன். தாங்கள் மனம் வைத்து என் செயல்களை வெற்றியாக்கித் தரவேண்டும்" என்று நமாஸ் செய்து எழுந்தார். உள்ளத்தை உறுதியாக்கிக் கொண்டு ஒரு முடிவுக்கு வந்தவரின் முன்னே நிஜாம்ஷாவின் தூதுவர்கள் வந்து வணங்கிக் கடிதத்தை நீட்டினார்கள். அதை வாங்கிப் படித்த ஆதில்ஷா தாம்தீர்மானித்த முடிவை அவர்களிடம் தெளிவாக்கி அனுப்பினார். ஆதில்ஷாவை இணங்க வைக்கச் சிரமப்பட வேண்டி இருக்கும் என்று வந்தவர்கள் சிந்தை மகிழ்ந்து திரும்பினார்கள்.

விஜயநகரத்துப் பாசறையிலே வெற்றிச் செருக்கோடு அமர்ந்திருந்த ராமராயரின் உள்ளத்தில் புயல் வீசிக் கொண்டிருந்தது. சாம்ராஜ்யத்தின் பாதாளச் சிறையிலிருந்து ஒரு கைதி தப்பிச் செல்வதென்றால் அதை விட அவமானம் வேறு என்ன வேண்டும்? கைதி தப்பிவிட்ட செய்தி வந்த கையோடு சித்திஹாஸனுடன் அவன் போரிட்டு அவனைக் கொன்ற காட்சியையும் வந்து கூறினார்கள் ஒற்றர்கள். சித்திஹாஸனோடு தான் வகுத்திருந்த திட்டங்களெல்லாம் சீரழிந்ததை எண்ணிச் சினங் கொண்டிருந்தார். இது பற்றி யாரையும் எதுவும கேட்கவில்லை. ஆனால் பொறுப்புள்ள ஒவ்வொருவரின் உள்ளமுமே இதைப் பற்றிக் கேள்விகளால் குடைந்து கொண்டிருந்தது. ராமராயர் எந்த நிமிஷம் யாரைக் கூப்பிட்டு என்ன கூறுவாரோ என்று நடுங்கினார்கள்.

தனிமையிலே குழம்பிய உள்ளத்துடன் உட்கார்ந்திருந்தான் வேங்கடாத்திரி. அப்போது அவனைத் தேடிக் கொண்டு வந்தான் ஒரு வீரன். அவன் கையில் வேங்கடாத்திரியின் முத்திரை மோதிரம் இருந்தது. தங்களைக் காத்துக் கொள்ள ஓடி ஒளிந்த பாமினிப் படைகளை விரட்டிச் சென்ற விஜயநகரத்துப் படையணியில் போரிட்ட வீரன் அவன். வேங்கடாத்திரி தான் அதற்குத் தலைமை தாங்கிச் சென்றான்.

"தங்கள் கையிலிருந்து இந்த மோதிரம் போர்க்களத்திலே தவறி விழுந்து விட்டது போலிருக்கிறது. என் கண்ணில் பட்டது. கொண்டு வந்தேன்." என்று கூறி அதை நீட்டிய வீரனை நிமிர்ந்து பார்த்தான் வேங்கடாத்திரி. சலனமற்றிருந்தது அந்த வீரனின் முகம். மௌனமாக மோதிரத்தை வாங்கிக் கொண்ட வேங்கடாத்திரியின் உள்ளத்திலோ சிந்தனைகள் சூறாவளியாயின.

# 26

# விதி விளையாடியது

**சி**த்திஹாஸனோடு வாட் போரிட்ட போது யூசப்கானின் கையிலிருந்த ஆயிஷா அளித்த மோதிரம் நழுவிக் கீழே விழுந்திருக்கிறது. களத்தில் கிடந்த அதைக் கண்டெடுத்து வந்து கொடுத்தான் விஜயநகரத்து வீரனொருவன். தன் முத்திரை மோதிரத்தைக் கையில் வாங்கிக் கொண்ட வேங்கடாத்திரியின் உள்ளம் வேதனையால் குமையலாயிற்று. அவன் செய்த மகத்தான தவற்றை இடித்துக் காட்டி ஏளனமாகச் சிரிப்பது போலிருந்தது அந்த மோதிரத்தின் ஜவலிப்பு. ஆயிஷா தப்பிவிடக்கூடாது என்பதற்காகக் கவலைப்பட்டவனுக்கு இந்த மோதிரத்தைக் கொண்டு அவள் தன் காதலனை விடுவித்து விடலாம் என்ற மிகச் சாதாரணமான விஷயம் நினைவுக்கு வரவில்லை. அதை எண்ணி நெஞ்சம் புண்ணாகிக் கொண்டிருந்தான். நெடுமூச்செறிந்த வண்ணம். அரசியல் சாகஸங்களிலே அசகாய சூரராக விளங்கும் தன் அண்ணாவுக்கு, யோசனையற்ற தன் செய்கையால் ஏற்பட்டுள்ள தலைக்குனிவை நினைத்துத் தடுமாறினான் வேங்கடாத்திரி. போரின் போக்கே மாறுவதற்குத் தான் காரணமாகவிட்டதை உணர்ந்ததும் அவனது ஆத்திரமெல்லாம் ஆயிஷாவிடம் திரும்பியது. தான் அவளிடம் வைத்த அன்புக்கு, நம்பிக்கைக்கு அவள் எத்தனை பெரிய துரோகத்தைச் செய்து விட்டாள்?

யூசப்கானின் விடுதலை எந்தச் சூழ்நிலையில் எப்படி நடைபெற்றது என்பதை ராமராயரிடம் தூதுவர்கள் வந்து கூறியிருப்பார்கள். தளபதியாரின் முத்திரை மோதிரத்தைக் கண்டு தான் நாங்கள் அப்படிச் செயல்பட்டோம் என்று சிறைக்காவலாளிகள் சொல்லியிருப்பார்கள். இத்தனைக்குப் பிறகும் அண்ணா தன்னைக் கூப்பிட்டு இது விஷயமாக ஒன்றுமே கேட்காததை வேங்கடாத்திரியால் தாங்கவே முடியவில்லை. எந்த அண்ணாவைத் தெய்வமாக எண்ணி இருந்தானோ, ஈடு இணையற்ற ராஜதந்திரி என்று யாரிடம் மதிப்பும் மரியாதையும் கொண்டிருந்தானோ அவருடைய மனம் புண்ணாகும்படியாக நடந்து கொண்டோமே என்று மறுகலானான் வேங்கடாத்திரி.

அவனைக் கூப்பிட்டு அவர் கடிந்து கொண்டிருந்தால், இப்படிப் பொறுப்பற்ற முறையில் முத்திரை மோதிரத்தைக் கொடுத்துக் காரியங்களைக் கெடுத்து விட்டாயே என்று ஆத்திரத்தைக் கூட்டி இருந்தாலாவது அவனுக்குச் சற்று ஆறுதலாக இருந்திருக்கும். ஆனால் அண்ணாவின் இந்த அமைதி, மௌனம் அவனை அணு அணுவாக வதைத்துக்கொண்டிருந்தது. அண்ணா ராமராயர் யார் மீது நம்பிக்கையும் நல்லெண்ணமும் இல்லாதிருந்தாரோ அந்தத்திருமலை இந்த விஷயத்தில் நல்லவனாகிப் போய் விட்டான் என்பதை நினைத்துத் தன்னையே நொந்து கொண்டிருந்தான் வேங்கடாத்திரி. இந்தத் தவிப்பு, வேதனை எல்லாம் ஆயிஷாவின் மீது வெறுப்பாகி ஆத்திரமாகக் கொழுந்துவிட்டது. அவள் நினைப்பெல்லாம் நெருப்பாகி அவன் உடலைத் தகித்துக் கொண்டிருந்தது. போர்க்களத்திலே அவனுக்கு இருப்பே கொள்ளவில்லை. ஆயிஷா அந்தப்புரத்தில்தான் இருக்கிறாள் என்ற செய்தியைக் கொண்டு வந்திருந்தான் தூதுவன். தனக்குக் கொடுத்த வாக்கைக் காப்பதற்காகத்தான் தப்பிச் செல்லாமல் தன் காதலனை விடுவித்துவிட்டுப் பழி தீர்க்கக் காத்திருக்கும் அந்த வஞ்சகியை உடனே போய்ச் சந்தித்துத் தன் மோதிரத்தைக் கேட்க வேண்டும். அப்போது முகம் கவிழ்ந்து நிற்கும் அவளை மனங்கொண்ட மட்டும், இகழ்ந்து ஏசி இப்போது தான் அனுபவிக்கும் அத்தனை வேதனையையும் அவள் அனுபவிக்கும்படி செய்யவேண்டும் என்று துடியாய்த் துடித்தான் அவன்.

ஆனால் களத்தை விட்டுச் செல்லும் சூழ்நிலை அப்போது இல்லை. ஆதில்ஷா தன் வேஷத்தைக் கலைத்து விட்டுப் பாமினி சுல்தான்களின் கூட்டிலே சேர்ந்துவிட்டார் என்ற செய்தியை ஒற்றர்கள் கொண்டு வந்திருந்தார்கள். எதிர்பார்த்த செய்திதான். இரண்டகமாக எத்தனை நாளைக்குத்தான் இயங்க முடியும்? ஒரு நிலையில் யாரோ ஒருவருக்கு உண்மையாக நடந்து கொள்ள வேண்டியது தானே? அந்த ஒரு நிலையும் ஒருவரும் யாராக இருக்க முடியும் என்பதையும் ராமராயர் அறிவார். போர் உக்கிரமான நிலையை அடைந்து விட்டது என்பதற்கான அறி குறியும் அதுதான். அந்த அறிவிப்புக் கிடைத்ததும் அரவீட்டு முதல்வர் ஆத்திரம் கொள்ளவில்லை. ஆதில்ஷாவின் போக்கினால் ஆதங்கப்படவும் இல்லை. தோல்வியே கண்டிராத ராமராயர், அசையாத வெற்றியுறுதியுடன் இருந்த ராமராயர். மறுநாள் போருக்குப் படையணிகளை எப்படி மாற்றியமைத்து நடத்திச் செல்ல

வேண்டும் என்பதைத் திட்டமிடத் தம் பாசறைக்கு வரும்படி தம்பிகளுக்குத் தாக்கீது அனுப்பினார்.

ஆயிஷாவின் நினைவை இயத்தின் ஒரு மூலையில் அழுத்தி வைத்துக் கொண்டு அண்ணாவைச் சந்திக்க ஆர்வமுடன் வந்தான் வேங்கடாத்திரி. அவனுக்கு முன்பாக அங்குதிருமலை தயாராக இருந்தது அவனைத் துணுக்குற வைத்தது. அண்ணாவின் அன்பு அவன் பக்கம் சரிந்து விட்டதோ என்ற சங்கடப்படலாயிற்று அவன் உள்ளம்.

'எனக்கு அன்றைக்கே தெரியும். ஆயிஷா ஆபத்தானவள் என்று அதனால்தான் அவளைக் கைது செய்து வரும்படி கட்டளையிட்டேன். ஆனால் என்செயலுக்கு மாசு கற்பித்து அலட்சியம் செய்தீர்கள். அதன் பலன், இன்று விஜயநகர சாம்ராஜ்யத்தின் சரித்திரத்திலேயே நிகழாததொரு காரியத்தை நடத்திக்காட்டி விட்டாள் அந்தத் துருக்கியப் பெண்' என்று சொல்லாமல் சொல்லும் சூதுநிறைந்த பார்வையைத்திருமலையின் கண்ணகளில் கண்டான் வேங்கடாத்திரி. அது அவன் மனப்போராட்டத்தின் பிரமையாகவும் இருக்கலாம். ஆனால் போர்க்களத்திலே அண்ணாவின் வலது கையாக விளங்கும் வேங்கடாத்திரி, தலை நிமிர்ந்து காரியங்களைச் செய்யும் தைரியம் மிகுந்த வேங்கடாத்திரி இன்று தலை குறிந்து நின்றான். அண்ணாவினால் ஒதுக்கப்பட்ட திருமலையோ உல்லாசமாகச் சிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

நாளைக்கு நடக்கப் போகும் போரிலே படையணிகளை எப்படி. யார் எங்கு தலைமை தாங்கி நடத்திச் செல்ல வேண்டும் என்பதைப் பற்றித் தளபதிகள், தளவாய்கள், பாளையக் காரர்கள், படைத் தலைவர்கள் ஆகியோருக்கெல்லாம் திட்டங்கள் வகுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தாரே ஒழிய அந்த நிலையிலும் நடந்து போன மோதிர விஷயத்தைப் பற்றி வேங்கடாத்திரியை விசாரிக்கவில்லை. தன் செய்கையை நினைந்து தானே தாபப்பட்டுக் கொண்டிருக்கும் தம்பியின் மனநிலையை அறியாதவரல்லர் ராமராயர். வெந்தபுண்ணில் வேல் இடுவது போல நொந்த அந்த உள்ளத்தைத் தன் விசாரணையால் மேலும் வேதனைக்குள்ளாக்குவானேன் என்று தான் அதைப் பற்றிப் பேசவில்லை அவர். தவிரவும் தம்பி வேங்கடாத்திரி ஆயிஷாவிடம் அத்தனை நம்பிக்கை கொள்ளுவதற்குத் தானும் ஒரு காரணம் தான்

என்ற நினைப்பும் அவர் நெஞ்சில் உறுத்திக் கொண்டிருந்தது. ஆனால் எதனாலும் பாதிக்கப்பட்டவராகத் தன்னைக் காட்டிக் கொள்ளவில்லை அவர்.

"நடக்கவிருக்கும் போரிலே ஆதில்ஷாவையும் குதப்ஷாவையும் உயிருடன் சிறைப் பிடித்துவாருங்கள். அவ்விருவரையும் கூண்டி வடைத்துப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருப்பேன். ஆனால் நிஜாம்ஷாவின் தலையை மட்டும் கொண்டு வந்தால் போதும்" என்று தன் தம்பிகளுக்கு உத்தரவிட்டு விட்டு விடை கொடுத்து அனுப்பினார் ராமராயர்.

உலக சரித்திரங்களில் கூறப்பட்டுள்ள பல ஒப்பற்ற பெரும் போர்களுக்கு இணையானது கிருஷ்ணா நதிக்கரையிலே இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் நடைபெற்ற மகத்தான போர். தலைக்கோட்டைப் போர் என்று இது பிற்காலத்தில் பெயர் பெற்றாலும் வரலாற்று ஆதாரங்களின்படி, இனத்தின் பெயரால், மதத்தின் பெயரால் பல லட்சம் மக்களைப் பலி கொண்ட இடம் தலைக்கோட்டை அல்ல. முஸ்லிம் அரசுகளின் படைகள் தங்கியிருந்த இடம் தலைக்கோட்டை, இங்கிருந்து இவர்கள் கிருஷ்ணையாற்றைக் கடந்து வந்த பின்னரே போர் நடைபெற்றது. ஆற்றின் தென் கரையிலே ராட்சசி, தங்கடி என்ற இரண்டு சிற்றூர்கள் இருந்தன. இந்த இரண்டு ஊர்களுக்கும் இடைப்பட்ட தூரம் பத்துக் கல்லாகும். ராட்சசி, தங்கடி என்ற இவ்விரு ஊர்களுக்கும் நடுவிலுள்ள பரந்த வெளியில் தான் இப்பெரும் போரின் விதி நிர்ணயிக்கப் பட்டது. ஆகவே இதைத்தலைக் கோட்டைப் போர் என்பதைவிட இராட்சசி, தங்கடிப் போர் என்று கூறுவதே பொருத்தமாகும்.

தென்னக வரலாற்றிலே தன்னிகரற்று விளங்கிய ஒரு சாம்ராஜ்யம் சரிந்த சோக மயமானதொரு நிகழ்ச்சியைச் சொல்லுவதற்கே நெஞ்சம் நடுங்குகிறது. பரந்த நிலப்பரப்பிலே, செல்வச் சிறப்பிலே, படை பலத்திலே பகைவர்களின் பொறாமைக்கு இலக்காக விளங்கியது விஜயநகரப் பேரரசு, பல தலைமுறைகளாகத் தோல்வியையே காணாத வெற்றிச் செருக்கிலே வாழ்ந்து வந்தார்கள் விஜயநகரத்து மன்னர்கள். அயல் நாட்டினரெல்லாம் வியந்து பாராட்டும்படியான ஆட்சியையும் அரசியல் ஆடம்பர வாழ்வையும் பெற்றிருந்தார்கள். வரலாறு காணாத புகழ் படைத்த விஜயநகர சாம்ராஜ்யத்தின் தலைவிதி தலைக்கோட்டைப் போரிலே

நிர்ணயிக்கப்பட்டது. இந்தப் போரிலே, பயன்படுத்தப்பட்ட இந்து சாம்ராஜ்யத்தின் படுத்தப்பட்ட இந்து சாம்ராஜ்யத்தின் படை பலத்திலே பாதிகூட இல்லை இஸ்லாமிய மன்னர்களான பாமினி சுல்தான்களின் கூட்டணியிலே. பெரும் போர் தொடங்குவதற்கு முன் இரு பக்கங்களிலும் நிகழ்ந்த சிறு சிறு தாக்குதல்கள், பலத் தேர்வுகள் ஆகியவற்றில் பாமினிப் பட்டாளம் பல தடவை முறியடிக்கப்பட்டுச் சிதறி ஓடின. விஜயநகரின் பேராற்றலை இப்படித் தொடக்கத்திலே அறிந்த முஸ்லிம் அரசுகளுக்கு எதிர்த்து வெற்றி பெற்றுவிட முடியும் என்ற நம்பிக்கை கொஞ்சமும் இல்லை. வீரத்திலே பிறந்து வெற்றியின் வாசலிலேயே வளர்ந்த விஜயநகரத்துக்கோ தோல்வியைப் பற்றிய சிந்தனையே இல்லை. இத்தகையதொரு சூழ்நிலையில் ஒரு போர் முரணான முடிவைக் கொடுப்பதானால்...? அதை விதியின் விபரீதமான விளையாட்டு என்று தான் சொல்ல வேண்டும். வக்கிரபுத்தி கொண்ட விதி, விஜயநகரத்து வீரர்களோடு விளையாடியது.

கிருஷ்ணா நதியின் தென் கரையிலேதான் விஜயநகரத்துப் படை வெள்ளம் பெருகிக் கிடந்தது. முஸ்லிம் அரசுகளின் கூட்டணிப் படைகள் ஆற்றைக் கடந்து தான் தாக்குதல் நடத்தியாக வேண்டும். ஆனால் ஆற்றைக் கடப்பது என்பதோ ஆகாத காரியம். கரை நெடுகிலும் இந்துப் படைகளின் கட்டுக்காவல் பலமாக இருந்ததே அதற்குக் காரணம். கடப்பதற்கு ஏற்ற ஆழமற்ற பகுதிகளின் எதிர்க் கரைகளில் எல்லாம் விஜய நகரத்துப் பீரங்கிகள் அனலைக் கக்கி அழிவை விளைவிக்கத் தயாராக இருந்தன.

ஆரம்பத்தில் நடைபெற்ற பலத் தேர்வுகளில் தோற்றோடிய நிஜாம்ஷாவும் குதப்ஷாவும் வெற்றி கிட்டும் என்ற நம்பிக்கை தளர்ந்தவர்களாக எப்பாடு பட்டாவது வலிமை வாய்ந்த விஜயநகரத்தை வென்று அழித்து விடுவது என்ற உறுதியோடு சூழ்ச்சி செய்யலானார்கள். நேசமாக இணங்கிப் போக விரும்புவதாக ராமராயருக்குத் தூதனுப்பினார்கள். ஆனால் இந்த நயவஞ்சகத் திரைக்குப் பின்னால் மூன்று பகைச் செயல்களையும் திறம்படச் செய்து முடித்தார்கள் இந்த முஸ்லிம அரசர்கள். வெற்றி நிச்சயம் என்ற வீரச் செருக்கிலே விஜயநகர மகாமண்டலேசுவரர் பகையரசர்கள் வஞ்சனை புரிகிறார்கள் என்ற எண்ணத்துக்கு இடம் கொடுக்காமல் அலட்சியமாக இருந்தார். நேச இணக்கப் போர்வையிலே கோல்கொண்டாவின் குதப்ஷா விஜய நகரத்து முஸ்லிம் படைத் தலைவர்களுடன் தொடர்பு

கொண்டான். இனம், மொழி, மதம் மூன்றையும் அவர்கள் முன்னே வைத்துத் தக்க சந்தர்ப்பத்தில் தங்களுக்குச் சாதகமாகத் திரும்பி விடுமாறு அவர்கள் மனத்தை மாற்றுவதற்கு ஏற்ற ஆட்களை அனுப்பினான். இவர்கள் எதிர்பார்த்ததைவிடச் சுலபமாகவே ஆதில்ஷா கூட்டணியில் முழுமனத்தோடு சேர்ந்து போரிட ஒப்புதல் அனுப்பியதை அடுத்த வெற்றியாகக் கருதினார்கள். முஸ்லிம் அரசர்களின் சமாதானத் தூது விஜயநகரப் படையணியில் மகிழ்ச்சியையும், பாதுகாப்பற்றதோர் அலட்சிய நிலையையும், உண்டாக்கி இருந்தன. அதே சமயத்தில் முஸ்லிம் படையணியோ மிகுந்த எச்சரிக்கையோடு இருந்தது. யூசப்கானின் தலைமையில் செயல்பட்ட முஸ்லிம் கூட்டணிப்படைகள் கிருஷ்ணா நதியைக் கடக்க இருந்த இடத்திலிருந்து விலகிச் செல்வதாகப் பாவிக்கப்பட்டது. இதை உண்மை என்று நம்பிய விஜயநகரப் படைகள் அந்த இடத்திலிருந்த பலத்தகாவலை அகற்றி நதியோரமாக நகர்ந்து செல்லும் பகைப் படையின் மீது தங்கள் கவனத்தைச் செலுத்தின. திட்டமிட்டுச் செய்யப்பட்ட இந்தச் சூழ்ச்சியைத் திறம்பட நடத்தும் பொறுப்பேற்றிருந்தான் யூசப்கான். முஸ்லிம் படைகள் ஆற்றைக் கடக்கும் எண்ணத்தைக் கைவிட்டதாக நினைத்துக் குறிப்பிட்ட பகுதியில் கட்டுக்காவலைத் தளர்த்திக் கவனக் குறைவாக இருந்தனர் விஜயநகரப் படையினர். இத்தகையதொரு நிலையையே எதிர்பார்த்திருந்த யூசப்கான் இரவோடு இரவாக இரட்டிப்பு வேகத்துடன் திரும்பி வந்து பாதுகாப்பற்ற நிலையில் உள்ள படுகையில் தனது படைகளை இறக்கிச் சுலபமாக ஆற்றைக் கடந்து மறு கரைக்கு வந்து விட்டான். அந்தப் பகுதி முஸ்லிம் அரசுகளின் வசமாயின. அதன் வழியாக அரசுகளின் வசமாயின. அதன் வழியாக எல்லாப் படைகளையும் இக்கரைக்குக் கொண்டு வருவது மிகச் சுலபமாகி விட்டது.

விரோதிகள் ஆற்றைக் கடந்து விட்டனர் என்ற செய்தி கிடைத்த போதுதான் ராமராயர் விழித்துக் கொண்டார். நேச இணக்கப் பேச்சுக்களின் போர்வையிலே முஸ்லிம்கள் மோசம் செய்து விட்டார்கள் என்பதை உணர்ந்ததும் பீதியோ பரபரப்போ அடைந்து விடவில்லை. மறுநாள் காலையில் விஜயநகரின் பிரதானப் படையணிகளுக்குப் பத்தாவது மைலில் விரோதிகள் வந்து விட்டார்கள். சமாதானத்தை வேண்டித் தவம் கிடந்தவர்கள் திடீர்த் தாக்குதல் நடத்தியதைக் கண்டு திகைத்தாலும் உடனே நிலைமையை

வெகு திறமையுடன் சமாளித்தார் அரவீட்டு முதல்வர், விஜயநகரின் அத்தனை படைகளையும் போருக்குத் தயாராகும்படி ஆணையிட்டார். விஜயநகரின் படை வெள்ளம் பல மைல் தூரத்துக்குப் பரந்து கிடந்ததால் கிழக்கு மேற்குத்திசைகளில் உள்ள படைகளுக்குத் தலைமை தாங்கி நின்ற திருமலையும் வேங்கடாத்திரியும் செய்தி அறிந்து அண்ணாவின் அருகே உதவிக்கு விரைந்தார்கள். விஜய நகரப் படையணியின் நடுநாயகனாக ராமராயரே இருந்தார். இடப்புற அணியைத் திருமலையும் வலப் பக்கத்துப் படைப் பிரிவை வேங்கடாத்திரியும் நடத்திச் சென்றார்கள். திருமலையை எதிர்த்துப் பீஜப்பூரின் சுல்தான் அலி ஆதில்ஷா தம் படைகளின் நடு நாயகமாக விளங்கிய அகமதுநகர் ஹுஸைன் நிஜாம்ஷா ராமராயரை நேருக்கு நேரே எதிர்க்கத் தயாராக இருந்தார். வேங்கடாத்திரியின் படைகள் அலிபரீத்ஷாவையும் குதப்ஷாவையும் களத்திலே சந்திக்க விரைந்து கொண்டிருந்தன.

விஜயநகரப் பெரும் படைக்கு ஈடுகொடுப்பதே போல முஸ்லிம் அரசுகளின் கூட்டணிப் படையும் பல பகுதிகளாகப் பிரிந்து தாக்குதலைச் சமாளிக்கப் பரவலாக நின்றிருந்தன. ஒவ்வொரு பகுதியையும் பல தளபதிகள் நடத்திச் சென்றார்கள்.

முஸ்லிம் அரசர்களின் ஆர்ப்பாட்டமான போர் ஆயத்தங்களை யெல்லாம் குழந்தைத்தனமான விளையாட்டாக எண்ணி எதிர்க்கத் தயாரானார் ராமராயர். பட்டத்து யானையின் மீதிருந்தபடி முதலில் தம் படைகளை நடத்தினாலும் அவரால் அதிக நேரம் அதன் மீது அமர்ந்திருக்க முடியவில்லை. இருபது வயதின் இளமையோடு அவர் போரைத் திட்டமிட்டு நடத்தினாலும் முதுமையின் அவஸ்தைகளுக்குப் போக்குக் காட்டிவிட முடியுமா? தவிரவும பரபரத்த உள்ளத்தவரான அவரால் ஒரே இடத்தில் எப்படி உட்கார்ந்திருக்க முடியும்? போர்க்களத்தின் எல்லா இடங்களிலும் தானே சென்று ஒவ்வொரு வீரனையும் ஊக்குவிக்கும் பழக்கமுடையவர் அவர். ஆகவே ஒரு பல்லக்கைக் கொண்டு வரச் செய்து அதில் உட்கார்ந்தபடி தமது படைகளை நடத்தினார். இது மிகவும் அபாயகரமான செய்கை. விரோதிகளால் வெற்றி கொள்ளப்பட்டுப் பின்வாங்க நேரிடுமானால் பல்லக்கிலிருந்தபடி வேகமாகத் தப்ப முடியாது. ஆனால் வெற்றி தமக்கே என்ற தளராத நம்பிக்கை கொண்ட ராமராயர் தப்பிச் செல்வதைப் பற்றிக் கனவிலும் கருதாதவராயிற்றே!

பல வருஷங்களாகக் குமைந்து கொண்டிருந்த பகைப் புகை பெரு நெருப்பாகத் தன் கோர நாக்குகளைச் சப்புக் கொட்டிக் கொண்டு கொழுந்து விட்டெரியலாயிற்று. நிஜாம்ஷா திறமையோடு திட்டமிட்டிருந்த துப்பாக்கிப் படைகளைத் தூளாக்கிக் கொண்டு ராமராயரின் துப்பாக்கிப் படையினர் முன்னேறினார்கள். அகமதுநகர் சுல்தானுக்கு எவ்விதத்திலும் சளைத்தவரல்லவே ராமராயர்? இருபக்கத்திலும் ஏராளமான உயிர்ச் சேதம் தான். இருந்தாலும் விஜயநகரத்து வீரர்கள் அகமது நகர்ப் படைகளைப் பின்னடையச் செய்தனர். இந்தவேளையில் தம் வீரர்களை மேலும் உற்சாகமூட்டி ஊக்குவிக்க நினைத்தார் அரவீட்டார். தாம் ஏறி இருந்த சிறிய பல்லக்கை விட்டு இறங்கியவர். சிவந்த சீனத்துப் பட்டைக் கொண்டு விதானம் அமைத்த பெரிய பல்லக்கைக் கொண்டு வரச் செய்தார். அதிலே நவரத்தினங்கள் வைத்து இழைத்த உயர்ந்த ஆசனம் ஒன்று பொருத்தப்பட்டிருந்தது. அதில் அமர்ந்து கொண்டதும் தனாதிகாரியை அழைத்துத் தன்னைச் சுற்றிலும் பொக்கிஷ சாலையிலிருந்து தயாராகக் கொண்டு வரப்பட்டிருக்கும் பலபேழைகளையும் வைக்கும்படி ஆணையிட்டார். பொன் வெள்ளி நாணயங்களைக் கொண்டு வந்து அருகே குவிக்கும்படி கூறினார். இரண்டு கைகளாலும் பொற் காசுகளை வாரி வாரி வழங்கி வீரர்களை உற்சாகப்படுத்தவும் அந்த இடத்திலேயே விருதுகளும் பரிசுகளும் வழங்கப் பேழைகளில் உள்ள விலை உயர்ந்த ஆபரணங்கள் பயன்பட்டன.

இந்த நிலையில்—

வெற்றித் தேவதை விஜயநகரத்தின் பக்கமே வசீகரப் புன்னகை புரிவதைக் கண்ட முஸ்லிம் மன்னர்கள் தம்முடைய கடைசிச் சூழ்ச்சியைக் கையாண்டனர். பாமினி சுல்தான்களின் படையணியிலிருந்து சமிக்ஞை தரப்பட்டதும் வாக்களித்திருந்தபடி விஜயநகரத்துப் படையணியிலே இருந்த பெரிய முஸ்லிம் தளபதிகள் இருவர் திடீரென்று துரோகிகளாக மாறி விரோதிகளின் பக்கம் சேர்ந்து கொண்டார்கள். யாருடைய உப்பைத் தின்று உடலை வளர்த்தார்களோ அந்த நன்றியை மறந்து விட்டார்கள் அந்நியார்களான அவர்கள். யாருடைய நல்வாழ்வுக்காக, நல்லெண்ணத்துக்காக இந்துக்களின் மனக் கசப்பையும் பொருட்படுத்தாது விஜயநகர சாம்ராஜ்யத்திலே துருக்கி வாடா என்ற பகுதியையே நிர்மாணித்துக் கொடுத்தாரோ அவர்கள்

அந்த மன்னரின் வாழ்வுக்கே வாளாக மாறினார்கள். களத்திலே உடமை தவறி இடம் மாறிய அந்தத் தளபதிகள் ஒவ்வொருவரிடமும் எண்பதினாயிரம் எழுபதினாயிரம் படை வீரர்கள் இருந்ததினால் போரின் போக்கையே இந்த நீசச் செயல் பெரிதும் பாதித்தது. ஆபத்தைக் கண்டு அஞ்சாதிருக்கலாம். இதயத்தை நோக்கி வரும் வாளைக் கண்டு நிலைகுலையாதிருக்கலாம். ஆனால், துரோகத்துக்கு? தோழமை கொண்டு தோள் மீது கைபோட்டு வந்தவன் வஞ்சனையாக முதுகிலே வாளைச் செருகுவது போன்ற இந்தச் செய்கையினால் அதிர்ச்சியடையாமல் இருக்க முடியுமா? கலங்காத நெஞ்சம் கொண்ட ராமராயரே கலகலத்துப் போய் விட்டார். என்ன நடந்தது. இனி என்ன செய்வது என்பதைப் பற்றிய எண்ணத்தை ஒரு நிலைப்படுத்தவே அவருக்குச் சிறிது நேரமாயிற்று. இந்துக்களுடன் கலந்து நின்றன துரோகிகளான முஸ்லிம் படைகள். எதிரியை இலக்கு வைத்து முன்னேறும் போது பக்கத்திலுள்ளவனே எதிரியாக மாறித்தாக்கினால்? அத்தகையதொரு நிலையைக் கற்பனை செய்யவே முடியாது. திடீரென்று விளைந்த அந்தக் குழப்பத்தையும் அசகாய சூரரான அரவீட்டு ராமராயர் அரும்பாடுபட்டுச் சமாளிக்கலானார். பொற் குவைகள் சூழ்ந்த பல்லக்கிலிருந்தவர் குதிரை மீது ஏறி அமர்ந்து குழப்பத்தை ஒரு நிலைப்படுத்த எண்ணிப் பல்லக்கிலிருந்து இறங்க யத்தனிக்கும்போது, போர்க்களத்தின் ஆரவாரத்தினால் வெளி கொண்ட யானை ஒன்று பிளிறிக் கொண்டு நிலைகுலைந்த படை வீரர்களிடையே தறிகெட்டு மதங்கொண்டு மாவுத்தனுக்கும்அடங்காமல் ஓடி வந்தது. அந்தப் பயங்கர மிருகத்தைக் கண்டு பீதியடைந்த பல்லக்குத் தூக்கிகள் உயிர் ஆசை மிஞ்ச, தாங்கள் ஒரு சாம்ராஜ்யத்தின் ஒப்பற்ற தலைவரைத் தாங்கிக் கொண்டிருக்கிறோம் என்ற நினைவிழந்தவர்களாகப் பல்லக்கைக் களத்திலேயே போட்டு விட்டு ஓட்டம் எடுத்தார்கள். பல்லக்கிலிருந்து கீழே விழுந்த ராமராயர் நிதானித்துக் கொண்டு குதிரை மீது ஏறுவதற்குள் முஸ்லிம் வீரர்கள் அவரை மொய்த்துக் கொண்டு விட்டார்கள். இமைக்கும் நேரத்தில் அவரைக் கைதியாக்கி அப்படியே தூக்கிக் கொண்டு ஓடினார்கள். அருகில் இருந்தது ஆதில்ஷாவின் பாசறைதான். திருமலைக்கு எதிராகத் தம் படைகளை நடத்திச் சென்றவர்படைகளின் பொறுப்பைத் தளபதியிடம் கொடுத்து விட்டு ஏதோ காரியமாகப் பாசறை திரும்பி இருந்தார். ராமராயரைக் கைதியாகச் சந்திக்கவேண்டுமென்பதற்காக விதிதான் அவரை அங்கு அழைத்து வந்ததோ என்னவோ? திடீரென்று

தம் பாசறையில் ராமராயரைக் கண்டதும் ஆதில்ஷா பழைய விசுவாசமுடன் எழுந்து வரவேற்க முன் வந்தார். பிறகுதான் மகாமண்டலேசுவரர் கைதியாகத் தம் முன் நிற்பதை உணர்ந்து தம் நிலை அறிந்தார். அவரால் நம்பவே முடியவில்லை. பெரும் போர் தொடங்கிச் சில மணி நேரங்களுக்குள் பிரதான புருஷரான அலியா ராமராயர் கைதியாவதென்றால்? நினைத்துப் பார்க்கவே கூட முடியாததொரு செயல். ஆனால் நடந்து விட்டது! போரின் போக்கை எப்படியெப்படியெல்லாமோ கற்பனை செய்து கொண்டிருந்தார்கள் இரு சாராரும். அவர்களை எல்லாம் திகைக்க வைக்கும்படியான முடிவுக்கு விதிதிட்டமிட்டு விட்டது.

எத்தனையோ பெரும்போர்களை நடத்தி வெற்றி கண்ட ஒரு வீர புருஷரைக் கேவலம் படை வீரர்கள் சூழ்ந்து கொண்டு கைது செய்வதென்றால்? அத்தகையதொரு சூழ்நிலைக்குத் தாம் ஆனானதை எண்ணி மனம் உடைந்து போயிருந்தார் ராமராயர். இதற்குப் பிறகும் வாழவிரும்பவில்லை அவர். அவமானத்தினால் அவரது ஆவி துடித்துக் கொண்டிருந்தது. தன்னை அவர்கள் ஆதில்ஷாவிடம் அழைத்து வந்தது சற்றே ஆறுதலாக இருந்தது. தன் வரவால் அதிர்ச்சியடைந்த ஆதில்ஷா குழம்பித் தவிப்பதைக் க்ணட ராமராயர் சோபை குன்றிய முகத்தோடு விரக்தியாகச் சிரித்தார்.

"சொல்லொன்று செயலொன்றாகச் சூதுபுரிவதற்காகத்தான் நேசம் மறக்கமாட்டேன் என்று பாசாங்கு செய்தாயா, ஆதில்ஷா?" என்று கேட்டார். கேட்கத் தேவையற்ற கேள்விதான் அது. ஆனாலும்...

"சந்தர்ப்பச் சூழ்நிலை அது. என் செயலல்ல." கைதியின் முகத்தைப் பார்க்காமலே பதில் கூறினார் ஆதில்ஷா. அவசியமற்ற பேச்சுத்தான் அது.

"வீண் பேச்சு எதற்கு? உன் உண்ணம் கைகூடி விட்டது. இப்படி ஒரு முடிவு எனக்கு ஏற்படப் போகிறது என்றுதானோ என்னவோ உன்னை நான் என் அன்பு மகனாக வரித்துக் கொண்டேன். உன் கூட்டாளிகளின் முன்னால் என்னைக் கொண்டு நிறுத்தி அவமானப்படுத்தாதே. அவர்கள் கையால் மரணமடைவதை நான் விரும்பவில்லை, கொன்றுவிடு. தாமதிக்காதே இந்தா" என்று கூறித் தம் இடையிலிருந்த உடைவாளைக் குழற்றி ஆதில்ஷாவின் முன்னால் வைத்தார் ராமராயர். தம் முடிவைப் பற்றி அவருக்குக் கொஞ்சமும்

சந்தேகமே இல்லை. முஸ்லிம் மன்னர்கள் தம்மை இனி உயிருடன் விட்டுவைக்க மாட்டார்கள் என்பதை அவர்அறிவார். ஆனால் அந்த மரணத்தைத் தாம் நேசித்த ஒருவனின் கையால் பெறுவதையே விரும்பினார்.

ராமராயரின் அந்தச் சொல்லும் செயலும் விரோதியும் வேற்று இனத்தவனுமாகிய ஆதில்ஷாவையே ஆட்டிவிடடது. பகை முடித்தாலும் தன் பாட்டனாக வேண்டிய வயோதிகரான ராமராயருக்குத் தன் கையால் அத்தகைய முடிவை அளிக்கத் துணிவில்லை ஆதில்ஷாவுக்கு. ஏதோ ஓர் இனம் புரியாத பாசம் அவர் நெஞ்சை அடைத்தது. ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராகக் கூடாரத்தின் அடுத்த பகுதிக்கு விரைந்தார் ஆதில்ஷா.

ஆனால் அதற்குள் ராமராயர் கைதியான செய்தி காட்டுத் தீயாகப் போர்க்களமெங்கும் பரவிவிட்டது. அவரை ஆதில்ஷாவின் பாசறைக்கு இழுத்துச் சென்றிருக்கிறார்கள் என்பதைக் கேள்விப்பட்ட நிஜாம்ஷா அதை நிஜமென்று முதலில் நம்பவேயில்லை. யாராலுமே நம்ப முடியாத செயலல்லவா அது? ஆனால் அடுத்த கணமே 'ஒருவேளை அது உண்மையானால்? ஆதில்ஷா தன் தந்தைப் பாசத்தால் ராமராயரைத் தப்ப விட்டு விடலாம் அல்லது பழைய நேச உணர்ச்சியால் உந்தப்பட்டு அவருடன் மறுபடியும் சேர்ந்துவிடலாம்' என்ற கவலையோடு ஆதில்ஷாவின் பாசறையை நோக்கித் தன் குதிரையை வேகமாக விரட்டிக் கொண்டு வந்தார். பாசறையைச் சூழ்ந்திருந்த முஸ்லிம் வீரர்களின் குதூகலமான கூச்சல், செய்தி உண்மை தான் என்பதை உறுதியாக்கியது. உடனே உருவிய வாளுடன் உள்ளே நுழைய முயன்ற நிஜாம்ஷாவைப் பாசறையின் காவலாளி வழிமறித்தான். யாரையும் உள்ளே அனுமதிக்கக் கூடாது என்பது ஆதில்ஷா அவனுக்கிட்டிருந்த கட்டளை. தனித்து நிற்கும் ராமராயரைக் கண்டதும் வெற்றி எக்களிப்பு வெறியாகிவிடவே தன்னைத் தடுத்து நிறுத்திய வீரனை ஒரே வீச்சில் வீழ்த்திவிட்டு "இன்னுமா உயிரோடு வைத்திருக்கிறார்கள் உன்னை?" என்று கூறிக் கொண்டே அவரை நோக்கிப் பாய்ந்தான் நிஜாம்ஷா. ஆனால் அவன் கத்திக்குத் தன் உயிரைக் கொடுக்கவில்லை அரவீட்டு முதல்வர். காவலாளியுடன் கலகலத்தபோதே அவன் வரவை அறிந்து விட்டார் அவர். எந்த முடிவைத் தாம் விரும்பவில்லையோ அந்த முடிவே தம்மை நோக்கி விரைவதைக் கண்டு தமக்குத் தாமே விடுதலை அளித்துக் கொண்டு

விட்டார். அவருடைய குத்துவாள் ஆழம் காண முடியாத அவரது இதயத்தின் அடித்தளத்தை நோக்கி வேகமாகச் சென்று கொண்டிருந்தது.

அரவீட்டு முதல்வரைப் பத்திரமாகத் தக்க பாதுகாப்புடன் காவல் கைதியாகத் தனது அரண்மனைக்குக்கொண்டு செல்வதற்கான ஏற்பாட்டைச் செய்துவிட்டு ஆதில்ஷா அங்கே நுழைவதற்கும் வெறி கொண்ட நிஜாம்ஷாவின் வாள் ஒளி வீசித் தணிவதற்கும் சரியாக இருந்தது. அந்த வாளிலே ரத்தக் கறை படிந்திருந்தது. அதறகு முன்பே தம் ஆவியை நீக்கிக் கொண்ட அரவீட்டாரின் தலை தரையில் தனியாக உருண்டு கிடந்தது. நடந்துவிட்ட விபரீதத்தைக் கண்ட ஆதில்ஷா அப்படியே இடிந்து போய்விட்டார். இறந்து கிடந்த ராமராயரின் சடலத்தின் அருகே மண்டியிட்டமர்ந்தவரின் கண்களிலிருந்து மாலை மாலையாகக் கண்ணீர் ஒழுகலாயிற்று. வாய் அல்லாஹ்வின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டிருந்தது.

ஆதில்ஷாவையோ அவரது நிலையையோ பார்த்துக் கொண்டிருக்கவில்லை பகை முடித்து வெற்றி வெறி கொண்டிருந்த நிஜாம்ஷா. ராமராயரின் தலையை ஒரு நீண்ட ஈட்டியில் செருகிக் கொண்டு வெளியே ஓடினார். எந்த முகத்தைக் கண்டதும் விரோதிகளும் எழுந்து நின்ற மரியாதை செலுத்தினார்களோ, அந்த ஒப்பற்ற வீரரான ராமராயரின் தலையைப் படைவீரர்கள் இரு சாராரும் பார்க்கும்படி ஈட்டியில் கொத்தி ஏந்தியபடி ஆனந்தக் கூத்தாடினார். தம்முடைய தலையைக் கொண்டு வரும்படி ஆணையிட்டவரின் தலையையே கொய்து குதூகலித்தார். அகமதுநகர் நிஜாம்ஷா. ஆதில்ஷாவோ தலையற்ற உடலின் அருகே அமர்ந்து ராமராயரின் இந்த நிலைக்குத்தாமே காரணமாகி விட்டோமோ என்ற தாபத்துடன் அழுது கொண்டிருந்தார்.

# 27

# இதயத்தில் பாய்ந்த ஈட்டி

மகாமண்டலேசுவரரான ராமராயர் எதிரிகளால் கைது செய்யப்பட்டதுமே களத்தில் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. எத்தனையோ பெரிய பெரிய வீரர்களும், பல போர்களில் வெற்றி கண்ட தளபதிகளும் இருந்தும் விஜயநகர சாம்ராஜ்யத்தின் படை வெள்ளம், ராமராயரின் வீரத்திலேயே நம்பிக்கை கொண்டிருந்தது. அவரது தலைமையையே ஒரு பெரிய தற்காப்பாக, அரணாக எண்ணி வெற்றியிலே அசைக்க முடியாத உறுதியோடிருந்தார்கள் வீரர்கள். அத்தகைய மாவீரரின் தலையை ஈட்டி முனையிலே எதிரியின் கையில் கண்டபோது பீதி அவர்களைப் பற்றிக் கொண்டது. கல் சுவராக நின்று விரோதிகளைக் கலங்க வைத்துக் கொண்டிருந்த விஜயநகரத்து வீரர் அடுத்த வினாடியே சூறாவளிக் காற்றிடைப்பட்ட தூசியானார்கள். அவர்களின் வீரம், வலு, ஆண்மை, நம்பிக்கை, உறுதி, ஆற்றல் அத்தனையையும் உறிஞ்சிக் கொண்டது அந்தக் காட்சி.

'வெற்றி அல்லது வீரமரணம்' என்ற வேகங்கொண்ட விஜயநகரத்துப் படைகளைக் கிலியும் குழப்பமும் கௌவிக் கொண்டன. துளைக்க முடியாத படையணி பிளவுபட்டுப் பின்வாங்கியது. ஒப்பற்ற வீரர்கள் உடைபட்டு ஓடத்தலைப்பட்டார்கள். பேரரசின் பக்கமிருந்த முஸ்லிம் தளபதிகளின் துரோகமும், ராமராயரின் மறைவும் அவர்களிடையே மகத்தான மாறுதலை உண்டாக்கி விட்டன. வெற்றி தோல்விகள் இடம் மாறலாயின. வெற்றியில் நம்பிக்கையே இல்லாதவர்களைத் தேடி வெற்றி தேவதை வீறு நடை போட்டது. தோல்வியைப் பற்றியே சிந்திக்காதவர்களைப் பீதியும் பதற்றமும் தோல்வியை நோக்கித் துரத்தலாயின. நினைக்காதது நடந்தபோது, கிடைக்காதது கிடைத்த போது மகிழ்ச்சி வெறிகொண்ட பாமினிப் படைகளின் பலம் பன்மடங்காயிற்று. தலைவனிழந்த அதிர்ச்சியைத் தாங்காது தறிகெட்டுத் தடுமாறிச் சிதறி ஓடும் விஜயநகரத்து வீரர்களைப் பாமினிப் படை வீரர் வளைத்துக் கொண்டு கொன்று குவிக்கலானார்கள் குரூரமாக. குருதி வெள்ளமாக ஓடிக் களத்திலே ரத்தினக் கம்பளம் விரித்தன. பிறகு அடுத்துள்ள ஆற்று நீரைச் செஞ்சாந்துக் குழம்பாக்கி ஓட வைத்துக் கொண்டிருந்தது.

வெற்றியின் போதையிலே வெறிச் செயலில் ஈடுபட்டுள்ள வீரர்களை இஸ்லாமியத் தளபதிகளால் கூடக் கட்டுப்படுத்த முடிய வில்லை. அதே போலக் குழப்பமடைந்து ஓடும் விஜயநகரப் படைகளைத் தடுத்து நிறுத்தி ஒன்று சேர்த்து எதிர்த்துத் தாக்கும் படி செய்யும் ஆற்றல், ஆர்வம் எந்த இந்து சேனாபதிக்கும் இல்லை. கொடுமை நிகழ்ந்தது. குழப்பம் ஏற்பட்டது. படையணியின் எல்லாப் பகுதிகளிலும் இந்த நடுக்கம் விஷத்தைப் போல வியாபித்து விட்டது. ஆயுதம் தாங்கி சின்ற அத்தனை பேருமே, விரோதியை வெற்றி கொள்ள வேண்டும் என்ற வீராவேசத்துடன் போரிட்டுக் கொண்டிருந்த வீரர்கள் அத்தனை பேருமே இப்போது உயிர் பிழைக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் ஓட்டமெடுக்கலானார்கள். 'ஏதோ நடக்காதது நடந்து விட்டது. விபரீதம் விளைந்து விட்டது. மகா மண்டலேசுவரர் இறந்து விட்டார். இனி வெற்றிக்கு வ்ழி இல்லை' என்று ஓடுபவர்களில் ஒருசாரார் ஓலமிட்டது பீதியையும் குழப்பத்தையும் மிகையாக்கிவிட்டது. அணை உடைந்து வெள்ளம் போலச் சிதறியோடும் வீரர்களைத் தடுத்து நிறுத்தித் தற்காப்புக்கான முயற்சிகளில் யாராலும் ஈடுபடுத்த முடியவில்லை. சழலில் சிக்கிய துரும்பாகப் படை வீரர்களுடன் படைத் தலைவர்களும் ஓடத்தான் வேண்டி இருந்தது. தலைசிறந்த கதி நேருவானேன்? பாமினி சுல்தான்களின் பக்கம் அல்லாஹ்வின் அருள் இருந்தது. விஜய நகரத்துக்கு வெற்றி தேடித் தந்து அருள் பாலிக்கும் விருபாட்சர் எங்கோ ஓடிஒளிந்து கொண்டு விட்டார். அரவீட்டாரை ஆண்டவன் கைவிட்டு விட்டான். விதி எட்ட நின்று கொண்டு கைகொட்டிச் சிரித்துக் கொண்டிருந்தது என்றுதான் இதற்குப் பதில் கூறவேண்டி இருக்கிறது.

• ஓடும் படைகளைக் கண்டு ஒன்றும் செய்ய முடியாமல் தவித்தான் வேங்கடாத்திரி. அப்படி அவர்களை ஓட்ட வைத்த செய்தி அவன் உயிரையே குடிப்பதாக இருந்தது. 'என் அண்ணாவா கைதியானார்? இருக்கவே இருக்காது! அரவீட்டு ராமராயாரா சிறைப் பட்டார்? சிந்திக்கவே முடியாத செய்தி! விஜயநகரத்தின் மகா மண்டலேசுவரரா மரணமடைந்தார்? பொறாமைக்காரர்களின் கட்டுக்கதை!' என்று தன் உள்ளத் தவிப்புக்கு ஒத்தடம் கொடுத்துக் கொண்டிருந்தாலும் ஓடும் படை வீரர்களைக் காணக் காண அவன் நம்பிக்கை தளரலாயிற்று. "ஓடாதீர்கள்! நில்லுங்கள், ஓடினால் உயிர் பிழைக்க முடியாது. எதிர்த்து நின்று தாக்குவோமானால் எதிரியை

விரட்டலாம். 'வாழவும் வழியுண்டு'' என்று கட்டளையிட்டான். கத்தினான், ஆணையிட்டான். கர்ஜித்தான். ஆனால் எந்த ஒருவனுடைய ஒரு சொல்லுக்கு ஓராயிரம் வீரர்கள் அடங்கி ஒடுங்கி அடிபணிந்து செயல்படுவார்களோ அந்த வேங்கடாத்திரியை, விஜயநகர சாம்ராஜ்யத்தின் தளபதியை இன்று எந்த வீரனுமே லட்சியம் செய்யவில்லை. ஓடும்இந்து வீரர்களைத் துரத்தி வரும் இஸ்லாமிய வீரர்களின் வாளையும், வேலையும், ஈட்டியையும் தனி ஒருவனாக எத்தனை நேரம் தான் அவனால் சமாளிக்க முடியும்? எத்தனை பேர்களைத்தான் அவன் தன் ஒரு வாளினால் கொன்று குவிக்க முடியும்? பாதுகாப்புப் போர் நடத்தவோ, சாம்ராஜ்யத்துக்குப் போகும் பாதைகளைக் காத்துப் பகைவர்களின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்வோ வீரர்களின் உதவியும் ஒத்துழைப்புமற்ற நிலையில் உள்ளம் உடைந்து போனான் தளபதி வேங்கடாத்திரி. பகைவர்களால் வெல்ல முடியாத வேங்கடாத்திரி இந்து சாம்ராஜ்யத்துக்கு நேர்ந்த இழிநிலையைத் துடைக்க முடியாத துக்கத்தினால் துடித்துக் கொண்டிருக்கும் போது எங்கிருந்தோ ஒரு ஈட்டி அவன் இதயத்தை நோக்கிப் பாய்ந்து வந்தது. அதைத் தன் கைவாளினால் தடுத்து வெட்டி வீழ்த்தினான். ஆனாலும் அது தன் வேலையைச் செய்து முடித்த பிறகே முறிந்து விழுந்தது. இதயத்திலே பாய்ந்த ஈட்டியை இறுக்கிப் பிடித்துக் கொண்ட போது அவன் நினைவிலே ஆயிஷா வந்து நின்றாள். அப்போது அவன் இதயத்திலிருந்து குருதியோடு ஆத்திரமும் கொப்புளித்து வந்தது. "துரோகியை என் சகோதரியாகக் கொண்டேன். பழி தீர்த்துக் கொள்ளக் காத்திருக்கும் பாமினிப் பாவை அவள் என்பதை அறியாமல் அவளிடம் அன்பு பாராட்டினேன். அதன் பலன்...?" அவன் மூச்சுத் திணறியது.

'நான் என் முத்திரை மோதிரத்தை அவளிடம் கொடுக்காதிருந்திருந்தால்? பகைவர்களின் ஒற்றன். பாதாளச் சிறையிலிருந்து தப்பாமலிருந்திருப்பான்? அண்ணா திட்டமிட்டபடி, சித்திஹாஸன் கூட்டணிப் படைகளை இங்குலிகி படுகைக்குக் கொண்டு வந்து குவித்திருப்பான். பாமினிப் படைகள் அங்கே படுகொலை செய்யப்பட்டு அழிந்திருக்கும். இன்றைய நிலை ஏற்பட்டிருக்காது' என்ற நினைவிலே இத்தனைக்கும் காரணமாகி விட்டவளைக் காண வேண்டும் என்று வளர்த்துக் கொண்டிருந்த துடிப்பு வலுப்பட்டது. இனி போர்க் களத்தில் ஏதுமில்லை, வாழ்ந்து பயனில்லை, வாழ்வதற்கும் வகையில்லை என்ற நிலையில் தன்

குதிரையைத் தலைநகரை நோக்கித் தட்டி விட்டான். ஈட்டி இதயத்தின் ஓர் ஓரமாகப் பாய்ந்திருந்ததாலும், பாய்ந்த அதன் வேகத்தை வாள் கொண்டு தடுத்து விட்டதாலும் அது மெள்ள மெள்ளத் தான் அவன் உயரைக் குடித்துக் கொண்டிருந்தது. இருந்தாலும் குதிரையின் ஓட்டத்துக்கு அந்த ரணத்தின் இசிவு தாங்க முடியாததாகவே இருந்தது. பல்லைக் கடித்துக் கொண்டு, தடுமாறி ஓடும் படை வெள்ளத்தை முந்திக் கொண்டு, தாறுமாறாக விழுந்து கிடக்கும் சடலங்களைத் தாண்டிக் கொண்டு, தடுமாறி ஓடும் படை வெள்ளத்தை முந்திக் கொண்டு, தாறுமாறாக விழுந்து கிடக்கும் சடலங்களைத் தாண்டிக் கொண்டு செல்வது அவனுக்குக் கஷ்டமாகத் தான் இருந்தது. போர்க்களத்திலிருந்து வெற்றி வாகைசூடி வீறுநடை போட்டபடி வரக் கூடியவன் குருதி வழியக் குற்றுயிரும் குலை உயிருமாக... புறமுதுகு காட்டியா ஓடுகிறான்? இல்லையே, வீர மரணத்தை ஏற்றுக் கொண்டபின், தான் பிறந்த புண்ணிய மண்ணிலே போய் விழுந்து, தன்னை வளர்த்த துங்கபத்திரையாற்றங்கரையிலே அதன் மடியிலே விழுந்து மரணத்தைத்தழுவ அல்லவா ஓடிக் கொண்டிருக்கிறான்!

வெற்றி கொண்டதில் மகிழ்ச்சியானாலும் தோற்று ஓடும் வீரர்களைத் துரத்திச் சென்று கொன்று குவிக்கும் இஸ்லாமிய வீரர்களின் கொடுஞ் செயலைக் கண்டு வெறுப்படைந்து வேதனையுற்றுத் தடுத்து நிறுத்த முயன்று பயனில்லாது பார்வையை நாலா திசையிலும் செலுத்திப் படுகொலை நடப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே தூரத்தில் ஒரு குதிரை வீரன் கூட்டத்தில் வழிவகுத்துக் கொண்டு தப்பி ஓடுவதைக் கண்டான் யூசப்கான். அவன் நினைவிலே அப்போது விஜயநகரத்திலே தனித்திருக்கிறான் களத்திலிருந்து தப்பிச் செல்லும் இந்த வீருன் என்ற எண்ணமுமே பளிச்சிட்டது. ஆயிஷா தன்னுடையவள் என்ற உரிமையிலே அது திருமலை என்ற அவசர முடிவுக்கும் வந்து விட்டான் அவன். காரணம் திருமலையின் குணத்தைப் பற்றி அவள் அவனிடம் உருவாக்கி இருநத காட்சிகள்தான். வெற்றி கொண்ட வீரர் தன்னிச்சைப்படி செயல்புரியும் களத்திலே இனி தனக்கு வேலை இல்லை என்ற முடிவோடு தன் இதயம் கவர்ந்தவளைத் திருமலையின் பிடியிலிருந்து விடுதலை செய்து வரவேண்டும் என்ற எண்ணத்துடன் அவனைப் பின்தொடரலானான். ஆனால் அவன் பின்பற்றிச் சென்றது திருமலையை அல்ல. வேங்கடாத்திரியை. அவன் நினைத்தபடி திருமலையும் களத்திலிருந்து தலைநகரை நோக்கித் தலைதெறிக்க

ஓடிக் கொண்டுதான் இருந்தான். ஆனால் வேறு மார்க்கமாக, வேறு இடத்தில், மாறுபட்ட நினைவுகளோடு!

முன்னே செல்லும் வீரன், விரைவாகச் செல்ல விரும்பி ராஜபாட்டையி லிருந்து ஒற்றையடிப் பாதையொன்றிலே தன்குதிரையை விரட்டிச் செல்வதைக் கண்ட யூசப்கானும் விடாமல் அவனைத் தொடரலானான். அப்போது மாலை மயங்கி இருள் கவியும் வேளையாகி விட்டது. அந்த வீரனின் குதிரையோ அசுர வேகத்தில் பாய்ந்து கொண்டிருந்தது. வேகத்திலே தன் குதிரையை மிஞ்சக் கூடிய குதிரையே கிடையாது என்று எண்ணியிருந்த யூசப்கானுக்கு ஏமாற்றமாக இருந்தது. முன்னால் விரையும் குதிரையின் வேகம். இருளை விரட்டும் நிலவின் வெண்ணொளி வீச இன்னும் நேரமிருந்தது. இருளிலே அவன் தன் பார்வையிலிருந்து தப்பி விடுவானோ என்ற பதற்றம் ஏற்பட்டது அவனுக்கு. தன்னை மற்றொரு குதிரை தொடருகிறது என்பதை அறிந்தும் திரும்பிப் பார்க்காமல் விரட்டிக் கொண்டு செல்லும் அவன் நிலை ஆச்சரியத்தைக் கொடுத்தது. தன் குதிரையை எவ்வளவு வேகமாகச் செலுத்தியும் கூட அவனை அணுக முடியவில்லை. அதனால் ஆத்திரமடைந்த யூசப்கான் தனது குத்து வாளை எடுத்துக் குறி பார்த்து வீசினான் அவன் மீது. குளி தவறவில்லை. ஆனால் குதிரை வீரன் முதுகிலே வாள் பதிந்த போது அவன் உடல் துடித்து நிமிர்ந்து தணிந்தது. அவ்வளவுதான். வேதனை ஒலிகூட எழுப்ப வில்லை. வேகத்தையும் குறைக்க வில்லை. ஈட்டி பாய்ந்த இதயத்தின் இசிவைவிடக் குத்துவாளின் கொடுமை பெரியதாகப் படவில்லை போலும் வேங்கடாதிரிக்கு! ஆவி பிரியுமுன் ஆயிஷாவைச் சந்தித்துவிட வேண்டுமு என்ற ஆவலோடு குதிரையின் விலாவிலே கால்களை உதைத்து அதன் வேகத்தை அதிகமாக்கினான் அவன்.

வீரர்களை யெல்லாம் போர்களத்துக்கு அனுப்பித்து விட்டு வெறிச்சோடிக் கிடந்த விஜய நகரத்திலே வேதனை கப்பிக் கிடந்த உள்ளத்தோடு உலவி வந்தாள் ஆயிஷா. அந்தப்புரத்தில் அவளுக்கு இருப்போ கொள்ளவில்லை. வேங்கடாத்திரி திரும்பி வரும் போது, அவன் நம்பிக்கைக்கும் நல்லெண்ணத்துக்கும் தான் தகுதியற்றவள் என்ற உண்மையை அறிந்தே வருவான். அப்படி வரும் அவன் முகத்தில் எப்படி விழிப்பது, என்ன பதில் சொல்வது என்று ஒருபுறம் உள்ளம் நடுங்கினாலும் மறுபுறம் அவனோடு வாதாடித் தன் செய்கை

குற்றம் மற்றது என்று நிரூபிப்பது எப்படி என்பதைப் பற்றியும் திட்டமிட்டுக் கொண்டிருந்தது பலமற்ற போலியான அந்த வாதத்தை எண்ணிய போது சில சமயங்களில் அவளுக்கே பயமாகவும் இருந்தது. யாருக்காக இந்தத் தவற்றைச் செய்தாளோ அவனது நினைவினால் நிரம்பிய இதயமோ ஏங்கித் தவிக்கலாயிற்று. இப்படிப் பலதரப்பட்ட உணர்ச்சிகளால் உளைச்சலுற்ற உள்ளத்துக்கு இதயமளிக்கும் இடத்தைத் தேடிப் போனாள் ஆயிஷா. பல சோதனைகளுக்கு ஆளாகி வேதனையால் வாடிக் கிடந்த அவள் வாழ்விற்கு வானமுதாக வந்த யூசப்கானைச் சந்தித்துச் சல்லாபித்த அந்த இடம் தான் அது. விஷமாக வெறுத்த விஜயநகரத்திலேயே அந்த ஒரு இடத்துக்குத்தான் அவள் இப்போதெல்லாம் அடிக்கடி விரும்பிச் செல்கிறாள்.

அன்றும் அப்படித்தான் பால்மழை யெனப் பொழியும் நிலவிலே அந்த வெண்மணற்பரப்பையே வெறித்து நோக்கியபடி வீற்றிருந்தாள். அவள் உள்ளத்திரையிலே யூசப்கானோடு ஆடிய காதல் நாடகத்தின் காட்சிகள் நகர்ந்து கொண்டிருந்தன. அப்போது அந்த நிசப்தமான சூழலையைக் குதிரையின் குளம்பொலி அதிர வைத்தது.

போர்க்களத்திலே மனித வேட்டையாடி மகிழ்ந்து கொண்டிருக்கும் விரோதிகளிடமிருந்து விலகி, வேறு மார்க்கமாகத் தலை நகரை நோக்கித் தவிப்புடன் வந்து கொண்டிருந்த வேங்கடாத்திரிதான் ஆயிஷாவை நெருங்கிக் கொண்டிருந்தான். துங்கபத்திரையாற்றைக் கடந்ததுமே அவனுக்கு மூச்சு முட்டியது. கண்கள் பஞ்சடைந்தன. அவன் இருந்த நிலையில் வேறு யாராலுமே அந்த நெடுந் தூரப் பிரயாணத்தை மேற்கொண்டிருக்க முடியாது. உடலின் வலுவோடு உள்ளத்தின் உறுதியும் தான் அவனை இன்னும் உயிரோடு வைத்திருந்தன. ஈட்டி பதிந்த இதயத்திலிருந்து அணு அணுவாகக் கசியும் உயிர் உடல் கூட்டிலிருந்து ஓடி விடாமல் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டிருந்தான். அது மட்டுமானாலும்கூட இன்னும் கொஞ்ச நேரம் அவனால் வாழ முடியும். யூசப்கான் வீசிய குத்துவாள் வேறு மறு பக்கத்தில் மரணத்தின் மற்றொரு வாயிலைத் திறந்திருந்தது. தன் நினைவு தப்புவதற்குள் அரண்மனையை அடைந்து விட வேண்டும் என்ற ஆதுரத்தோடு குதிரையை விரட்டிக் கொண்டு வந்தவனின் பார்வை சற்றுத் தூரத்தில் தெரிந்த காட்சியில் பதிந்த போது...?

நிலவிலே குளித்தபடி அங்கே அந்தத் தன்மையில் அவன் தேடி ஓடி வரும் ஆயிஷாவே உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவனுக்குத் தன் கண்களின் பார்க்கும் சக்தியில் சந்தேகம் உண்டாகிடது. தன் உள்ளத்தின் தவிப்பே உருவெளித்தோற்றமாக அப்படி அங்கே தெரிகிறதா? அல்லது தெய்வமே தன் நிலைக்கு இரங்கி அவளை இங்கே அழைத்து வந்திருக்கிறதா? தன் முழுத் தெம்பையும், உயிர்த் துடிப்பையும் ஒன்று சேர்த்துப் புகை மண்டிய பார்வைக்குப் புதிய ஒளி ஏற்படும்படி செய்து கொண்டு பார்த்தான். கனவல்ல, கற்பனையல்ல, பிரமையல்ல, பொய்த் தோற்றமல்லை. அது அவனுடைய ஆயிஷாவே தான்! அந்த ஆனந்த அதிர்ச்சியைத் தாங்கும் சக்தி அப்போது அவன் உடலுக்கு, உயிருக்கு இல்லை. குதிரையிலிருந்து இறங்கியதும் தடுமாறித் தரையில் சரிய இருந்தவன் குதிரையின் மீதே சாய்ந்து நின்று சமாளித்துக் கொண்டான். "ஆயிஷா..." என்று தன் ஆர்வத்தை யெல்லாம் திரட்டி அழைத்தவனின் குரல் குழறியது.

இத்தனையையும் விளக்குவதற்கு இவ்வளவு நேரம் ஆயிற்றே தவிர குதிரையின் குளம்பொலி கேட்டுத் திரும்பியவளின் முன்வேங்கடாத்திரி வந்து நிற்பதற்குச் சில விநாயடிகள்தான் பிடித்தன. அவனை, அவன் நிலையை, இதயத்திலே குத்திட்டு நிற்கும் குறுதி தோய்ந்த, உடைந்த ஈட்டியைக் கண்ட ஆயிஷா, "ஐயோ! அண்ணா, இது என்ன கோரம்?" என்று அலறிக் கொண்டு ஓடி வந்தாள். அவள் உடல் நடுங்கியது.

ஆயிஷா அந்த சாம்ராஜயத்துக்கு இழைத்த துரோகத்தை அவள் முகத்துக்கு நேரே சொல்லி, தன் அன்புக்கும் நம்பிக்கைக்கும் அருகதையற்ற முறையில் நடந்து கொண்ட நயவஞ்சகத்தைப் பற்றி ஆத்திரம்தீரக் கேட்டு அவளை அழ வைக்க வேண்டும் என்ற ஆவேசத்தோடு கிளம்பிய வேங்கடாத்திரியாக இல்லை அவன் இப்போது. 'நடக்காதது நடந்து விட்டது. இனி எதையும் மாற்றியமைக்க முடியப் போவதில்லை. மரணத்தின் தலைவாசலில் சிற்கும் தான் அவள் மனம் புண்பட நடந்து கொள்வானேன்?' என்ற விவேகம் அவனுக்கு வரும் வழியிலேயே ஏற்பட்டிருந்தது. அது அவளைப் பார்த்ததும் அவள் அண்ணா என்று பதறிப் போய் அவனை நோக்கி ஓடி வந்ததும் உறுதிப் பட்டது. அவளைக் கடிந்து கொள்ளவோ, வெறுத்து ஒதுக்கி விரட்டவோவா அவன் இத்தனை வேதனையையும் தாங்கிக் கொண்டு வந்திருந்தான்?

"போர்க்களம் வீரனுக்குப் பூட்டிய ஆபரணங்களோடு வந்திருக்கிறேன் ஆயிஷா. அதைக் கண்டா இப்படிப் பதறுகிறாய்?" என்று கேட்டான் தன் குரலில் பதற்றத்தின் சாயலைக் கூடக் காட்டாதப்படி. நிற்க முடியாமல் கால்கள் துவண்டன. அதைச் சமாளிக்கக் குதிரையின் பிடரியைப் பற்றிக் கொண்டு நின்றான். அப்போது முதுகிலே குத்திட்டு நின்ற யூசப்கானின் குத்துவாள் குதிரையின் உடலிலே உரசி அதை நெறிய வைத்தது. உயிர் துடிக்க வைக்கும் மரணவஸ்தையையும் சகித்துக்கொண்டு சிரித்தபடி நின்றான் வேங்கடாத்திரி.

"உங்களை இந்த நிலைக்கு ஆளாக்கிய பாவி யாரண்ணா? ஐயோ!" என்று ஆயிஷா அரற்றுவதற்கும் வேங்கடாத்திரியைத் தொடர்ந்து வந்து யூசப்கான் அங்கு வருவதற்கும் சரியாக இருந்தது. அழுது குலுங்கும் தன் காதலி 'அண்ணா' என்று அழைத்து அலறுவதைக் கேட்ட போதுதான் அவனுக்குத் தன் தவறு தெரிந்தது. வேங்கடாத்திரியைத் திருமலை என்று எண்ணித் துரத்தி வந்திருக்கிறோம் என்பதைப் புரிந்து கொண்டான். அவரசப்பட்டுக் குத்துவாளையும் வீசித் தன் காதலியின் கண்ணீருக்குக் காரணமாகி விட்டோமே என்ற கழிவிரக்கம் கொண்ட யூசப்கான் ஆயிஷாவின் கேள்விக்குத் தானே பதில் கூறினான்.

"அந்தப் பாவி நான்தான் ஆயிஷா!" என்று யூசப்கான் குரல் கொடுத்ததும் திடுக்கிட்டுத்திரும்பியவளின் முகத்திலே காதலனைக் கண்ட களிப்பு விகசித்தது. "நீங்களா?" என்று கேட்டுச் சிலையானாள் சிங்காரி.

"உன்னைத் துன்புறுத்தத் திருமலைதான் வருகிறான் என்று எண்ணிப் பின் தொடர்நதவன் இவரை அணுக முடியாத ஆத்திரத்திலே குத்துவாளை வீசி விட்டேன் சகோதரர் இருவரையும் நான் சந்தித்தில்லை. நீ கூறிய அங்க அடையாளங்களைக் கொண்டு முடிவு செய்த நான்தான் தவறு செய்து விட்டேன் ஆயிஷா" என்று நாத்தழுதழுக்கக் கூறினான் யூசப்கான். வேங்கடாத்திரி அவனுக்கு முதுகைக் காட்டியபடி நின்றிருந்ததால் முன் பக்கத்திலே ஆயிஷா கண்ட காட்சியை அவன் காணவில்லை.

ஆயிஷாவின் கேள்வியும் அதற்குக் கிடைத்த பதிலும் தன்னைத் தொடர்ந்து வந்தவன். பிச்சவாவை வீசியவன் யார்

என்பதையும் தெரிந்து கொண்ட வேங்கடாத்திரி; அந்த விலையிலும் இரவே விழித்துக் கொள்ளும்படி கடகட வென்று வெண்முத்துப் பற்கள் நிலவிலே ஒளி வீச, வெறிகொண்டவனைப் போலச் சிரித்தான் விஜயநகரத்தின் தளபதி.

அந்தச் சிரிப்பே அவனது மணரத்தை விரைவாக்கி விடுமோ என்று பயந்த ஆயிஷா. "அண்ணா! இப்படிச் சிரிக்காதீர்கள். இந்த உடல் நிலையில் இது உங்களுக்கு ஏற்றதல்ல" என்று அவனைத் தாங்கிக்கொள்ள ஓடி வந்தாள்.

குதிரை கொடுத்த ஆதரவில் அசையாமல் நின்றிருந்த வேங்கடாத்திரி மெல்லத் தலையை மட்டும் திருப்பி யூசப்கானைப் பார்த்தான். அந்த நிலவொளியிலே தெரிந்த வேதனைவடியும் முகத்திலிருந்து யூசப்கானின் உள்ளத்தையும் படிக்க முடிந்தது. தாங்கிக் கொள்ள ஓடி வந்த ஆயிஷாவின் கரங்களில் சரிந்தவன். "ஆயிஷா! உன் காதலன் எனக் களித்த பரிசை முதலில் முதுகிலிருந்து மெதுவாக உருவி எடு! உன்மடியிலே தலை வைத்துச் சிறிது நேரம் படுக்க ஆசைப்படுகிறேன். பாவம், தான் வீசிய குத்துவாள்தான் என் உயிரைக் குடித்திருக்கிறது என்று எண்ணி வருந்துகிறான் போல் இருக்கிறது உன் அன்பன். என் இதயத்திலே பாய்ந்திருக்கும் ஈட்டியைப் பற்றி அவனுக்குத் தெரியாது. பின்னாலிருந்து வாள் வீசி வீழ்த்தி விட்டோமே என்று உன் இதயத்திலே இடம் பெற்றவன் வேதனைப்படவும் செய்யலாம். ஆனால் என் அண்ணா முஸ்லிம்களிடம் கொண்ட அன்புக்கும் நம்பிக்கைக்கும் அவர்கள் செய்த துரோகத்தைவிட இது ஒன்றும் பெரிதல்ல" என்று அவன் பேசிக் கொண்டிருக்கும் போதே யூசப்கானின் உதவியால் ஆயிஷா அவனை மெல்லத் தன் மடிமீது கிடத்திக்கொண்டாள். அப்போது தான் யூசப்கானும் அவ்ன இதயத்திலே செருகிச் சிதைந்து நின்ற ஈட்டியைக் கண்டான். ஈட்டி பாய்ந்த இயத்தோடு இத்தனைதூரம் குதிரையை விரட்டிக் கொண்டு வந்து இன்னமும் தெம்புடன் பேசிக் கொண்டிருக்கும் அவன் உடல் வலுவையும் உள்ளத்தின் உறுதியையும் எண்ணிப் பிரமித்துப் போனான் அவன்.

ஏதும்பேச முடியாத துக்கத்திலே, 'அண்ணா, அண்ணா' என்று கண்ணீர் வழிய அரற்றிக் கொண்டிருந்தாள் ஆயிஷா. அவள் மடிமீது மல்லாந்து படுத்திருந்த வேங்கடாத்திரிக்கு மேல்மூச்சு வாங்கலாயிற்று. அதனால் விம்மித் தணியும் அவன் பரந்த மார்பகத்திலே பதிந்திருந்த

ஈட்டியும் அதற்கேற்ப அசைந்தாடியது. நடுங்கும் கரங்களால் அவன் உயிரைக் குடித்துக் கொண்டிருக்கும் அதைத் தொடப்போன ஆயிஷாவின் கைகளைச் சட்டென்று பற்றிக் கொண்டான் வேங்கடாத்திரி. "அதைத் தொடாரே. ஆயிஷா! உன்னோடு இன்னும் சில விநாடிகளாவதுபேசிக் கொண்டிருக்க விரும்புகிறேன். அதை அசைத்தால் என் ஆவி பிரிந்து விடும்" என்ற போது அவள் விம்மி விம்மி அழலானாள்.

"ஆயிஷா இதோ பார்த்தாயா?" என்று அவள் விரல்களைப் பற்றித் தன் இடக்கை விரலில் அணிந்திருந்த - அவளிடம் கொடுத்துச் சென்ற முத்திரை மோத்திரத்தின் மீது வைத்தான். பிறகு அவள் முகத்தைப் பார்த்தான். "நான் உன்னிடம் அன்போடு கொடுத்துச் சென்ற இதை நீ ரொம்ப அலட்சியமாக உபயோகப் படுத்தி விட்டாயே? இதன் மகிமை தெரிந்த உன் காதலன்கூட இதைக் களத்திலே நழுவ விட்டுவிட்டான். ம்... எப்படியோ இது என்னிடம் வந்து சேர்ந்து விட்டது."

வேங்கடாத்திரி தன் வார்த்தையை முடிக்கு முன் குமுறிக்கொண்டு வரும் அழுகையினால் உடல்குலுங்க அழுதாள் ஆயிஷா. "அண்ணா! நான் துரோகி, உங்கள் அன்புக்கு அருகதையற்றவள். சுயநலக்காரி. நான் எத்தனை கொடியவள் என்பது எனக்கு இப்போதுதான் தெரிகிறது அண்ணா!" என்று விம்மியவள், அவன் முகத்தைக் காணும் துணிவில்லாமல் தன் முகத்தை மறுபக்கம் திருப்பிக் கொண்டாள்.

"நீ கொடியவளல்ல. சுயநலக்காரியுமல்ல ஆயிஷா. நினைத்த காரியத்தை முடித்துக்கொண்டு விட்டாய். பழிதீர்த்துக்கொண்ட பாமினிப்பாவை நீ! என் சபதப்படி என் அண்ணா கொல்லப்பட்டார். இந்து சாம்ராஜ்யமும் இஸ்லாமியர்களின் வசப்பட்டு விட்டது." குரோதம் கொப்பளிக்கத்தான் இதைச் சொன்னான் வேங்கடாத்திரி. சொன்ன பிறகு தான் சொல்லி இருக்கவேண்டாமோ என்று தாபப்பட்டான்.

பகை முடிக்க வேண்டும். வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டும் பழிவாங்க வேண்டுமென்று பாடுபடுபவர்கள் எல்லாம் அது நிறைவேறும் போது மனநிம்மதி இழந்தவர்களாகத்தான் மாறுகிறார்கள். அதற்கு ஆயிஷா மட்டும் விலக்கா என்ன? வேங்கடாத்திரியின் வார்த்தைகள் அவள் நெஞ்சிலே வேல்களாகப் பாய்ந்தன. அதற்கு அவள் பதில் ஏதும் கூறவில்லை. ஆனால் அவள் கயல் விழிகள்

பெருக்கிய கண்ணீர் அவன் கன்னத்திலே சொரிந்தபோது அவன் இதயத்தின் தாபம் கரைந்து போயிற்று.

வேங்கடாத்திரி அணையும் சுடரானான். முடிவை நெருங்கிக் கொண்டிருக்கிறாய் என்று உள் உணர்வு அவனுக்கு உணர்த்தியது. ஒதுங்கி நின்று வேதனைப் பட்டுக்கொண்டிருக்கும் யூசப்கானை அருகே அழைத்தான். "என் சகோதரியின் காதலனாகி விட்ட உன்னை நான் விரோதியான நினைக்கவில்லை. அன்பனாக, நண்பனாக ஏற்றுக் கொள்கிறேன். ஒப்பற்ற அழகியான என் சகோதரியை உடைமையாக்கிக் கொள்ளப் போகும் உன்னிடம் ஒன்று வேண்டிக் கொள்கிறேன். போரிலே வெற்றி தோல்வி என்பது விதியின் முடிவு. ஆனால் அதன் பின்விளைவுகள் மனிதர்களின் செயல். வெற்றி கொண்ட நாட்டிலே இஸ்லாமியர்கள் எப்படி நடந்து கொள்ளுவார்கள் என்பதைப் பற்றி நான் அறிவேன். ஏன், இந்த நாடே அறியும். தோல்வி கண்ட தேசங்கள் சொல்லும் அந்தச் சோகக் கதைகளை! இனம், மொழி, மதத்தினால் மனிதன் மாறுபட்டிருக்கலாம். ஆனால் கலை எல்லோருக்கும் பொதுவான ஒன்று. இந்துக்கள் கலைப் பொக்கிஷயங்களாகத் தங்கள் ஆலயங்களை ஆக்கியிருக்கிறார்கள். கலைகள் செறிந்த அவற்றை அழிப்பதை ரசிக உள்ளம் படைத்த எந்த மனிதனும் விரும்ப மாட்டான். விஜய நகரத்திலே வேவுகாரணாக நுழைந்தாலும் இங்குள்ள கலைச் செல்வங்களைக் கண்டிருப்பாய். அழிவுச் சக்திகளின் நாசக் கரங்களில் சிக்காமல் அவற்றைக் காப்பாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்." பாமினி சுல்தான்களின் அன்புக்குப் பாத்திரமான தளபதி நீ என்று கேள்விப்பட்டேன். ஆகவே உன் காதலியின் சகோதரனான என் கடைசி விருப்பத்தை நிறைவேற்றுவதில் சிரமமிருக்காதே? என்று கேட்டுக் நேசக்கரம் நீட்டினான் வேங்கடாத்திரி.

"வெற்றி பெற்றான பின் வெறிச் சயெல்களை விரும்பாதவன் நான். இந்நாட்டுக்கு அந்நியனான என்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு உங்கள் வேண்டுகோளை நிறைவேற்றப் பார்க்கிறேன். விரோதி நாடானாலும் விஜயநகரத்தின் கம்பீரத்திலே கலை நுணுக்கமுள்ள கட்டடங்களிலே என் இதயத்தைப் பறிகொடுத் திருக்கிறேன் நான். ஆகவே..."

அவனை முடிக்க விடவில்லை வேங்கடாத்திரி. "அது போதும்" என்று அவன் கைகளைப் பற்றிக் கொண்டான். அதற்குள் அவனுக்கு

மூச்சு முட்டியது. இதழ்க் கடையிலே குருதி கொப்பளறித்து வழிந்தது. கண்கள் ஆயாசத்தினால் மூடிக் கொண்டன. மூச்சு மெள்ள மெள்ள அடங்கலாயிற்று. அவனை இழக்பதைத்தாங்க முடியாத ஆயிஷா இதயம் வெடிக்க 'அண்ணா! என்று கத்தினாள். நாயனந் திறந்து நங்கையின் துயரந் தோய்ந்த வதனத்தை நோக்கினான் வேங்கடாத்திரி.' 'சோதரி. .. போகிறேன்...' என்ற வார்த்தைகளை அடுத்து 'விட்டலநாதா விருபாட்சா!' என முனகி குழறலாகி விட்டது. 'ஹோ!'வென்று கதறியபடி முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு தேம்பினாள் ஆயிஷா. அவள் அழுகை அடங்கிய போது அவன் மூச்சும் அடங்கிப்போயிருந்தது. ஆழ்ந்த நித்திரையிலிருப்பது போலிருந்தது . அந்த அழகிய முகம். முன் நெற்றியில் சரிந்திருந்த கேசக் சுருள்களை ஒதுக்கிவிட்டு மௌனமாக அவன் நெற்றியிலே முத்தமிட்டாள். ரத்தக் கீற்றாக நெற்றியின் குறுக்கே ஓடியிருந்தது ஸ்ரீசூர்ணம். முத்தமிட்ட இதழிலே அது சுடராகச் சுட்டது. உயிர் பிரிந்த பிறகு அவன் இதயத்திலே பாய்ந்திருந்த ஈட்டியை வெளியே இழுத்தான் யூசப்கான். ஒரு பொட்டு ரத்தம் கூட வெளிப்படவில்லை. சோகச் சிலையா இறுகிப் போய் உட்கார்ந்திருந்த ஆயிஷாவின் மடியிலிருந்து அவன் தலையை மெல்ல எடுத்துத் தரையில் கிடத்திவிடடு, அவளை அவணைத்தபடி தூக்கி நிறுத்தினான். அன்புச் சோதரனை இழந்த துக்கம், இன்பக் காதலனை அடைந்து மகிழ்ச்சி இரண்டும் கலந்த உணர்ச்சிக் குவியலாகி யூசப்கானின் மார்பிலே கன்னம் புதைத்துக் கண்ணீர் பெருக்கினாள் ஆயிஷா.

மாவீரர்களின் கதை முடிந்தது. ஆனால் விஜயநகர சாம்ராஜ்யத்து மக்களின் சோகக் கதை முடியவில்லை.

எண்ணிக்கையில் ஏராளமான பேர் படையணியிலே இருந்தாலும் ஒழுங்கு, கடடுப் பாடு, முறையான பயிற்சி ஏதும் கிடையாது இந்தியப் படை வீர்களிடையே. இதுவைர எந்தப் போரிலும் காணாத அளவு இந்தப் போரிலே வீரர்களிடையே சிலியும் குழப்பமும் பெருமளவுக்குப் பரவியது பாரதத்தின் துரதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். ஓடுபவர்களைத் துரத்திக் கொண்டு பாமினிப் படைகள் விஜய நகரினுள்ளே புகுந்தன. விரோதிகளைத் தடுக்கவோ, வெள்ளமென வந்து புகும் இஸ்லாமியப் ப்டைகளை எதிர்க்கவோ எவருமில்லை. கட்டுக்காவல் , படை வீரரின் பாதுகாப்பு ஆகிய ஏதுமற்ற நிலையில் பரிதாபகரமாக அடிமைப்பட்டது தென்னகத்திலே தன்னிகரற்று விளங்கியதொரு சுந்தர நகரம்

களத்திலே நாலாயிரம் இந்துக்கள் படுகொலைக்குள்ளானதாக முஸ்லிம் வரலாற்றாசிரியர்களே கூறுகிறார்கள். வழி திறந்து வாயில் திறந்து வைத்திருந்த விஜயநகரத்துக்குள் முதல் முதல் புகுந்தவர்கள் களத்திலிருந்து தப்பிப் பிழைத்து ஓடிவந்தவீரர்களும் தலைவர்களும் தான். அப்படி வந்தவர்களும் கதவடைத்துக் காவலைப் பலப்படுத்துவதில் கவனம் செலுத்தவில்லை. தங்கள் சேமிப்புகளையும் பெண்டு பிள்ளைகளையும் கூட்டிக்கொண்டு தப்பியோடுவ்திலலேயே கருத்தாக இருந்தார்கள்.

வரப்போகும் விபரீதத்தை, அபாயத்தைச் சற்றும் எதிர்பாராமல், நகர மாந்தர்கள் அமைதியாகவே தங்கள் அலுவல்களைக் கவனித்து வந்தார்கள். மாபெரும் தலைவர்கள் ஒப்பற்ற வீரர்களுடன் வேண்டிய தளவாடங்களுடன் போர்க்களம் சென்றிருக்கிறார்கள். வெற்றியைத் தவிர வேறெதுவும் நிகழாது என்ற நிச்சயமான நம்பிக்கையிலிருந்து வந்தவர்களைக் களத்திலிருந்து வந்த பரபரப்பூட்டும் செய்திகள் கூடப் பாதிக்கவில்லை. 'விஜயநகரப் பெரும்படை தோற்றுவிட்டது. தலைவர்கள் கொல்லப்பட்டார்கள். படை வீரர்கள் ஓடி வருகிறார்கள்' என்ற தகவல்களை யெல்லாம் மிகச் சாதாரணமாகவே கருதினார்கள். இப்படி எத்தனையோ சந்தர்ப்பங்களில் இத்தகைய தகவல்களுக்குப் பின்னும் விரோதிகள் விரட்டியடிக்கப்பட்டிருந்தார்கள் அல்லது பொக்கிஷங்களிலே குவித்து கிடந்த செல்வங்களை வாரிக்கொடுத்து அவர் களை வழி அப்பியிருந்தார்கள். இதுவும அதைப் போன்ற நிகழ்ச்சிதான். அபாயமும் ஏற்படாது என்ற நம்பிக்கையுடனேயே இருந்தார்கள் நகர மாந்தர்கள். ஆனால் இந்தத் தோல்வி மகத்தானது. மற்றெப்போதையும் விடமாறு பட்டதென்பதை விரைவிலேயே உணர்ந்து கொண்டார்கள். அவர்கள் விழித்துக் கொணட போது காலம் கடந்து விட்டது.

ஓடிவந்தவர்களில் முக்கியமானவன் திருமலை. தன் எண்ணம் கைகூடும் நாள் வந்து விட்டது என்ற மகிழ்ச்சியோடு ஓடிவந்திருந்தான். நாட்டைக் காப்பதற்காக அல்ல. தலைநகரில் உள்ள செல்வங்களை வாரிக் கொண்டு தப்பிச் சென்று தனியாட்சி நடத்த வேண்டும் என்ற ஆசையோடு. திருமலையும் அவனோடு ஓடி வந்திருந்த அரச குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களும் சில நாழிகைக்குள் அரச பண்டாரத்தைக் காலிசெய்து 1550 யானைகளில் ஏற்றினார்கள். எடுத்துச் செல்ல முடிந்த அத்தனை செல்வங்களையும்

ஏற்றிச் செல்லத்தக்க வாகனங்களிலெல்லாம் வைத்துக் கட்டிக் கொண்டார்கள். பல தலை முறைகளின் சேமிப்பினால் நிரம்பி இருந்த பேரரசின் பெரும் பொக்கிஷத்தைக் காலியாக்கிக் கொண்டு சாம்ராஜ்யத்தை செங்கோல், திருமலை, புகழ் பெற்ற சிங்காதனம் ஆகியவைகளுடன் பொம்மை அரசன் சதாசிவராயரையும் சிறைப்படுத்திக் கொண்டு, நகரத்தையும் நகர மாந்தரையும் அவரவர் தலைவிதிக்கே விட்டு விட்டு, எஞ்சியிருந்த வீரர்களின் பாதுகாப்புடன் பெனுகொண்டா கோட்டையை நோக்கி ஓடினான் திருமலை. அங்கு சென்று தன்னையே மகாமண்டலேசுவரர ராகப் பிரகடனப்படுத்திக் கொண்டான்.

அரண்மனை வாசிகள் அவசரமாய் நகரிலிருந்து ஓடுவதைக் கண்ட பிறகு தான் நகரமாந்தருக்கு விழிப்பு ஏற்பட்டது. வரப்போகும் அபாயத்தின் தன்மையை உணரலானார்கள். இது வெறும் தோல்வி மட்டுமல்ல, மகத்தான பிரளயமே என்பதைப் புரிந்து கொண்டபோது வாழலாம் தப்பிச் செல்லலாம் என்ற நம்பிக்கையே இடமில்லை. நகரிலிருந்த வாகன வசதிகளெல்லாம் போர்க்களத்துக்குப் படை வீரர்களுடன் போயிருந்தன. அவைகளில் எதுவுமே திரும்பவில்லை, ஆகவே நகர வாழ் மாந்தர் தங்கள் செல்வங்களைப் பூமியில் புதைத்து விடடுக் கிடைத்த ஆயுதங்களைத் தாங்கி வரவிருக்கும் அபாயத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

கொன்று குவித்துக் குதூகலிக்க விரோதிப் படைகள் வருவதற்கு முன் பாதுகாப்பற்ற நகரத்தைக் கொள்ளையிட்டுச் சூறையிடத் திருடர்களும், நாடோகளான பிரிஞ்சாரி.

வம்பாடி, குருபா ஆகியோரும் தயாரானாரக்ள். செல்வம் கொழிக்கும் சுந்தர நகரத்தின் கடை வீதிகள் கொள்ளையிடப் பட்டன. பொருள்களைச் சூறையாடிக் கொண்டு போனார்கள். அலை அலையாக வந்த இந்த நாசகாரக் கும்பல்கள் ஒரு நாளைகுப் பல தடவைகள் தாக்குதல் நடத்திப் பொருள்களைக் கொள்ளையிட்டுச் சென்றார்கள்.

வெற்றி - மகத்தான வெற்றி பெற்ற பாமினி சுல்தான்கள் படுகொலை நடந்த போர்க்களத்திலே தங்கி, மகிழ்ச்சி விழாக் கொண்டாடிக் குதூகலித்தார்கள். எதிர்பாராத வெற்றி, எதிர்பார்த்த அளவுக்கு மேலேயே எதிர்ப்பின்றிக் கிடைத்தன கொள்ளைகள். தற்காப்பின்றித் தன் தலைவிதியை எதிர்பார்த்துக் காத்திருக்கிறது

சாம்ராஜ்யத்தின் தலைநகர் என்ற சயெ்தியோடு வந்தார்கள் இஸ்லாமிய வீரர்கள். ராமராயர் களத்திலே மடிந்த மூன்றாவது நாள் பாமினிப் படைகள் வெற்றி கொள்ள முடியாத விஜயநகரினுள் பட்டணப் பிரவேசம் செய்யப் புறப்பட்டன. மகத்தான, மகோன்னதமான சாம்ராஜ்யத்தின் அழிவு ஆரம்பமாயிற்று.

அழிப்பதற்கென்றே, கொன்று குவிப்பதற்கென்றே, இடித்துப் பாழ்படுத்துவதற்கென்றே, கொளுத்திக் குதூகலிப்பதற்கென்றே கும்மாள மிட்டுக் கொண்டு வந்து குவிந்தார்கள் விஜய நகரத்துக்குள் விரோதகிள். தங்களை விடச் செல்வச் சிறப்பிலே, சிற்பச் செல்வத்திலே, நாகரிகத்திலே மேம்பட்ட பெருமையோடுவாழ்ந்து ஒரு நாட்டினிடம் பொறாமை கொண்டிருந்தவர்கள் அதை அழித்து நாசமாக்கி மகிழ்வதில் நாட்டஞ் செலுத்தினார்கள். வானளாவி 'நின்ற மண்டபங்கள் மண்ணோடு மண்ணாயின. சிற்பக்கூடங்கள், நாட்டிய அரங்கங்கள், நடன மண்டபங்கள், சிங்காரவனங்கள். அரண் மனைகள், அந்தப்புரங்கள் அத்தனையையும் இடித்து நொறுக்கித் தீயிட்டுக் கொளுத்தித் தங்கள் வஞ்சத்தைத் தீர்த்துக்கொண்டார்கள் வக்கிரபுத்திக்காரர்கள். ஒரு பாவமுமறியாத அப்பாவி இந்துக்கள் கொன்று குவிக்கப்பட்டார்கள். அழிக்க முடியாத அகிருதி கொண்ட கற்சிலைகளைக் கடப்பாறை கொபண்டு விகாரமாக்கினார்கள். சிதைத்தார்கள், சின்னாபின்னப்படுத்தினார்கள். சிங்கார நகரம் சீரழிந்தது. 'நாகரிகத்தின் தொட்டில் '' என்று பலதேசத்தவர்களும் வியந்து பாராட்டிய சுந்தர நகரம் சுடுகாடாகக் காட்சியளித்தது. வாளும், நெருப்பும், வன்முறைச் செயல்களும் என்றைக் குமே தலைதூக்காதபடி அந்த ஒப்பற்ற நகரத்தை உருக்குலைத்தன.

வேங்கடாத்திரிக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற யூசப்கான் அரும் பாடு பட்டான். கலைப் பொக்கிஷங்களான கட்டடங்களும் ஆலயங்களும் இடிக்கப்படும்போது அங்கெல்லாம் ஓடிச் சென்று அவர்களின் செயலைத்தடுக்க முற்பட்டான். "அல்லாஹ் மனித சமூகத்தின் நாகரிகத்தை அழிக்கச் சொல்ல வில்லை. கொலையும் கொள்ளையும் கொடுமையும் புரியும்படி குரான் போதிக்கிவல்லை" என்று உருக்கமாக வேண்டிக் கொண்டான். ஆனால் அவனைஒரு வேடிக்கைப் பொருளாகத்தான் இஸ்லாமிய வீரர்கள் மதித்து நகைத்தார்கள். பலர் அவனைப் பைத்தியக்காரனென்று மனம் நொந்து போனான் யூசப்கான். அதனால் தன் செயலைத் தளரவிடவில்லை.

அழிந்து கிடக்கும் ஹம்பியிலும் மற்றுமுள்ள இடங்களிலும் விஜயநகர சாம்ராஜ்யத்தின் மகோன்னதத்தைப் பறை சாற்ற இன்னும் ஏதாவது எஞ்சியிருக்கிற தென்றால் அவையெல்லாம் யூசப் கானின் முயற்சியினால் காப்பாற்றுப்பட்டவைதான். இதற்காக நாச வேலையையே தங்கள் முச்சாகக் கொண்ட அந்த இஸ்லாமிய வீரர்களிடையே அவன் பட்ட இன்னல்கள் கொஞ்சநஞ்சமல்ல.

விஜயநகரை அழிக்கும் வேலை ஐந்து மாதங்கள் வரை நடைபெற்றது. எங்கு திரும்பினாலும் இடிபாடுகள், மரண ஓலம், நாட்கணக்காக, மாதக் கணக்காக எரிந்துபுகைந்து கொண்டிருந்தன பல உன்னதமான கட்டடங்கள். ஒரு காலத்தில் ஒப்பற்று விளங்கிய விதானங்களோடு கூடிய விண்ணை எட்ட நின்ற மண்டபங்களும் மாளிகைகளும் கோபுரங்களும் மண் குவியல் களாகக் காட்சியளித்தன. அந்நகரத்தில் வாழ்ந்த மக்கள் அனைவரும் மனையிழந்து, மானமிழந்து, பொருளிழந்து, சுற்றமிழந்து மாண்டு மடிந்தனர். அந்தச் சிரிப்பு மிக்க நகர் பிறகு என்றென்றுமே தலையெடுக்க வில்லை. சிற்றூராகக் கூட மாறவில்லை. முஸ்லிம் படைவீரர்களில் சாகாது பிழைத்த ஒவ்வொருவரும் இந்தப் பெரும் போருக்குப் பிறகு பல தலைமுறைகளுக்குச் செல்வந்தர் களாக வாழும் பாக்கியம் பெற்றாரக்ள். களத்திலும் நகரத்திலும் கொள்ளையிட்ட பொருள்களை அதை நடத்திய வீரர்களே பங்கிட்டுக் கொள்ளும்படி விட்டுவிட்டார்கள் பாமினி சுல்தான்கள். யானைகளை மட்டும் தாங்கள் எடுத்துக் கொண்டார்கள்.

உலக சரித்திரம் எத்தனையோ சாம்ராஜ்யங்களின் அழிவைக் கண்டிருக்கலாம். ஆனால் வனப்பிலே, செழிப்பிலே, நாகரிகத்திலே, வீரத்திலே, செழிப்பிலே, பண்பாட்டிலே, பல கலைகளிலே, மேம்பட்டு விளங்கிய விஜயநகர சாம்ராஜ்யத்தின் சரவை அவைகள் எதனுடனுமே இணையாக்கிக் காட்ட முடியாது. ஏடு காண முடியாத இன்னல்களையும் சொல்லும் வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டதான துன்பங்களையும் அனுபவித்து அழிந்த அந்தச் சுந்தர நகரம் பிறகு தலைதூக்கவேயில்லை. வஞ்சம் தீர்த்துக் கொண்ட சுல்தான்களின் நெஞ்சங்கள் கூட அழகழிந்து நிற்கும் அந்த அற்புத நகரத்தின் அலங்கோலத்தைக் கண்டு வேதனைப்பட்டன.

விஜயநகரத்தின் வீழ்ச்சி தென்னகத்தின் வீழ்ச்சி என்பதை உணராத பாமினி சுல்தான்கள் வெற்றி விழா கொண்டாடி

மகிழ்ந்தார்கள். சுதந்திரம் பெற்றுவிட்டதாக மகிழ்ந்தார்கள். சுதந்திரம் பெற்றுவிட்டதாக மகிழ்ந்த அவர்களுடைய சுதந்திரத்தையும் சுக வாழ்வையும் கொள்ளை கொள்ள விரைவிலேயே வரப்போகிறார்கள் மொகலாயர்கள் என்பது அவர்களுக்கு அப்போது எப்படித் தெரியும்? ஆற்றைக் கடந்து வெற்றியின் வாசலுக்கு வழி திறந்து விட்ட யூசப்கானை நிஜாம் ஷாவும், குதப் ஷாவும் பாராட்டிப் பரிசில்களைக் குவித்தார்கள். ஆனால் அவற்றையெல்லாம்விட அழகி ஆயிஷா தனக்குக் கிடைத்ததையே மிகப்பெரிய பரிசாக, பொக்கிஷமாக எண்ணிப் பூரித்துப் போனான் யூசப் கான். விரைவிலேயே அவளுடன் தன் தாய் நாட்டுக்குக் கிளம்புவதற்கும் திட்டமிட்டான். தன் விருப்பத்தை அவன் நிஜாம்ஷாவுடன் தெரிவித்தபோது முதலில் அவர் அதற்கு இணங்கவில்லை. ஆனால் அவன் தன் முடிவிலே உறுதியாக இருந்தான். எழில் மிகுந்த தொரு நகரின் அழிவு நாட்களிலே அவன் கண்ட சோகமாயமான காட்சிகள் அடிக்கடி நினைவில் தோன்றி வேதனைப்படுத்தின. அதைத் தாங்கிக் கொண்டு பாரதத்தில் தங்கியிருக்க விரும்பவில்லை அவன். ஆயிஷாவும் அதே நிலையில்தான் இருந்தாள். ஒரு காலத்தில் விஜயநகரத்தை வெறுத்தவள், அதன் வீழ்ச்சியைப் பற்றிய எண்ணங்களை வெறியாக்கி வளர்த்தவளின் உள்ளம் உள்ளம் இன்று வேதனையால் வெந்து கொண்டிருந்தது. தன் சபதம் இத்தனை குரூரமாக நிறைவேறும் என்று அவள் நினைக்கவேயில்லை. தான் வெறுத்த ராமராயர் தன்னிடம் கொண்டபரிவையும், தனக்களித்த சலுகைகளையும் விஜயநகரத்து அந்தப்புரத்திலே தான் வாழ்ந்த அந்த நாட்களையும் வேங்கடாத்திரியின் அன்பையும் அவளால் மறக்க முடியவில்லை. அன்று அதைத் துன்பம் நிறைந்த வாழ்வாகக் கருதியவள் இன்று இன்பம நிறைந்த நாட்களாக நினைக்கலானாள், இதன் பின் நடந்த நிகழ்ச்சிகளின் உறுத்தலிலிருந்து விடுபட்டு நினைவுகளை மட்டும் தாங்கிக்கொண்டு நெடுந்தூரத்துக்கு விலகிப்போய்விடவே விரும்பினான் அவ்ள்.

பாமினி சுல்தான்களின் பரிசில்களைச் சுமந்து கொண்டு நூறு ஒட்டகங்கள் கோவா துறைமுகத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தன. அவற்றின் முன்னால் அழகிய குதிரை மீது அழகி ஆயிஷாவை அணைத்தபடி யூசப்கான் பாரதத்தின் பரவசமாகிப் போய்க் கொண்டிருந்தான்.

கோவா துறைமுகத்திலே போர்ச்சுகீசிய அதிகாரி டாம் பிரான்ஸிஸ்கோ கோடென்ஹோ அவனை மறக்கவில்லை. மகிழ்ச்சி பூத்த முகத்தோடு இரு கை நீட்டி வரவேற்றார். கைதியாக வந்தவன் கன்னியோடு திரும்பிப் போவதை எண்ணி அவர் கண்களால் சிரித்துக்கொண்டே ஆயிஷாவின் அழகைப் பருகலானார். கப்பலையே விலைக்கு வாங்குமளவுக்குச் செல்வக் குவியல்களோடு வந்திருக்கும் யூசப் கானுக்கு விசேஷ மரியாதைகள் கிடைத்தன. போர்ச்சுக்கீசிய அதிகாரியிடமிருந்து. இரண்டொரு நாளில் கிளம்பிப் போகும் கப்பலில் வசதியாகப் பிரயாணம் செய்யத் தக்க ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தார் அவர்.

கப்பல் கிளம்பியது. பாரதத்தின் மண்ணை விட்டு, தண்ணீரை விட்டு அது மெல்ல மெல்ல நகரலாயிற்று. யூசப் கானின் அணைப்பில் கப்பலில் மேல் தளத்தில் நின்று கொண்டிருந்த பாமினிப் பாவையின் கண்களில் கடல் நீர் தகதகத்துக் கொண்டிருந்தது. அதில் ராமராயரின் கம்பீரமான முகம் தெரிகிறது. வேங்கடாத்திரி வருகிறான். வெண் பல் வரிசை காட்டிச் சுந்தரமாகச் சிரிக்கிறான். கடலும் சிரிக்கிறது அலைக்கரம் கொட்டி. ஆயிஷா கண்களில் கண்ணீர் ஜ்வலிக்கிறது. அவள் கண்ணீரைக் கண்ட யூசப் கான் அவள் உள்ளத்தில் ஓடும் எண்ணங்களைப் புரிந்து கன்னத்தில் பாதை வகுத்துக் கொபண்டு வழியும் கண்ணீரைத் துடைத்த அவன் மார்பிலே முகம் புதைத்துக் கொண்டு விம்முகிறாள் கட்டழகி ஆயிஷா! கூந்தலை வருடி அவள் மதிமுகத்தை நிமிர்த்தியபோது கண்ணீர் உலர்ந்து கன்னியவள் அவனைப் பார்த்து முறுவலிக்கிறாள். இருவரும் பார்க்கிறார்கள். பாரதக் கடற்கரை அவர்கள் பார்வையிலிருந்து மறைந்து விடுகிறது. ஆனால் அவர்கள் உள்ளத்திலிருந்து அது மறையவில்லை. மறையவும் மறையாது.



# அரசகுமாரி ஆயிஷா

## ஒன்று

நீண்ட நெடுங்காலத்துக்கு முன்னே நடந்த கதை இது. நம் பாரத நாட்டில் மொகலாயர்களும், பாரசீகர்களும் ஆட்சி செய்து கொண்டிருந்த காலம் அது. வங்கத்தின் எல்லையிலே, அஸ்ஸாம் நாட்டின் ஓரத்திலே ஒரு சின்னஞ்சிறிய தேசம். நாடு சின்னதானாலும் செல்வச் சிறப்பிலே மண் வளப்பத்திலே ஈடு இணையற்றதாக விளங்கியது அது. தங்கநகரம் என்றே அதற்குப் பெயர்.

செல்வங் கொழிக்கும் தங்க நகரத்தை அப்போது மகிமை பொருந்திய '**ஷாலிமார்**' என்ற மன்னர் ஆண்டு வந்தார். அவர் குடிமக்களிடம் அன்பு கொண்டவர். விரோதிகளுக்கோ யமனாக விளங்கினார்.

அன்புள்ளங் கொண்ட மன்னர் ஷாலிமாருக்கு அழகில் சிறந்த ஒரு மகள் இருந்தாள். அவள் பெயர் **ஆயிஷா**. அற்புத எழில் படைத்த தன் ஒரே மகளான அவளை மன்னர் உயிருக்கும் மேலாக நேசித்தார். பாவம், ஆயிஷாவிற்குத் தாயில்லை. மன்னர் ஷாலிமாரே அவளுக்குத் தாயாகவும் இருந்தார்.

மன்னரின் அன்புக்குப் பாத்திரமான இன்னொருவனும் அந்த தங்க நகரத்திலே இருந்தான். அவன்தான் மந்திர-தந்திரங்களிலே வல்லவனான மங்கு. நல்லதையே நினைக்கும் வல்லவரான ஷாலிமார் மங்குவைத் தனக்கு உண்மையானவன் என்று எண்ணினார். ஆனால் மங்குவோ மகாபொல்லாதவன். வஞ்சக நெஞ்சம் கொண்டவன். மந்திர

மாயங்களில் வல்லவனான மங்கு ஏதோ ஒரு காரணத்திற்காக மன்னரிடம் நல்லவனைப் போல் நடித்து வந்தான்.

இவர்களைத் தவிர நீங்கள் இன்னொரு நபரைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும். அவன்தான் காசிம். கள்ளமற்ற உள்ளம், கபடமில்லா நெஞ்சம், களங்கமில்லாத பார்வை, கலகலப்பான குணம், கட்டுமஸ்தான உடல் - இதுதான் காசிம். அவனுக்கு வயது பதினாறு. ஏழைக் குடும்பத்தில் பிறந்த அவனுக்கு, எழுத்தறிவிக்க அவன் பெற்றோர்களால் முடியவில்லை. கல்வியறிவு இல்லா விட்டாலும், காசிம் கெட்டிக்காரன். எதையும் திறமையுடன் முடிக்கும் ஆற்றல் பெற்றவன். ஏழையாக இருந்ததனால்தானோ என்னவோ இரக்கம் அவன் இதயத்திலே குடிகொண்டிருந்தது. மற்றவர் துன்பங்கண்டு மனம் வருந்துவான். மனிதர்கள் மட்டுமல்ல, பிராணிகள், பறவைகள் என்று எல்லா ஜீவராசிகளிடமும் அவனுக்கு அன்பு உண்டு. எப்போதும் சிரித்த முகத்துடன் காணப்படுவான். தன் துன்பத்தைப் பிறரிடம் கூறிக்கொள்ள வெட்கப்படுவான். எந்தக் கஷ்டத்தையும் தாங்கிக் கொள்ளும் சகிப்புத் தன்மை மிக்கவன் காசிம். பிறருக்கு உதவி செய்வதையே தன் லட்சியமாகக் கொண்ட காசிமிடம் அவ்வூரிலுள்ளோர் அன்பு காட்டியதில் அதிசயமில்லை.

எல்லாருக்கும் நல்லவனாய், எதையும் சாதிக்கும் திறமை மிக்கவனாய் இருந்த காசிமுக்கு அரண்மனையில் ஒரு வேலை கிடைத்தது. அரண்மனை வேலையென்றால் மந்திரி பதவியோ, சேனாதிபதி பதவியோ என்று எண்ணி விட வேண்டாம். காசிமின் வேலை என்ன தெரியுமா? அரண்மனையில் அழுக்குச் சேராமல் எல்லாவற்றையும் துடைத்துத் துப்புவாக வைக்க வேண்டியது. இதுதான் அவன் வேலை. ஆனால் இந்த வேலையைக் கேவலமாக நினைக்கவில்லை காசிம்.

ஒருநாள் காசிம் கண்விழித்தபோது விடிந்து வெகு நேரமாகி விட்டதை அறிந்து பரபரப்படைந்தான். அதிகாலையில் அரண்மனைக்குச் சென்று தன் வேலையை ஆரம்பிக்க வேண்டியது அவன் கடமை. ஆனால் அன்றோ தாமதமாகி விட்டது. அதனால் கலவரமடைந்த அவன் அவசரமாக அரண்மனையை நோக்கி ஓடினான். அரண்மனையில் அவனுக்கு அன்றாடம் கவனிக்க வேண்டிய அலுவல்கள் பல உண்டு. அன்று நேரங்கழித்து வந்ததால் தன் வேலைகளை வேகமாகக் கவனிக்கலானான் காசிம்.

இங்க நகரத்திலே காசிமைப் போன்ற தங்கமான மனம் படைத்தவர்கள் பலர் இருந்தார்கள். அதேபோல மங்குவைப் போன்ற கொடியவர்களும் இருந்தார்கள். அது இயற்கையின் நியதி. கெட்டவர்கள் இருப்பதினால்தான் நல்லவர்களின் சிறப்பை மக்களால் உணர முடிகிறது. ரோஜாவின் கீழே முள் இருக்கிறதில்லையா? ஆனால் நம் சிந்தையிலே நிறைந்திருப்பதோ ரோஜாவின் அழகும் மணமும்தானே?

குறிப்பிட்ட நாளான அன்று காசிம் தன் கடமையைச் செய்ய நேரமாகி விட்டதே என்று கவலையடைந்தான். அரண்மனைக்கு ஓடினான். அதேபோல இன்னொரு உள்ளமும் பரபரப்புடன் அன்று அரண்மனைக்குள் வேகமாக நுழைந்தது. ஆனால் அதன் உள்ளத்திலோ கடமை உணர்வில்லை. வெகு நாளாகக் காத்திருந்தோர் செயலை முடிக்கும் வஞ்சகத் தனம்தான் அதன் நெஞ்சத்திலே குமைந்து கொண்டிருந்தது. அது மந்திரவாதி மங்குதான் என்று சொல்லவா வேண்டும்.

சித்திர வேலைப்பாடமைந்த ஒரு ஜாடியைக் காசிம் பளபளப்பாக்கிக் கொண்டிருந்தான். அப்போது அக்கூடத்தினுள் யாரோ வரும் அரவம் கேட்டது. காசிம் அந்த ஜாடியின் பின்னாலேயே பதுங்கிக்கொண்டு மெள்ளப் பார்த்தான். திரை விலகியது. அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு மங்கு அங்கு நுழைந்தான். அக்கூடத்தில் தன்னைத்தவிர வேறு யாருமில்லை என்பதாக எண்ணிக் கொண்ட அவன் ஏதோ ஒரு செய்கையில் ஈடுபடத் தயாரானான். அப்பளிங்கு ஜாடியின் பின்னே காசிம் மறைந்திருப்பது அவனுக்குத் தெரியாது.

ஒருசிலரைப் பார்த்த மாத்திரத்திலேயே அவர்களை நமக்குப் பிடிப்பதில்லை. வெறுப்புடன் முகம் சுளிப்போம். அப்படிப்பட்ட வர்களில் மங்குவும் ஒருவ. காசிமுக்கு அவனைக் கண்டாலே பிடிக்காது. கொடுமை நிறைந்த பார்வையுடன் தனிமையில் அவனைக் கண்ட காசிம் முதலில் நடுநடுங்கிப் போனான். ஆனாலும் நடப்பதைக் கவனிக்க ஜாடியின் பின்னே ஒடுங்கி உட்கார்ந்து கொண்டிருந்தான்.

நடுக்கூடத்தில் நின்று கொண்டிருந்த மந்திரவாதி மங்கு பயங்கரமாக விழித்து ஏதோ மந்திரங்களைச் சொல்லி விரல்களை விரித்துக் கைகளை உயர்த்தி ஹூங்காரமிட்டான். அடுத்த வினாடி ஓர்

அதிசயம் நிகழ்ந்தது. வானத்திலே இடி உருள்வதைப் போன்ற ஓசைக்குப் பிறகு தரையிலிருந்து அருவியைப்போல 'குபுகுபு'வென்ற வெண்புகை கொப்புளித்துப் பஞ்சு போல நின்றது. ஆடி அசைந்து நின்ற அப்புகையின் நடுவே அழகே வடிவான ஒரு பெண்ணின் உருவம் தெரிந்தது. அவ்வழகியை எங்கோ பார்த்திருப்பதாகவும் காசிமுக்குத் தோன்றியது. ஆனால் 'எங்கே? அவள் யார்?' என்று விளங்கவில்லை அவனுக்கு. மஞ்சத்தில் படுத்துக் கண் துயிலும் நிலையிலிருந்தாள் அப்பெண். மந்திரவாதி மங்கு புகையின் நடுவே தெரிந்த அப்பெண்ணின் உருவத்தைப் பார்த்துக் கடகடவெனச் சிரித்தான். சட்டென்று அவன் சிரிப்பு நின்றது. ஆசையுடன் அவன் கண்கள் பளபளத்தன. அடுத்த வினாடி தன் அங்கிக்குள் மறைத்து வைத்துக் கொண்டு வந்திருந்த ஓர் கண்ணாடிக் குடுவையை வெளியே எடுத்தான். நீண்ட கழுத்தும் பச்சை நிறமுடையதாகவும் இருந்தது அக்குடுவை. பளபளக்கும் அக்கண்ணாடிச் சீசாவை கையில் வைத்துக்கொண்டு மறுபடியும் கடகடவென்று பயங்கரமாகச் சிரிக்கலானான் மங்கு. அவன் சிரிக்கச் சிரிக்க அவ்வெண் பஞ்சு போன்ற புகைப்படலம் அப்பெண்ணுடன், மெல்ல மெல்லச் சுழன்று சுழன்று, சுருண்டு மங்குவின் கையிலுள்ள அவ்விசித்திரமான, கண்ணாடிப் புட்டியில் போய் அடையலாயிற்று. காசிம் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அத்தனை புகையும் ஏதோ ஒரு சக்தியால் இழுக்கப்பட்டது போல் அக்கண்ணாடிச் சீசாவில் போய் நுழைந்து கொண்டது. மந்திரப் புகையின் கடைசித் துளியும் அதனுள் புகுந்ததும் மங்கு அதன் வாயை அடைப்பானால் இறுக மூடினான். புகையடங்கிய அப்பச்சை சீசாவிற்குள் அந்தச் சூழ்நிலைக்கு ஏற்றபடி அந்த அழகியும் அதனுள் இருப்பதைக் காசிமினால் நன்றாகப் பார்க்க முடிந்தது. மங்கு மற்றுமொரு முறை இங்குமங்கும் பார்த்துவிட்டு அந்தச் சீசாவை தன் அங்கியுள் மறைத்து வைத்துக் கொண்டான். பிறகு அக்கூடத்தைவிட்டுப் பரபரப்புடன் வெளியேறினான். மங்குவின் செய்கைகள் அத்தனையையும் பார்த்துக் கொண்டிருந்த காசிமுக்கு வியப்பாக இருந்தது. மங்குவின் செய்கையின் பொருள் விளங்கவில்லை. புகை நடுவே தோன்றிய பெண் யாரென்பதும் புரியவில்லை. ஆனால் இதனால் ஏதோ ஒரு விபரீதம் நிகழப் போகிறதென்பதை மட்டும் காசிமினால் உணர முடிந்தது. அன்று அதற்கு மேல் வேலை செய்யப் பிடிக்கவில்லை.

## இரண்டு

தங்க நகரத்து அரண்மனையில் ஒரே பரபரப்பு. ஒருவர் முகத்திலாவது மகிழ்ச்சிக்குறி தெரியவில்லை. எல்லாரும் எதையோ இழந்துவிட்டதைப் போன்று பரிதாபமாகக் காணப்பட்டார்கள். மன்னர் யாருடனும் பேசவில்லை. அவர் நிலையைக் கண்டால் பயமாக இருந்தது. அவருடன்பேசுவதற்கே யாருக்கும் துணிவில்லை.

இத்தனைக்கும் காரணம், மன்னரின் உயிருக்குயிரான ஆயிஷாவை நேற்றிலிருந்து அரண்மனையில் காணவில்லை. ஊரெங்கும் தேடி விட்டார்கள். ஒரு தடயமும் கிடைக்கவில்லை. மன்னர் உணவை மறந்தார். உற்சாகத்தைத் துறந்தார். மகளையே எண்ணி மனங்குமைந்தபடி இருந்தார். எங்கு தேடியும் ஒருவிதத் தகவலும் கிடைக்கவில்லை என்பதை அறிந்ததும் அவரது வேதனை பன்மடங்காகி விட்டது. மன்னரின் நிலையைக் கண்ட வயது முதிர்ந்த வஸீர் மெள்ள மன்னரின் அருகே சென்றார். வஸீர் என்றால் மந்திரி. மன்னருக்கு அவரிடம் மதிப்பு உண்டு. வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவர் வஸீர்.

“அரசே, தாங்கள் இப்படிச் செயலிழந்து விட்டால் பிறகு செய்வதென்ன? மனந்தெளியுங்கள். சோகத்தை உதறிவிட்டுச் சிந்தியுங்கள். தங்கள் அருமை மகளுக்கு ஆபத்து ஏதும் ஏற்பட்டிருக்காது. இது யாரோ சூனியக்காரர்களின் சூழ்ச்சியாகத்தான் இருக்கும் என்று நினைக்கிறேன்” என்றார் வஸீர்.

மந்திரியின் ஆறுதல் மொழி செயலிழந்து கிடந்த மன்னரைச் சிந்தனை செய்ய வைத்தது. அப்படித்தான் இருக்க வேண்டும் என்று அவருக்கும் தோன்றியது. மந்திரவாதி என்றதும் மன்னருக்குத் தன் நண்பன் மங்குவின் நினைவுதான் வந்தது. மங்கு மந்திர தந்திரங்களில் வல்லவன் என்பதை அவர் அறிவார். ‘அவன் என்னுடைய நண்பனாயிற்றே. இவ்விஷயமாக எனக்கு ஏதாவது உதவி செய்வான். யோசனை சொல்லுவான்’ என்று எண்ணினார் மன்னர். உடனே மங்குவை அழைத்து வரும்படி உத்திரவிட்டார்.

மங்குவின் வரவை எதிர்பார்த்து அமைதி இழந்து உட்கார்ந்திருந்தார் மன்னர். மங்கு இதற்கு ஏதாவது ஒரு வழி சொல்லுவான் என்ற நம்பிக்கை அவருக்கிருந்தது. இதேபோல

மங்குவைப் பற்றி வேறுவிதமான சிந்தனைகளில் மூழ்கியபடி அந்த அரண்மனையின் வேறொரு மூலையில் காசிம் உட்கார்ந்திருந்தான். முதல் நாள் தான் கண்ட காட்சிக்கும் அரசகுமாரியின் மறைவுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். அரசகுமாரியை அவன் எப்போதோ ஒரு தடவை பார்த்ததுதான். நேற்றுப் புகை நடுவே கண்ட பெண்ணின் உருவம் அரசகுமாரியினுடையதுதானா என்பதை அவனால் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. தான் கண்டவற்றை மன்னரிடம் சொல்வதற்கான துணிவும் அவனுக்கில்லை. மங்குவோ மன்னரின் அந்தரங்கத்துக்குப் பாத்திரமானவன். ஆனால் அவனோ அரண்மனையில் உள்ள பல்லாயிரம் பணியாளர்களில் ஒருவன். மகிமை பொருந்திய மங்குவைக் குற்றம் சாட்டும் தகுதி அவனுக்கு ஏது? அப்படியே அவன் கூறினாலும் மன்னர் அதை நம்புவாரா? நம்பவே மாட்டார். இப்படித் தவித்துக் கொண்டிருந்தான் காசிம்.

காத்துக் கொண்டிருந்த மன்னர் ஷாலிமாரிடம் ஒரு பணியாள் ஓடிவந்தான். மங்கு வந்து கொண்டிருப்பதாக அறிவித்தான். எதுவுமே தெரியாதவனைப்போல, ஒன்றுமே நடக்காதது போல அமைதியோடு அடக்க ஒடுக்கமாக மன்னரை நோக்கி வந்தான் மங்கு. “ஷாயின்ஷா! என்னை அழைத்தீர்களாமே? என்னால் ஆகக்கூடியது ஏதாவது உண்டா?” என்று கேட்டுக்கொண்டே மன்னருக்கு வணக்கம் சொல்லி வந்து நின்றான்.

“இன்னும் உனக்குத் தெரியாதா?” என்று கேட்டபடி எழுந்து கவலையோடு உலாவலானார் மன்னர் ஷாலிமார். “என் அருமை மகள் ஆயிஷாவைக் காணவில்லை நேற்றிலிருந்து. தேடிப் பார்க்கக்கூடிய இடத்திலெல்லாம் தேடி விட்டோம், கிடைக்கவில்லை. அவள் எங்கிருக்கிறாள், என்ன ஆனாள் என்பதை நீதான் உன் மந்திர சக்தியினால் கண்டுபிடித்துச் சொல்ல வேண்டும்” என்று கேட்டுக் கொண்டார்.

மங்கு தன் கண்களை மூடிக்கொண்டான். புருவங்கள் சேரும் இடத்தை விரல்களால் கிள்ளிக் கொண்டான். பிறகு முகவாயைத் தடவியபடியே புன்சிரிப்புடன் சொன்னான். “நான் நினைத்தபடியே தான் நடந்திருக்கிறது. நேற்றிரவு மேற்குக் கோட்டை வழியாக ஆகாய வீதியில் ஒரு பறக்கும் குதிரை மிதந்து செல்லுவதைக் கண்டேன். அதன்மீது உட்கார்ந்திருந்தவன் மந்திரவாதி ஹுகும்பர்தான். அவன்

மந்திரவாதிகளின் தலைவன். அவனை வெல்ல யாராலும் முடியாது உங்கள் அரசகுமாரி இப்போது அவனிடம்தான் சிறைப்பட்டிருக்கிறாள். அவள் எப்படி எங்கு இருக்கிறாள் என்பதைத் தாங்கள் காண வேண்டுமா?'' என்று கேட்டான் வஞ்சகன் மங்கு.

எந்தத் தந்தைக்குத்தான் தன் காணாமல் போன குழந்தையைக் காண வேண்டுமென்ற ஆவல் இருக்காது? ''எங்கே எங்கே? உன்னால் அது முடியுமா? அப்படியானால் என் செல்வக்குமாரியைக் காட்டு. பார்ப்போம்!'' என்று பரபரத்தார் ஷாலிமார்.

மன்னரின் தவிப்பையும் பரபரப்பையும் கண்ட மங்கு தன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டான். நயவஞ்சகனான அவனை நண்பனாக நம்பி இருந்தார் மன்னர் ஷாலிமார். அவரை வஞ்சிக்கச்சமயம் பார்த்திருந்த கயவனோ சரியானபடி ஒரு சூழ்ச்சியைத் திட்டமிட்டு வகுத்து அதைச் செயலாக்குவதில் முனைந்திருந்தான். தான் நினைத்தபடியே நடப்பதை எண்ணி உள்ளுக்குள் நகைத்துக் கொண்டான் அவன்.

மங்கு இளநகையுடன் மெள்ளத் தன் இளந்தாடியைத் தடவிக் கொண்டான். தான் சூழ்ச்சிக்காரன் என்பதை அரசர் அறிந்து கொண்டுவிடக் கூடாது என்பதில் மங்கு எச்சரிக்கையாக இருந்தான். ஆகவே அரசரின் வேண்டுகோளுக்கு இணங்குபவனைப் போலச் செயல்படலானான். திடீரென்று அவன் சுபாவத்தில் மாற்றம் காணப்பட்டது. முகம் கோரமாக மாறிச் 'செவசெவ'வென்று பளபளத்தது. கண்களில் ஓர் அசாதாரணமான ஒளி தோன்றியது. இரு கைகளையும் உயர்த்திப் பயங்கரமாகக் கூச்சலிட்டான். அந்த அறையின் ஒளி மங்கியது. ஏதோ ஓர் அதிசயம் நிகழப் போவதற்கான அடையாளமாகப் பயங்கர அமைதி குடிகொண்டது. அங்கே மன்னர், மங்குவின் செய்கைகளைச் சிலையாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு அவனிடம் அபார நம்பிக்கை. மங்குவின் வாய் ஏதோ மந்திரங்களை உச்சரித்தது. மறுவிநாடி 'டங்' என்றதோர் தாம்பாளம் பளபளத்தது. மகு அதன் பின்புறத்தில் தட்டி ஓசை உண்டாக்கினான். 'கணீர்' என்று ஓசை உண்டாகி ரீங்காரமிட்டது அந்தத் தாம்பாளம். பிறகு அதன் பின்புறத்தின் நடுவில் தன் சுட்டு விரலைப் பதித்துச் சுழற்றினான். சுழற்றிக்கொண்டே ஏதேதோ மந்திரங்களையும் கூறினான். அப்போது அவன் கண்களைப் பார்க்கவே பயமாக இருந்தது. மகாவிஷ்ணுவின் கையில் சுழலும் சக்கரத்தைப் போல மங்குவின் ...கயில் அந்தத் தட்டு சுழன்றது.







சட்டென்று அதன் சுழற்சி நின்றது. இரு கைகளாலும் அதை ஏந்திக்கொண்டு அதைப் பார்த்தான் மங்கு. வெறும் தாம்பாளமாக இல்லை அது. அதில் ஏதோ ஒரு திரவம் தகதகத்துக் கொண்டிருந்தது. வானவில்லின் வர்ணஜாலங்களெல்லாம் அதில் தோன்றின. மங்கு அந்தத் தட்டின்மீது தனது கையை உயர்த்தி இன்னும் ஏதோ மந்திரங்களைச் சொன்னதும் பளபளக்கும் அந்தப் பலவண்ணத் திரவம் சுழல ஆரம்பித்தது. சுழலச் சுழல அதில் காட்சிகள் தெரியலாயின.

மங்குவின் செய்கைகளைப் பார்த்துக்கொண்டு தவிப்புடன் நின்று கொண்டிருந்த மன்னரின் முன்னே, அந்தத் தாம்பாளத்தை ஒரு பட்டு மெத்தையின்மீது வைத்து நீட்டினான் அவன். ஆர்வமுடன் மன்னர் அதில் பார்த்தார். ஏதோ ஒரு சிறைச்சாலையின் கம்பிகளுக்குப் பின்னால் அவருடைய அருமை மகள் ஆயிஷா கண்ணீர் வழிய நின்று கொண்டிருந்தாள். மகளின் நிலையையும் கண்ணீரையும் கண்ட ஷாலிமாருக்கு இதயத்துடிப்பே நின்றுவிடும் போலாயிற்று. “ஐயோ! என் அருமை மகளை இப்படிக் கொடுமைப்படுத்தும் அந்தப் பாவி யார்?” என்று கத்திவிட்டார். ஆத்திரமும் வேதனையும் அவர் நெஞ்சைத் திருகி எடுத்தன. “மங்கு, என் மகளை என்னிடம் கொண்டு வந்து சேர்ப்பிப்பவருக்கு அவர்கள் எதைக் கேட்டாலும் கொடுக்கத் தயாராக இருக்கிறேன். அது முடியுமா?” என்று அவனைப் பார்த்துக் கேட்டார்.

மங்கு மறுபுறம் திரும்பிக் கொண்டு குரூரமாகச் சிரித்தான். தன் சூழ்ச்சி பலன் தரப்போகிறது என்ற திருப்தி அந்தச் சிரிப்பில் கலந்திருந்தது. “அரசே, ஆயிஷா சிறைப்பட்டிருப்பது ஹுகும்பாவின் கோட்டையில். அவன் சூனியக்காரர்களின் மன்னன். அவனை வெல்வதென்பது முடியாத காரியம். அவன் மாயக் கோட்டையை எவராலுமே அணுக முடியாது” என்றான் மங்கு.

“அப்படியானால் என் மகளுக்கு விடுதலையே கிடையாதா?” என்று கேட்டார் மன்னர் ஏக்கமுடன்.

“இருக்கிறது...” என்றான் மங்கு.

“என்ன...? அது என்ன வழி? சொல் சீக்கிரம்” என்று மங்குவின் தோள்களைப் பற்றி உலுக்கினார் மன்னர்.

மன்னர் ஷாலிமாரின் தவிப்பைக் கண்ட மங்கு மனத்துக்குள் சிரித்துக் கொண்டான். தன் எண்ணம் பலிதமாகும் வேளை நெருங்கிவிட்டதென்று குதூகலப்பட்டான். "அரசே! யானைக்குத் தன் பலம் தெரியாதாம். அதன் பலத்தை அறிந்த மனிதனோ அதைத் தனக்குச் சாதகமாக ஆட்டிப் படைக்கிறான். அதைப்போல உங்கள் பலம் உங்களுக்கே தெரியவில்லை" என்றான் வஞ்சகன் மங்கு.

"நீ என்ன சொல்லுகிறாய் மங்கு?" என்று குழம்பிப்போய்க் கேட்டார் மன்னர்.

"ஹுகும்பாவை வெல்வதற்கான உபாயம் உங்களிடமே இருக்கிறது அரசே! ஆனால் அது என்ன என்றோ, அதைப் பயன்படுத்தும் முறையோ உங்களுக்குத் தெரியாது. யானையைப் பயன்படுத்திக் கொள்ளும் மனிதனைப் போல, இது உங்களிடமுள்ள அதை உபயோகித்துக் கொள்ள இந்த மங்குவினால்தான் முடியும்" என்று மூடிமறைத்துப் பேசி அவரது ஆவலை அதிகப்படுத்தினான் நயவஞ்சகன்.

மன்னருக்குத் தம் மகளை இழந்த துக்கத்தைவிட மங்குவின் பேச்சு அதிகமான குழப்பத்தை உண்டாக்கியது. "அப்படி என்னிடம் என்ன இருக்கிறதாகச் சொல்லுகிறாய் நீ" என்று கேட்டார் மன்னர்.

"அதைச் சொன்னால் மறுக்காமல் செய்வீர்களா? உங்கள் மகளைச் சிறை மீட்பதற்கே அதைக் கேட்கிறேன்" என்றான் மங்கு.

"என் மகளின் வாழ்வுக்காக நான் எதையும் வழங்கத் தயாராக இருக்கிறேன் கேள்" என்றார் மன்னர்.

"ஷாயின்ஷா அவர்களே! உங்கள் மூதாதையர் காலத்திலிருந்து போற்றி பாதுகாத்து வரும் ஒரு ஒப்பற்ற அணியைப் பற்றி, அதன் அற்புத சக்தியைப் பற்றி நீங்கள் மறந்து விட்டீர்களா? உங்கள் இடையிலே அணிந்துள்ள வைரங்களிழைத்த அந்தப் 'பெல்டை'க் கொண்டு எவ்விதமான மந்திர சக்தியையும் வென்று விடலாமே" என்றான் மங்கு. மன்னர் ஷாலிமாருக்கும் அப்போதுதான் தன்னிடமுள்ள இந்த இடைக்கச்சின் நினைவு வந்தது. "இந்நகரை ஆளும் மன்னர்களுக்கு அறிவையும் ஆற்றலையும் அளிக்கவல்லது

இந்தப் 'பெல்ட்' என்று மட்டும்தான் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இதற்கு மந்திர சக்திகளை வெல்லும் வல்லமை உண்டு என்று தெரியாதே. எப்படியானாலும் இது என் மூதாதையர்களின் பொக்கிஷம். இதைப் பிறரிடம் கொடுப்பதற்கில்லை'' என்றார் மன்னர் யோசனையுடன்.

மங்குவின் மகிழ்ச்சி மங்கலாயிற்று. ஆனால் அவன் நம்பிக்கையை இழக்காமல் "ஷாயின்ஷா! உங்கள் அருமை மகள் ஆயிஷாவை விடவா அந்த இடையணி உயர்வானது? தவிர நான் அதைக் கேட்பது உங்கள் காரியத்துக்காகத்தான். ஆயிஷாவை ஹுகும்பாவிடமிருந்து சிறை மீட்டதும் பெல்ட்டை உங்களிடமே கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்'' என்று உத்தனைப் போலக் கூறினான் மங்கு.

மங்குவின் நடிப்பு மன்னரின் நல்லெண்ணத்தைச் சம்பாதித்து விட்டது. அருமை மகளின் நினைவு அவர் உறுதியை அசைத்தது. "எங்கள் வமிசத்தின் வழிவழி வந்த இந்த அரிய ஆபரணத்தை என் அருமை மகளுக்காக உன்னிடம் கொடுக்கிறேன். ஆயிஷாவை மீட்டபின் இதை நீ என்னிடம் திரும்பக் கொடுத்துவிட வேண்டும். என் மகளின் விடுதலைக்காக உனக்கு நான் என் பொக்கிஷத்தையே திறந்து விடுகிறேன். இந்தப் பெல்ட்டை மட்டும் நீ கொடுத்துவிட வேண்டும்'' என்று நிபந்தனை விதித்துக் கொண்டே தன் இடையிலிருந்த அந்த வைர பெல்ட்டை அவிழ்க்கலானார் மன்னர்.

''இந்த மங்கு சொன்ன சொல்லை மீற மாட்டான்'' என்று கூறியபடியே அந்த மந்திர பெல்ட்டை ஏற்க ஆர்வத்துடன் கைகளை நீட்டிக்கொண்டு வந்தான் வஞ்சகன்.

இந்த நிலையில் அந்தக் கூடத்தில் நிலவிய தனிமையைக் கிழித்துக்கொண்டு, "அரசே! நிறுத்துங்கள், பெல்ட்டைக் கொடுக்கா தீர்கள்'' என்ற கூச்சல் எழுந்தது. திரையை விலக்கிக் கொண்டு பரபரப்புடன் மன்னரை நோக்கி வந்து கொண்டிருந்தான் காசிம்.

மங்குவை அரண்மனைக்கு வரவழைத்ததிலிருந்தே மன்னரும் அவனும் பேசிக் கொண்டிருந்த உரையாடலை உற்றுக் கேட்டபடி ஒளிந்திருந்தான் காசிம். மங்குவின் இன்றையப் பேச்சும் அன்றையச் சம்பவங்களுமே காசிமின் உள்ளத்தில் பலமான சந்தேகத்தை உண்டாக்கியது. ஏதோ திட்டமிட்டுக் கெட்ட எண்ணத்துடன்தான் மங்கு மன்னரின் பெல்ட்டைக் கேட்கிறான் என்று நிச்சயித்த காசிம்

இனியும் தனக்குத் தெரிந்த ரகசியங்களை வைத்துக் கொண்டு பேசாதிருக்கக்கூடாது என்று முடிவு செய்தவனாக மன்னரின் செய்கையை தடுக்க ஓடிவந்தான்.

ஆனால் காசிமின் எச்சரிக்கை பலன் தரவில்லை. திடீரென்று தோன்றிய காசிமைக் கண்டு திகைப்படைந்த ஷாலிமார் செயலிழந்தவராகக் கையில் பெல்ட்டுடன் நின்று கொண்டிருந்தான். காசிம் மன்னரின் செய்கையைத் தடுக்க ஓடிவந்தாலும்கூட அவனால் வேகமாக செயல்பட முடியவில்லை. காரணம் அவன் ஒரு சாதாரணப் பணியாள். சிறுவன் வேறு. இதுவரை மன்னரின் முன் நின்று பேசியே அறியாதவன். பயமும் மரியாதையும் அவன் கால்களுக்கு விலங்கிட்டன. உள்ளத்தில் வேகமிருந்தாலும் உடலால் செயல்பட முடியவில்லை.

'மங்குவோ பெரிய மந்திரவாதி. மன்னரின் அன்புக்குப் பாத்திரமானவன். அப்படியிருக்க திடீரென்று அவன் மீது சாதாரண வேலைக்காரனாகிய தான் கூறுவதை மன்னர் கேட்க வேண்டுமே. 'நான் கூறுவதை நம்புவாரா?' இப்படியேற்பட்ட மனக்குழப்பத்தல் காசிம் சில கணங்கள் தடுமாறினான். அந்தத் தடுமாற்றம் மங்குவிற்கு நல்ல வாய்ப்பாக அமைந்தது. தன் ரகசியம் ஏதோ இந்தப் பையனுக்குத் தெரிந்திருக்கிறது என்பதைப புரிந்து கொண்டான் மங்கு. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாது போவதை மங்கு சகிப்பானா?

தான் வகுத்த திட்டம், விரித்த வலை பாழாவதை விரும்பாத அவன் மன்னரின் கையிலிருந்த பெல்ட்டை வெடுக்கென்று பறித்துக்கொண்டு, திறந்திருந்த ஜன்னல் வழியே தாவிக் குதித்தான். குதித்தவன் கீழே விழவில்லை. பறவையைப் போலப் பறந்து போய் அடுத்துள்ள மாடியின் திறந்த வெளியில் போய் நின்று கொண்டான். அப்படி அவன் வானத்திலே மிதப்பதற்கான சக்தியை அவன் கையிலிருந்த அந்தப் பெல்ட் கொடுத்தது.

மன்னரின் அருகிலிருந்து விலகிப் போய் நின்று கொண்ட மங்கு தன் இரு கைகளையும் வானத்தை நோக்கி உயர்த்தி இடிபோன்ற குரலில் 'ஷஸாம்' என்று கர்ஜித்தான்.

அடுத்த விநாடி கண்ணைக் குருடாக்கும்படியான ஒரு வெளிச்சம் தோன்றியது. மின்னலை யடுத்து அதிரும் இடிபோல ஒரு பயங்கரமான ஓசையும் உண்டாயிற்று.

அந்த ஒளியின் நடுவே கம்பீரமான இரண்டு பறக்கும் குதிரைகள் நாலு கால் பாய்ச்சலில் ஒரு தேரை இழுத்துக்கொண்டு வந்து நிற்பது தெரிந்தது. வெற்றி எக்களிப்போடு பயங்கரமாகச் சிரித்துக் கொண்டே மங்கு பறந்துபோய் அந்தத் தேரில் ஏறிக்கொண்டான். மறுகணம் காரிருள் கவிந்து கொண்டது. மன்னரும் காசிமும் பிரமை பிடித்துப்போய் நின்று கொண்டிருந்தனர். மங்கு மறைந்தே போனான்.

மங்குவின் இந்தச் செய்கையினாலும் தான் ஏமாற்றப்பட்டோம் என்ற எண்ணத்தினாலும் மன்னரின் கோபம் கரை கடந்ததாயிற்று. கொதிப்போடு நின்று கொண்டிருந்த மன்னரின் கவனம் அருகிலிருந்த காசிமின் மீது பதிந்தது. அரண்மனையிலேயே இருந்தும் இத்தனை நாள் வரை அவரது கவனத்தைக் கவராத காசிம் இன்று அவர் கருத்துக்கு இலக்கானான். அவனைப்பற்றி விசாரித்த ஷாலிமாரிடம் காசிம் இரண்டு நாள் முன்பு தான் கண்ட காட்சியைப் பற்றி விவரித்தான். தான் நம்பிய மங்கு எத்தனை கொடியவன் என்பது அவருக்கு அப்போதுதான் தெரிந்தது.

“இந்த விஷயத்தை என்னிடம் அன்றைக்கே ஏன் நீ வந்து சொல்லவில்லை?” என்று காசிமைக் கடிந்து கொண்டார் அவர். காசிம் தலைகுனிந்தவாறே, “அரசே! நானோ கேவலம் ஒரு பணியாள். மங்குவோ உங்கள் அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானவனாய் இருந்தான். இன்றைக்கு என்னைக் கடிந்து கொள்ளும் நீங்கள் அன்றைக்கு நான் அவனைப் பற்றிச் சொல்லியிருந்தால் நம்புவீர்களா? எனக்கே தண்டனை விதித்துச் சிறையில் தள்ளி இருப்பீர்களே!” என்றான்.

அவன் வார்த்தையின் உண்மையை உணர்ந்து கொண்டார் மன்னர்! அவரது கோபமும் வேதனையும் கொழுந்து விட்டன. அமைதி இழந்தவராகக் கூண்டுப் புலியைப்போல அந்தக் கூடத்தில் உலாவலானார் மன்னர் ஷாலிமார்.

•

## நான்கு

மங்கு கண்ணாடிப் புட்டிக்குள் புகையாக்கி அடைத்த பெண், அரசகுமாரி ஆயிஷா தான் என்பதைக் காசிம் அறிந்து கொண்டான். மன்னரின் மகளையும், அத்துடன் அவரிடமிருந்து மகிமை

பொருந்திய இடையிலே அணியும் ஆபரணத்தையும் அபகரித்துச் சென்ற மங்குவின் கொடுஞ்செயலை நினைத்தபோது அவனுக்கே ஆத்திரம் குமுறிக் கொண்டு வந்தது.

மன்னரின் நிலையோ பரிதாபமாக, அதேசமயம் பயங்கரமாக இருந்தது.தான் ஏமாற்றப்பட்டோம் என்பதை அவரால் தாங்கவே முடியவில்லை. கட்டுண்ட புலியைப்போல அந்தக் கூடத்தில் இங்குமங்கும் உலாவிக் கொண்டிருந்தார்.

"அந்த மங்குவிடம் எத்தனை நம்பிக்கை வைத்திருதேன்? அந்தக் கொடியவன் என்னை எப்படி ஏமாற்றி விட்டான்? துரோகி; கற்கோட்டை, ஹூகும்பா என்பதெல்லாம் வெறும் கட்டுக்கதை என்பது இப்போதல்லவா தெரிகிறது" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டார். காசிமும் செய்வதறியாது, மன்னரின் கோபத்தைத் தணிக்கும் வகையறியாது அங்கு ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தான்.

உலவிக் கொண்டிருந்த மன்னரின கண்களில் அது பட்டது. ஆம் அதுதான்! எந்தத் தாம்பாளத்தில், தகதகக்கும் நீரில் தம் மகள் சிறையுண்டு கண்ணீருடன் கம்பிகளுக்குப் பின்னே நிற்பதாகக் கண்டாரோ அந்தத் தட்டுத்தான். மங்கு தன் மந்திரத் திறமையினால் அதில் மாய உருவத்தைக் காட்டித் தன்னை முட்டாளாக்கிப் போனதை எண்ணியபோது ஷாலிமாரின் ஆத்திரமெல்லாம் அந்தத் தட்டினிடம் சென்றது. வெறுப்பும் வேதனையும் குமுற அதைத் தன் காலால் எட்டி உதைத்து உருட்டினார். வானவில்லின் வண்ணங்களைக் காட்டிய அந்த மந்திர நீர் நிறைந்த பாத்திரம் சுவரில் மோதிச் சுக்குநூறாகியது. அதிலிருந்த திரவமெல்லாம் தரையில் சிதறி ஓடியது.

திரவம் விழுந்த இடங்களிலிருந்தெல்லாம் ஒரு விநோதமான புகை, பச்சை நிறமான புகை - குபுகுபுவென்று பொங்கிப் பொங்கிச் சுருண்டு மேலெழுந்தது. திடீரென்று கிளம்பி நெளிந்து சுருளும் பச்சைப் புகையைக் கண்ட ஷாலிமார் திகைத்துப் போனார். அவரது ஆத்திரம் இப்போது பயமாக மாறியது. காசிமின் நிலையையோ சொல்லவோ வேண்டாம். திறந்த வாய் மூடாமல், விழித்த கண்களை இமைக்காமல் சிலையாக நின்று கொண்டிருந்தான்.

தரையிலிருந்து சுருண்டெழுந்த புகை மூட்டம் ஏதோ ஒரு சக்தியினால் இயக்கப்பட்டதைப் போல அந்தப் பெரிய கூடத்தின் விதானத்தைத் தொட்டுக் கொண்டு ஏதோ ஒரு உருவமாக அமையத்

தொடங்கியது. அப்படி ஒன்று சேரும்புகையைப் பார்த்தபடி ஒன்றும் புரியாமல் வியப்புடன் நின்று கொண்டிருந்த மன்னர் சட்டென்று, 'இதுவும் மங்குவின் மந்திர வேலைகளில் ஒன்றாகத்தான் இருக்கும்' என்று ஆத்திரத்தில் தன் உடைவாளை உருவினார்.

இதற்குள் ஒரு மனித உருவமாக ஒன்று சேர்ந்த அந்தப் பச்சைப் புகை தன் இடிபோன்ற குரலில் கடகடவென்று சிரித்தது. அதன் ஒலியினால் அரண்மனையே கிடுகிடுவென்று நடுங்கலாயிற்று. சிரித்தபடியே அந்தப் பிரம்மாண்டமான உருவம் மன்னருக்குத் தலை வணங்கிச் சலாம் செய்தது.

"ஷாயின்ஷா! பார்க்கும் திரவத்திலே பல்லாயிரம் வருஷங்களாகச் சிறைப்பட்டுக் கிடந்த எனக்குத் தாங்கள் விடுதலை அளித்து விட்டீர்கள். அதற்கான என் நன்றியை நான் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்"என்று கூறி, "விடுதலை, விடுதலை" என்று தனது கம்பீரமான குரலினால் முழக்கமிட்டுத் தனது பூதாகரமான உடலை வளைத்து முறுக்கிச் சோம்பல் முறித்துக் கொண்டது. தனது குகை போன்ற வாயைத் திறந்து கொட்டாவி விட்டபோது அரண்மனைக் கதவுகளும் ஜன்னல்களும் படபடத்தன.

பூதம் தனக்குத் தலை வணங்கிச் சலாமிட்டதும் மன்னருக்குச் சற்றுத் துணிவு பிறந்தது. "உன் விடுதலைக்காக எனக்கு நீ நன்றி தெரிவிப்பதானால் அதை இப்படிச் செய்ய முடியுமா? மந்திரவாதி மங்குவிடமிருந்து என் மகளை மீட்டுத்தர நீ உதவி செய்வாயா?" என்று கேட்டார்.

ஆழ்ந்த கடலைப்போன்ற தன் அகலமான கண்களை விரியத் திறந்த அந்தப் பார்க்கும் திரவத்துப் பச்சைப் புகை உருவம், "அதுதான் என்னால் முடியாது" என்று கையை விரித்தது. "எப்போது இந்தத் திரவமெல்லாம் தரையில் சிதறியதோ அப்போதே என் பலமெல்லாம் போய்விட்டது. என்னால் இனி மனிதர்களுக்கு எவ்வித உதவியும் செய்ய முடியாது."

புகை உருவின் மறுமொழியினால் மனமிடிந்து போனார் மன்னர். தொங்கிய தலையுடன், தொய்ந்த மனத்தோடு, துயரம் கப்பிய ஷாலிமாரைக் கண்ட புகை உருவத்தின் கண்களில் கருணை நிழலாடியது. "என்னால் உங்கள் மகளை மீட்டுத்தர முடியாவிட்டாலும் உமது அருமை மகள் சிறைபட்டுள்ள இடம் எங்கிருக்கிறது என்பதை என்னால் சொல்ல முடியும்" என்றது புகைப் பூதம்.

"சொல்... அதையாவது சொல். அங்கு எப்படிப் போக வேண்டும் என்பதையும் கூறு" என்று படபடத்தார் சுல்தான் ஷாலிமார்.

"மங்குவின் கோட்டையை அடைவது அத்தனை எளிதான காரியமல்ல. சந்திர மலைகளுக்கு அப்பால் இருக்கிறது அவனது கற்கோட்டை. ஜ்வலிக்கும் மணல் நிறைந்த பாலைவனப் பெருவழியைக் கடந்தாக வேண்டும். சூரியனுக்குக் கீழேயுள்ள எவராலும் அதைக் கடக்க முடியாது. அந்த மணலின் ஜ்வலிப்பிலே அவர்கள் சுட்டுப் பொசுங்கிச் சாம்பலாகி விடுவர். எத்தனை பெரிய வீரனானாலும், எந்தப் பெரிய மந்திர சக்திகளாலும் அவனை வெல்ல முடியாது" என்று கூறிக் கொண்டிருக்கும் போதே அதன் உருவம் தேய ஆரம்பித்தது.

"மன்னவரே, கலங்க வேண்டாம். இப்போது நான் கூறிய செய்திகளிலேயே மங்குவின் கற்கோட்டையை அடைவதற்கான மார்க்கத்தின் ரகசியம் அடங்கி இருக்கிறது. அதை அறிந்து செயல்படுபவன் வெற்றியடைவான்" என்று கூறிப் புகை உருவம் காற்றில் கலந்து கரைந்து மறைந்தது.

## ஐந்து

**பா**ர்க்கும் திரவத்துப் பச்சைப் புகைப் பூதம் பார்வையிலிருந்து மறைந்ததும் பாதுஷா பிட்டதுப் பிடித்தவரைப் போலானார். அருமை மகள் ஆயிஷாவின் பிரிவை அவரால் தாங்கவே முடியவில்லை. அவரது வேதனையைக் குறைப்பது எப்படி என்று காசிமுக்கும் தெரியவில்லை. கனத்த மனத்துடன் அவனும் அரண்மனையை விட்டு மெள்ள வெளியேறினான்.

சுல்தான் ஷாலிமார் செயலிழந்தவராக வெகுநேரம் உட்கார்ந்திருந்தார். மெள்ள மெளள அவரது சிந்தனை செயல்பட ஆரம்பித்தது. பூதத்தின் வார்த்தைகள் அவரது காதுகளில் ரீங்காரமிடலாயிற்று. 'நான் கூறிய செய்திகளிலேயே மங்குவின் கற்கோட்டையை அடையவதற்கான மார்க்கத்தின் ரகசியம் அடங்கி இருக்கிறது' திரும்பத் திரும்ப இந்த வாசகத்தையே அவர் மனம் அசை போடலாயிற்று. சோம்பிக் கிடந்த அவர் துள்ளி எழுந்தார்.

"உண்மைதான். அதில் ஏதோ ரகசியம் அடங்கித்தானிருக்க வேண்டும். அதை விடுவிப்பவர்களைக் கண்டுபிடிக்க ஏற்பாடு செய்கிறேன்" என்று தம் முன்னிருந்த வெங்கலத் தாலத்தில் ஒலி எழுப்பிப் பணியாளனை வரவழைத்தார். வணங்கி வந்து நின்றவனிடம் உடனே வஸீரை அழைத்து வரும்படி கட்டளையிட்டார்.

மன்னரின் உத்தரவைத் தாங்கிய வீரன் ஒருவன் குதிரை மீதேறி ஓடினான் வஸீரை அழைத்து வருவதற்கு. மன்னரின் அழைப்பைக் கேட்டதுமே வஸீர் அரை விநாடியும் தாமதிக்கவில்லை. மன்னரைக் காண ஓடோடி வந்தார்.

வஸீர் வந்ததும் ஷாலிமார் அவரிடம் நடந்தை எல்லாம் கூறினார். பிறகு பார்க்கும் திரவத்துப் பச்சைப் புகை பூதத்தின் புதிரை தண்டோரா மூலம் நாடெங்கும் பறைசாற்றும்படி பணித்தார். சுல்தானின் கட்டளைப்படியே வஸீர் நாட்டின் மூலைமுடுக்குளிலெல்லாம் மன்னரின் கட்டளையை பறை சாற்றுவித்தார். தங்க நகரத்துக் குடிமக்களின் பேச்செல்லாம் மன்னரின் அறிவிப்பைப் பற்றியதாகவே இருந்தது.

தங்கள் நல்வாழ்வில் அக்கறை கொண்ட மன்னரின் அருமைப் புதல்வி ஆயிஷாவைக் காணோம் என்ற செய்தியே அந்நாட்டு மக்களுக்கு மகத்தான மன வேதனையைக் கொடுத்தது. தங்கள் அரசகுமாரி ஒப்பற்ற அழகி என்பதில் தங்க நகரத்து மக்களுக்கு எவ்வளவோ பெருமையும் கர்வமும் உண்டு. அத்தகைய அழகுப் பதுமையைக் காணோமென்றால்? அதுவும் அவள் யாரோ ஒரு கொடிய மந்திரவாதியிடம் சிறைபட்டு விட்டாள் என்ற செய்தி இன்னும் அவர்களை நிலை குலைய வைத்தது.

மன்னரிடமும், மன்னர் மகளிடமும் அன்பும் பாசமும் கொண்ட மக்கள் ஆயிஷாவின் மறைவைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்.

"பச்சைப் புகைப் பூதம் குறிப்பிட்ட அந்த வார்த்தைகளில் புதைந்துள்ள மர்மத்தை அறிந்து அரசகுமாரியை யார் மீட்டு வருகிறார்களோ அவர்களுக்கு மன்னர் தமது பொக்கிஷத்தையே திறந்துவிடப் போகிறாராமே!"

இப்படி ஊர் மக்களையெல்லாம் பேசிக் கொண்டிருக்கும் போது காசிம் என்ன செய்து கொண்டிருந்தான் தெரியுமா? பூதத்தின் வாசகத்தை அதன் வாயிலிருந்து நேரடியாகக் கேட்டவனில்லையா

அவன்? அது மன்னரிடம் பேசிக் கொண்டிருந்தாலும்கூட அதன் பளபளக்கும் பச்சைக் கண்களின் பார்வை தன்மீதே பதிந்திருப்பதாகத் தோன்றியது காசிமுக்கு. இந்த முயற்சியில் தன்னை ஈடுபடும்படி அந்தப் பார்வை சொல்வது போலிருந்தது காசிமுக்கு. இரவு, பகல் அதே நினைவாக அதன் வார்த்தைகளை எழுத்து எழுத்தாகப் பிரித்துப் பிரித்துச் சொல்லிப் பார்த்துக் கொண்டு சிந்திக்கலானான். ஏதோ பொருள் விளங்குவது போலிருந்தது. ஒன்றுமே புரியாதது போலவுமிருந்தது. ஆனால் காசிம் தன் உள்ளத்தில் ஓர் உறுதி செய்து கொண்டான். அரசகுமாரி ஆயிஷாவைத் தேடிக் கண்டுபிடிக்கக் கிளம்பிவிட வேண்டியது என்பதுதான் அவன் செய்து கொண்ட முடிவு.

தன் முடிவிலே அவன் நம்பிக்கையோடு இருந்தான். அது சரியா தவறா என்பதைப்பற்றி எல்லாம் அவன் வேறு யாருடனும் விவாதிக்க விரும்பவில்லை. ஒருநாள் அதிகாலையில் தங்க நகரத்தை விட்டுத் தன்னந்தனியனாக ஆயிஷாவைத் தேடிச் சந்திர மலையை நோக்கிப் பயணமானான் காசிம்.

நடந்து நடந்து நாளெல்லாம் பிரயாணம் செய்யலானான் காசிம். பாவம் அவன் ஏழை. குதிரைமீது சவாரி செய்து போக அவனுக்கு வசதி ஏது? நடந்தேதான் தன் வழியெல்லாம் கடந்து கொண்டிருந்தான். காடு, மலை, வனம், வனாந்திரம், நதிகள், குட்டைகள், ஏரிகள் எல்லாவற்றையும் கடந்து முடிவிலே சந்திர மலை அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தான் காசிம்.

நெடிதுயர்ந்து நீண்டு கிடக்கும் சந்திர மலையை நிமிர்ந்து பார்த்தான். கழுத்தை வலித்தது. விண்ணைத் தொட்டுக் கொண்டு நின்றது பயங்கரமான அந்த மலை. அதில் மரஞ்செடிகள்கூட இல்லை. ஒரே பாறை. உறுதியான கருங்கல் பாறை. அந்த மலையின் முடிகளைக் காண முடியாமல் அதைப் பனிப்படலம் சூழ்ந்து கொண்டிருந்தது. இத்தகைய மலைக்கு அப்பால்தான் ஜ்வலிக்கும் மணல் வெளி உள்ளது. ஆனால் இந்த மலையைத் தாண்டிய பிறகல்லவா அந்த மணல் வெளியைப் பற்றிய சிந்தனை.

காசிம் அதிகநேரம் சிந்திக்கவில்லை. மனத்திலே உறுதியை வளர்த்துக் கொண்டான். செயலிலே இறங்கி விட்டான். ஆம், சந்திர மலையின் மீதுஏற ஆரம்பித்தான். அவனுக்கு மூச்சு வாங்கிற்று.

வியர்வை வெள்ளமாக வழிந்தது. அத்துடன் அவன் கை கால்களிலிருந்து வழிந்த ரத்தமும் கலந்து கொண்டது. மலையின் மீது ஏறுவதற்குப் பாதை ஏது? கரடுமுரடான அதன்பக்கங்களைப் பிடித்துக் கொண்டு ஏறலானான். ஈட்டியின் நுனியைப்போல, வாளின் கூர்மையைப்போல அந்தப் பாறைகள் அவன் பாதங்களையும் கைகளையும் உடலையும் கிழித்தன. உதிரம் பெருகிற்று. உடல் தளர்ந்தது. ஆனாலும் காசிம் உறுதியைக் கைவிடவில்லை. மேலும் மேலும் ஏறிக் கொண்டிருந்தான்.

இனி ஓர் அங்குலம்கூட நகர முடியாது என்றதொரு நிலை ஏற்பட்டது. கைகால்களில் ஏற்பட்ட காயங்கள் ரணமாகித் தாங்க முடியாத வேதனையைக் கொடுத்தன. கண் இருண்டது. காது அடைத்துக் கொண்டது. மூச்சுத் திணறிற்று. அப்படியே ஒரு பாறை மீது நினைவிழந்த நிலையில் குப்புறப் படுத்து விட்டான் காசிம்.

அப்படி எத்தனை நேரம் மயங்கிக் கிடந்தானோ அவனுக்கே தெரியாது. திடீரென்று 'ஊ ஊ' என்ற புயல் காற்றுத்தான் அவனை நினைவு கொள்ளச் செய்தது. 'ஹோ' என்ற பேரிரைச்சலுடன் அந்தப் பெருங்காற்று பாறைகளை முட்டி மோதி ஆரவாரம் செய்தது. பாறையின் மீது படுத்திருந்த காசிமைப் பெயர்த்தெடுத்துத் தூக்கி எறிவதைப்போல அத்தனை மூர்க்கமாக அந்தக் காற்று வீசியது. காசிமினால் கண்களைத் திறக்கவே முடியவில்லை. ஏதோ ஒரு கரிய நிழல் ஒன்று பயங்கரமாகத் தன்னை நோக்கி வருவதைப் போன்றதோர் பிரமை ஏற்பட்டது காசிமுக்கு. ஆனால் அதைத் தலை நிமிர்ந்து பார்க்கத் தைரியமில்லை. அப்படியொரு சோர்வு உடலிலும் உள்ளத்திலும். தலையைத் தூக்கினால் காற்றின் கரங்களுக்குப் பிடி கொடுத்தது போலாகிவிடும் என்று அப்படியே பாறையோடு பாறையாக அப்பிக் கொண்டான். என்ன நடந்தாலும் நடக்கட்டும் என்ற உறுதியுடன் ஒட்டிக் கொண்டான் சந்திர மலைப் பாறையோடு.

ஊழிக்காற்றின் வேகம் தணிந்தது போலிருந்தது. ஏதோ ஒரு பயங்கரமான இருள் கவிவது போலிருந்தது காசிமின் உள்ளுணர்வுக்கு. மெள்ளத் தலையைத் தூக்கிக் கண்களை இடுயீகக் கொண்டு கவனித்தான். தன்னை நோக்கி ஒரு பெரிய கருமேகம் ஓடிவருவது போலிருந்தது. அவன் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. நன்றாக உற்றுப்பார்த்தான். பீதியினால் அவன் இதயத் துடிப்பே நின்றுவிடும் போலிருந்தது. அப்பா! எத்தனை பெரியது?

இதுவரை அப்படியொரு ஜந்துவை அவன் கற்பனைகூடச் செய்த தில்லையே! கழுகு. கழுகா அது? பொன்னிற உடல் இறக்கைகள்தான் எத்தனை மைல் நீளம். ஐயோ! அந்தப் பிரும்மாண்டமான கழுகு தன் விசாலாமான இறக்கைகளை வீசிக்கொண்டு காசிமை நோக்கிப் பாய்ந்தது.

இனி உயிர் வாழப் போவதில்லை என்ற முடிவிலே 'வீல்' என்ற கத்தல்தான் அவனிடமிருந்து வெளிப்பட்டது. காசிம் மறுபடியும் தன் நினைவிழந்து போனான்.

அந்தப் பொன்னிறக் கழுகு அவனைத் தன் கால்களில் கோழிக்குஞ்சைப் போல இடுக்கிக் கொண்டு பறந்தது. கழுகின் பிடியில் நினைவிழந்து விட்ட காசிமுக்கு மறுபடி நினைவு திரும்பியபோது தான் இன்னும் உயிருடன் இருப்பதை எண்ணி வியப்புத்தான் உண்டாயிற்று. அதுமட்டுமல்ல, தான் இஅபபோது ஆகாயத்தில் பறப்பதையும் இன்னும் கழுகின் பிடியில்தான் இருக்கிறோம் என்பதையும் அறிந்து கொண்டான் அவன்.

## ஆறு

கழுகு காசிமை மேலே மேலே தூக்கிக் கொண்டு பறந்து கொண்டிருந்தது. பனி மூடி சந்திர மலையின் முகடுகளைக் கடந்து போய்க் கொண்டிருந்தது பொன்னிறக் கழுகு. தன்னைத் தின்பதற்குத் தகுந்த இடத்தைத் தேடிப் போகிறதோ என்று கலங்கினான் காசிம். கழுகு சந்திர மலையின் மறுபுறத்தில் வேகமாக இறங்கிக் கொண்டிருந்தது. காசிமுக்கு மூச்சு முட்டிற்று. மெள்ள மெளள அதன் வேகம் குறையலாயிற்று. காசிம் கண்களை இறுக மூடிக் கொண்டான்.

கழுகு காசிமை மெள்ளக் கீழே வைத்தது. அடுத்த விநாடி தனது உறுதியான அலகினால் அது தன் உடலைக் கொத்திக் கிழிக்கப் போகிறதென்றுதான் காசிம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அதன் இதயம் படபடவென்று தாளம் போட்டுக் கொண்டிருந்தது. பீதியினால் கண் மூடி அசைவற்றுக் கிடந்த காசிம் வெகு நேரம் வரை ஒன்றுமே நடக்காததைக் கண்டு வியப்போடு மெள்ளக் கண்களைத் திறந்து பார்த்தான். அவனுக்கு வியப்பு தாங்கவில்லை. அருகில் அந்தப்

பெரிய கழுகைக் காணவில்லை! தலையைத் தூக்கி நன்றாகப் பார்த்தான். கழுகு வெகு தொலைவில் பறந்து போய்க் கொண்டிருந்தது. ஆச்சரியம் அவனைத் துள்ளியெழுந்து உட்கார வைத்தது. கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டான். கனவல்ல, உண்மைதான். கழுகு அவனைக் கொல்லாதது மட்டுமல்ல, கடக்க முடியாத சந்திர மலைக்கு மறுபக்கத்தில் அல்லவா அவனைக்கொண்டு வந்து போட்டிருக்கிறது!

அந்தப் பலமற்ற நிலையிலும் காசிமுக்கு உடலில் புதிய தெம்பு கூடியது. தன் அதிர்ஷ்டத்தை எண்ணி எண்ணிப் பூரித்துப் போனான். சட்டென்று ஒரு பயமும் வந்து கௌவிக் கொண்டது. 'என்ன காரணத்தினாலோ எங்கோ சென்றுள்ள கழுகு மறுபடி திரும்பி வந்துவிட்டால்?' குபீரென்று எழுந்திருந்தான். தன் உடலிலிருந்த பலத்தையெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டான். தலைதெறிக்க ஓட ஆரம்பித்தான்.

என்ன ஆச்சரியம்? அப்போதுதான் அவன் தன் உடலை, கை கால்களைக் கவனித்துக் கொண்டான். மலை ஏறும்போது பாறைகள் கிழித்ததனால் ஏற்பட்ட காயங்கள் யாவும் மாயமாக மறைந்திருந்தன. 'அதனால்தான் என்னால் இவ்வளவு வேகமாக ஓடமுடிகிறதோ? அந்தக் கழுகின் மகிமையினால்தான் என் உடலிலிருந்த இந்தக் காயங்கள் மறைந்தனவோ? எனக்கு உதவி செய்வதற்காகத்தான் அந்தக் கழுகு வந்ததோ?' இப்படியெல்லாம் எண்ணமிட்டபடியே ஓடிக் கொண்டிருந்தான் காசிம்.

ஓடியபடியே இருந்தாலும் அவன் மனம் சிந்தனை செய்வதை மட்டும் நிறுத்தவில்லை. எப்படிச் சோர்ந்து துவண்டு செயலிழந்து கிடந்தோம்? அப்படிப்பட்ட நிலையிலிருந்து எனக்கு இவ்வளவ வேகமாக ஓடும் தெம்பு எப்படி வந்தது? இது ஏதோ ஓர் அற்புதந்தான். அந்த அதிசயம், என்னைத் தூக்கி வந்து இங்கு போட்ட கழுகினால்தான் ஏற்பட்டிருக்க வேண்டும். ஒருவேளை அது மந்திரக் கழுகோ?' இப்படிப் பலவிதமாகச் சிந்தனை புகையாகச் சுருண்டாலும்கூட தன் எண்ணங்களில் ஒரு நம்பிக்கை ஏற்படவில்லை அவனுக்கு. ஆகவே அவன் தன் ஓட்டத்தையும் நிறுத்தவில்லை.

ஓடும் அவன் திரும்பிப் பார்த்திருந்தானானால் ஒரு அதிசயமான காட்சியைக் கண்டிருப்பான். அது என்ன காட்சி தெரியுமா? சந்திர மலையின் ஓர் உயர்ந்த பாறையின்மீது பூதாகாரமான இரண்டு கரிய உருவங்கள் ஓடும் அவனையே பார்த்துக் கொண்டு

உட்கார்ந்திருந்தன. அந்த இரு உருவங்களும் அவனுக்குப் பரிச்சயமானவைகள்தான். ஒன்று பொன்னிறக் கழுகு. மற்றொன்று, பார்க்கும் திரவத்திலிருந்து வெளிப்பட்ட பச்சைப் புகையிலிருந்து உருவாயிற்றே ஒரு பூதம், அதுதான் அது. அந்த இரு உருவங்களின் முகத்திலும் மகிழ்ச்சியே குடி கொண்டிருந்தது. கிழட்டு பூதம் தன் கண்களைச் சிமிட்டியபடி சொல்லிற்று. "விடுதலை பெற்ற பூதங்களினால் மனிதர்களுக்கு உதவ முடியாது. ஆனால் அந்தப் பூதங்கள் தங்கள் நண்பர்களைக் கொண்டு அவர்களுக்கு உதவி செய்ய முடியும்" பூதத்தின் பேச்சை ஆமோதிப்பது போலக் கழுகும் தன் தலையை அசைத்தது.

நல்ல இதயம் படைத்த காசிமுக்கு உதவுவதற்காகவே பார்க்கும் திரவத்துப் பச்சைப் புகைப் பூதமும், பொன்னிறக் கழுகும் அவனைப் பின்தொடர்ந்து வந்திருக்கின்றன. ஆனால் தனக்கு ஏதாவது உதவி கிடைக்கும் என்றா காசிம் அந்தப் பயணத்தை மேற்கொண்டான்? இல்லையே, அரசருக்கு ஏற்பட்ட கஷ்டத்தைப் போக்குவது தன் கடமை என்று கிளம்பினான் அவன்.

இவ்விருவரையுமோ இவர்களின் சம்பாஷணையையோ காசிம் கேட்கவில்லை. அவன்தான் குதிகால் பிடரியில்பட ஓடிக் கொண்டிருந்தானே! அவன் ஓட்டம் தடைபடவே இல்லை. ஓடினான், ஓடினான், ஓடிக்கொண்டே இருந்தான். அவனது முடிவற்ற ஓட்டத்தக்கும் ஒரு முடிவு ஏற்பட்டது. ஜ்வலிக்கும் மணல் நிறைந்த பயங்கரமான பாலைவனத்தின் எல்லையை அடைந்தான் காசிம்.

அந்தப் பாலைவனம் மிகமிகப் பயங்கரமானது. அதன் மணல் சாதாரணமான மணலல்ல. ஒளி வீசி ஜ்வலிக்கும் ஒருவகை விசித்திரமானமணல். எங்கிருந்தாவது ஒரு சிறிய ஒளிக்கீற்று அந்த மணற் பரப்பிலே விழுந்தாலும் போதும். அது ஆயிரம், பதினாயிரம், லட்சம், கோடிகளாகப் பெருகிப் பரவிப் பிரகாசிக்கும்.

அப்படிப்பட்ட மணற்பரப்பிலே சூரிய ஒளி வீசுமானால் எப்படி இருக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள். அதன் பிரகாசத்திலே பார்ப்பவர் பார்வையை இழந்து குருடாகி விடுவர். ஒளிப்பிழம்பு நெருப்பாகி அருகிலுள்ளோரைப் பொசுக்கிச் சாம்பலாக்கி விடும்.

ஜ்வலிக்கும் பாலைவனத்தின் எல்லையைக் காசிம் அடைந்தபோது நல்லவேளையாக இருள் கவியும் வேளையாகி

விட்டது. ஆனால் அந்த வேளையிலும் கூட அவனால் அந்தப் பிரதேசத்தைக் காண முடியவில்லை. வெளிச்சம் பார்வையைக் கூச வைத்தது. அதைக் காண முடியாமல் கைகளால் இரு கண்களையும் பொத்திக் கொண்டுஒரு பாறையின் மறைவில் போய் ஒடுங்கிக் கொண்டான். ஓடிய களைப்பும், வந்து ஒட்டிக் கொண்டது. இந்த ஒளி மண்டலத்தைக் கடப்பது எப்படி என்ற கலையும்வந்து கௌவிக் கொண்டது. செயலிழந்த நிலையில் சிந்தனை வசப்பட்டவனாக அப்படியே வெகுநேரம் உட்கார்ந்திருந்தான் காசிம். மாலை மயங்கி மெள்ள மெள்ள இரவும் வந்தது.

## ஏழு

**பா**றையின் மறைவிலே ஜ்வலிக்கும் மணல் நிறைந்த பாலை வெளியைக் கடப்பது எப்படி என்று தவிப்புடன் சிந்தித்துக் கொண்டிருந்த காசிமின் மூளையிலே பளீரென்று ஒரு மின்னல் தோன்றியது. பார்க்கும் திரவத்தின் பச்சைப் புகைப்பூதத்தின் வார்த்தைகளின் பொருள் இப்போது அவனுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல் விளங்கலாயிற்று.

'சூரியனுக்குக் கீழேயுள்ள மனிதர்களால் இதைக் கடக்க முடியாது என்றல்லவா பூதம் சொல்லிற்று? உண்மைதான், பகல் வேளையில் மேலே சூரியன் இருக்கும் போது கீழே மனிதனால் இதைக் கடந்து போக முடியாதுதான். அதாவது பகலில் பிரயாணம் செய்யக்கூடாது, முடியாது என்பதையே புகைப்பூதம் சூசகமாகத் தெரிவித்திருக்கிறது. ஆனால் இரவில்...? சூரியனில்லாத வேளையில் இதைக் கடக்கலாம். சந்திரன் ஒளியில் இதைக் கடக்க வேண்டும் போலும். இதை உணர்ந்து கொண்ட காசிமிற்கு உற்சாகம் கரை கடந்ததாகியது. பரபரப்புடன் தன்னிடமிருநத சொற்ப ஆகாரத்தை உண்டான். நடந்த களைப்பு தீர சற்று இளைப்பாறிய பின் பாலைவனத்தைக் கடப்பது எளிதாக இருக்கும் என்று எண்ணி அந்தப் பாறை மறைவிலேயே முடங்கிக் கொண்டான். சற்று நேரத்தில் உறங்கியும் போனான்.

சில்லென்ற பாலைவனத்தின் குளிர்ந்த காற்று அவனை உறக்கத்திலிருந்து எழுப்பியது. அப்போது இரவு முதல் ஜாமம்

முடிந்து இரண்டாவது ஜாமத்தின் தொடக்கம். இருள் மூடாத இரவு. இலேசான சந்திரன் ஒளி வீசிக் கொண்டிருந்தது. ஆனால் அந்தப் பிறைச் சந்திரனின் ஒளியிலும் பாலைவனத்தின் மணல் தகதகத்துக் கொண்டிருந்தது. கண்களை இடுக்கியபடிதான் அப்பரந்த வெளியைப் பார்க்க முடிந்தது.

காசிம் ஒரு துண்டுத் துணியை எடுத்துத் தன் கண்களைச் சுற்றிக் கட்டிக் கொண்டான். அந்தப் பிரகாசமும் கூடத் தன் பார்வையைப் பாதிக்காதிருக்க வேண்டும் என்பதற்காக. பாலைவனத்தில் பாதைகள் ஏது? இடையே மரமோ, செடியோ, நதியோ, மடுவோ உண்டா? மேடு பள்ளமான ஒரே மணற் பரப்புதானே? ஆகவே ஒரு குறிப்பிட்ட இலக்கை நோக்கிக் கண்களை மூடிக் கொண்டு நடந்து விடலாமே. அதேபோல்தான் காசிம் இப்போது தகதகக்கும் பாலை மணலில் கண்ணைக் கட்டிக்கொண்டு நடக்கலானான். ஜ்வலிக்கும் மணலின் கானல் அவன் கண்களைக் கூச வைக்கவில்லை. தவிர இது சூரியன் ஒளியல்லவே. சந்திரனின் தண்ணொளிதானே? துணியை ஒற்றையாகக் கட்டி இருந்ததால் அதன் மூலம் ஓரளவு பார்க்கவும் முடிந்தது.

கால்கள் மணலில் புதையப் புதையக் காசிம் அந்த ஒளி மணல் பரப்பைக் கடக்கலானான்.

நடந்தான். நடந்து நடந்து ஒடையை ஓட்டமாக்கினான். ஓடி ஓடி ஒவ்வொரு மைலாகப் பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னேறிக் கொண்டிருந்தான் காசிம். அவன் தன் ஓட்டத்தை நிறுத்தவே இல்லை. மூச்சு வாங்கிற்று. பகலெல்லாம் ஓடியவனாயிற்றே. காலில் ரத்தம் கட்டிக்கொண்டது. ஒவ்வோர் அடி பெயர்த்து வைக்கும்போதும் ரணமாக வலித்தது. ஆனால் காசிம் ஓய்ந்து விடவில்லை. அவ்வப் போது ஓட்டத்தின் வேகத்தைக் குறைத்துக் கூட்டிக்கொண்டானே தவிர நின்று விடவில்லை. இளைப்பாறவோ, நின்று நிதானிக்கவோ அவன் பயப்பட்டான். ஏன்? இரவுக்குள் அந்தப் பாலைவனத்தைக்கடந்தாக வேண்டுமே! இல்லாவிட்டால் காலைக் கதிரவனின் பேரொளியிலே அவன் பிடி சாம்பலாகி விடுவானே. இத்தனை சிரமங்களுக்குப் பிறகு அப்படிப்பட்டதோர் நிலையை அடைய யார்தான் விரும்புவார்கள்?

ஆகவே நிற்காமல் ஓடினான் காசிம். அவனது உறுதியான பாதங்கள் மணலை உதைத்து உதறியபடி முன்னேறிக் கொண்டிருந்தன.

இரவின் மூன்றாம் ஜாமத்தின்போது அவனது ஓட்டத்தின் வேகம் இன்னும் அதிகமாயிற்று. வாழ்வா அல்லது சாவா என்ற

முடிவை நாடித்தானே அவன் மூச்சைப் பிடித்துக்கொண்டு ஓடிக் கொண்டிருந்தான். இரவுக்குள் எப்படியும் இதைக் கடந்து விடுவேன் என்றதொரு வெறியே அவனை இயக்கிக் கொண்டிருந்தது.

கால்கள் துவண்டன. உடலின் ஒவ்வோர் அங்கமும் ரணமாக வலித்தது. அடுத்த அடியை வைக்கும்போது 'அப்படியே சுருண்டு விழுந்துவிடப் போகிறோம். நம் வாழ்நாள் இந்தப் பாலைவனத்தில் முடியப் போகிறது. இங்கு கிடக்கும் எத்தனையோ மனித எலும்புக் கூடுகளோடு என்னுடையதும் ஒன்றாகச் சேரப்போகிறது' என்றதோர் பீதியும் சோர்வும் காசிமைக் கௌவிக் கொள்ளும். ஆனாலும் அவன் தொய்ந்து துவண்டு விழுந்து விடவில்லை. தன் உடலின் சக்தியையெல்லாம் ஒன்று திரட்டிக்கொண்டு ஓடிக் கொண்டிருந்தான். உடல்பலத்தைவிட மனோபலமே இப்போது அவனை ஓட வைத்துக் கொண்டிருந்தது.

கீழ்வானம் வெளுக்க ஆரம்பித்தது. ஆதவன் வருகைக்கு அடிவானத்தில் வெள்ளி முலாம் பூசி வரவேற்பளிக்கத் தயாராக இருந்தது பூலோகம். அதே நேரத்தில் காசிமின் கால்களும் மணல் பரப்பிலிருந்து உறுதியான பாறைகள் நிறைந்த பகுதியை மிதித்தன. ''வெற்றி வெற்றி' என்று குதூகலித்தது காசிமின் உள்ளம். கண்களைச் சுற்றிக் கட்டி இருந்த துணியை அவிழ்த்து எறிந்தான். இரவும் இருளும் ஓடியே போயிருந்தன. அதேபோலத் தன் கஷ்டங்களுக்கும் விடிவு ஏற்படும். தன் முயற்சிகள் பலன் பெறும் என்றதோர் புதிய நம்பிக்கை அவனிடம் பிறந்தது. அதேசமயம் பகலிலே அந்தப் பாலைவனம் எப்படி மாறும் என்பதும் அவன் நினைவுக்கு வந்தது. நல்லவேளையாக மணல் தகதகக்க ஆரம்பிக்குமுன் அதிலிருந்து விடுபட்டு வந்துவிட்டோம் என்ற மகிழ்ச்சியே அவன் களைப்பைப் போக்கும் மருந்தாக இருந்தது.

இருளை ஓட்டிக்கொண்டு தகதகவென்று சூரியன் கிளம்ப லானான். இப்போது காசிம் மணல் வெளியிலிருந்து வெகு தூரம் வந்துவிட்டிருந்தான்.

பாறைகள் நிறைந்த பகுதியிலிருந்தான் இப்போது காசிம். இரவெல்லாம் ஓடிக் களைத்திருந்த காசிம் இருபெரும் பாறைகளுக்கு நடுவே ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தான், அமைதியாகத் தூங்குவதற்காக.

படுத்த உடனே அப்படியே அயர்ந்து தூங்கலானான். அடித்துப் போட்டதைப் போலத் தூங்கினான் காசிம். பகல் முழுவதும் அப்படித் தூங்கினான். பின் இருக்காதா? அவனைப் போல ஓடிய களைப்புக்கு இருபது நாட்கள் தூங்க வேண்டுமே! நன்றாகத் தூங்கித் தானாகக் கண் விழித்தபோது பகல் மறைந்து மறுபடி இரவு முளைத்திருந்தது. கண் விழித்த காசிம் புது மனிதனாகத் தோன்றினான். உடலில் சோர்வு இருந்தாலும் உள்ளத்தில் தெம்பும் தெளிவும் ஏற்பட்டிருந்தன. அடுத்து செய்ய வேண்டியதைப்பற்றி சிந்திக்கலானான். அப்போதுதான் அவன் தன் பசியை உணர்ந்தான். கையிலோ உணவு ஏதுமில்லை.

## எட்டு

**ப**சி.. பசி...

காசிமின் சிந்தனையெல்லாம் இப்போது அதுதான். ஓடி ஓடிக் களைத்தவனுக்குப் பசி குடலைச் சுருட்டி இழுத்தது. ஏதாவது வயிற்றுக்குப் போடாவிட்டால் அவனால் எதுவுமே செய்ய முடியாது போலிருந்தது. ஆனால் அவனிடமோ உண்பதற்கு ஒன்றுமே இல்லை. சுற்றுமுற்றும் பார்த்தான். பழ மரங்கள்? ம்ஹூம். ஒன்றையுமே காணோம். ஒரே பாறை. கண்ணுக்கெட்டிய தூரம் வரை கரடுமுரடான பாறை.

மெள்ள எழுந்திருந்தான். தள்ளாடி நடந்தான். அவன் கண்கள் பாறை இடுக்குகளைக் கூடக் கவனமாகச் சோதனையிட்டன. அதோ! அங்கே... அது... அது... என் சிவப்பாக? சப்பாத்திப் பழம். கள்ளி, சப்பாத்தி, கற்றாழை இவைதான் அந்தப் பிரதேசத்துச் செடிகள். வேறு வழியில்லை. காசிம் சப்பாத்திப் பழங்களை விண்டு சுவைத்து உண்டான். கற்றாழையைப் பிளந்து அதன் நடுவிலுள்ள வழவழப்பான சோற்றைச் சுரண்டித் தின்றான். பசித்த வயிற்றுக்கு எதையோ கொடுத்துப் போக்குக் காட்டி விட்டான். இனி அவனது அடுத்த வேலை? மங்குவின் மந்திர மாளிகையைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியதுதான்.

கொஞ்ச நேரத்தையும் வீணாக்க விரும்பவில்லை அவன். சந்திர மலையையும், ஜ்வலிக்கும் மணல் நிறைந்த பாலைவனத்தையும்

வெற்றிகொண்ட பெருமிதத்தில் மங்குவின் இருப்பிடத்தைக் கண்டுபிடிப்பதை ஒரு பொருட்டாகவே நினைக்கவில்லை. ஆகவே சாவதானமாகவே அந்த வனாந்தரத்தில் நடந்து கொண்டிருந்தான். பாலைவனத்தைக் கடந்த பரபரப்பில்லை. அதற்கு அவசியமும் இல்லையே. ஆகவே காலார நிதானமாக சுற்றுமுற்றும் வேடிக்கை பார்த்தபடி நடந்து கொண்டிருந்தான்.

இப்படி ஒரு பகலும் இரவும் நடந்து ஒரு மலை முகட்டிற்கு வந்து நின்றபோது தூரத்திலே ஒரு கம்பீரமான கட்டடம் நிற்பது தெரிந்தது. அதுதான் மங்குவின் கற்கோட்டையாக இருக்க வேண்டும் என்ற உறுதியுடன் அதை நோக்கிச் செல்லலானான். அவன் முடிவு தவறாகவில்லை. அதுதான் மந்திரவாதி மங்குவின் மாயக்கோட்டை.

கோட்டை வாசலைக் காசிம் அணுகியபோது அதன் காவலாளிகள் அவனைத் தடுத்து நிறுத்தினார்கள். "டேய் பொடியா, எங்கே வந்தாய்? இதன் உள்ளே யாராலும் போக முடியாது. போ, வந்த வழியைப் பார்த்துக் கொண்டு திரும்பிப் போய்விடு" என்று மீசையை முறுக்கினார்கள் காவலாளிகள்.

திரும்பிப் போகவா இத்தனை பிரயாசைப்பட்டு இங்கு வந்திருக்கிறான் அவன்? எப்படியும் தந்திரத்தினால் இவர்களை ஏமாற்றி உள்ளே சென்றாக வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். அப்பாவி போல நடிக்கலானான். காவலாளிகளில் ஒருவன் தற்பெருமை கொண்டவன் என்பதை அவன் பார்வையிலிருந்தே தெரிந்து கொண்டான். "ஐயா, வீரத் தளபதியாரே! உமக்கு ஆயிரம் சலாம். நான் ஓர் அநாதை. வெகு தூரத்திலிருந்து வருகிறேன். நான் எங்கு திரும்பிப் போவது? உங்கள் தயவிருந்தால் எனக்கு இந்த அரண்மனையில் ஏதாவது ஒரு வேலை கிடைக்கும். என் பசியைப் போக்கிக்கொள்ள அது உதவும்" என்றான் காசிம் பணிவாக.

காவலர்கள் இருவரில் மற்றவன் கடகடவென்று சிரித்தான். "அண்ணே, பயல் உன்னைத் தளபதியாக்கிட்டான். அதுவும் வீரத்தளபதி, பலே பலே!"

காசிமினால் புகழப்பட்ட வீரனுக்குப் பெருமை பிடிபடவில்லை. அரைக் கண்ணை மூடியபடி நெஞ்சை நிமிர்த்தி ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டே மீசையின் நுனியைக் கூராக்கிக் கொண்டான்.

இதுதான் சமயமென்று காசிம் மற்றொரு காவலாளியைப் பார்த்துச் சலாமிட்டான். தனக்கு உதவும்படி பார்வையாலேயே பரிதாபமாகத் தெரிவித்தான். காசிமின் தோற்றத்தில் அவனுக்கு இரக்கம் ஏற்பட்டது.

"அண்ணே! பயலைப் பார்த்தால் பரிதாபமா இருக்கு. மரியாதையாவும் நடந்துக்கறான். இவனை உள்ளேதான் அனுமதிப்போமே. மந்திரவாதி சாப்பிடுமுன் அவர் சாப்பிடும் உணவை ருசி பார்த்துக் கொடுக்கும் ஆசாமியின் வேலை காலியாக இருக்கு போலிருக்கிறதே. முன்பு இருந்தவன் விஷங்கலந்த உணவைச் சாப்பிட்டதால் சாகக் கிடக்கிறானே... ம்... நம் எசமான் மங்குவிற்கு விரோதிகள் ஏராளம்" என்றான்.

அவன் பேச்சிலிருந்து உள்ளே ஒரு வேலை - அதுவும் அபாயம் நிறைந்த வேலை காலி இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டான் காசிம். சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் உள்ளே புகுந்துவிட வேண்டுமென்ற துடிப்போடிருந்த காசிம், "ஐயா, ஐயா, அந்த வேலையை எப்படியாவது எனக்கு வாங்கித் தாருங்களய்யா! உங்களுக்குக் கோடி புண்ணியமுண்டு..." என்று பரபரத்தான்.

நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்த காவலாளி சட்டென்று குனிந்தான். இப்போது அவன் விழிகள் மூடி இருக்கவில்லை. சிவந்த அவனது விழிகள் பயங்கரமாகக் காசிமை விழுங்கி விடுவது போல உருட்டி விழித்துக் கொண்டிருந்தன. அவன் முகத்தில் கடுமையும் சந்தேகமும் கவிந்திருந்தன. ஆபத்து நிறைந்ததொரு வேலைக்கு முன்வருகிறானே என்று அவன் ஆர்வத்தில் சந்தேகம் ஏற்பட்டது. தன் தோழனின் முகக்குறிப்பிலிருந்து அவன் உள்ளத்தைப் புரிந்து கொண்ட மற்றவன் உடனே, "அண்ணே, பயலுக்கு அந்த வேலையைப் பத்தி எதுவும் தெரியாது. நல்ல சாப்பாடு கிடைக்குமின்னு குதி போட்டுக்கிட்டு ஓடியாரான். அவ்வளவுதான், நீ சந்தேகப்படறபடி இந்தப் பயகிட்ட சூது ஏதுமில்லைன்னு நான் நினைக்கிறேன். விஷயத்தை விளக்கிப் பாரு, பயல் ஒரே ஓட்டம், ஓடியே போயிடுவான்" என்றான்.

ஆனால் தன் தோழனின் வார்த்தைகளால் திருப்தி அடைந்துவிடவில்லை அந்தக் காவலாளி. அவன்தான் பிரதம காவல்காரன் போலும். இத்தனை நேரம் பேசாதிருந்த அவன் காசிமின் அருகில் வந்து அவன் மேல் சட்டையைப் பிடித்து இழுத்து,

உலுக்கியபடி தூக்கி, "டேய், பயலே! உண்மையைச் சொல்லிவிடு. நீ யார்? எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டான்.

காசிம் அந்தக் குரலையும் பார்வையையும் அவன் பிடியின் உறுதியையும் கண்டு நடுநடுங்கிப் போனான். "நான்... நான்... எங்கிருந்தும் வரவில்லை. எனக்கென்று எந்த இடமும் கிடையாது. நான் ஒரு அநாதை ஐயா" என்று குழறினான்.

ஆனால் தலைமைக் காவலாளியின் பிடி தளவில்லை. "பொய். நீ பொய் சொல்லுகிறாய். நீ ஒரு ஏமாற்றுக்காரன், சூழ்ச்சிக்காரன். தங்க நகரத்திலிருந்துதானே வருகிறாய் நீ? உண்மையைச் சொல்லிவிடு" என்று அவனை உலுக்கினான் காவல் தலைவன்.

## ஒன்பது

**கா**வல் தலைவனின் இரும்புப்பிடியில் சிக்குண்ட காசிமின்றுப் பயத்தினால் வார்த்தைகள் வெளிவரவில்லை. என்ன சொல்லுவது, எப்படித் தப்பிப்பது என்று புரியாமல் திருதிருவென்று விழிக்கலானான். அவனுக்கு மூச்சு திணறியது.

காசிமின் அதிர்ஷ்டம் என்றுசொல்வதா அல்லது பார்க்கும் திரவத்துப் பச்சைப் புகைப் பூதத்தின் கருணை என்பதா? அந்த இக்கட்டான வேளையில் மற்றொரு காவல்காரன்தான் காசிமுக்கு உதவினான். "அண்ணே, அந்தப் பயல் உன் பிடியிலே அப்படி கதிகலங்கிப் பூட்டானே. இ◌னைப் போய் நீ சந்தேகிக்கிறியே. தங்க நகரம் எங்கே இருக்குன்னுகூட இந்தப் பயலுக்குத் தெரியாதே. சுத்த அப்பாவிப் பய. தவிர தங்க நகரத்துக்கும் நம்ம கோட்டைக்கும் இடையிலே சந்திர மலையும, தகதகக்கும் பாலைவனமும் இருக்குதே அண்ணே. அதை மறந்துட்டியா? இந்தப் பயலாலே அவற்றைக் கடந்து வர முடியுமா?" என்று கேட்டான். அவன் வார்த்தைகள் காசிமைப் பிடித்திருந்த பிடியைத் தளர்த்தும்படி செய்தன. அவற்றைக் கடப்பது இலேசான காரியமல்ல என்பதை அவனும் அறிவான். ஆகவே காசிமை விட்டு விட்டான்.

காசிமுக்கு போன உயிர் திரும்பியது போலிருந்தது. இந்த நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விட விரும்பவில்லை அவன். அப்பாவியைப்

போலத் தொடர்ந்து நடித்து அவ்விருவரையும் முட்டாளாக்கி விட்டுக் கோட்டைக்குள் நுழைந்து விடுவதென்ற முடிவுக்கு வந்தான் காசிம்.

"அது என்னங்க தகதகக்கும் பாலைவனம்? தங்கம்தான் தகதகக்கும்னு சொல்லுவாங்க. நீங்ககூட சொன்னீங்க. ஏதோ தங்க நகருமன்னு. அப்படீன்னா இந்தப் பாலைவனமும் தங்க மணலாலே ஆனதுங்களா," என்று விழியை மலர்த்தி வாயைப் பிளந்தபடி பைத்தியம்போலக் கேட்டவன், "எனக்குத் தங்க மணலைப் பார்க்கணும்னு ரொம்ப நாளா ஆசைங்க. அந்தப் பாலைவனம் எங்கே இருக்கு சொல்லுங்க? அப்படியே அந்த சந்திர மலையோ இந்திர மலையோ, ஏதோ சொன்னீங்களே, அதுக்குப் போற வழியையும் சொல்லுங்க ஐயா! நான் அங்கேயெல்லாம் போயி வந்து உங்களுக்கும் நிறையத் தங்கம் கொண்டு வருவேன். நீங்க இந்தக் காவக்கார வேலையைக் கைகழுவிட்டு ஹாய்யா குந்திக்கினு சாப்பிடலாம் மகாராஜாக் கணக்கா" என்று படு அப்பாவியாக நடிக்கலானான் காசிம். இத்தனை திறமை தனக்கு எப்படி வந்ததென்று அவனுக்கே வியப்பாக இருந்தது. காவல்காரன் மௌனமாகக் காசிமையே பார்த்துக் கொண்டிருந்தான்.

தலைமைக் காவல்காரனுக்குக் காசிமிடம் பூரண நம்பிக்கை ஏற்படவில்லை. தான் சந்தேகித்தது முறையற்றது என்பதைத் தன் தோழன் முன்னிலையில் ஒப்புக்கொள்ளவும் விரும்பவில்லை. ஆகவே அவனுடன் காசிம் ஒரு ஏமாற்றுக்காரன்தான் என்பதற்குக் காரண காரியங்கள் கூறி விவாதிக்கலானான். தங்க நகரத்திலிருந்து அவன் வந்திருக்க முடியுமா முடியாதா என்பதைப் பற்றி இருவரும் காரசாரமாக விவாதித்துக் கொண்டார்கள். சந்திர மலையும் தகதகக்கும் பாலைவனமும் தலைமைக் காவல்காரனின் கூற்றை மெய்யாக்க முடியவில்லை. அவன் கட்சி தோல்வி அடையலாயிற்று. இந்தப் பொன்னான வேளையை நழுவ விட்டுவிடுவானா காசிம்? ஓசைபடாமல் பூனையைப் போல மெள்ளக் கோட்டைக்குள் புகுந்து விட்டான்.

காவலர் இருவரும் ஒரு முடிவுக்கும் வராமல் சலிப்படைந்து தங்கள் கவனத்தைக் காசிம் பக்கம் திருப்பிய போது அங்கு எவருமில்லாததைக் கண்டு திடுக்கிட்டார்கள். "பாத்தியா, பயல் உள்ளே பூந்துட்டான். நான் சந்தேகப்பட்டது சரிதான்" என்றான் தலைமைக் காவலாளி.

"அட, நீ ஒண்ணு! பயல் தப்பிச்சோம் பிழைச்சோம்னு வந்த வழியைப் பாத்துக்கிட்டு ஓடியிருப்பான். உன் முழியையும், பிடியையும் கண்டப்பறமுமா அவன் கோட்டைக்குள்ளே போயிருப்பான்?" என்றான் மற்றவன். இது முதல்வனுக்குப் பெருமையாக இருந்தது. கர்வத்துடன் தன் ஈட்டியை உயர்த்திப் பிடித்துக் கொண்டு விரைப்பாக நின்றான். அந்த நிமிஷமே இவ்விருவரும் காசிமை மறந்து விட்டார்கள்.

கோட்டையினுள் புகுந்த காசிம் சற்று தூரம் வரை பதுங்கிப் பதுங்கிச் சென்றான். பிறகு அங்கு வேறு ஆள் நடமாட்டம் ஏதுமில்லாததைக் கண்டு துணிவுடன் பிரதான அரண்மனையை நோக்கி நடக்கலானான். அவன் உள்ளத்தில் எதிரொலித்தன. 'எந்த வீரனாலோ மந்திர சக்திகளாலோ மங்குவை வெல்ல முடியாது.'

'உண்மைதான், நான் வீரனுமல்ல, நம்பிக்கையைத் தவிர என்னிடம் வேறு மந்திர சக்திகள் ஏதும் கிடையாது' என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான் காசிம்.

கற்கோட்டை வெறிச்வோடிக் கிடந்தது. கோட்டையினுள் இருந்த மாளிகைகளில் மனிதர்களையே காணோம். காசிம் பல வளைவுகளையும் வாசல்களையும் கூடங்களையும் கடந்து அரண்மனையின் சமையலறைக்கு வந்தான். அங்கு பிரதான சமையல்காரன் சுவைமிக்க உணவு வகைகளைத் தயாரித்துக் கொண்டிருந்தான். அவற்றின் வாசனை காசிமின் பசியைக் கிளறிவிட்டது. நாவில் நீரூற நெஞ்சத்தில் துணிவைக் கூட்டிக்கொண்டு சமையல்காரனின் முன்னால் போய் நின்றான்.

புதிய ஆளைக் கண்ட சமையல்காரன், "நீ யாரப்பா?" என்று கேட்டான்.

"நான்தான் உங்கள் எஜமானர் மங்குவின் உணவை ருசி பார்த்துச் சுவைத்துக் கொடுக்கும் புதிய பணியாளன்" என்று கூறினான் காசிம்.

"ஓ! நீதானா அது?" என்று அர்த்தமுள்ள பார்வையால் காசிமை அளந்தான் அவன். யாரும் துணிந்து ஏற்க முன்வராத அந்தப் பணிக்கு வந்துள்ள பொடியனிடம் அவனுக்கு ஒருபுறம் வியப்பும் மறுபுறம் இரக்கமும்தான் ஏற்பட்டன. "ம்... உன் வேலை என்ன என்பதைப் பற்றி உனக்குப் பூரா விபரமும் தெரியுமில்லையா?" என்று கேட்டான்.

சமையல்காரனுக்குக் காசிமிடம் ஏதோ ஓர் இனந்தெரியாத பாசம் ஏற்பட்டது. 'கள்ளங்கபடமற்ற இந்தப் பிள்ளையாண்டான் இங்கு வந்து சிக்கிக்கொண்டானே. ஒருவேளை வறுமையினால் வாடிய இவன் இந்த வேலையின் தன்மை தெரியாமல் வந்துவிட்டானோ?" என்று சந்தேகப்பட்டுத்தான் அவனிடம் அப்படியொரு வினாவை வீசினான் சமையல்காரன். காசிம் கூறிய பதில் அவனுக்கு வியப்பை அளித்தது.

"தெரியும் ஐயா. எஜமானருக்கு உண்பதற்கான உணவை அவர் முன்னிலையில் கொண்டு போய் வைத்து ஒவ்வொன்றாக அவருக்கு முன்னால் அதைச் சாப்பிட வேண்டும். எனக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாது போனால் பிறகு அவர் அதை உண்பார். அவர் உண்ணுமுன் நான் உண்டு தரவேண்டும். இதுவே என் வேலை" என்று விளக்கினான் காசிம்.

அதற்கு மேல் சமையல்காரன் ஏதும் பேசவில்லை. தயாராக இருந்த ஒரு பெரிய தட்டைக் காசிமின் முன் நீட்டினான். அதில் மங்கு உண்பதற்கான உணவு வகைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. "மங்கு உணவருந்த உட்கார்ந்திருக்கிறார். இதை எடுத்துக்கொண்டு போ" என்று கட்டளையிட்டான் அவன்.

காசிமின் இதயம் படபடத்தது. இத்தனை விரைவில் மங்குவைச் சந்திக்க வேண்டி இருக்கும் என்று அவன் நினைக்கவில்லை. நாய் வேஷம் போட்டபின் குரைக்காமல் இருக்க முடியுமா?

தாளமிடும் உள்ளத்துடன் தட்டை ஏந்திக்கொண்டு நடந்தான் காசிம். விசாலமானதொரு கூடத்தின் நடுவே பெரிய மேஜையின் முன்னால் உட்கார்ந்திருந்தான் மங்கு. அந்தக் கூடம் அற்புதமான அலங்காரங்களுடன் காணப்பட்டது. இருந்தாலும் அங்கு ஒரு குரூரமான அமைதியும் குடிகொண்டிருந்தது. காசிம் தன் கையிலிருந்த தட்டை மங்குவின் முன் வைத்துவிட்டுத் தலைகுனிந்து நின்றான். மந்திரவாதியை நிமிர்ந்து பார்க்க ஏனோ அவனுக்குத் துணிவில்லை.

மங்கு மதுவின் மயக்கத்திலே கிரங்கிக் கிடந்தான். "ம்... ஏன் நிற்கிறாய்? உணவை ருசி பார்த்துக் கொடு. எனக்குப் பசிக்கிறது" என்று கர்ஜித்தான் மந்திரவாதி. பயத்தைவிடக் காசிமுக்குப் பசி அதிகமாக இருந்தது. சுவை மிக்க உணவோ அவன் சுவைத்துச் சாப்பிடுவதற்காக முன்னாலிருந்தது. பேசாதிருப்பனேன்? மளமள வென்று உணவு வகைகளை ஒரு கை பார்த்தான். ஆர்வமுடன்

உண்ணும் காசிமையே பார்த்துக்கொண்டு பசியோடு உட்கார்ந் திருந்தான் மங்கு. காசிம் தான் உண்டு முடிந்ததும் அந்த உணவின் மறு பாதியை மங்குவின் முன் நகர்த்தினான்.

காசிம் கொடுத்த உணவுப் பண்டங்களைச் சாப்பிட்டுக் கொண்டே மங்கு கேட்டான். "நீதான் இந்த வேலைக்கு வந்திருக்கும் புதிய ஆளா?"

"ஆமாம், பிரபுவே!" என்றான் காசிம் தன் குரலின் நடுக்கத்தைத் திறமையாக மறைத்துக் கொண்டே.

மங்கு அவனை நன்கு உற்றுப் பார்த்தான். சற்று எட்ட நிற்கச் சொல்லி நன்றாகப் பார்த்தான். "உன்னை இதற்கு முன்பு வேறு எங்கேயோ பார்த்திருப்பதாகத் தோன்றுகிறதே... ம்... எங்கே?" என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டே சிந்திக்கலானான். காசிமிற்கு உடல் முழுதும் வியர்த்துக் கொட்டியது. அந்தக் கூடமே சுழல்வது போலிருந்தது.

## பத்து

மதுவின் மயக்கத்தில் இருந்த மங்கு புருவங்களை நெருக்கிக் கொண்டு சிந்திக்கச் சிந்திக்க காசிமின் கால்கள் வெடவெடவென்று நடுங்கலாயின. ஆனால் அதிர்ஷ்டம் காசிமின் பக்கம்தான் இருந்தது. எத்தனை நேரம் சிந்தித்தும் மங்குவிற்குக் காசிமை எங்கு பார்த்தோம் என்பது நினைவுக்கு வரவில்லை. அவன் தன் மந்திர சக்தியின் உதவியை நாடி இருந்தானானால் அவனுக்கு வெற்றி கிட்டி இருக்கும். ஆனால் மங்கு அப்போது தன் மூளையை உபயோகிக்கும் நிலையில் இல்லையே!

"இந்த அடிமைப் பயல்கள் எல்லாருமே ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறார்கள். 'யார், எவன்?' என்று அடையாளம் தெரிவதில்லை" என்று தனக்குத்தானே கூறிக் கொண்டு கையிலிருந்த மதுக் கிண்ணத்தை ஒரே மூச்சில் காலி செய்தான்.

மங்குவின் இயலாமை, காசிமுக்குப் போன உயிரைத் திருப்பிக் கொண்டு வந்தது. தன்னைப் பற்றிய உண்மை தங்க நகரத்தில் தன்னைக் கண்டிருப்பதாக ஒரு நினைவுப்பொறி அவன் நெஞ்சத்திலே

தெறித்திருக்குமானால்? அந்த நிலையை எண்ணிப் பார்க்கவே முடியவில்லை காசிமினால். 'மனிதன், அதுவும் மங்குவைப் போன்ற கொடியவன் மதுவுக்கு அடிமையாவதனால் எத்தனை சௌகரியமிருக்கிறது? மது வாழ்க!' என்று மனத்திற்குள் சொல்லிக் கொண்டான் காசிம். அரைக்கண் மூடி, சுற்றுச் சூழலை நிதானிக்க முடியாதபடி கிரங்கிக் கிடக்கும் மங்குவைக் கண்டு உள்ளுக்குள் சிரித்துக் கொண்டான். வயிறு புடைக்கத் தின்று முடித்த பிறகு அந்தக் கொடியவன் மூச்சு முட்டக் குடிக்க ஆரம்பித்தான். முன்பே போதை ஏறி இருந்தது அவனுக்கு. இப்போது இன்னும் கொஞ்ச நஞ்சமுள்ள நினைவையும் போக்க, காசிம் அவன் நீட்டிய போதெல்லாம் உயர்ந்த மதுவை அவன் கோப்பையில் நிரப்பிக் கொண்டிருந்தான். வெறும் மதுவை மட்டுமல்ல, கிடைத்தற்கரிய இந்தச் சந்தர்ப்பத்தைக் காசிம் நழுவ விடுவானா?

தங்க நகரத்தை விட்டுக் கிளம்பும்போதே அவன் உபயோகமாக இருக்கும் என்று சிறந்ததொரு மயக்க மருந்துப் பொட்டலத்தைக் கொண்டு வந்திருந்தான். அது இப்போது பயன்பட்டது. ஒரு தடவை மங்குவின் மதுக்கிண்ணத்தை நிரப்பும்போது அத்துடன் தன்னிடமிருந்த மயக்கம் தரும் அந்த கறுப்புப் பொடியையும் கலந்து கொடுத்தான். மங்கு அந்த மருந்து கலந்த மதுவைக் குடித்தபோது காசிமின் நெஞ்சுதான் எப்படி அடித்துக் கொண்டது? அதன் ஓசை பிறருக்குக் கேட்டு விடுமோ என்று அஞ்சினான் காசிம். தாளமிடும் உள்ளத்தோடு, ஆவல் ததும்ப அந்தக் கொடியவன் நிலைகுலைந்து நினைவிழந்து சுருண்டு விழும் தருணத்தையே காசிம் அப்போது எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தான். மதுவினாலேயே மயங்கிக் கொண்டிருந்த மங்குவிடம் காசிம் கலந்து கொடுத்த மயக்க மருந்துப் பொடியும் தன் வேலையைத் திறமையாகச் செய்தது.

தலை கிறுகிறுத்து ஆட, கண்கள் சொக்கிச் செருக மந்திரவாதி மங்கு தன் ஆசனத்தில் மயங்கித் தொய்ந்து துவண்டு சரிந்தான்.

இதற்காகவே காத்திருந்த காசிம் வெகு வேகமாகச் செயல்படலானான். மங்குவைச் சந்தித்தபோதே அவன் இடையே மன்னர் ஷாலிமாரின் மந்திர பெல்ட் அலங்கரித்திருப்பதைப் பார்த்திருந்தான் காசிம். இப்போது அவன் நினைவிழந்ததும் முதல் காரியமாக அவன் இடையிலிருந்த அந்தப் பெல்ட்டையும் அத்துடன் கொத்துச் சாவியையும் எடுத்துக் கொண்டான். வெகு வேகமாக அந்தக் கூடத்திலிருந்து வெளியேறினான்.

மந்திரவாதி மங்குவின் கற்கோட்டையின் முக்கியமான அறைகளின் சாவிகள் அந்தக் கொத்தில் இருந்தன. அரசகுமாரி ஆயிஷாவைப் புகையாக்கி அடைத்துள்ள கண்ணாடிக் குடுவை அங்குள்ள அறைகளில் ஏதாவது ஒன்றில்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்தான். மங்குவிற்கு மயக்கம் தெளிவதற்கு இன்னும் சில மணி நேரங்களாகும். அதற்குள் அந்தக் குடுவையை இந்த அரண்மனையில் தேடிக் கண்டுபிடித்துவிட வேண்டும் என்ற தவிப்புடன் செயல்படலானான் காசிம்.

அந்தக் கோட்டையில் பூட்டிக் கிடந்த அறைகளை எல்லாம் தன்னிடமுள்ள கொத்துச் சாவியால் திறந்து பார்த்துக் கொண்டு வந்தான். நிலவறை போன்றதொரு இடத்தின் கதவுகளைத் திறந்தபோது காசிம் வியப்பினால் திகைத்துப் போனான். அது மங்குவின் மந்திர சாதனங்கள் நிறைந்த அறை. அங்கு மண்டையோடுகளும் மந்திரக் கலவைகளைத் தயாரிக்கும் குழம்புகளும் அடுப்புகளும் இருந்தன. வண்ண வண்ணத் திரவங்கள் பலப்பல. கண்ணாடிக் குடுவைகள் விதம் விதம். காக்கையின் சிறகுகள், ஆந்தையின் உடல்கள், பூனையின் வால்கள், ஓநாயின் உடல்கள், அப்பப்பா! அவற்றையெல்லாம் காணவே பயமாக இருந்தது. எரிந்து கொண்டிருந்த அடுப்பின் மீது ஒரு பாத்திரத்தில் ஏதோ ஒரு கலவை கொதித்துக் கொண்டிருந்தது. அதன் மேலே சிவப்பான குடுவையிலிருந்து ஒரு திரவம் அடிக்கடி சொட்டுச் சொட்டாக அந்தக் குழம்பில் விழுந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு முறை சொட்டு விழும்போதும் அந்தக் கொப்பறையிலிருந்து குபீரென்று தீ ஜ்வாலை கிளம்பியது.

இந்தக் காட்சிகளிலெல்லாம் காசிமின் கண்கள் லயிக்கவில்லை. அவன் எண்ணமெல்லாம் கவனமெல்லாம் அன்று மங்கு அரண்மனையில் ஆஷாவைப் புகையாக்கி அடக்கிய குடுவைத் தேடுவதில்தான் ஈடுபட்டிருந்தன. அங்கு அடுக்கி வைக்கப்பட்டிருந்த பலவிதமான கண்ணாடிக் குடுவைகளை எல்லாம் ஆராய்ந்தன அவன் கண்கள். அவன் முயற்சி வீண்போகவில்லை.

காசிம் தேடி வந்த கண்ணாடிக் குடுவை அகப்பட்டது. ஆர்வமுடன் அதைக் கையில் எடுத்துக் கொண்டான். சீசாவிற்குள் ரோஜா நிறப் புகையின் நடுவே சின்னஞ்சிறிய உருவில் ஆயிஷா அடைபட்டுக் கிடப்பதைக் கண்டான் அவன். அப்போது அவன் அடைந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை. இந்தக் குடுவையையும்

அதனுள்ளிருக்கும் ஆயிஷாவையும் கண்டால் மன்னர் எப்படி மகிழ்ச்சி கூத்தாடுவார்?' என்பதை நினைத்துப் பார்த்தான். அவன் நெஞ்சம் உற்சாகத்தால் துள்ளியது. அந்தக் குடுவையை அணைத்துக்கொண்டு பித்தனைப் போல அவனும் கூத்தாடினான்.

ஆனால் அவன் உத்வேகமெல்லாம் அடுத்த விநாடி உலர்ந்து போயிற்று. 'இந்தக் குடுவைக்குள் இருக்கும் ஆயிஷாவை இப்படிப் புகை வடிவில் மன்னரிடம் கொண்டுபோய் என்ன செய்வது? மன்னர் தம் மகளை எப்படி அணைத்து ஆனந்திக்க முடியும்? புகையாகி உள்ள இவளை ரத்தமும் சதையுமான ராஜகுமாரியாக மாற்றினா லல்லவா அரசருக்கு ஆனந்தம் ஏற்படும்? இவளை இந்தக் குடுவைக்குள்ளிருந்து வெளியேற்றிப் பழைய உருவை அடையச் செய்வது எப்படி?' சிந்திக்கலானான் காசிம். அவன் சிற்றறிவிற்கு எதுவும் புலப்படவில்லை. 'அந்தத் திறமை மங்கு ஒருவனுக்குத்தான் உண்டா? அப்படியானால் நான் இத்தனை பாடுபட்டு இங்கு வந்து இதைத் தேடிக் கண்டுபிடித்து என்ன பயன்?' பாவம் காசிம். அவனுக்கு அழுகையாக வந்தது. அவன் மகிழ்ச்சியெல்லாம் மறைந்து விட்டது.

தன் கையிலுள்ள குடுவையைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான் காசிம். இழந்த நம்பிக்கை கொஞ்சங் கொஞ்சமாக அவனுக்குத் திரும்பியது. 'இத்தனை இன்னல்களைக் கடந்து நம்மை இங்கு கொண்டு வந்து சேர்த்த ஆண்டவன் இதற்கும் ஒரு வழி வகுக்காமல் இருக்க மாட்டான்' என்ற நம்பிக்கையோடு எழுந்திருந்தான். முன்பு மங்குவின் அறையையும் அங்குள்ள பொருள்களையும் கவனிக்காதவன் இப்போது ஆராயலானான். ஆயிஷாவுக்கு உயிரும் உருவமும் தர ஏதாவது உபாயங்கள் அங்கு இருக்கலாம் என்ற நம்பிக்கையுடன் தேடலானான். ஆனால் தேடி எடுத்த குடுவையை மட்டும் எங்கும் கீழே வைத்து விடவில்லை.

மந்திரவாதி மங்குவின் அந்த ரகசிய அறையிலுள்ள எல்லாமே காசிமுக்குப் புதுமையாக இருந்தன. ஒன்றுமே புரியவில்லை. குடுவையினுள் ஆவி உருவில் இருக்கும் ஆயிஷாவை மறுபடி மனித உருவுக்குக் கொண்டு வருவது எப்படி என்பதை விளக்கும் ஏற்பாடுகள் எதுவும் அவனுக்குத் தெரியவில்லை.

அறையின் ஒவ்வொரு பகுதியாகத் தேடிக்கொண்டு வரும்போது ஓரிடத்தில் ஒரு பெரிய புத்தகம் இருப்பதைக் கண்டான்.

பலவிதமான மந்திரங்கள் அடங்கிய புத்தகம் அது என்பதை அவன் முதல் பக்கத்தைப் புரட்டிய உடனேயே தெரிந்து கொண்டான் காசிம். அது மிக மிகப்பெரிய புத்தகம். இரு கைகளினாலும்தான் அதைத் தூக்க முடியும். அந்த மந்திரப் புத்தகத்தினுள் ஆவி வடிவிலுள்ளவர்களை மனித உருவுக்கு மாற்றும் முறைகளைப் பற்றி இருக்கலாம். ஆனால் அதைத எங்கே என்று தேடுவது? காசிமுக்கு இம்மாதிரியான புத்தகங்களைப் படிப்பதற்கான ஆற்றலும் கிடையாது. வெறுமே அதன் பக்கங்களைப் புரட்டினான். மங்கு மயக்கம் தெளிந்து எழுந்திருப்பதற்குள் அங்கிருந்து கிளம்பிட வேண்டுமென்ற பரபரப்பும் தவிப்பும் வேறு அவனிடம் குடிகொண்டிருந்தன.

காசிம் பயந்தபடியே ஆயிற்று. திடீரென்று அந்தக் கோட்டையே கிடுகிடுக்கும்படியானதொரு சத்தம் கேட்டது. காசிமின் விரல்கள் அவனை அறியாமலே அந்த மந்திரப் புத்தகத்தை மூடின. கதவின் அருகில் ஓடிச்சென்று அதன்மீது காது பதித்துக் கேட்டான். சந்தேகமே இல்லை. அது மங்குவின் குரல்தான். அவனுக்கு மயக்கம் தெளிந்து விட்டது. பாவம் காசிம்! செய்வதறியாது தவித்தான். ஆயிஷா அடைபட்டுக் கிடக்கும் குடுவையையும் மந்திர பெல்ட்டையும் இறுக்கமாகப் பற்றிக் கொண்டான்.

அப்போதுதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது. குழம்பிக் கிடந்த அவனை ஒரு மெல்லிய குரல் அழைத்தது. காசிம் கலவரமுடன் சுற்றும் முற்றும் பார்த்தான். அந்த அறையினுள் அவனைத் தவிர வேறு யாருமில்லை. 'யார் என் பெயர் சொல்லிக் கூப்பிட்டது?' என்று மனத்துக்குள் கேட்டுக் கொண்டான். அப்போது அதே குரல் "காசிம்! இதோ இந்தப் புத்தகத்தின் அருகே உற்றுப் பார். நான்தான் பேசுகிறேன்" என்றது.

திடுக்கிட்ட காசிம், தடிமனாக இருந்த மந்திரப் புத்தகத்தின் மறுபக்கத்தில் எட்டிப் பார்த்தான். அவன் கண்கள் வியப்பினால் விரிந்தன அவனால் நம்பவே முடியவில்லை. பின்னங்கால்களில் அமர்ந்தபடி முன்னங்கால்கள் இரண்டையும் விரித்தபடி ஒரு சுண்டெலி அங்கு உட்கார்ந்திருந்தது. அவனுடன் பேசியது அதுதான்.

"நீ புத்தகத்தை மூடும்போது அதன் அடியில் என் வால் அகப்பட்டுக் கொண்டு விட்டது. இந்தப் புத்தகத்தைக் கொஞ்சம் தூக்கி என் வாலுக்கு விடுதலை கொடு" என்றது எலி. காசிமிற்குப் பேச நா எழவில்லை. யந்திரம் போலப் புத்தகத்தை நகர்த்தினான். எலி தன்

வாலை விடுவித்துக் கொண்டு அந்தப் புத்தகத்தின்மீது தாவி அமர்ந்து கொண்டது.

"ஏன் நடுங்கிச் சாகிறாய்? மங்கு விழித்துக்கொண்டு விட்டானே. என்ன நடக்குமோ என்றுதானே பயப்படுகிறாய்? கவலைப்படாதே. நான் உன்னைக் காப்பாற்றுகிறேன். அந்த மந்திர பெல்ட்டை இடையில் நன்றாகக் கட்டிக் கொள். இதோ இந்த சீசாவிலுள்ள திரவத்தைத் தலையில் ஊற்றிக்கொள்" என்றது எலி. மந்திரத்தினால் கட்டுண்டவனைப் போல காசிம் சுண்டெலி காட்டிய கண்ணாடிப் புட்டியிலிருந்த வெள்ளிபோலத் தகதகக்கும் திரவத்தைத் தலையில் தெளித்துக் கொண்டான். என்ன ஆச்சரியம். அடுத்த விநாடி அவன் சுருங்கிச் சுருங்கி எலியின் உயரத்துக்கு உருமாறினான். அதே மனித வடிவம். ஆனால் உருவம்தான் சின்னஞ்சிறியது. சுருங்கி குறுகிய நிலையிலும் காசிம் ஆயிஷா அடைபட்டுக் கிடந்த கண்ணாடிக் குடுவையைக் கைவிடவில்லை.

இதே சமயத்தில் அரண்மனையின் கூடத்தில் மங்கு மயக்கத்திலிருந்து விழித்துக் கொண்டதும் முதல் காரியமாகத் தனது இடையைத் தடவிப் பார்த்துக் கொண்டான். மந்திர பெல்ட்டைக் காணோம்! அத்துடன் கொத்துச் சாவியும் பறிபோயிருந்தது. அவ்வளவுதான், இடி இடிப்பது போன்று கர்ஜனை செய்தான். தான் ஏமாற்றப்பட்டதை அறிந்தபோது அவன் கோபம் எரிமலையாகிக் குமுறியது. தன் முன்னாலிருந்த சாப்பாட்டு மேஜையை காலால் உதைத்து உருட்டினான். மதுக் குடுவையையும் கிண்ணங்களையும் சுவரில் வீசியடித்தான். இப்போது தனக்கு உணவு கொடுக்க வந்தவன் யாரென்பதுஅவனுக்கு நினைவு வந்துவிட்டது. அது அவன் ஆத்திரத்தை அதிகமாக்கியது. கூண்டில் அடைபட்ட புலியைப் போல உறுமினான். அந்தக் கற்கோட்டையே கிடுகிடு என்றாடியது. தனது மந்திர சாதனங்கள் நிறைந்த அறையை நோக்கி ஓடினான். அந்த வேகம் புயலை உண்டாக்கியது. அவன் மூச்சுக் காற்றிலே நெருப்பு ஜ்வாலை வீசிற்று.

இதே சமயத்தில் மங்குவின் மந்திர அறைக்குள் சுண்டெலி காசிமிடம் கூறிக் கொண்டிருந்தது. இப்போது காசிம் அதன் உயரத்துக்குத்தான் இருந்தான்; ஒரு சின்ன பொம்மையைப் போல. "பார்க்கும் திரவத்துப் பச்சைப் பூதத்தின் நண்பன் நான் உனக்கு உதவுவதற்காகப் பூதம் என்னை இங்கே அனுப்பி இருக்கிறது. இப்போது நீ உன் மீது தெளித்துக் கொண்டாயே அந்தத் திரவத்தின் சக்தி,

அது உன் மீது காயாமல் இருக்கும் வரைதான் செயல்படும். அந்தத் திரவம் காய்ந்ததும் நீ முன்போலப் பெரியவனாகி விடுவாய். அதோ மங்கு ஆவேசமாக இந்த அறையை நோக்கி வந்து கொண்டிருக்கிறான். அவன் இங்கு வருவதற்குள் நாம் இங்கிருந்து கிளம்பிவிட வேண்டும். சீக்கிரம் என்னைத் தொடர்ந்து வா'' என்று கூறி அறையின் மூலையிலுள்ள ஒரு பொந்தினுள் புகுந்தது எலி. காசிமுக்கு எல்லாமே வியப்புக்கு மேல் வியப்பாக இருந்தது. வாய் பேசாது சுண்டெலியைப் பின்தொடர்ந்து பொந்துக்குள் புகுந்தான்.

அதேசமயம் மங்கு அந்த அறையின் பிரம்மாண்டமான கதவைக் காலால் எட்டி உதைத்துத் திறந்து கொண்டு உள்ளே ஓடி வந்தான். வந்ததும் அவன் கண்கள் ஆயிஷா அடைபட்டுக் கிடந்த கண்ணாடிக் குடுவையை வைத்திருந்த இடத்தைத்தான் தேடின. அந்தக் கண்ணாடிப் புட்டி அங்கு இல்லாததைக் கண்ட மங்கு வெறியனானான். ஆத்திரத்துடன் அந்த அலமாரியிலிருந்த எல்லாப் புட்டிகளையும் கீழே தள்ளினான். அவை கீழே விழுந்து உடைந்து சிதறின. அவற்றிலிருந்த பலவிதமான மந்திரத் தன்மைகள் ஒன்று கலந்ததினால் குப்பென்று பெரு நெருப்பு உண்டாயிற்று. மங்குவின் உள்ளத்தைப் போல அந்தத் தீ சுருண்டெழுந்து திகுதிகுவென்று எரியலாயிற்று. மங்கு அந்த நெருப்பைப் பொருட்படுததவில்லை. பைத்தியக்காரனைப் போலத் தாடியைப் பிய்த்துக் கொண்டு கூச்சலிட்டபடி வெளியேறினான். அப்போது அவன் தனது வழியில் எதிர்ப்பட்ட எல்லாப் பொருள்களையும் கையாலும் காலாலும் உதைத்து உருட்டி நாசப்படுத்திக் கொண்டு போனான்.

## பன்னிரெண்டு

சுண்டெலியுடன் பொந்தில் புகுந்து போய்க் கொண்டிருந்த காசிமுக்கு எல்லாமே புதுமையாக இருந்தது. தான் சாதித்த இத்தனை சாதனைகளுக்கும் பின்னால் தனக்கு உதவியாகப் பச்சைப் புகை பூதம் செயல்பட்டிருக்கிறது என்பதை எண்ண எண்ண அவனுக்குப் பெருமையாக இருந்தது.

இருள்நிறைந்த சுண்டெலிப் பொந்தின் சுரங்கப் பாதையில் காசிம் எலியின் வாலைப் பிடித்துக் கொண்டு ஓடினான். எங்கே

போகிறோம் என்ற சிந்தனையே அவனுகில்லை. வெகுநேரம் இப்படி ஓடியபின் பளிச்சென்று வெளிச்சம் தோன்றியது. ஒளி நிறைந்த உலகத்துக்கு வந்து விட்டோம் என்தை உணர்ந்து கொண்டான் காசிம். உண்மைதான். அவன் இப்போது மங்குவின் கற்கோட்டையில் மற்றொரு கோடியில் இருந்தான். சுண்டெலி இன்னமும் நிற்கவில்லை. ஓடிக்கொண்டிருந்தது; காசிமும்தான். ஆனால் அவன் தன்மீது தெளித்துக்கொண்ட அந்த வெள்ளித் திரவம் மெள்ள மெள்ளக் காய்ந்து கொண்டிருந்தது. காசிமும் இப்போது கொஞ்சங் கொஞ்சமாக வளர்ந்து வந்தான். குபீரென்று ஓர் இடத்தில் அவன் பழைய பெரிய காசிமாக உருமாறி விட்டான்!

"காசிம், இந்த மந்திரத் திரவத்தின் மகிமை முடிந்து விட்டது. நீ இங்கிருந்து கிளம்ப வேண்டிய தருணமும் வந்துவிட்டது" என்றது சுண்டெலி, தரையில் தன் பின்னங்கால்களின் மீது உட்கார்ந்து கொண்டே. அப்போது அவர்கள் ஒரு பெரிய கூடத்தில் இருந்தார்கள். அங்கு தரையில் சித்திர வேலைப்பாடு அமைந்த பெரிய ஜமுக்காளம் ஒன்று விரித்து வைக்கப்பட்டிருந்தது. சுண்டெலி அந்த ஜமுக்காளத்தின் அருகே ஓடிச்சென்று உட்கார்ந்தது.

"மங்கு ஏதாவது மாயம் செய்து உன்னைச் சிறைப்படுத்து முன் நீ இந்தக் கோட்டையிலிருந்து தப்பிச் செல்வதற்கு இதோ இந்த ஜமுக்காளம்தான் ஒரே வழி. இது மந்திரசக்தி வாய்ந்தது. இதன்மீது ஏறி உட்கார்ந்து கொண்டு எங்கு போக வேண்டுமென்று நினைக்கிறாயோ அங்கு கொண்டு போய் இது உன்னை விட்டுவிடும். ம்... தாமதிக்காதே காசிம். ஓடிச்சென்று அதன் நடுவில் உட்கார்ந்து கொள், போ!" என்று துரிதப்படுத்திற்று சுண்டெலி, காசிமுக்கு என்ன பேசுவது எப்படிப் பேசுவது என்றே தெரியவில்லை. ஆனந்தமும் நன்றிப் பெரகும் அவன் தொண்டையை அடைத்துக் கொண்டன. "நான்... நான் உனக்கு எப்படி என் நன்றியை, மகிழ்ச்சியைத் தெரிவிப்பதென்றே தெரியவில்லை" என்று குழறினான் காசிம்.

"நீ எனக்கு எவ்வித நன்றியும் தெரிவிக்க வேண்டாம். பத்திரமாகத் தங்க நகரத்துக்குப் போய்ச் சேர். அந்தக் கண்ணாடிக் குடுவையையும் பெல்ட்டையும் வைத்துக் கொண்டிருக்கிறாயல்லவா?" என்று கேட்டது எலி. அவ்விரண்டையும் அதனிடம் காட்டினான் காசிம். "சரி, புறப்படு" என்றது சுண்டெலி.

மந்திர ஜமுக்காளத்தில் போய் உட்கார்ந்து கொண்ட காசிம், "தங்க நகரத்துக்குப் போ!" என்று கட்டளையிட்டான். அடுத்த விநாடி அந்த அழகிய ஜமுக்காளம் தனது முனைகளைப் பறவையின் இறக்கைகளைப் போலப் படபடத்துக் கொண்டு ஜிவ்வென்று கிளம்பி வானவீதியில் பறந்து செல்லலாயிற்று.

அப்போதுதான் அங்கு வந்த மங்கு ஏமாற்றமும் ஆத்திரமும் பொங்கி எழ தன் முஷ்டியை உயர்த்தி வெறியனைப் போலக் கூச்சலிட்டபடி கீழே குதித்துக் கொண்டிருந்தான். அவனால் காசிமை ஏதும் செய்யமுடியவில்லை. மந்திர ஜமுக்காளத்தின் வேகத்தைத் தடைபடுத்தவும் இயலவில்லை. ஏன் தெரியுமா? காசிமிடம் அந்த மந்திர பெல்ட் இருந்ததுதான் காரணம். எந்த மந்திர தந்திரமும் பலிப்பதில்லை அதனிடம்!

மந்திர ஜமுக்காளத்தில் உட்கார்ந்தபடி காசிம் உல்லாசமாகப் பயணம் செய்தான். ஜ்வலிக்கும் மணல் நிறைந்த பாலைவனத்தை ஒரு விநாடியில் கடந்து சென்றது அது. சந்திர மலையையும் கண் இமைக்கும் பொழுதுக்குள் தாண்டியது. ஜமுக்காளத்தில் உட்கார்ந்தபடி அது கடந்து செல்லும் கானகங்களையும் நகரங்களையும் நதிகளையும் வியப்பு வழியும் கண்களால் பார்த்தக் கொண்டு வந்தான் காசிம். அவனுக்கு எல்லாமே அதிசயமாக இருந்தது.

தங்க நகரத்தின் அரண்மனை மேல்மாடத்தில் போய் மந்திர ஜமுக்காளம் இறங்கியது. காசிம் கண்ணாடிக் குடுவையுடன் ஷாலிமார் இருக்குமிடத்துக்கு ஓடினான். சோகமே உருவாக உட்கார்ந்திருந்த அவர் முன் போய் அந்தக் கண்ணாடிப் புட்டியை நீட்டினான் காசிம். அதற்குள் தன் அருமை மகள் உட்கார்ந்து கொண்டிருப்பதைக் கண்ட மன்னர் துள்ளிக் குதித்தார். காசிமிடமிருந்து அந்தக் குடுவையை வாங்கித் தன் மார்புடன் அணைத்துக் கொண்டார். பிறகு காசிமையும் தழுவிக் கொண்டார்.

மன்னர் ஷாலிமாரிடம் காசிம், தான் அங்கிருந்து கிளம்பியது முதல் அதுவரை நடந்தவற்றையும் ஒன்றுவிடாமல் விவரமாகச் சொன்னான்.

"அரசே, இதோ நீங்கள் மங்குவிடம் பறிகொடுத்த உங்கள் மூதாதையர்களின் பொக்கிஷமான மந்திர பெல்ட்" என்று அவருடைய பெல்ட்டை நீட்டினான் காசிம். அவன் முகம் சோகத்தினால் சோம்பிக் கிடந்தது.

"என் அருமை காசிம்! எனக்காக இத்தனை காரியங்களைச் செய்துள்ள உன்னை எப்படிப் பாராட்டுவது, உனக்கு என்ன வெகுமதி கொடுத்துக் கௌரவிப்பது என்றே தெரியவில்லை. அது சரி, நீ ஏன் வருத்தமாக இருக்கிறாய்?" என்று கேட்டார் மன்னர் பரிவுடன்.

"ஷாயின்ஷா! தங்கள் மகள் இன்னும் ஆவி வடிவில்தானே குடுவைக்குள் அடைபட்டிருக்கிறாள். அவளை விடுவித்துப் பழைய உருவை மீண்டும் அடையச் செய்யும் மார்க்கத்தை என்னால் கண்டுவர முடியவில்லையே" என்றான் வேதனையுடன் காசிம்.

"காசிம், கவலைப்படாதே! என் மகள் ஆயிஷாவை மனித உருவத்துக்கு மாற்ற என்னால் முடியும். அதுவும் உன் முயற்சியினால்தான். இதோ இந்த பெல்ட்டுக்கு மிஞ்சிய மந்திரசக்தி இந்த உலகத்தல் வேறு எதற்கும் கிடையாது. இதோ பார்" என்று கூறி அந்த பெல்ட்டைக் கண்ணாடிக் குடுவையின் மீது சுற்றினார். உடனே அந்தக் கூடத்தில் இருள் மூண்டது. 'ஹோ' என்ற பேரிரைச்சலுடன் புயல் காற்று கிளம்பியது. அரண்மனையின் திரைச்சீலைகளெல்லாம் தாறுமாறாகப் பேயாட்டம் போட்டன. அடுத்த விநாடி அறை சிவப்பாகியது. அடுத்து மஞ்சள், பிறகு நீலம் இப்படி வண்ண வண்ணமாக வெளிச்சம் தோன்றிக்கொண்டே இருந்தபோது பளீரென்று மின்னல் ஒளி ஒன்று வெட்டியது. யாருமே கண்களைத் திறந்து கொண்டிருக்க முடியாததோர் ஒளிப்பிழம்பு அந்தக் கூடத்தைக் குளிப்பாட்டியது. உடனே அந்த ஒளி மறைந்து அறை மரகதக் கம்பளத்தைப் போர்த்தியது போலப் பச்சைப் பசேல் என்றாகியது. எல்லாரும் திகைத்துத் திக்பிரமை பிடித்துப்போய் நின்று கொண்டிருந்தார்கள்.

அடுத்த விநாடி அதனுள் அடைபட்டிருந்த பச்சைப் புகை குபுகுபுவென்று வெளியில் பொங்கி வழியலாயிற்று. அதேசமயம் மறுபடியும் பளீர் என்று கண்ணைப் பறிக்கும் ஓர் மின்னல் வெட்டியது. அந்த மின்னொளியின் நடுவே அழகே வடிவான ஆயிஷா அற்புத எழிலுடன் தேவதையைப் போலத் தோன்றினாள்

இப்படியொரு காட்சியை நீங்கள் கற்பனை செய்து பாருங்கள். எவ்வளவு மகிழ்ச்சியாக உடலைப் புல்லரிக்கச் செய்வதாக இருக்கிறது? அதே நிலையில்தான் அப்போது ஷாலிமாரும் காசிமும் மற்றுமுள்ள அரசாங்க அதிகாரிகளும் மிதந்து கொண்டிருந்தார்கள். மகளை மறுபடி கண்ட ஆனந்தத்திலே மன்னர் ஷாலிமார் திக்குமுக்காடிப் போனார்.

"மகளே, ஆயிஷா!" என்று இரு கைகளையும் அகல விரித்தபடி இளவரசியை வாரி அணைக்க ஓடினார். இளவரசியும் "அப்பா!..." என்று ஓடிவந்து ஷாலிமாரைக் கட்டிக்கொண்டாள். மன்னரும் கண்களில் நீர் மல்க தம் மகளை அணைத்து மகிழ்ந்து போனார்.

மகிழ்ச்சி வெள்ளம் மெள்ள மெள்ளத் தணிந்தது. இளவரசியை மீட்டுவந்த காசிமின் தீரத்தையும் அரச பக்தியையும் பற்றியே எல்லாரும் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய பல்லாயிரம் கேள்விகளுக்கு காசிம் பதற்றமில்லாமல் பதில் சொல்லிக் கொண்டிருந்தான்.

தம்முடைய நாட்டின், தம்முடைய மக்களின், தம் மகளின், ஏன் தன்னுடையவுமான இத்தனை ஆனந்தத்துக்கும் காரணமான காசிமை எப்படிக் கௌரவிக்க வேண்டும் என்பதை மன்னர் தீர்மானித்து விட்டார்.

அதுச்சரி, மங்கு என்ன ஆனான் என்றுதானே கேட்கிறீர்கள்? மந்திர பெல்ட் இல்லாத போது மங்கு வெறும் ஆள்! இனி அவனால் அந்தத் தகதகக்கும் பாலை வெளியையோ, சந்திர மலையையோ கடந்து வர முடியாது. பார்க்கும் திரவத்துப் பச்சைப் பூதமும் அவனுக்கு உதவா. இனி அவன் எப்படிப் போனால் நமக்கென்ன?

ஆயிஷா கிடைத்து விட்டாள் என்ற செய்தி தங்க நகர மக்களை ஆனந்தத்தில் ஆழ்த்தியது. அத்துடன் அவளுக்குத் திருமணம் என்ற செய்தியும் அவர்களைத் திணற வைத்தது. தங்க நகரை வானவர் உலகமாக அலங்கரிக்கலானார்கள்.

மணப்பெண் ஆயிஷா தன் கணவனுடன் மறுநாள் நகர வீதியில் உலா வந்தபோது அத்தனை பேரும் அதிசயித்துப் போனார்கள். அழகி ஆயிஷாவின் அருகில் அமர்ந்திருந்தது யாரென்று நினைக்கிறீர்கள்? காசிமேதான்! ஆயிஷாவைவிடச் சிறப்பான பரிசு வேறு என்ன இருக்க முடியும்? ஆகவே மன்னர் ஷாலிமார் தம் மகளையே அவனுக்குப் பரிசாகக் கொடுத்துவிட்டார். அதோ காசிமும் ஆயிஷாவும் உங்களைப் பார்த்து முறுவலிக்கிறார்கள். வாருங்கள், அரண்மனையில் நடக்கும் மகத்தான பெரிய விருந்துக்கு நாமும் போவோம்.

○○○